தீபாவளிக்கு வாழ்த்துக்கள்!

# கொலம்பியா

ரிகார்டுகளில் உங்கள்
பிரியமான நட்சத்திரங்களின்
டாக்கி பாட்டுகளை கேளுங்கள்



ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்
மவுண்ட் ரோட், . . . . . . . . மதராஸ்

முறையோடு சுத்தமாகச் செய்யப்பட்ட ஆரஞ்சு, கோலா, லைம்ஜூஸ், கிரஷ், சோடா முதலிய பானங்கள் ருசியிலும் குணத்திலும் சிறந்தவை. ஆனால் வாங்கு முன் 'வின்ஸெண்ட்' லேபிள் இருக்கிறதா என்று கவனித்து வாங்கவும்.





புத்தம் புதியதாக அன்றன்று எங்களால் செய்யப்படும் டின்னர் பிஸ்கட்டுகள், மற்றும் கேக், கிறிஸ்துமஸ் கேக் முதலானவை எவ்விடத்திலும் கிடைக்கும்.

நாங்கள் தயார் செய்யும் ரொட்டி வகைகள் ஆரோக்கியத்திற்கும், சுத்தத்திற்கும் ருசிக்கும் பெயர் பெற்றவை. ஒரு முறை உபயோகித்துப் பார்த்தால் அதன் உண்மை உங்களுக்கு விளங்கும்.





●

எங்களது சேல்ஸ் & சர்விஸ்
ரேடியோக்கள் & ரிப்ரிஜியேட்டர்கள்

●

கேட்லாக்கிற்கும் மற்ற விவரங்களுக்கும் எழுதவும்

# வின்ஸெண்ட் & கோ., லிமிடெட்
## திருச்சிராப்பள்ளி



1

### வைக்க ஓர் இடம்?

பணத்தை எங்கே, எப்படி வைப்பது என்ற கவலை பெரிதாகி வருகிறது. பழைய புலவரும் ஏதேதோ பாடி, (1) "யாரே அனுபவிப்பார் ....... அந்தப் பணம்" என்று முடித்திருக்கிறார்.



2

### (2) தாத்தா இடுப்பில் சொருகிக் கொள்கிறார்

(3) பாட்டி காசுமாலையாய் கழுத்தில் காசைக் கட்டித் தொங்கவிட்டுக் கொள்கிறாள். இவை பழையகால வழக்கங்களானாலும், யுக்தமானவை. பாங்கில் போடுவதைவிட, (4) உடம்பிலேயே பணத்தை நகைகளாகப் போட்டுக் கொள்வது அழகைக் கூட்டி வைக்கிறதல்லவா?



3

### லாபமும் உண்டு

பொன் ஆபரணமானாலும், வைர நகையானாலும், சமயோசிதமாக விற்றால், லாபமும் கிடைக்காமற் போவதில்லை. ஆகவே,



4

### ஏற்ற இடம்

உடல்தான். கைவசமுள்ள சில அழகிய நெக்லெஸ்கள், ஒட்டியாணங்கள், ஸ்வஸ்திக் வளையல்களைக் காண உங்களை எப்பொழுது எதிர் பார்க்கலாம்?

## உம்மிடியார்

**உம்மிடி ராமய்ய செட்டி, குருசாமி செட்டி & கம்பெனி**

நம்பிக்கையுள்ள, வைரம், பொன், வெள்ளி நகை வியாபாரிகள்

நெ. 21—23, சைனா பஜார், மதராஸ். டெலிபோன்: 2802

நெ. 63; கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதராஸ்.

—சாமா—

# இந்தியன் பாங்க் லிமிடெட்

( பிரிட்டிஷ் இந்தியாவில் இணைக்கப்பட்டது. 1907-ல் ஸ்தாபிக்கப்பட்டது )

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | .... ரூ. | 1,00,00,000 |
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | .... ரூ. | 60,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் (30-6-43 தேதியில்) | .... ரூ. | 27,57,336 |
| ரிஸர்வ் நிதி | .... ரூ. | 29,00,000 |

மொத்த ஆஸ்திகள் ரூ. 8 கோடிக்கு அதிகம்

தலைமை ஆபீஸ்: வடக்கு பீச் ரோட், சென்னை.

சென்னை ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், மவுண்ட்ரோட்.

●

பிராஞ்சுகள் :

| | | | |
|---|---|---|---|
| திருவனந்தபுரம் | புதுக்கோட்டை | பெங்களூர் சிடி | கோயமுத்தூர் |
| திருநெல்வேலி | கள்ளிக் கோட்டை | திருச்சிராப்பள்ளி | கும்பகோணம் |
| பெங்களூர் (கன்ட்.) | கொயிலோன் | கொச்சி | பம்பாய் |
| சேலம் | ஈரோடு | மதுரை | குன்டூர் |
| திருச்சூர் | தலைசேரி | தூத்துக்குடி | காரைக்குடி |
| திருப்பூர் | ஆலப்புழை | திருவாரூர் | பெஜவாடா |
| சிவகங்கை | | மங்களூர் | மைசூர் |

சப் - ஆபீஸ்கள் :

| | | | | |
|---|---|---|---|---|
| தனுக்கு | குடிவாடா | தெனாலி | பாலகோல் | பீமாவரம் |
| தேவகோட்டை | கன்னனூர் | ரேபல்லி | கோவில்பட்டி | திருநெல்வேலி டவுன் |

டைரக்டர்கள் :

திவான்பகதூர் S. Rm. Ct. S. சபாரத்தினம் செட்டியார், பாங்கர், கானாடுகாத்தான்
ராவ்பகதூர் O. A. P. Rm. அருணாசலம் செட்டியார், பாங்கர், பள்ளத்தூர்
புருஷோத்தம்தாஸ் கோகுல்தாஸ், பாங்கர், மதராஸ்
திவான்பகதூர் K. S. ராமசாமி சாஸ்திரி, ரிடையர்டு ஜட்ஜ், ராயப்பேட்டை, மதராஸ்
ராவ்பகதூர் C. V. C. T. V. வெங்கடாசலம் செட்டியார், பாங்கர், கானாடுகாத்தான்
A. M. M. முருகப்பச் செட்டியார், பாங்கர், பள்ளத்தூர்
N. S. சுந்தரம், M. A., பாரிஸ்டர்—அட்—லா, காஸா மேஜர் ரோடு, எழும்பூர்
K. பாலசுப்பிரமணிய அய்யர், அட்வகேட், மயிலாப்பூர், மதராஸ்
திவான்பகதூர் C. V. வெங்கட்ரமணய்யங்கார், ரிடையர்டு அட்வகேட், கோயமுத்தூர்
T. ரங்கநாத மேத்தா, வைர வியாபாரம், மதராஸ்
P. S. சாத்தப்பச் செட்டியார், சோமசுந்தரம் மில்ஸ், கோயமுத்தூர்
ராவ்பகதூர் K. V. Al. Rm. ராமநாதன் செட்டியார், பாங்கர், கோட்டையூர்

நிரந்தர டிபாசிட்டுகள் அவ்வப்போதுள்ள நிபந்தனைகளின் மீது ஏற்றுக் கொள்ளப்படும். நிபந்தனை விவரங்கள் பாங்கியின் எல்லா ஆபீஸுகளிலும் கிடைக்கும்.

குறைந்த பக்ஷம் ரூ. 5/- முதற்கொண்டு சேவிங்ஸ் பாங்கு கணக்குகள் வைத்துக் கொள்ளப்படும். இதற்கு ரூ. 5000/- வரையில் வருஷ மொன்றுக்கு 2½% விதம் வட்டி கொடுக்கப்படும்.

பாங்கால் அங்கீகரிக்கப்பட்ட நபர்கள், கரண்டு அக்கௌண்டுகள் ஏற்படுத்திக் கொள்ளலாம். ரூ. 50,000/-க்கு மேற்படாத தொகைக்கு வருஷம் ஒன்றுக்கு ½% விதம்வட்டி கொடுக்கப்படும்.

கவர்ன்மெண்டு பாண்டு, நகைகள், சரக்குகள், அங்கீகரிக்கப்பட்ட பங்குகள் இவைகளின் மீது முன் பணம் கொடுக்கப்படும். வட்டி விகித விவரங்கள் பாங்கியில் தெரிந்து கொள்ளலாம்.

வியாபாரிகளுக்கும், கம்பெனிகளுக்கும், வர்த்தகர்களுக்கும் எல்லாவிதமான வசதிகளும் அளிக்கப்படும். மற்றும் எல்லாவித பாங்கு அலுவல்களும் ஏற்றுக்கொண்டு நடத்தப்படும்.

N. கோபாலய்யர், செக்ரடரி.

# சிந்தாமணி டாக்கீஸ்

## கீழவெளிவீதி மதுரை








- இந்தத் தியேட்டரில் நவீன ஆர். ஸி. ஏ. போட்டோபோன் ஹை பெடிலிடி தொனிப் பரப்பி விண்டரும் மேன்மையான உயர்ந்த தாழ்ந்த யூனிட்டுகளுடன் கூடிய புதிய மாடல் ஆம்ப்ளிபையர் ஆர்க் விளக்குகளும் நன்கு அமைக்கப்பட்டுள்ளன.

- கீழே தாராளமாக 1200 பேர்களும் பால்கனியில் 350 பேர்களும் ஆகமொத்தம் 1550 பேர்கள் சௌகரியமாக உட்காரக் கூடிய இட வசதியுடன் கட்டப்பட்டிருக்கிறது.

- நவீன சுகாதார முறைப்படி அமைக்கப்பட்டதும், மிகுந்த இட வசதி கூடியதும் உயர்தரமான படங்களையே காண்பிக்கப்படும் தியேட்டர் எங்களுடையதுதான்.

# கல்கி தீபாவளி மலர் 1943

## பொருளடக்கம்

### வர்ண சித்திரங்கள்



### புகைப் படங்கள்



### மற்ற அம்சங்கள்

# INDEX TO ADVERTISERS

* * *

# அருள் உரிமை

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

[அன்னப் பறவைகள் இமய மலையை நோக்கிப் பறந்து செல்லுகின்றன.]

உலக முழுதும் ஒருகுடை யின்கீழ்
ஆளும் அண்ணல் அரண்மனை யருகில்,
மலர்ந்த மலர்கள் மணமிக வீசப்
பொதிவண் டாடும் பூம்பொழில் மீது,
வடதிசை இமய மாமலை யமர்ந்த
வாழிடம் நோக்கி, வளரும் அன்பால்
உருகிய உள்ளம் ஒழுகிய தென்னப்
பாடியே அன்னப் பறவைகள் வான
வீதி வழியே விரைந்து சென்றன;

[தேவதத்தன் என்னும் சித்தார்த்தனது உறவினன் ஒரு அன்னத்தை அம்பால் எய்கிறான்.]

செல்வது கண்டு தேவ தத்தன் —
அரசிளங் குமரற்(கு) அண்டிய உறவினன் —
வில்லினை வளைத்து வெய்யதோர் பாணம்
எய்து நின்றனன், எய்தஅப் பாணம்
முதல் முதலாக முன்வரச் சென்ற
அன்னப் பறவையின் அகல்சிறை யதனில்
படவே ரத்தம் பாயப் பறவையும்
தளர்ந்து சுருண்டு தரையில் விழுந்தது.

[விழுந்த பறவையை சித்தார்த்தன் எடுத்து அணைத்துக் கொள்கிறான்.]

விழுந்தஅப் பறவை, மேனி முழுதும்
ஒழுகி ஓடும் உதிரம் புரளத்
துள்ளித் துள்ளித் துடிப்பது கண்டு



சிந்தை கனிந்து இருமா மன்னரின்
செல்வக் குமரன் சித்தார்த் தன்போய்,

மலர்ந்து விரியா வாழைக் குருத்தினும்
தண்ணிய கரங்களால் தாங்கி எடுத்து
மடியில் வைத்து மார்போ டணைத்துந்
தழுவித் தழுவித் தளர்ச்சி நீக்கினன்.

அப்பால்,

இடக்கையிற் பறவையை ஏந்தி, அம்பினை
வலக்கை பற்றும் வாங்கி, வடிந்த
உதிரம் மாற்றி உறுத்திய புண்ணில்
தேனும் தளிரும் சேர்த்துப் பிசைந்து
பூசியே வருத்தம் போக்கினன் ஆங்கே;
இத்தனை அன்பு காட்டினன் எனினும்

அவன்,

நோவு நொம்பலம் நோயின் தன்மை
இந்நாள் வரையினும் யாதென அறியான்

ஆதலின்,

பறவையின் மீது பாய்ந்த அம்பின்
முனையைத் தனது முழங்கை யதனில்

அழுத்திப் பார்த்தனன்; 'ஐயோ!' என்றனன்;
பரிந்து பின்னும் பறவையை எடுத்துத்
தாயினும் இரங்கித் தழுவி அணைத்தனன்.

[தேவதத்தனது சேவகன் வந்து விண்ணப்பிக்கிறான்]

சிறிது நேரம் சென்றபின், அங்கோர்
சேவகன் வந்து தெண்டனிட்(டு), 'எங்கள்



அரச குமாரனோ அன்னப் பறவையை
எய்து வீழ்த்தினன் வீழ்ந்த இடமும்
மணமிகு ரோஜா வனமது வேயாம்
யாதும் தாமத மின்றி அவனிடம்
அன்னப் பறவையை அனுப்பிடு மாறிங்(கு)
என்னை உன்பால் ஏவினன்' என்றனன்.
சேவகன் மொழியெலாம் சித்தார்த் தன்கேட்(டு)
இயம்பிய மறுமொழி இயம்பக் கேண்மின் :

[சேவகனிடம் சித்தார்த்தன் சொல்கிறான்.]

"எய்த அம்பி னால் — பறவை
இறந்து வீழ்ந்திடு மேல்
எய்த வர்க்கா கும் — உரிமை ;
யாதும் ஐயமில் லை.

நீண்ட சிறகினி லே — விசைதான்
நின்றி ருப்பதல் லால்
மாண்ட நிலையடை யாம் — உயிர்த்து
வாழு கின்றதைப் பார்!

சந்தே கம்வேண் டாம் — அதனைத்
தாரு டியாதப் பா
எந்த உயிரை யும் — காப்ப
தென்க டமையப் பா!"

[தேவதத்தன் அங்கு வருகிறான்.]

சாற்றுரை கேட் டுத் — தேவ
தத்தனு ம் ஓடிவந் து
சீற்றமெ ழுந்தவ னாய் — நின்று
செப்பும்மொ ழியிது வாம்.

"மடிய நேர்ந்தா லும் — உயிர்த்து
வாழ நேர்ந்தா லும்
படியில் வீழ்த்திடு மேல் — பறவை
பாணம் எய்தவர்க் காம்.

என்கை அம்பி னால் — வீழ்ந்த
இப்ப றவையி னை
சங்கை இல்லா மல் — இங்கே
தந்திடு வாயை யா."

[சித்தார்த்தன் மறுமொழி.]

சொன்ன மொழிகேட் டான் — ஐயன்
துன்ப மிகவடைந் தான்
அன்னப் பறவையி னைக் — கன்னத்தோ
டணைத்து வைத்துக்கொண் டான்.

பாரி னுயிரெலா ம் — அருளால்
பாது காக்கவந் தோன்
சீரிய நன்மொழி கள் — உள்ளம்
தெளிந்து கூறுகின் றான் :

"இல்லை யில்லையை யா — பறவை
என்ப றவையை யா
வல்ல டிவழக் கு — நீயும்
வளர்க்க வேண்டாமை யா.

தொல்லு லகமெல் லாம் — அருளால்
சொந்த மாக்கவந் தேன்
வெல்லும் பொருள்க ளில் — முதலில்
வென்ற பொருளீ தாம்.

எம்ம னிதரு மே — உளத்தில்
இரக்க முற்றிட யான்
செம்மை நெறியி னை — நன்கு
தெரிந்து கூறிடு வேன்.

துன்பம் அண்டா மல் — அதனைத்
தூரத்தி ஓட்டிடு வேன்
இன்ப மெவ்வுல கில் — நிலைக்க
என்றும்மு யன்றிடு வேன்.

மனிதர் மட்டுமல் ல — உலகில்
வாழு மெவ்வுயி ரும்
இனிய வாழ்வடை யும் — வழியை
இனிது காட்டிடு வேன்.

என்று ரைகளை நீ — மறுக்கில்
இன்றே இப்பொழு தே
மன்றும் நீதிமன் றம் — ஏறி
வழக்கு ரைப்போமை யா."

[இருவரும் நீதி மன்றத்துக்குப் போகிறார்கள்.]

இருவரு மப்பால் இசைவா ராகி,
அறநூல் கற்றோர் அறிவிற் பெரியோர்
நடுநிலைநீதி நன்கு கண்டோர்
கூடிய மன்றில் குறைகொண் டேகினர்

ஏகவே,

வழுவற இருதிற வழக்கும் கேட்டு,
மன்றுளோர் தம்முள் வாதம் செய்தனர்.
இதுவே நீதியென் றியம்பினர் சிலரே,
அதுவே நீதியென் றறைந்தனர் சிலரே.
யாதுந் துணியா திருந்தவர் சிலரே.

[புரோகிதன் ஒருவன் நீதியை எடுத்துக் கூறல்.]

முடிவில்,

இந்நாள் வரையினும் எவருமே அறியாப்
புலமை மிக்க புரோகித னொருவன்
எழுந்து நின்று யாவரும் கேட்க

"உயிரைக் கொன்றிட வே — முயலும்
ஒருவ னுக்கந் த
உயிரின் மேலே தும் — உரிமை
உண்டோ கூறுமை யா?

உயிரைக் காப்பவ னே — என்றும்
உயிர்க்கு டையவ னாம்
அயர்வு வேண்டாமை யா — இதுவே
அறநூல் விதியை யா.

இன்னும் வீண்வா தம் — பேசி
இருப்ப தேனை யா
அன்னம் சித்தார்த் தன் — பொருளாம்
ஐய மில்லையை யா."

என்று நீதி எடுத்துரை செய்து
மன்றி லிருந்து மாய மாக
மறைந்து போயினன் ; மறையும் அந்நேரம்
பையர வொன்று பதுங்கி அவ்வழி
ஊர்ந்து செல்வதை ஒருவன் கண்டனன் ;
சிற்சில காலை தேவரு மிந்த
வடிவந் தாங்கி வருவதுண் டென்பரால்!
யாதோ உண்மை? யாவரே அறிவார்?

# சுசீலா தேவீ

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்

ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு மாமியார். அந்த மாமியாருக்கு ஒரு மருமகள்.

* * *

மருமகளுக்குப் பதினான்கு வயது. புக்ககத்திற்கு வந்து ஐந்து நாளாயிற்று. "லக்ஷ்மீ, நான் நாலு குடம் இழுத்துப் போட்டிருக்கிறேன். நீ இன்னும் நாலு குடம் இழுத்து அண்டாவை ரொப்பி விடு. நான் அடுப்பங்கரைக்குப் போகிறேன்" என்று மாமியார் மருமகளைக் கூப்பிட்டுச் சொன்னாள்.

மருமகள் குடத்தைக் கிணற்றில் விட்டுக் கை நீட்டிக் கயிற்றை எட்டிப் பிடித்து, குடத்தை முழுகச் செய்தாள். பிறகு இழுக்கும் போது இடது கையில் வலித்தது. இழுக்க முடியவில்லை. இதைச் சொல்லிக் கொள்ள அவமானம். இடது கையை அதிகமாக உபயோகிக்காமல் காலால் கயிற்றை அமுக்கிப் பிடித்து ஒரு கையைக் கொண்டே மெதுவாகச் சமாளித்து நாலைந்து குடங்களும் இழுத்து அண்டாவை நிரப்பி வேலையை முடித்தாள்.

ஏழைக் குடும்பம். கர்நாடக பழக்க வழக்கம். மருமகன் 'பெரியவன்' ஆனதும் சாந்தி முகூர்த்தம் முடித்து விட்டார்கள். தனக்கும் ஒரு மாட்டுப் பெண் வந்து விட்டாள் என்று மாமியாருக்குப் பெரும் திருப்தி. அதிகாரம் செலுத்த ஒரு ஆள் அகப்பட்டால் யாருக்குமே அதில் ஒரு தனி சந்தோஷம். அரசியல் சாம்ராஜ்ய போகத்தைப் போலவே இயற்கையில் ஒரு சாம்ராஜ்ய வேகம் உண்டு. முக்கியமாக ஏழைக் குடும்பங்களில் ஸ்திரீகளுக்கு இந்த ஆசை அதிகம்.

தனக்கு மாமியார் இட்ட எல்லா வேலைகளையும் லக்ஷ்மி சுறுசுறுப்பாகவே சந்தோஷமாகச் செய்து வந்தாள். ஆனால் ஜலம் இழுக்க மட்டும் முடியவில்லை. இரண்டு நாள் கஷ்டப்பட்டுச் சமாளித்துக் கொண்டாள். மூன்றாம் நாள் இரவில் புருஷனிடத்தில், "ஒன்று சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ளாம லிருப்பீர்களா?" என்று பயந்து பயந்து சொல்ல ஆரம்பித்தாள்.

"என்ன விஷயம்? சொல்லு" என்றான் நடேசன். அன்பாகத்தான் பேசினான்.

"கோபித்துக் கொள்வீர்கள்" என்றாள் மறுபடியும்.

"இல்லை, தைரியமாகச் சொல்லு" என்றான் நடேசன்.

"தண்ணீர் இழுக்க முடியவில்லை. கை வலிக்கிறது. சொன்னால் அம்மா ஏதாவது எண்ணிக் கொள்வார்கள். பயமாயிருக்கிறது!" என்று சொல்லிப் புருஷன் முகத்தைத் தான் ஏதோ பெருந் தவறு செய்ததுபோல் பார்த்தாள்.

முதலில் நடேசனுக்குக் கோபம் வரும் போல்தான் இருந்தது. மாமியார் - மருமகள் தகராறு ஆரம்பமாய் விட்டது என்று எண்ணினான். பிறகு, மனைவி விவரமாகச் சொன்ன பின் சங்கதி தெரிந்தது. வீண் சண்டை அல்ல, மனைவிக்கு இடது கை ஊனம் என்பது தெரிந்தது.

நடேசனுக்கு அன்றிரவு வெகு நேரம் தூக்கம் வரவில்லை. காலையில் ஒரு நிர்மானத்துடன் எழுந்தான். தினமும் படுக்கை விட்டு எழுந்ததும் தேகாப்பியாசம் செய்வது வழக்கம். அதற்குப் பதில் தானே தண்ணீர் இழுத்து அண்டாவை நிரப்பி விட்டால் தேகப் பயிற்சியுமாகும்; மனைவியின் சங்கடமும் நிவர்த்தியாகும். கையைப் பற்றி வைத்தியர்களைக் கேட்கலாம் என்று நிர்மானித்தான்.

• • •

"ஏண்டா, நடேசா, தண்ணீர் இழுக்கிறாய்? பெண்டாட்டி செய்த வேலையா? நான் அவளை நாலு குடம் இழுக்கச் சொன்னது பெரிய தப்பாய்ப் போச்சா? அதற்காக என்னைத் தண்டிக்கிறாயா?" என்று வெகு கோபமாகத் தாயார் பேசினாள்.

"இல்லை, அம்மா. அவள் சொன்னதற்காக நான் செய்ததல்ல. உடம்புக்கு நல்லது. நீ எல்லா வேலையும் செய், அவளும் செய்யட்டும். நான் தினமும் காலையில் என் உடம்பு ஆரோக்கியத்திற்காக இதைச் செய்கிறேன்" என்றான்.

தாயாரிடம் லக்ஷ்மிக்குக் கையில் கண்ட வலியைச் சொன்னால் அவளிடம் அதிருப்தி

கொள்வாள் என்று நடேசன் உண்மையைச் சொல்லவில்லை.

தாயார் முணுமுணுத்துக் கொண்டே இருந்தாள். இது மருமகள் செய்த குறும்பு என்றே அவள் நினைத்தாள். லக்ஷ்மிபேரில் வெறுப்பு ஆரம்பமாயிற்று.

பார்வதியம்மாளுக்கு (இதுதான் நடேசன் தாயார் பெயர்) ஒரு மகள், சீதம்மாள். நடேசனை விட மூத்தவள். புருஷன் இறந்தது முதல் பிறந்தகத்திலேயே இருந்து வந்தாள். இவளுடைய தினசரி காரியம், பாய்மேல் படுத்துக்கொண்டு யார் என்ன தவறு செய்கிறார்கள் என்று பார்த்துக் கொண்டே இருப்பது.

“உடம்புக்கு நல்லது இல்லது என்பது வெறும் பேச்சு. எல்லாம் அவள் வேலை. இத்தனை நாள் உடம்புக்கு நல்லதாக இல்லாதது இப்போது என்ன திடீர் என்று வந்து விட்டது!” என்றாள் சீதம்மாள்.

“புருஷப் பையன், ஜலம் இழுப்பதாவது! இது என்ன வெட்கக் கேடு?” என்றாள் தாயார்.

“அவன் பாயில் படுத்திருக்கட்டும். நான் தண்ணீர் தூக்கி அண்டாவை நிரப்பி விடுகிறேன்” என்றாள் மகள்.

இம்மாதிரி பேச்சு நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போயிற்று. நடேசனுடைய இல்வாழ்க்கைப் புது நந்தவனத்தில் அன்புக்கு இடமில்லாமல் முள் பரவிப் பாழ் படுத்திற்று. லக்ஷ்மியினுடைய உள்ளம் தவித்தது.

* * *

சிறு பெண் ஒருத்தி, பெரியோர்கள் செய்த சாஸ்திரத்தையும் பரம்பரையாக வந்த குல தருமத்தையும் அனுசரித்து, பெற்றோரை விட்டு, நீதான் கதி என்று தான் முன் பின் பாராத ஒரு புருஷனை நம்பி, புத்தம் புதிய ஒரு குடும்பத்தில் புகுந்து இவ்வாறு சிக்கிக் கொண்டு தவிக்கும் உள்ளத்தை ஆண் வாசகர்கள் சரியாக உணர்வதற்குக் கொஞ்சம் கற்பனா சக்தி வேண்டும்.

புருஷனுக்குத் தெரியாமல் ஒரு நாள் அவள் மெதுவாகப் படுக்கையை விட்டு எழுந்திருந்து கிணற்றண்டை போய், முதல் நாள் செய்த மாதிரி இடது கைக்குத் துணையாகக் காலைக் கொண்டு எப்படியோ கஷ்டப்பட்டு ஸ்நானத்திற்கு வேண்டிய ஜலம் இழுத்து அண்டாவை நிரப்பி விட்டு வந்து படுக்கையில் படுத்துக் கொண்டாள். பிறகு நடேசன் எழுந்து வழக்கம்போல் தண்ணீர் தூக்கப் போய்ப் பார்க்கும்போது அண்டா நிறைய ஜலம் இருந்ததைக் கண்டான். தாயார்தான் இவ்வாறு செய்திருக்க வேண்டும் என்று எண்ணிப் பேசாமல் தன் காரியங்களைக் கவனித்தான்.

மறுநாளும் இவ்வாறே நடந்தது. “சரி, இதற்கு என்ன செய்வது? நான் ஜலம் தூக்கிச் சிரமப்படுவது அம்மாவுக்குப் பிடிக்கவில்லை; இவ்வாறு செய்கிறாள்” என்று எண்ணி விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்காமலிருந்தான். அன்றிரவு லக்ஷ்மிக்குச் சுரம் கண்டது. இடது கை பலமாய் வீங்கி விட்டது. அதன் பிறகு நடேசனுக்கு நடந்ததெல்லாம் தெரிந்தது. ஒன்றும் செய்யத் தோன்றாமல் குழப்பத்தில் கொஞ்ச நேரம் கிடந்தான். பிறகு தூங்கிப் போனான்.



* * *

“இவளுக்குக் கையில் ஏதோ ஊனம். இவளை ஏன் நம் வீட்டுக்குக் கட்டிக்கொண்டோம்!” என்று மறுநாள் தாயார் இரக்கமின்றிப் பேச ஆரம்பித்தாள். நடேசனுக்குத் தாங்கவில்லை. தாயாருடனும் சண்டையிட்டான்; வலியினால் வருந்திக் கொண்டிருந்த மனைவியிடமும் சண்டையிட்டான். இவ்வாறு இரண்டு நாள் கழிந்தது. பிறகு லக்ஷ்மியின் தகப்பனாருக்கு அவளை அழைத்துப் போகக் கடிதம் எழுதினான். அவரும் வந்தார்.

“உங்கள் மகளுக்குப் பிறந்தபோதே கையில் ஏதோ தொந்தரவு இருந்ததாமே? இதை எங்களுக்கு ஏன் சொல்லவில்லை?” என்றாள் பார்வதியம்மாள்.

“அம்மா! பிறந்தபோது இல்லை. எப்போதாவது வலி வந்து வீங்கிக் கொள்வதுண்டு. சொல்லாதது எங்கள் தவறுதான். ஊருக்கு அழைத்துப் போய்ச் சொஸ்தப்படுத்திப் பிறகு கொண்டு வந்து விடுகிறேன்” என்று மிகவும் பொறுமையாகவே அவர் சமாதானம் சொல்லி, மகளைச் சுரத்துடன் ஊருக்குக் கூட்டிக்கொண்டு போனார்.

* * *

“நல்ல இடங்கள் எத்தனையோ இருக்க ஆயிரம் ரூபாய்க்கு ஆசைப்பட்டு இவனுக்கு இந்த நொண்டியைக் கட்டி விட்டோமே! நம்முடைய கடனைத் தீர்க்க வேறே வழி இல்லாமல் போச்சா? நம் துரதிர்ஷ்டம் இப்படியாச்சே!”

இவ்வாறு வீட்டில் தினமும் பார்வதியம்மாளும் மகள் சீதம்மாளும் பேசிப் பேசி வந்தார்கள். மனைவிக்குச் சுரமும் கைவீக்கமும் குறைந்ததாக நடேசனுக்குக் கடிதம் வந்தது. ஆனால் அவள் இன்னும் படுத்த படுக்கையாகவே கிடப்பதாகச் சமாசாரம் கிடைத்தது.

ஒரு மாதத்திற்குப் பிறகு மறுபடியும் கை வீங்கினதாகவும் பழையபடி சுரம் அடிப்பதாகவும் கடிதம் வந்தது.

“இது ஜன்மாந்தர வியாதி, நடேசா! இது சொஸ்தமாகிற வியாதி அல்ல” என்றாள் பார்வதியம்மாள்.

“அப்படியும் இருக்கலாம். நம்முடைய கர்மத்தின் பலனை நாம் அனுபவித்துத்தான் தீர வேண்டும்” என்றான் நடேசன்.

“வேறு கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டியதுதான். என்னால் இனிமேல் பொறுக்க முடியாது” என்றாள் தாயார்.

"கண்ணுபின்னு என்று பேசாதே" என்று நடேசன் சொல்லி விட்டுக் கச்சேரிக்குப் போய் விட்டான். அவன் தாலுக்கா கச்சேரியில் குமாஸ்தா.

* * *

ஒரு வருஷம் கழிந்தது. பார்வதி யம்மாளுக்கு ஒரு தம்பி. அவருக்கு ஒரு மகள்: மீனாட்சி. பன்னிரண்டு வயது. அந்தப் பெண்ணுடன் அவர் ஒரு நாள் நடேசன் வீட்டுக்கு வந்தார்.

"எப்பேர்ப்பட்ட பெண், பார்! இவள் அந்தக் காலத்தில் ரொம்ப சிறிசா யிருந்தாள். இல்லாவிட்டால் அப்போதே உனக்கு இவளைக் கலியாணம் பண்ணி யிருப்போம். இவளுக்கு இப்போது எங்கெங்கேயோ வரன் ஏன் தேடிப் போக வேண்டும்? நம் வீட்டுக் குழந்தையாகவே இருக்கட்டும்" என்றாள் பார்வதி யம்மாள்.

முதலில் இந்தப் பேச்சை நடேசன் வெறுத்தான். ஆனால் விடாமுயற்சி வீண் போகாது. மறு வருஷம் சித்திரை மாதத்திலேயே திருப்பதியில் ஸ்வாமி சந்நிதானத்தில் நடேசனுக்கு இரண்டாம் விவாகம் முடிந்து விட்டது.

## 2

அடுத்த ஆறாவது மாதத்திலேயே மீனாட்சி புருஷன் வீட்டுக்கு வந்து விட்டாள். பார்வதி யம்மாள் மீனாட்சியிடம் மிக அன்பாக நடந்து வந்தாள். மீனாட்சியும் நல்ல பெண். சுறுசுறுப்பு. சிறு பெண்ணா யிருந்தும் வீட்டு வேலை அவ்வளவும் முதலிலிருந்தே தானாகவே செய்ய ஆரம்பித்தாள். இவ்வாறு எல்லாம் சரியாக இருந்தாலும் நடேசன் உள்ளத்தில் சுகமில்லை. என்னவோ வேதனை பண்ணிக்கொண்டே இருந்தது.

"ஏன், என்னிடம் நீங்கள் பிரியமாக இல்லை?" என்றாள் மீனாட்சி.

"பிரியம் ஏன் இல்லை? நான் என்ன செய்து விட்டேன் உன்னை? அடிக்கிறேனா, திட்டுகிறேனா?" என்றான் நடேசன்.

"அதெல்லாம் வீண் பேச்சு. உங்கள் மனம் கிருஷ்ணாபுரத்தில்தான் இருக்கிறது" என்றாள் மீனாட்சி.

கிருஷ்ணாபுரம் என்பது லக்ஷ்மி நோய் வாய்ப் பட்டுக் கிடந்த ஊர். நடேசன் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

* * *

நடேசனுக்கு மறு விவாகம் ஆன சில நாட்களுக்கெல்லாம் எப்படியோ லக்ஷ்மியின் உடம்பு குணப் பட்டு விட்டது. கை வீக்கம் இறங்கி விட்டது. முழுதும் சரியாகவே போய் விட்டது.

"பார்த்தாயா, அவள் வேஷத்தை! இப்போ பிறந்தகத்தில் வீட்டுக்கு வேண்டிய ஜலம் எல்லாம் அவளே இழுத்துக் கொட்டுகிறாளாமே! நம் வீட்டில் நாலு குடம் இழுக்கத்தானே அவளுக்கு முடியாமல் போய்விட்டது!" என்றாள் பார்வதியம்மாள்.



"அவள் இங்கே வரப் பார்க்கிறாளாம், வேஷக்காரி! நாம் இருக்கிற நிலையில் இந்த அநியாயப் பையனுக்கு இரண்டு பெண்டாட்டி வேறே வேண்டுமா!" என்றாள் பார்வதியம்மாள்.

"அது இருக்கட்டும், அம்மா. அவள் நடவடிக்கையைப் பற்றிக் கேட்டாயோ?" என்றாள் சீதம்மாள்.

"அந்த வெட்கக் கேட்டை என்னத்துக்கு எடுக்கிறாய்!" என்றாள் தாயார்.

"இதெல்லாம் நடேசன் காதில் விழப்படாது. ஆனால் ஊரார் வாயை அடக்க முடியுமா?" என்றாள் சீதம்மாள்.

* * *

'ஊரார் வாய்' ஒன்றுமே பேசவில்லை. கிருஷ்ணாபுரத்தில் எல்லாருக்குமே லக்ஷ்மியிடம் பரிதாபம். "இந்த அநியாயத்தைப் பார்த்தாயா?

இரண்டு நாள் கையில் வாயு கண்டதற்காகத் தள்ளிப் போட்டார்களே! இப்படியும் உண்டா உலகத்தில்!" என்றார்கள்.

"இரண்டாம் கலியாணம்கூட ஆகி விட்டதாமே? அநீதி, அநீதி!" என்றார்கள் சிலர். "பாவம்! தங்கமான குழந்தை இப்படித் திக்கற்றுப் போச்சு" என்றார்கள்.

"கோர்ட்டுக்கு இழுத்துப் புத்தி கற்பிக்க வேண்டும்" என்றார்கள் வேறு சிலர்.

இப்படிச் சில நாள் கழிந்தன. முதலில் லக்ஷ்மி முகத்தை வெளியில் காட்ட வெட்கப்பட்டு வீட்டுக் குள்ளேயே இருந்து வந்தாள். எவ்வளவு நாள் அந்த மாதிரி இருக்க முடியும்? ஆற்றங்கரைக்கும் கோவிலுக்கும் போக ஆரம்பித்தாள். ஆற்றங் கரையில் ஒரு அநுமார் கோவில். தினமும் லக்ஷ்மி ஆற்றில் முழுகிவிட்டு அநுமாரின் முன் பழம் வைத்துக் கும்பிட்டுப் போவாள். "அப்பனே! சீதையைக் காப்பாற்றினாயே! என் கதியைக் கொஞ்சம் பாரேன்!" என்று வேண்டிக் கொள்ளுவாள்.

* * *

இவ்வாறு இரண்டு வருஷம் கழிந்தது. "பூர்வ ஜன்மத்தில் என்ன பாவம் செய்தேனோ!" என்று உள்ளத்தைச் சமாதானப் படுத்திக்கொண்டு லக்ஷ்மி தெய்வ பக்தி குறையாமலிருந்தாள்.

மாமியாரும் நாத்தனாரும் பேசி வந்த கொடுமைகளைச் சிலர் கிருஷ்ணாபுரத்திலும் பரப்பினார்கள்.

"ஒன்றும் இல்லாமல் தள்ளி விடுவார்களா? ஏதோ பிசகு நடந்திருக்கிறது" என்று அந்த ஊரிலும் சிலர் பேச ஆரம்பித்தார்கள். பிறகு கற்பனைக் கதைகளையும் சிலர் கட்டி விட்டார்கள். வீட்டிலும் அண்ணனுடைய மனைவி மெதுவாகப் பேச ஆரம்பித்தாள். "என்னவான போதிலும் புருஷன் வீட்டை விட்டு எவ்வளவு நாள் வெட்கமில்லாமல் பிறந்தகத்தில் இருக்க முடியும்? இதைவிட நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாமே" என்று லக்ஷ்மியின் காதில் படும்படியாக முணுமுணுப்பாள். இவ்வாறு பேசுவதைத் தடுப்பார் யாருமில்லை. லக்ஷ்மியின் தாயார் இறந்து போய்ப் பல வருஷங்களாயிற்று. தகப்பனாருக்கு இப்போது வியாதி கண்டு தேகம் மெலிந்து வந்தது. பிறகு செருப்புக் கடித்த புண் சீப்பிடித்துக் கொண்டு படுத்த படுக்கையாக மூன்று மாதம் கிடந்தார். லக்ஷ்மி இந்த மூன்று மாதங்களும் தகப்பனாருக்குப் பணி செய்வதில் ஈடுபட்டுத் தன் துயரத்தை ஓரளவு மறந்திருந்தாள்.

ஒரு நாள் தகப்பனார் மகனைக் கூப்பிட்டு "அப்பனே, நான் பிழைக்கப் போவதில்லை. உனக்கு ஒன்று சொல்லுகிறேன்; எப்படியாவது மாப்பிள்ளையிடம் போய்க் கெஞ்சிக் கேட்டுக்கொண்டு லக்ஷ்மியை அந்த வீட்டில் சேர்த்துவிடு; தெய்வம் விட்ட வழியாகட்டும். எனக்குப் பின் அவள் இந்த வீட்டில் இருக்க முடியாது" என்று சொல்லித் துயரத்தை அடக்க முடியாமல் விம்மிவிம்மி அழுதார். அந்த இரவே அவருக்கு நினைவு தப்பி மூன்று நாள் அப்படியே கிடந்து பிறகு பிராணன் போய்விட்டது.

3

லக்ஷ்மியின் தமையனும் தகப்பனார் ஆணைப்படி பல முயற்சிகள் செய்தான். ஒன்றிலும் பயன்படவில்லை. "கெட்டுப் போன அவலக்ஷணங்கள் இந்த வீட்டு வாசலை மிதிக்கக் கூடாது" என்றாள் பார்வதியம்மாள். மகள் சீதம்மாளும் அப்படியே சொன்னாள். நடேசனுக்கு இதைப் புறக்கணிக்க மனமிருந்தும் தைரியமில்லை. லக்ஷ்மியின் தமையனிடம் முடியாது என்று சொல்லி விட்டான்.

* * *

ஆற்றங்கரை அநுமாரை வணங்கி விட்டு வழக்கம்போல் அவ்விடம் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தாள், லக்ஷ்மி.

"ஏனம்மா அழுகிறாய்?" என்றான் அங்கே நின்ற ஒரு மாட்டுக்காரப் பையன்.

இவனுக்கு லக்ஷ்மி தினமும் அநுமார் சந்நிதியில் பூஜைக்கு வைக்கும் பழத்தை வழக்கமாகக் கொடுப்பாள். அவன் வாங்கிச் சாப்பிடுவான். இருவருக்கும் இவ்வாறு பழக்கம் ஏற்பட்டிருந்தது.

அவன் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் கொஞ்ச நேரம் அழுது கொண்டே இருந்தாள்.

"சும்மா அழாதே, அம்மா! சாமி இருக்க ஏன் அழுகிறாய்?" என்றான் அந்தப் பையன்.

"தம்பி, சாமிக்கு என்மேல் இரக்கமில்லை. செத்துப் போக வேண்டும் என்று எனக்கு ஆசை; சாவு வரவில்லையே என்று அழுகிறேன்" என்றாள்.

"எங்க அக்கா இப்படித்தான் அழுது அழுது ஒரு நாள் கிணற்றில் விழுந்து செத்துப் போனாள். அவள் புருஷன் அவளை அடிக்க அடிக்க அதைப் பொறுக்க முடியாமல் அவள் அப்படிச் செய்தாள். குடிகாரப் பயல் அக்காளை இப்படிச் செய்து விட்டான்" என்றான் மாட்டுக்காரப் பையன்.

"அப்பனே, என்னை என் புருஷன் அடித்தால் நான் பொறுத்துக் கொள்வேன். எவ்வளவு வேண்டுமானாலும் அடிக்கட்டும்; அதைப் பொறுத்துக் கொள்ளலாம்."

"அடிக்காமல் போனால் ஏன் அழுகிறாய்?" என்றான் அந்தப் பையன்.

"நான் சொன்னால் உனக்குத் தெரியாது, தம்பி! உன் அக்கா செத்துப் போனாள். இப்போ அவள் சுகமாக இருக்கிறாள். நானும் அப்படியே செத்துப் போகலாம் என்று தீர்மானித்து விட்டேன். ஆனால் பயமாக இருக்கிறது. என் கூட வா, தம்பி. பெரிய மடு வரையில் வருவாயா?" என்றாள்.

"எங்கே? தண்ணீரிலே விழவா? நான் வர மாட்டேன்" என்றான் பையன்.

"வரமாட்டாயா? சரி, நானே போகிறேன்" என்று சொல்லி அனுமார் முன் மறுபடியும் விழுந்து கும்பிட்டு நீண்ட நேரம் பேச்சில்லாமல் கிடந்தாள். பிறகு எழுந்து வேகமாக நடந்து ஆற்றில் பெரிய மடுவண்டை போனாள்.

"வேண்டாம்! வேண்டாம்! உன் காலில் விழுகிறேன் தாயே! எல்லாம் சரியாகப் போகும். தண்ணீரில் செத்தால் பிசாசாய்ப் போவாய், வேண்டாம்!" என்று மாட்டுக்காரப் பையன் கூப்பாடு போட்டுக் கொண்டு பின்தொடர்ந்து ஓடினான்.



பெரிய மடு என்பது வேனிற் காலத்தில் ஆற்றில் ஆழமான ஒரு இடம். இப்போது பெரும் பிரவாகமாக ஆற்றில் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. மத்தியான்ன வேளை. யாரும் மனித சஞ்சாரம் இல்லை. மாடு மேய்க்கும் பையன்கள் சிலர் மட்டிலும் அக்கரையில் தூரத்தில் மாடு மேய்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு விஷயம் எட்டவில்லை. லக்ஷ்மி தண்ணீரில் குதித்தவுடன் பையன் திகிலடைந்து திரும்பி ஓடி விட்டான்.

4

**பார்வதியம்மாள்:**—ஆற்றில் விழுந்து செத்தாளாமே, நல்லதாகப் போச்சு!

**சீதம்மாள்:**—நம்ம வீட்டுப் பெயர் இனி எல்லார் வாயிலும் இருக்காது. பிழைத்தோம்.

**மீனாட்சி:**—துர்மரணமாகச் செத்துப் போனால் பிசாசாகப் போகிறாளாமே!

**பார்வதியம்மாள்:**—ஆமாம்! அப்படித்தான் கஷ்டப்படுவாள், படட்டும்.

பார்வதியம்மாளும் சீதம்மாளும் மருமகள் மீனாட்சியும் இவ்வாறு பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது மீனாட்சி கர்ப்பிணி. ஏழாவது மாதம்.

இரண்டு மாதத்திற்குப் பின் மீனாட்சிக்கு சுகப் பிரசவமாயிற்று: பெண் குழந்தை. நடேசன் வீட்டில் இப்போது மகிழ்ச்சி நிரம்பிற்று. நடேசனுடைய உள்ளம்கூட லக்ஷ்மியைப் பற்றி நிம்மதி அடைந்தது. மரணத்தை ஒரு பெரிய கேடாக எண்ணி வருகிறோம். ஆனால் அதுவே பல கஷ்டங்களுக்கும் துக்கங்களுக்கும் நிவாரணம். அது இல்லாவிடில் வாழ்க்கை ஒரு நிரந்தர நரகமாகப் போகும். லக்ஷ்மி ஆற்றில் விழுந்து செத்துப் போய் விட்டாள் என்றதும் எவ்வளவு வியாகுலங்கள் பல பேர்களுக்குத் தீர்ந்து போயிற்று!

* * *

பிரசவமாகிப் பத்தாவது நாள். மீனாட்சிக்கு இலேசாகச் சுரம் கண்டது. "ஒன்றுமில்லை, சரியாகப் போகும்" என்றாள் பார்க்கவந்த கிழவி ஒருத்தி.

மறுநாள் மீனாட்சி படுத்த படுக்கையாக ஏதோ கன்னாபின்னா என்று பேச ஆரம்பித்தாள். "சும்மா இரு!" என்று அதட்டினாள் மாமியார்.

மீனாட்சி ஒரு விழி விழித்தாள். பிறகு "ஆமாம், சும்மா இருப்பேன்! என்னை வீட்டை விட்டுத் துரத்தி விட்டாயோ இல்லையோ? விடுவேனா உன்னை?" என்றாள். மறுபடி, "நீ குழந்தை பெற்று விட்டாயா? யாருடைய குழந்தை இது? ஜெம்பு! ஓடு! ஆற்றில் விழுந்து சா!" என்று பேயாகக் கத்தினாள் மீனாட்சி.

கண்கள் பயங்கரமாகச் சுழன்று உடல் விறுவிறுவென்று கட்டை போல் ஆயிற்று. கொஞ்ச நேரம் அப்படியே கிடந்தாள். பிறகு படுக்கையை விட்டு எழுந்து ஓட ஆரம்பித்தாள்.

"ஐயோ, அவளுடைய பிசாசம்மா இது!" என்றாள் சீதம்மாள் நடுநடுங்கி.

"சுவாமி, அம்மனே, உனக்கு எது வேண்டுமானாலும் கொடுக்கிறேன். மாரியம்மா, எங்களைக் காப்பாற்று!" என்று கதறினாள் பார்வதியம்மாள்.

மாரியம்மன் கோயில் பூசாரிக்குச் சொல்லி யனுப்பி ஒரு கோழியைப் பலி கொடுக்க ரகசியமாகப் பார்வதியம்மாள் ஏற்பாடு செய்தாள்.

ஜோசியம் சீதாராமையர் வந்து மந்திரம் ஜெபித்து விபூதி கொடுத்தார். விபூதியைக் கையில் வாங்கிப் படுக்கைமேல் வைத்துக் கொண்டு மீனாட்சி கொஞ்சம் சாந்தமானாள். விபூதியின் சக்தியைக் கண்டு எல்லாரும் சந்தோஷப் பட்டார்கள்.

"பூசிக்கொள்" என்றான் நடேசன்.

"பூசிக் கொள்கிறேன்" என்று நெற்றிமேல் வைத்திருந்த விபூதியைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

திடீர் என்று விபூதியை ஊதி இறைத்துப் போட்டு "ஹா! ஹா!" என்று கதறினாள்.

"விடுவேனா உன்னை? அந்த மாமியாரைக் கூப்பிடு. அவளுக்குச் செய்கிறேன் வேலை! விபூதியைக் கொடுத்து ஏமாற்றப் பார்த்தாளா?" என்று உன்மத்தச் சிரிப்புச் சிரித்தாள்.

"ஐயோ பாவி, ஆற்றில் விழுந்து செத்தவள் தான் இது. கொண்டு வா, துடைப்பக் கட்டையை" என்றாள் பார்வதி.

சீதம்மாள் துடைப்பக் கட்டையைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

பார்வதியம்மாள் அதை வாங்கி மீனாட்சியை இரண்டு மூன்று அடி தலையில் அடித்தாள்.

"ஐயோ, ஐயோ, அடிக்க வேண்டாம். நான் போய்விடுகிறேன். வேண்டாம், வேண்டாம்" என்று கதறினாள் மீனாட்சி.

"போ! போ!" என்று மறுபடியும் அடிக்க ஆரம்பித்தாள் பார்வதியம்மாள்.

"போதும் போதும்" என்று தடுத்தான் நடேசன்.

"உனக்குத் தெரியாது, நடேசா! நீ தூரப் போ!" என்று கத்தினாள் பார்வதியம்மாள்.

* * *

இவ்வாறு ஐந்து நாள் பிசாசு வேட்டை நடந்தது. ஒன்றும் பயனில்லை. பைத்தியம் அதிகமாயிற்று.

"இது சூதிகா வாயு" என்றார்கள் சிலர்.

"இது ஒரு கறுப்பு" என்றார்கள் வேறு சிலர்.

"ஐயோ, இது அவள் தான்" என்றாள் சீதம்மாள்.

"கோழி கொடுத்தது போதாது. அம்மன் பெரிய பலி கேட்கிறது. வெள்ளாடு கேட்கிறது" என்றான் பூசாரி ரகசியமாகப் பார்வதியம்மாளிடம். அதற்கும் பார்வதியம்மாள் நடேசனுக்குத் தெரியாமல் ஏற்பாடு செய்தாள். ஆனால் ஒரு நன்மையும் ஏற்படவில்லை.

"இதுவும் என் தலை விதியா, ஈசனே!" என்று நடேசன் அலறி அலறித் திகைத்துக் கிடந்தான்.

* * *

நாலு அமாவாசை தீர்ந்தால் சரியாய்ப்போகும் என்று விபூதி கொடுத்த ஜோசியம் சீதாராமையர் சொன்னபடி நாலு மாதம் கழித்து மீனாட்சிக்குச் சுகப் பட்டுவிட்டது. எல்லாம் ஒரு பெரிய கனவுபோல் தீர்ந்தது. இப்போது வீட்டில் ஒரு புது அமைதியும் பக்தியும் ஏற்பட்டது. லக்ஷ்மியைப் பற்றி ஓரளவு எல்லாருக்கும், பார்வதியம்மாளுக்குங்கூட மரியாதை உண்டாயிற்று. அவளைப் பற்றிப் பேசுவதை நிறுத்தி விட்டார்கள். மீனாட்சி புருஷனிடம் மிக அன்பாகவும் புத்திசாலித்தனமாகவும் நடந்து கொண்டாள். தான் ஏதோ மெய்மறந்து தவறுகள் செய்து விட்டதாக அவளுக்கு ஒரு வெட்கம். எப்படியோ தப்பினோம் என்று அதைப்பற்றி ஒன்றும் பேசாமல் எல்லாரும் சாமர்த்தியமாக நடந்து கொண்டார்கள்.

* * *

ஒரு வருஷத்திற்குப் பின் மீனாட்சி மறுபடியும் கர்ப்பம் தரித்தாள். பார்வதி ரொம்ப ஜாக்கிரதையாகக் கோவில்களுக்குப் பகிரங்கமாகவும் ரகசியமாகவும் வேண்டிக் கொண்டு பூஜை பலி எல்லாம் நடத்தினாள். பிரசவ காலம் நெருங்கியதும் நடேசன் பக்கத்து ஊரான பாகலூரில் பாதிரியார் நடத்தி வந்த ஆஸ்பத்திரியில் பிரசவம் பார்க்கும் மருத்துவச்சியைத் தருவிப்பதற்கு ஏற்பாடு செய்தான். உள்ளூர் மருத்துவச்சி போன தடவை உதவியதில் பிசகு ஆயிற்று. இந்தப் பிரசவத்திற்குத் தேர்ச்சி பெற்ற மருத்துவச்சி வருவது நலம் என்று எல்லாருமே ஆட்சேபனை சொல்லாமல் ஒப்புக் கொண்டார்கள்.



* * *

மீனாட்சியின் இரண்டாவது பிரசவம் யாதொரு கஷ்டமுமின்றி முடிந்தது. ஆண் குழந்தை பிறந்தது. பிரசவத்தின்போது பக்கத்தில் ஆஸ்பத்திரி மருத்துவச்சி இருந்தாள். ஒரு மாதம் வரையில் தினம் ஒரு தடவை வந்து பார்த்துப் போனாள். தாய்க்குப் புத்திமாறாட்டம் ஏதும் உண்டாகாமல் குழந்தைக்குப் பால்கொடுத்து



வந்தான். சென்ற தடவை போல் ஏதாவது கோளாறு உண்டாகுமோ என்று நடேசன் மிகவும் பயந்திருந்தான். அப்படி எதுவும் உண்டாகாமல் எல்லாம் சரியாக நடந்ததில் அவனுக்கு மிக்க மகிழ்ச்சி. எங்கேயோ கடன் வாங்கி மருத்துவச்சிக்குப் பத்து ரூபாய் கொடுக்கப் போனான். "வேண்டாம்" என்று அவள் மறுத்து விட்டாள்.

"என்னால் இவ்வளவுதான் கொடுக்க முடியும், தாயே! கோபித்துக்கொள்ள வேண்டாம். எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று வற்புறுத்தினான்.

"வேண்டாம், இந்தப் பிரசவத்திற்கு நான் பணத்திற்காக வரவில்லை. சந்தோஷத்திற்காகவே வந்தேன்" என்று சொல்லிவிட்டு, மீனாட்சியின் பெண் குழந்தையைத் தூக்கி எடுத்து விளையாட்டுக் காட்டிக்கொண்டிருந்தாள்.

கொஞ்ச நேரம் கழித்து "நான் போய் வருகிறேன், மீனாட்சி" என்று விடை பெற்றுக்கொண்டு போய்விட்டாள்.

மருத்துவச்சி தன்னுடன் பேசியபோது நடேசனுக்கு முதல் மனைவி நினைவு வந்தது. அதைப் பற்றி ஞாபகப்படுத்திக் கொள்ளக் கூடாது என்று மனதை ஸ்திரப்படுத்திக் கொண்டான்.

## 5

"சீலா தேவி! அந்த வீட்டில் நீ போயிருந்த போது உன்னை யாரும் கண்டு கொள்ளவில்லையா?" என்றார் பாகலூர் ஆஸ்பத்திரிப் பாதிரியார். சீலா தேவி என்பது லக்ஷ்மியின் புதுப் பெயர்.

"ஆஸ்பத்திரி வேஷம் காப்பாற்றிற்று. பெண்டுகளுக்குக் கொஞ்சங்கூடத் தெரியவில்லை. பிரசவஸ்திரீக்கு என் அடையாளமே தெரியாதல்லவா? புருஷர் என்னை உற்றுப் பார்க்கவில்லை. மரியாதையாக விலகி நின்றார். கடைசி நாள் நான் பேசியபோது மட்டும் கொஞ்சம் ஏதோ சந்தேகப்பட்டது போலிருந்தது. ஆனால் என் முக்காட்டை இழுத்து முகத்தைப் பாதி மூடிக் கொண்டு சமாளித்து விட்டேன்."

"சரி, உன் மனம் நிலையிலிருக்கிறதா?"

"இருக்கிறது, அப்பனே! இந்த ஆஸ்பத்திரி வேலை எனக்குச் சாந்தி தந்திருக்கிறது. நீங்கள் என்னை ஆற்றிலிருந்து எடுத்துப் போட்டுக் காப்பாற்றாமலிருந்தீர்களானால் நான் பிசாசாகத்தானே போயிருப்பேன், அந்த மாட்டுக்காரப் பையன் சொன்னபடி!"

பாதிரியார் சிரித்தார். "பிசாசு கிசாசு ஒன்றும் கிடையாது. அது மூடர்கள் பேச்சு. ஆனால் நீ சந்தோஷமாக இருக்கிறாயா?" என்றார்.

"சந்தோஷமில்லை. ஓரளவு சாந்தி அடைந்திருக்கிறேன், அவ்வளவு போதும். கடவுளும் நீங்களும் இருக்கிறீர்கள் அல்லவா!" என்றாள்.

"புருஷனிடம் போயிருக்க உனக்குச் சம்மதமா? நான் எல்லாம் விவரமாகச் சொல்லி ஏற்பாடு செய்ய முடியும்" என்றார்.

"வேண்டாம், அப்பனே! அந்த அறியாப் பெண் சுகமாக இருக்கிறாள். அந்த சுகத்தை நான் ஏன் போய்க் கெடுக்க வேண்டும்? இந்த ஆஸ்பத்திரி வேலையில் எப்படியோ என் ஆயுளை முடித்துக் கொள்ளுகிறேன்" என்றாள்.

"புருஷனிடம் போயிருக்கப் பிரியம் இல்லாவிட்டால், ஏன் நீ ஞான ஸ்நானம் செய்து எங்களோடு ஒன்றாக இருக்கக் கூடாது?" என்றார் பாதிரியார்.

"அனுமார் கோபித்துக் கொள்வார்!" என்று சொல்லி அவள் சிரித்தாள்.

• • •

அடுத்த தீபாவளியன்று சீலாதேவி ஒரு கட்டு பட்டாசும் ஒரு பெரிய பொட்டணம் மிட்டாயும் கொஞ்சம் பூவும் வாங்கி ஒரு பையில் போட்டுக் கொண்டு மீனாட்சியின் ஊருக்குப் போனாள். வீட்டு வாசலில் மீனாட்சியின் குழந்தை விளையாடிக் கொண்டிருந்தது.

"கமலா, இந்தா உனக்குப் பட்டாசு" என்றாள். குழந்தை ஓட்டமாக ஓடி வந்தாள். பிரசவம் பார்த்த மாமியின் அடையாளத்தைக் கண்டு கொண்டாள். பட்டாசும் மிட்டாயும் கையில் வாங்கிக் கொண்டு பூவைச் சூட்டத் தலையைக் காண்பித்தாள். லக்ஷ்மியும் புஷ்பத்தைச் சூட்டிக் குழந்தைக்கு ஒரு முத்தம் கொடுத்து வீட்டுக்குள் அனுப்பினாள்.

"அம்மா! அம்மா!" என்று கூப்பாடு போட்டுக் கொண்டு கமலம் தாயாரிடம் போய் விஷயத்தைச் சொன்னாள்.

"அந்த மருத்துவச்சியம்மா ரொம்ப நல்லவள் போலிருக்கிறது!" என்றாள் மீனாட்சி, மாமியாரிடம்.

பார்வதியம்மாளும் நடேசன் வீட்டுக்கு வந்ததும் ஆஸ்பத்திரி மருத்துவச்சி அன்று வந்து குழந்தைக்குப் பட்டாசும் மிட்டாயும் கொடுத்துப் போனாள் என்று சொல்லிச் சந்தோஷப்பட்டாள்!

• • •

# கவியின் கனவு

நாமக்கல் வே.ராமலிங்கம் பிள்ளை

1. கவிபாடிக் கவிபாடிக் காலம் கழிப்பேன்
   கவலைகள் யாவையும் விட்டு ஒழிப்பேன்
புவி தரும் இன்பத்தில் திருப்தி இல்லை
   பூமிக்கப் பாலுள்ள இன்பங்கள் சொல்லும் (கவி)

2. கண்ணுக்குத் தெரியாத காட்சிகள் காண்பேன்
   காதுக்குக் கேளாத கீதங்கள் கேட்பேன்
எண்ணிக்கை யில்லாத இன்பங்கள் நுகர்வேன்
   எல்லாரும் இன்புற எங்கெங்கும் பகர்வேன் (கவி)

3. மூக்கென்றும் முகராத வாசங்கள் மோப்பேன்
   முன்னென்றும் தெரியாத நன்னயம் பூப்பேன்
நாக்கென்றும் அறியாத நற்சுவை புசிப்பேன்
   கவிசெய்யும் பசியற்ற நாட்டில் வசிப்பேன் (கவி)

4. உடலத்தில் புதுப்புது உணர்ச்சிகள் பொங்கும்
   உள்ளத்தில் உண்மையும் ஞானமும் தங்கும்
சடலத்தைப் பெரிதென்னும் உலகத்தை மறப்பேன்
   சத்திய நித்திய வானத்தில் பறப்பேன் (கவி)

5. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் முன்னே
   அப்படியே பல ஆண்டுகள் பின்னே
போயின வருவன காட்சிகள் தெரியும்
   புதுமையிற் றுறையாடல் என்முன்னே விரியும்
(கவி)

6. தூரமும் காலமும் துச்சங்களாகும்
   துன்பமும் இன்பமும் தொண்டு செய்தேகும்
நேரமும் கிரகமும் நினைவின் படிக்கே
   நின்றெந்தன் ஏவலைச் செய்து முடிக்கும் (கவி)

அப்படியே வாசலுக்கும் போய் மூவேந்தரையும் கோட்டைக்கு வரும்படியாக அழைக்கிறார் ஒளவையார். அவர்களும் வெண்கொற்றக் குடையாகிய சின்னங்களோடு கோட்டைக்குள் வந்து நிற்கிறார்கள்.

"ஏதாவது சிற்றுண்டி கொண்டுவரவா" என்று கேட்டார் ஒளவையார். வேந்தர்களும், "ஆம். பசியாய் இருக்கிறது. ஏதாவது சாப்பிட்டால் நல்லது தான்" என்றார்கள்.

"முக்கனிகள் இருக்கின்றன. பால் இருக்கிறது. வேறு பணிகாரங்களும் இருக்கின்றன. கொண்டு வரவா?" என்று கேட்டார் ஒளவையார்.

அதற்கு வேந்தர்கள் "அதெல்லாம் வேண்டாம். ஆளுக்கு மூன்று நுங்கு தந்தால் போதும். இளநுங்காக இருக்க வேணும்; தயவு செய்து கொண்டு வரச் சொல்லுங்கள்" என்றார்கள்.

தை மாசத்திலப் பனையில் நுங்கு ஏது? கேலியாய்த்தான் கேட்டார்கள் — ஒளவையார் பாட்டி யல்லவா? ஒளவையார் என்ன செய்தார் என்பதைப் பார்ப்போம்.

வேந்தர்கள் பக்கத்தில் நட்டிருந்த பனம் துண்டத்தை அவர் பார்த்தார். பாட ஆரம்பித்தார் :—

திங்கள் குடையுடைச்
சேரனும் சோழனும்
பாண்டிய னும்

மங்கைக்(கு) *அறுகிட
வந்துநின் றார்மணப்
பந்தலி லே;—

சங்கொக்க வெண்குருத்(து)
ஈன்று,

என்று சொன்னவுடனே அந்தப் பனம் துண்டத்தி லிருந்து ஒரே வெளுப்பாக சட்டிகள் போலக் குருத் தோலைகள் முளைத்து எழுந்தன! இரண்டு நிமிஷம் பொறுத்து.

பச் சோலை
சலசலத் து

என்று பாடினார். குருத்தோலைகள் எல்லாம் முதிர்ந்த ஓலைகளாய் ஒரே பச்சையாய் மாறி அசைந்து ஆடத் தொடங்கின.

'அப்பாவி வேந்தர்கள் என்ன செய்வார்கள்! பனை ஓலையின் சப்தம் சலசல என்று காதிலும் விழுகிறது. அவர்களுடைய அதிசயத்தை அளப்பதற்கு இன்னும் கொஞ்சம் பாக்கி யிருக்கிறது.

பங்குக்கு முன்(று)இலை
நுங்கிய வெண்டும்
பனைத்துண் டமே!

என்று பாடி முடித்தார்.

இப்பொழுது கட்டளைக் கலித்துறை யின் முழு உருவத்தையும் பார்க்கலாம்.

திங்கள் குடையுடைச்
சேரனும் சோழனும்
பாண்டிய னும்,

மங்கைக்(கு) அறுகிட
வந்துநின் றார்மணப்
பந்தலி லே;—

சங்கொக்க வெண்குருத்(து)
ஈன்றுபச் சோலை
சலசலத் து

பங்குக்கு முன்(று)இலை
நுங்கிய வெண்டும்
பனைத்துண் டமே!



* அறுகிட : ஆசீர்வதிக்க.

இனி தூண்கள் ஒன்பதும் இடிந்துவிட்டன. தமிழ் வேந்தர்கள் பாடு கஷ்டமாய்த்தான் போய் விட்டது. தூண்களைத் தின்றாக வேண்டுமே!

* * *

தாவர சாஸ்திரமாகிய 'பாட்டனி'க்கு இது மாறான காரியந்தான். ஆனால் பாவலர் உலகில், அதாவது கவிதையுலகில், நன்றாகவே பொருந்தி வருகிறது.

இதோடு இன்னொரு கதை! அதுவும் ஔவையாரை ஒட்டிய கதைதான்.

[கதை, கதை என்று சொல்லுவதற்குக் காரணம், சரித்திர ஆராய்ச்சிக்கு இந்தக் கதைகளை புள்ளாக்கி விடுவார்களோ என்ற பயந்தான்.]



## 2

தமிழ் வேந்தனும் புலவர்களுமாகச் சேர்ந்து பல விஷயங்களைப்பற்றி ஆராய்ந்துகொண்டிருக்கிறார்கள். உண்மைக்கு அபார சக்தியுண்டு என்று சொல்லுகிறார்கள். அந்த உண்மையும் கவி உருவமாக வந்து பேசுமானால் மிக அரிய காரியத்தையே சாதிக்கும் என்று அழுத்தமாய்ச் சொல்லுகிறார்கள். அதன் பேரில் அரசன் ஆயிரம் பொற்காசுகள் கொண்டுவரச் சொன்னான். பட்டுக் கயிற்றால் செய்த வலைப் பை ஒன்றில் அத்தனை காசையும் போடச் செய்தான். போடச் செய்து அதை இறுகக் கட்டி, சபா மண்டபத்தின் உன்னதமான முகட்டில் தொங்க விட்டு சபையோரைப் பார்த்துச் சொல்லுகிறான்:—

"இந்தப் பொன் முடிப்பை லக்ஷ்மி தேவியின் கையிலே ஒப்படைத்திருக்கிறேன். யாரானாலும் கவி பாடலாம். கவியில் உண்மை ஒளி பிறக்குமானால், லக்ஷ்மிதேவி அந்தப் பாடலை ஒப்புக் கொள்வாள்; பொன் முடிப்புத் தானாக அறுந்து கவிஞர் கையில் விழும். ஒரு மாசம் வரை நாம் காத்திருப்போம்."

இவ்விதம் சொல்லிவிட்டு அரசன் அந்தப்புரத்துக்குப் போய்விட்டான். சபையோரும் கலைந்தார்கள்.

மறுநாள் காலையும் சபா மண்டபத்துக்கு வந்தான் அரசன். பரிவாரங்களும் வந்தன. புலவர்களும் வந்து குழுமினார்கள். எல்லாரும் உட்கார்ந்திருக்கிறார்கள்.

ஒரு புலவர் எழுந்துவந்து பொன் முடிப்பின் கீழே நின்றார். ஒரு பாடலும் பாடினார். பொன் முடிப்பு அப்படியேதான் இருந்தது. பாடல் பிரயோசனமில்லை என்று தெரிந்து விட்டது. அவர் போய் விட்டார்.

வேறு சில புலவர்களும் வந்து பாடினார்கள். அவைகளும் பிரயோசன மற்ற பாடல்களாகவே போய் விட்டன.

இந்த விதமாக, தினந்தோறும் பரீட்சை நடந்து வந்தது. ஒருவரும் ஒப்பேற வில்லை. தூர தேசத்திலிருந்து பல புலவர்களும் வந்து பார்த்தார்கள். ஒன்றும் பயன்படவில்லை. முப்பது நாள் ஆயிற்று. கடைசி நாள் அரசனும் சபையோரும் வழக்கம்போல் கூடினார்கள். மகா மேதாவிகள் ஒருவர் இருவர், அதாவது பாக்கி இருந்தவர்கள் பாடிப் பார்த்தார்கள். பொன் முடிப்பைக் கட்டிய கயிறு கொஞ்சமும் நெகிழ்வதாய் இல்லை. எல்லாருக்கும் பெரிய ஏமாற்றம்!

பொன் முடிப்பை அவிழ்த்து விடும்படி கட்டளையிடப் போகிறான் அரசன். அந்த வேளை சபா மண்டபத்தின் முகப்பில் ஒரு வயதான பெண்ணுருவம் தோன்றியது. அந்த உருவம் அரசனை நோக்கியே நடந்து வந்தது. அரசனை நெருங்கியதும் "என்ன விசேஷம்? இங்கே சபையெல்லாம் ஒரு ஏமாற்றத்துக்கு உள்ளான மாதிரி தோன்றுகிறதே. காரணம் என்ன? அரசே! சொல்லி யருளவேண்டும்!" என்று கேட்டாள் அந்த மூதாட்டி.

அரசன் பொன் முடிப்பைச் சுட்டிக் காட்டி, "அதோ தொங்குகிற முடிப்பில், ஆயிரம் பொற்காசுகள் இருக்கின்றன. லக்ஷ்மி தேவியின் கையில் ஒப்படைத்திருக்கிறது. உண்மையைப் பேசும் ஒரு கவியை யாராவது பாடினால் அவர்கள் கையில் அது தானாக அறுந்து விழும். முப்பது நாள் கெடு இதற்கு ஏற்பட் டிருந்தது. அத்தகைய பாடல்

# ஞானத் தமிழ்

திருப்புகழ் மணி
டி. எம். கிருஷ்ணசாமி ஐயர்

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா — நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்."

ஞானம் என்பது ஞானிகள்பால் விளங்குவது. ஞானிகளோ ஞானத்தால் விளங்கு கிருர்கள். ஞானிகள் என்றும் ஞானம் என்றும் ஞாலம் பகுத்து மகிழ்ந்தாலும் இவ்விரண்டையும் தனித் தனியே காண முடியாது. ஞானிகள் ஞானத்தில் அடங்குவர். ஞானமும் ஞானிகள் பால் அடங்கும்.

தமிழ் என்ற சொல்லுக்கு ஞானம் என்ற அடை மொழி பயந்த ஆழ்வார்களின் அன்பு என்னே! தமிழ் கண்ட ஞானமும் ஞானம் கொண்ட தமிழும் இந்நாட்டில் மலிந்து கிடக்கின்றன. இப் பெரும் பாக்கியம் நமது நாட்டில் அவதரித்த ஆழ் வார்கள், நாயன்மார்கள், அரும்பெரும் பக்தர்கள் இவர்களின் மகிமையால் அல்லவோ ஏற்பட்டது! அவர்களது தவப்பயன், நமது கொண்டாட்டம். மந்தி ரங்களாலும் வேள்விகளாலும் வெளி வராத தெய் வம் தமிழ்ப்பாக்களை விரும்பி வெளி வந்து அருள் புரிந்த தென்றால் தமிழை ஞானத்தமிழ் என்று தானே கூற முடியும்?

ஸ்ரீ அருணகிரியார் திருச்செந்தூர் முருகனைப் பாடுங்கால், 'தகப்பன் ஸ்வாமி' என்று பட்டம் பெற்ற பெருமையைக் குறிப்பிடுகிருர்.

"கொன்றைச் சடையர்க்(கு) ஒன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே"

பரமசிவனுக்கு ஸ்வாமி மலையில் உபதேசம் செய்தாரே, அது என்ன? உபதேசம் எப்படிச் செய் தார்? "கொஞ்சித் தமிழைப் பகர்ந்தார்" என்ருர். ஓங்காரப் பொருளைச் சிவபெருமானுக்கு முருகப் பிரான் உபதேசித்ததைப் புராண பூர்வமாக எவரும் அறிவார்கள். ஆகையால் ஓங்காரப் பொருளின் தத் துவமே "தமிழ்" என்றும், உலகெலாம் கடந்த அன்பே அப்பன் செய்த உபதேசம் என்றும் நாம் கொள்ளுவது எளிது. அன்பு வேறல்ல; தமிழ் வேறல்ல. கலப்பற்ற அன்பே தமிழ் ஞானம். அன்பும் சிவமும் வேறல்லதாயின் ஞானம், அன்பு, தமிழ், சிவம் எல்லாம் ஒன்ருய் விடுகின்றது.

அப்பர் சுவாமிகள் இதனுடைய வண்ணத்தை நன்ருய் வெளிப்படுத்தியுள்ளார். சிவஸ்வரூபத்தைச் சொல்லும் வகையில் தமிழ் ஸ்வரூபத்தையும் சுட்டிக் காட்டினுர்:

"விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்
கரும்பின் இன்மொழி காரிகை வண்ணமும்
விரும்புவார் தம்வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பும் வண்ணமும் ஆவரூ ரரே."

ஜீவர்களிடத்தில் விருப்பமும் ஏனைய உலகப் பொருள்களிடத்தில் ஆசை யற்ற வெறுப்பும் ஞானிகளிடத்தில் தென்படும். இவை சிவ லக்ஷணங் கள்தாம். ஸ்ரீ தாயுமானவர், சங்கற்ப சித்தர்கள் "இன் சொல் தவருர்" என்ருர்.

பாரதியார் ஞானிகளைப் பற்றி அருமையாக வர்ணித்திருக்கிருர்.

"நானெனும் ஆணவம் தள்ளலும் — இந்த
ஞாலத்தைத் தானெனக் கொள்ளலும் — பர
மோன வழியில் நடத்தலும் — ஒரு
மூலைக் காலம் கடத்தலும் — நடு



வான கருமங்கள் செய்தலும் — உயிர்
யாவிற்கும் நல்லருள் பெய்தலும் — பிறர்

ஊனைச் சிதைத்திடும் போதிலும் — நம
துள்ளம் அருளின் நெகுதலும்

ஆயிரங் கால முயற்சியால் — பெற
லாவர் இப் பேறுகள் ஞானிகள்.''

வர்ணித்தது ஞானமா, ஞானிகளா, தமிழா என்றால் எல்லாம்தான். இப்பேர்ப்பட்ட பாக்கள் பேயனையும் பிரம்மமாக்கி விடுமல்லவா? பாமரர்களை ஞானவான்களாக்கி, மூடர்களைப் பாவலர்களாக்கி, அல்லவை எல்லாம் ஆனந்தமாக்கி நிலை நிறுத்தி வைக்க வல்ல தமிழை என்னதான் சொல்லுவது? ''ஞானத் தமிழ்'' என்றுதான் சொல்ல வேண்டும்.

''செஞ்சரண் நாதகீத கிண்கிணி நூபுரசீல
திண்டிறல் வேல்மயூர — முகமாறும்

செந்தமிழ் நாலுமோதி உய்ந்திட ஞானமூறும்
செங்கனி வாயில் ஓர்சொல் அருள்வாயே''

என்று திருப்புகழ் பாடிய பெருமையைப் பாருங்கள். உலகம் உய்ந்திடுவது வேண்டுமாயின் ஞானத்தினால் தான் முடியும். ஞானம் முருகன் செங்கனி வாயால் உபதேசிக்கப் பெற்றது. ''செந்தமிழ் நாலும் ஓதி அதனால் ஞானம் ஊறும் செங்கனி வாயால் வெளி வந்த ஞானம்'' என்றார்.

இவ்விதம் ஊறும் தமிழ் ஞானத்தை ஸ்வரூப தரிசனம் செய்ய ஆவலுடையோர்கள் உருகிய உள்ளத்தால் இயற்கையில் காணலாம். இயற்கையில் காணப்பெறாதவர்கள் சேர்க்கையில் காணலாம். உருகாத உள்ளத்தில் அன்பின் சேர்க்கை ஏற்பட்டால் ஞானத் தமிழின் வடிவத்தை நன்கு காணலாம். பழனியில் நிற்கும் ஸ்ரீ தண்டாயுத பாணியின் ஸ்வரூபத்திலும் அதைப் பார்க்கலாம்.

''பாரடங்க வுள்ளதும்
பரந்தவான முள்ளதும்,

ஓரிடமு மன்றியே
ஒன்றிநின்ற ஒண்சுடர்

ஆரிடமு மன்றியே
அகத்துளும் புறத்துளும்

சீரடங்கள் கண்டவர்
சிவன்றேர்ந்த ஞானியே''

திருப்புகழ் மகாநாட்டுக்காகப் பழனி சென்றிருந்தபோது யாரும் ஒன்று கண்டதுண்டு :

பிலாக்

பழனியைக் கண்டேன்
பாழ்வினை தவிர்ந்தேன்
தாழ்விலி யற்றேன்
வாழ்பதம் உற்றேன்

இந்தோளம்

வித்தினை வறுத்திடும்
முத்தமிழ்க் கனியுண்டேன்
தத்து மயில்மீதே
தத்துவம் தனைக்கண்டேன்

அடாணா

திருப்புகழ் பயில்மணி
குறிப்பினில் ஒளிர்ஒளி
ஒருத்தரும் அகலொணாப்
பெருந்தனிப் பரம்பொருள்

பௌளி

வானவர் ஞானிகள்
ஆன மகாநாடு
கானவள் கணவனே
தானதாம் திருநாடு

# வெயில் மறைக்கும் மயில்

பேடையை இரும்போத் துத்
தோகையால் வெயில்மறைக் கும்
காடகம் இறந்தார்க் கே
ஓடும்என் மனனே காண்!

—தனிப் பாடல்.

[பேடையை: பெண் மயிலை; இரும்போத்து: உருவம் பெருத்த ஆண் மயிலானது; தோகையால் வெயில் மறைக்கும் காடகம்: பரித்து தனது தோகையால் வெயிலை மறைக்கும்படியான கொடிய பாலைவனம்; இறந்தார்க்கே: கடந்து பொருள் சம்பாதிப்பதற்குப் போன காதலனை நோக்கி; ஓடும் என் மனனே: என் மனம் சதா ஓடுகிறது.]



## காந்தி மகான் உலகப்புனருத்தாரணம் செய்கிறார்.

-நமது சித்திரக்காரரின் கனவு




1 சர்ச்சில் ஸ்டாலின் ரூஸ்வெல்ட் ஆகியவர்கள் காந்திமகானைத் தேடி வருகிறார்கள்.




2 'இப்பொழுதாவது வந்தீர்களே, சந்தோஷம்!' என்று காந்தி மகான் அவர்களை அழைத்துச் செல்கிறார்.






4

நவயுகத்தில் உலகிலிருந்து பராதீனம் ஒழிகிறது, இந்தியாவும் விடுதலை யடைகிறது.

உலகிலுள்ள பணக்கார தேசங்களும், முதலாளிகளும் தாங்கள் சேர்த்துவைத்த செல்வங்களை யெல்லாம் கொண்டுவந்து பொதுநிதியில் சேர்க்கிறார்கள்.

5




உலகத்தின் செல்வம்
உலகமக்கள் எல்லாருக்கும்
பகிர்ந்தளிக்கப்படுகிறது.
6
நமதுகுடும்ப வரவு
செலவு திட்டம்.
1.........
2........
3........
4........


பஞ்சம்
யுத்தம்
- உம்மன்
7
யுத்ததேவியும் பஞ்சப்பிணியும்
உலகைவிட்டு ஓடுகின்றன.

யுத்தக் கருவிகள் எல்லாம் மக்கள் வாழ்விற்கு உபயோகமாகின்றன.

8
















'பறக்கும் கோட்டைகள்' கல்வி
வளர்ச்சிக்கு உதவுகின்றன.

-உம்மன்

மனிதர்யாரும் சரிநிகர் சமானமாக வாழ்கிறார்கள்.

9


















**தீபாவளி!** தீப உத்ஸவமாம்! இவ்விசேஷ தினத்திற் கதிருத் உங்கள் வீட்டை அலங்கரிக்கும் பல்லாயிரக் கணக்கான சிறிய தீபங்களும், பட்டாசு மத்தாப்புகளின் ஒளியும், குழந்தைகளின் சந்தோஷ சிரிப்பு விளையாட்டும், பெரியவர்களின் ஆனந்தமுமே. இச்சந்தோஷ சமயத்திற் கேற்றாற்போல, இப்பண்டிகை காலில் மிக முக்கியமானது, ஒவ்வொருவருக்கும், ஆனந்தமளிக்கும் ஒரு கோப்பை டீ அளிப்பதே. உங்கள் உற்றார் உறவினரை ஒவ்வொரு விசேஷ சமயத்திற்கும் உகந்த உயர்ந்த பானமான டீ அளித்து உபசரியுங்கள்.

# இந்தியன் டீ

## விசேஷ சமயத்திற் குகந்த உயர்ந்த பானம்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது IK 151 A

# காவேரியின் கல்யாணம்

**ஸ்வாமி சுத்தானந்த பாரதி**

நாடெல்லாம் சுற்றித் திரிந்து ஒரு மகாமகத்திற்குப் பிறகு ஐயம்பாளயத்திற்கு வந்தேன். காவேரியில் குளித்துவிட்டு முருகன் கோயிலுள் நுழைந்தபோது, "ஹரி! நில்லும், நில்லும். எப்போ வந்தீர்?" என்றொரு சத்தம் என்னைத் தொடர்ந்தது.

திரும்பிப் பார்த்தேன். "தாங்கள் யார்? அடையாளம் தெரியவில்லையே?" என்றேன்.

"என்னைத் தெரியவில்லையா? நான்தான் தங்கள் மாணவன் **சிவராமன்**. காட்டுப்புத்தூர் பள்ளிக்கூடத்தில் தங்களிடம் படித்தது நினைப்பில்லையா?" என்றார் அந்த ஆசாமி.

உற்றுப் பார்த்தேன். "ஆ! என் அருமைச் சிவராமனா? உன் **மித்யா ஜகத்** எப்படி யிருக்கிறது?" என்று வினவினேன்.

"ஸ்வாமி! அதோ என் மித்யாஜகத்து காவிரியில் தண்ணீர் மொண்டு செல்லுகிறது. வாருங்கள், வீட்டிற்குப் போகலாம்" என்றான் சிவராமன்.

முதலில் ஸ்வாமி தரிசனம் செய்தேன். சிவராமன் என் பேருக்கு ஓர் அர்ச்சனையும் செய்வித்து, தீபாராதனை காட்டுவித்தான். விபூதிப் பிரசாதம் வாங்கிக் கொண்டு, நான் அவன் பின்னே நடந்தேன். போகும்போதே, "உன் ஜனத்தொகை விஷயம் எப்படி?" என்று ஒரு கேள்வி போட்டு வைத்தேன். வாசலில் 'இபிபி' என்று இரண்டு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. "என் ஜனத் தொகை இரண்டு வருஷத்திற்கு ஒன்று ஆக இந்த இரண்டும்: இவன் **சங்கரன்**, இவள் **பார்வதி**" என்றான். நான் குழந்தைகளுக்கு என் பையிலிருந்த கற்கண்டுக் கட்டிகளைக் கொடுத்தேன். அவை "மாமா" என்று என்னைத் தழுவிக்கொண்டன. "இந்தக் குழந்தை போல் நம் உள்ளமும் களங்கமற்று உலகுடன் ஒட்டுறவா யிருப்ப தென்றோ?" என்று சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தேன்.

சிவராமன் விறுவிறுவென்று ஓடிப் போய், ஒரு பலகையைக் கொண்டு வந்து போட்டுவிட்டுச் சமையலறைக்குச் சென்று, மனைவியிடம் ஏதோ சொன்னான். அவள் ஏதோ அவன் காதில் சொன்னாள். சிவராமன் உடனே கொல்லைப் புறமாகக் கடைக்கு ஓடினான். நான் 'சிவசிவா' என்று கண்ணை மூடி ஜபம் பண்ணிக் கொண்டிருந்தேன். அப்போது, "சங்கரா, இந்தா மாமாவுக்குப் பால் கொண்டு போய்க் கொடு" என்றொரு குரல் கேட்டது. "மாமா! இந்தா பாச்சி" என்று சங்கரன் அழகு சொட்டும் அமுத நகையுடன் என்னிடம் ஒரு வெள்ளிக் கூஜாவைத் தந்தான். சந்தோஷமாக வாங்கி, சங்குவுக்குச் சிறிது தந்து, நான் கொஞ்சம் குடித்து, "மீதியை அம்மாளுக்குக் கொடு" என்று அனுப்பினேன்.

"இங்கே இருக்கு, சங்கு! மாமாவைச் சாப்பிடச் சொல்லு" என்று பதில் வந்தது.

"மாமாவுக்கு அவ்வளவுதான் வயிறு. சங்கு! இதைத் தங்கைக்குக் கொடு" என்று தந்தேன்.

சங்கு, "பார்வதி! மாமா தந்தா, பாச்சி குடி!" என்று ஊட்டினான்.

நான் இரண்டு குழந்தைகளையும் மடியில் உட்கார வைத்து, மழலை அமுதம் பருகிக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு மூட்டையுடன் சிவராமன் கடையிலிருந்து வந்து, "இதோ வருகிறேன்" என்று உள்ளே சென்றான்.

"காவேரி! இதுதான் அவன் கடையிலே நல்ல பருப்பாம். இது செம்பூர் அரிசி. இவை பண்ணைத் தோட்டத்துக் காய் கறி. ஒரு பருப்புக் குழம்பு வைத்து, வெண்டைக்காய் கோசம்பரி, பாவக்காய் பிட்லே பண்ணி, அப்பளாம் வடாம் பொரித்துவிடு. போதும். நாளைக்குப் போளி வடை நடக்கட்டும்" என்று சிவராமன் சொல்லும் சத்தம் கேட்டது.

"அப்பனே, அங்கே சிரமப்படுத்தாதே. ஏதாவது எளிதாகச் சமைத்தாலே போதும்" என்றேன்.

"அபூர்வமாக வந்திருக்கிறார். நாளைப் பின்னே வரும் மனிதரா? நன்றாகச் சாப்பிடட்டும். எனக்கென்ன வேலை இதைவிட? ஏதோ என் மனத்திற்குப் பிடித்ததைச் செய்கிறேன்" என்று காவேரியின் வீணைக் குரல் கேட்டது.

"ஆஹா! என்ன அற்புதமான ஒற்றுமை இருவருக்கும்!" என்று மகிழ்ந்து, "சரி, அங்கே எப்படி விருப்பமோ, அப்படி நடக்கட்டும்" என்று சொல்லி நான் ஜப மாலையில் கை வைத்தேன்.

## 2

சிவராமன் "உள்ளே வர வேண்டும்" என்று என்னை வரவேற்றுக் கூடத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கே ஒரு சுவரில் அலமாரி இருந்தது; திறந்தான். பெரிய பாண லிங்கமும், சுப்பிரமணிய விக்கிரகமும் இருந்தன.

"இன்று பெரியவாள் கையாலே சிவாராதனம் நடக்க வேண்டும். இதோ புஷ்பங்கள், காவேரி தீர்த்தம், சந்தனம் எல்லாம். நான் ருத்ரம் சமகம் புருஷஸூக்தம் சொல்லுகிறேன்" என்றான்.

"ஆஹா இது பாக்யம்" என்று நான் பூஜைக்கு உட்கார்ந்தேன். புருஷஸூக்தம் சொல்லி அபிஷேகம் நடத்தி, துடைத்து வஸ்திரம் கட்டி, சந்தனம் வைத்து, சிவநாமங்களைச் சொல்லி, ஸ்ரத்தையாக அர்ச்சனை செய்தேன். 'டங்' என்று பத்து மணி. கமகம வென்று நிவேதனம் வந்து விட்டது. நான் நிவேதனம் செய்து, தூப தீபம் காட்டினேன். காவேரி மங்கள ஹாரதி யெடுத்து ஸதாசிவ ப்ரஹ்மேந்திரான் கீர்த்தனம் ஒன்றைக் கனிரென்று பாடினாள்:

அது "சிந்தா நாஸ்தி கில" என்ற புகழ்பெற்ற கீர்த்தனம். "சமம் கருணை இவற்றால் சம்பூர்ணமானவர்களுக்கும், சாது சங்கம் செய்பவர்களுக்கும், காமஜயம் பெற்றவர்களுக்கும், இந்திரியங்களை அடக்கியவர்களுக்கும், பரமஹம்ஸ குரு பாதங்களை தியானிப்பவர்களுக்கும், பிரம்மானந்த வெறி பிடித்தவர்களுக்கும் எவ்விதமான கவலையுமில்லை" என்பதே அதன் பொருள். அந்த அம்மாள் பாடும்போது எனக்குப் பராசக்தியே உபதேசம் செய்வது போலிருந்தது. குவிந்த கையுடன் நான் சக்தியைத் தியானம் செய்து கொண்டிருந்தேன்.

அம்மாள் உள்ளே சென்றார். பத்து நிமிஷத்திற்கெல்லாம் "சங்கு, எல்லாரையும் மாமாவையும் கூட்டிக்கொண்டு சாப்பிட வா, அப்பா" என்ற இன்னிசைக் குரல் கேட்டது. "எழுந்திருங்கள் இலை போட்டாயிற்று" என்று சிவராமன் என்னை அழைத்துச் சென்றான். எனக்குப் பெரிய பலகை போட்டு, முன்னே தலைவாழை இலை விரித்திருந்தது. என் இடது பக்கத்தில் சிவராமனும், இந்தப் பக்கம் இரண்டு குழந்தைகளும் உட்கார்ந்தனர். காவேரி மான்போலத் துள்ளி வந்து, எனக்கொரு நமஸ்காரம் செய்தாள். "தீர்க்க சுமங்கலி பவ!" என்று ஆசீர்வதித்தேன். உடனே வெகு வேகமாகப் பரிமாறினாள். நான் சாப்பிடும்போது மௌனம். ஆதலால் என் குறிப்பறிந்து, நன்றாக வேண்டியதெல்லாம் போட்டாள். எனக்கும் நல்ல பசி. பத்தினி சமையலில் அறுசுவைக்கு மேல் அன்புச்சுவை அதிகம். என் அளவிற்கு நான் சாப்பிட்டேன். "குழந்தை மாதிரிச் சாப்பிடுகிறீரே, நன்றாகச் சாப்பிடச் சொல்லுங்கள்" என்றாள். சிவராமன் "இருந்து நிதானமாகச் சாப்பிடுங்கள்" என்று உபசரித்தான். நான் கைச் சாடை காட்டி அளவுடன் உண்டு எழுந்தேன். அவனும் எழுந்தான். குழந்தைகளும் "மாமா, மாமா" என்று என் பின்னே வந்தன. நான் கையலம்பி, குழந்தைகளுக்கும் கை யலம்பிவிட்டு, என்னுடன் ரேழிக்கு அழைத்து வந்தேன்.

சிவராமன் சாப்பிட்டதும் சட்டையை மாட்டிக் கொண்டு "இதோ என் பீரோச் சாவி. புஸ்தகங்களைப் பார்த்துக் கொண்டிருங்கள். நான் பள்ளிப் பிள்ளைகளுக்காக இந்த நாடகம் எழுதி யிருக்கிறேன். அதைத் திருத்திக் குறித்த இடங்களில் பாட்டும் போட்டுக் கொடுங்கள்" என்று வேலை தந்துவிட்டுப் பள்ளிக்கூடம் சென்றான். சிவராமனுக்கு அந்த ஊர் போர்டு பள்ளிக்கூடத் தலைவர் வேலை என்பதை யறிந்தேன்.

## 3

நான் சிவராமன் பீரோவை மெல்லச் சோதிக்கத் தொடங்கினேன். உள்ளே காவேரி சாப்பிட்டானதும், சமையலறையை மெழுகிப் பற்றுத் தேய்த்து, பெரிய புராண வசனம் வைத்துப் படித்துக் குழந்தைகளுக்குக் கதை சொல்லிக் கொண்டிருந்தாள். மணி நாலானதும், மீண்டும் வீட்டு வேலைக்காக நீர் சுமந்து வரச் சென்றாள்.

சிவராமன் பீரோவில் அரிய தமிழ்—ஆரிய—ஆங்கில நூல்கள் இருந்தன. இப்படியும் அப்படியுமாகப் பக்கங்களைப் புரட்டிப் பார்த்தேன். கம்ப ராமாயணத்தைத் திறந்தேன்; தொப்பென்று ஒரு பழைய காகித உறை விழுந்தது. மெல்லப் பிரித்துப் பார்த்தேன். குட்டு வெளியாய் விட்டது. அதுவே சிவராமனும் காவேரியும் முதலில் எழுதிக்கொண்ட கடிதங்கள். நான் கடிதங்களை ஊன்றிப் படித்துக் கொண்டிருக்கும் போதே சிவராமன் வந்து விட்டான்.

"சிவராமா! மன்னிக்க வேண்டும். இந்தக் கடிதம் கம்பனிலிருந்து விழுந்தது. பிரித்துப் பார்த்து விட்டேன்" என்றேன். "ஆஹா! தங்களுக்கு நானே காட்ட நினைந்தேன். அதை எடுத்துக் கொண்டு வாருங்கள், வெளியே சென்று வருவோம்" என்றான். இருவரும் காவேரிக் கரை வழியே சென்று ஒரு ரம்யமான இடத்தில் அமர்ந்தோம்.

**நான்:**—சிவராமா! நீ கலாசாலையில் படித்தபோது, கல்யாணமே வேண்டாம் என்று அடிக்கடி சதா சிவ சமாதிக்குச் சென்று தியானிப்பதும் விவேக சூடாமணி படிப்பதுமா யிருந்தாயே! தேச சேவைக்காகவே மகாத்மா போல் பிரமசரிய விரதம் பூண்டதும் எனக்குத் தெரியுமே. நீ எப்படி மாயா சக்கரத்தில் சிக்கிக் கொண்டாய்? உன் பத்தினி மகா உத்தமி ......

**சிவராமன்:**—என்னை வசீகரித்தது அவளுடைய உத்தம குணந்தான். வீணையும் தந்தியும்போல் நாங்கள் இருவரும் ஒன்று. எங்கள் வாழ்வுக் கேத்திரத்தில் அபஸ்வரமே கிடையாது.

**நான்:**—சம்ஸாரம் ஸாகரம், துக்கம் என்பதை நீ பொய்யாக்கி விட்டாய். அறவழி இல்லறம் நடத்தினால், பிற வழி போக வேண்டியதில்லை என்ற வள்ளுவர் வாக்கை மெய்ப்பித்தாய். உனக்கேற்றவாகவே காவேரி. அவள் தகப்பனார் இந்த ஊரா?



எப்படி உனக்கு இந்த ரத்னம் அமைந்தது? யார் பெண் பெற்றார்கள்?

**சிவராமன்**:—எங்கள் கண்களே பேசி, மனமே அமைத்தது. இருவரும் எங்கெங்கிருந்தோ வந்து இதோ இந்தக் காவேரிக் கரையில் சந்தித்தோம்.

**நான்**:—சொல் விவரமாய் உன் காதல் கதையை.

சிவராமன் அந்த இரண்டு கடிதங்களையும் அடிக்கடி பார்த்துக்கொண்டே, தன் மன வலையிலிருந்து அபூர்வமான வாழ்க்கைச் சித்திரங்களை அவிழ்த்துக் கொட்டினான்:—

ஐயம்பாளையம் நவராத்திரி உத்ஸவம் அமோகமாக நடப்பது உங்களுக்குத் தெரியும். இந்த ஊர் மிட்டாதார் சிறந்த தருமவான். அவர் சங்கராச்சாரியாரான **நரசிம்ம பாரதியின்** பரம பக்தர். அவர் ஆணைப்படியே முருகன் கோயில் அழகாகக் கட்டி, அதில் சங்கராசாரியாரின் சலவைக் கல் சிலையைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார். கோயிலுக்கருகே ஒரு அன்ன சத்திரமும் வேத பாடசாலையும் உள்ளன. நவராத்திரி ஒன்பது நாளும் இங்கே ஸமாராதனை நடக்கும். கடைசி நாள் சுமங்கலிகளுக்குப் புடவை ரவிக்கை தருவதுண்டு. அதற்காகப் பல ஊர்களிலிருந்து ஏழைப் பெண்மணிகள் இங்கே கூடுவர்.



ஒரு மின் வெட்டால் என் உள்ளத்தைப் பறித்துக் கொண்டிருந்தாள்.

ஆறு நாட்களுக்கு முன்பு, நான் காட்டுப்புத்தூரிலிருந்து நவராத்திரி உத்ஸவத்திற்கு வந்தேன். அது வரையில் நான் நடிப் பிரமசாரிதான். பெண்களைக் கண்டால் தலைகுனிந்து ஓட்டம் பிடித்தேன். விஜய தசமியன்று இங்கே ஸரஸ்வதி பூஜை சிறப்பாக நடக்கும். ஓமம் வளர்ப்பார்கள். இரவில் பெண்கள் ஸ்வாமி மேலும் அம்மன் மேலும் பாடுவார்கள். அன்று சில பெண் குரல்கள் பாடின. பிறகு யாழும் குழலும் போல் ஒரு குரல், கவி குஞ்சரி பதங்களும், முத்துத் தாண்டவர் கீர்த்தனைகளும், பாடக் கேட்டேன். கேட்டவர் பிரமித்துப் போனார்கள். நானோ சொக்கிப் போனேன். இந்தக் குரல் எந்த அமுதினின்று இப்படி மதுரமாக ஓடி வருகிறது என்பதைப் பார்க்க முயன்றேன். அச்சமயம் என்னையே அந்த முகம் பார்த்ததைக் கண்டேன். முகம் அறிமுகம் ஆயிற்று.

மறு நாட் காலை, நான் காவேரியில் குளித்துக் கொண்டிருந்தேன். சிறிது தூரத்தில் அப்பெண்மணியும் குளித்தாள். அருகே அவள் தாயார் குளித்தாள். பெண் பரம ஏழை. கந்திப் புடவைதான் அணிந்திருந்தாள். தாயார் முகத்தில் கவலை தாண்டவமாடியது. ஆனால் அப் பெண் வசந்த ரோஜா போல் வனப்புடன் பொலிந்தாள். சிதான உயரம், மான் போல் மெல்லிய உடல், களையான முகம், சுறுசுறுப்பான களங்கமற்ற பார்வை. நானும் குளித்துப் பூசி, அருகிலிருந்த அரச மரத்தின் கீழ் அமர்ந்து ஜபம் செய்வதுபோல் அவளையே ஓரரைக் கண்ணால் பார்த்து, "ஆஹா என்ன அழகு! ......" என்று மயங்கி யிருந்தேன். அடிக்கடி அவளும் கடைக்கண்ணை என்பால் திருப்பி, ஒரு மின்வெட்டால் என் உள்ளத்தைப் பறித்துக் கொண்டிருந்தாள். குளித்ததும் தாயும் மகளும் புறப்பட்டனர். பெண் சிறிது பின்னால் நகர்ந்து, சற்று என்னைப் பார்த்துப் பிறகொருதரம் திரும்பிப் பார்த்துச் சென்றாள்.

அன்று சாயங்காலம் காவேரிக்கரை தனியாயிருந்தது. நான் மறுபடி நீராடிக் கொண்டிருந்தேன். நிலம்போனை 'நான் வருகிறேன்' என்றது. கண்கள் 'உனக்காகவே வருகிறேன்' என்று கயல் புரண்டன. மாலைச் செவ்வானப் பெல்லாம் அவள் முகத்தில் விளங்கின. அவளை "நீ யாரம்மா?" என்று கேட்க வாயெடுத்தேன். நாணம் தொண்டையைப் பிடித்தது. ஆனால் முன்பே விபூதிப் பொட்டணத்தில் இந்தக் கவிதை எழுதி வைத்திருந்தேன்:

**காலைத் திருவோ, கவித்திருவோ, முல்லைவளர்**
**மாலைத் திருவோ மயக்குருவோ—சோலைவளம்**
**கண்டுருகு நெஞ்சைக் கரைகாணுக் காதலால்**
**உண்டுவரும் வண்டார் உரை!**

அவள் முகம் கை கழுவிக் கொண்டிருக்கையில், விபூதி பூசிக்கொண்டு அக்கடிதத்தை மெல்ல அவள்பக்கமாய்க் காற்றுவாக்கில் கைநழுவிக் கொண்டே போட்டேன். அவள் அதைப் புன்னகையுடன் எடுத்து இடுப்பில் செருகிக்கொண்டு, என்னைக் கடைக்கண்ணால் அழைத்துச் சென்றாள். நான் காந்தத்தின் பின் சென்றேன். ஸ்வாமி சந்நிதி வந்ததும் சிறிது நின்றேன். "பகவானே! இவள் யார்? நானார்? என் விரதமென்ன? இவள் நிலையென்ன? இவளைக் கண்டதும் எனக்கேன் மயக்கம்? இது நல்லதா கெட்டதா? கெட்டதானும் இன்னிசெயதி" என்று வணங்கினேன். கணகண வென்று மணியடித்தது. அச்சமயம் "முருகா! நான் பரம ஏழை. அநாதை; என் பெண்ணுக்கு ஒரு வரனைக் கொடு" என்றொரு குரல் வணங்கியது.

பார்த்தேன். அப்படிப் பிரார்த்தித்தது அவன் தாயாரே ...... அவள் கண்ணில் கண்ணீரைக் கண்டேன். அவள் தன் தாயாருக்கருகே நின்றாள். எனக்கு எல்லாம் விளங்கி விட்டது. சத்திரத்தில் இரவு பந்திபந்தியாக இலைபோட்டுச் சாப்பாடு நடந்தது. என் எதிரே தாயும் மகளும் உட்கார்ந்தனர். அவள் தலைகுனிந்தே அடிக்கடி கடைக் கண்ணால் பார்த்தாள். தாயார் குறிப்பாக என்னையே பார்த்தாள்; எழுந்திருக்கும்போது, "உங்களுடன் கொஞ்சம் பேச வேண்டும்" என்றாள். "ஆஹா!" என்று பின் சென்றேன். கையலம்பியதும், எல்லாரும் ஒரு திண்ணையில் அமர்ந்தோம். பேச்சுத் தொடங்கியது.

**தாய்**:—தங்களுக்கு எந்த ஊரோ?

**நான்**:—அம்மா! நான் பிறந்தது திருச்சி. காட்டுப் புத்தூர் ஜமீன் கலாசாலையில் படித்து, திருச்சியில் மேற்படிப்புப் படித்து, உபாத்தியாயர் வேலைக்குப் பரீட்சை கொடுத்திருக்கிறேன்; தேறுவேன்.

**தாய்**:—கலியாணமானதோ?

**நான்**:—நேற்று வரையில் அந்த உத்தேசம் இல்லை. இனி பகவான் செயல் எப்படியோ?

**தாய்**:—நாளையே உபாத்தியாயர் வேலையானால், சமைத்துப் போட ஒரு பெண் வேண்டாமோ? நன்றாகக் கலியாணம் பண்ணிக் கொள்ளும். இளம் வயசு ...... ஸ்வர்ண விக்ரகம்போல் இருக்கிறீர். நீ நான் என்று உமக்குப் பெண்ணைத் தருவார்கள்.

**நான்**:—பகவான் இச்சை எப்படியோ, பிராரப்தம் எப்படியோ அப்படி நடக்கட்டும். உடனிருப்பது உங்கள் பெண்ணா? கலியாணமானதா? பெயரென்ன?

**தாய்**:—காவேரி ...... என் ஒரே பெண். ஒருவன் கையில் இவளைப் பிடித்துக் கொடுத்து விட்டால், என் பந்தம் தீர்ந்தது; காசி ராமேசுவரம் போய் ஜன்மத்தைக் கடைத்தேற்றிச் செல்வேன்.

**நான்**:—கவலை வேண்டாம், அம்மா! உங்கள் கதையைத் தெளிவாகச் சொல்லுங்கள். என்னைச் சொந்தப் பிள்ளைபோல நினையுங்கள். என்னால் ஆனதைச் செய்கிறேன்.

**தாய்**:—நாங்கள் இருப்பது மயிலரங்கம். இவள் தகப்பனுக்கு இந்தக் கோயில் ஸ்வாமி பெயர்தான். (தண்டாயுதபாணி ஐயர்). அவர் டாக்டர் வேலைக்குப் படித்தார். திருச்சியிலேதான் — மலைக்கோட்டைத் தெருவில் — நாங்கள் குடியிருந்தோம். அவருக்கு சர்க்கார் ஆஸ்பத்திரியில் வேலை. மாசம் ரூ. 150 சம்பளம். அவர் வந்ததெல்லாம் பரோபகாரத்திற்கு என்று அள்ளி விட்டார். காந்தி, கதர் என்று செலவு செய்தார். இந்தப் பெண்ணுக்கு ஒரு வரன் பார்க்க வேண்டுமென்று படித்துப் படித்துச் சொன்னேன். "அவசரம் என்ன? நன்றாகப் படிக்கட்டுமே" என்றார். பெண் தமிழ், சம்ஸ்கிருதம், இங்கிலீஷ் மூன்றும் படித்திருக்கிறாள். நன்றாகப் பாடுவாள். காரியத்தில் கப்பல். தங்கமான குணம். அவள் இருக்குமிடம் திருமகள் வாசமாகும். அவர் ...... பிளேக் நோயாளிகளைக் கவனிக்கும்போது, நோயுண்டு எங்களை இப்படி அநாதையாக விட்டுப் போனார். எனக்கு வேறு நாதி கிடையாது. நகை நட்டுகளை விற்று இரண்டு வருஷம் எப்படியோ மானமாகக் காலம் தள்ளினேன். பகவானிடத்தில் குறையைச் சொல்லுவோம் என்றுதான் இங்கே வந்தேன்.

**நான்**:—டாக்டர் தண்டாயுதமா? எனக்கு நன்றாகத் தெரியுமே. அவர் மனைவி கமலாம்பாள், மகள் காவேரி இருவரையும் சுதேசிக் காட்சிச் சாலையில் பார்த்திருக்கிறேனே.

**தாய்**:—அந்தக் கமலாம்பாள் நானே. அப்போது அப்படியிருந்தேன். இப்போது விதி இப்படிக் கால சக்கரத்தைத் திருப்பி விட்டது.

**நான்**:—டாக்டர் தண்டாயுதம் பொதுஜன ஊழியர், சிறந்த தேச பக்தர். சர்க்கார் உத்தியோகஸ்தராயினும் கதரே கட்டினார். காந்தியிடம் அன்பு கொண்டிருந்தார். ஹரிஜனங்களுக்கு வேண்டிய உதவியளித்தார். அவர் ஒரு பைசா சேர்த்து வைக்கவில்லை, எல்லாம் தருமத்திற்குத் தந்தார். அவர் மனைவி மக்கள் கஷ்டப்பட சும்மா பார்த்திருக்கலாமோ?

**தாய்**:—இந்தப் பெண்ணை எப்படியாவது ஒப்புக் கொள்ளுங்கள்.

**நான்**:—அம்மா, கொஞ்சம் சிந்தித்து நாளைக்குச் சொல்லுகிறேன்.

இச்சமயம் காவேரி உள்ளே யிருந்து விரைவாக வந்தாள். நமஸ்கரித்தாள். என் முன் ஒரு குங்குமப் பொட்டணம் வைத்தாள். நான் எடுத்துக் கொண்டு "வருகிறேனம்மா" என்று சென்றேன்.

கோயில் சந்நிதி சென்றேன். பொட்டணத்தைப் பிரிக்கும்போதே வெளி சொன்னது. குங்குமத்தை மார்பிலும் நெற்றியிலும் இட்டுக் கொண்டேன். மடித்த காகிதத்தைக் குறிப்பாகப் பார்த்தேன். ஆ! ஓர் அரிய வெண்பா, என் வெண்பாவுக்குப் பதில், எழுதியிருந்தது.

**கண்டகண் வேறெதையும் காணாது; காதலை**
**உண்டமனம் வேறெதையும் உன்னாது-பண்டைவினை**
**ஆவியை ஒன்றாக்கி, அன்புடனே கூட்டியபின்**
**காவிரிக் குண்டோ கதி?**

நான் கொஞ்சம் கவிப் பித்தன்; ஆகையால் அவள் கவிதைத் திறனைக் கண்டு மயங்கினேன். அற்றிரவெல்லாம் கனவுதான். அவள் என்னுடன் வாழ்வதுபோலும், என்னை உபசரிப்பது போலும், எனக்குப் பணிவிடை செய்வது போலும், இன்னும் எத்தனையோ அசட்டுக் கனவுகளும், விநோதக் கனவுகளுமாக இரவைக் கழித்தேன்.

இனித் தடை யென்ன? என் காதலை ஏற்றுக் காதலையும் எழுதிக் கொடுத்து விட்டாள். ஆனால் எனக்குக் குடும்ப வாழ்வென்றும் என்ன துன்பமோ என்று பயம். நான் வேதாந்தப் பித்தன். பெரிய நிலையிலிருந்த பெண்கள், கணவன் தவறிய பிறகு, நமது நாட்டில் படும் துயரம் என்முன் நின்று வேதனை செய்தது. இந்தப் பெண்ணைக் கட்டிக் கொண்டு, அந்த அம்மாளையும் காத்தால் புண்ணியமன்றோ என்று ஒரு சிந்தனை. ஆனாலும் நிலைசென்று சம்ஸாரத்தில் குதிப்பதை நான் விரும்பவில்லை. உபாத்தியாயர் வேலைக்குப் பரீட்சை கொடுத்திருக்கிறேன். தேறியதும் ஒரு வேலையில் ஊன்றிக்கொண்டு, பிறகு யோசிக்கலாம் என்று தோன்றியது. அங்கிருந்து காலை நான்கு மணிக்கே குணசேகரத்திற்குக் கிளம்பி விட்டேன். அங்கிருந்து திருச்சிராப்பள்ளி வந்து பரீட்சை முடிவை யறிந்து பட்டம் பெற்று, வேலைக்கு வேட்டை யாடினேன்.

முசிறியில் வேலை கிடைத்தது. சம்பளம் முப்பது தான். என் மனம் இப்போது ஒரு துணையை நாடிய

தண்டு; அவனேத்தான். ஆனால் அவன் எங்கே? ஜன சமுத்திரத்தில் அந்த இரண்டு ஆன்மாக்கள் எங்கு மறைந்தார்களோ? ஒரு நாள் என்னுள் ஏதோ ஒரு கிளர்ச்சி யுண்டானது. ஒரு கடிதம் வந்தது. ஆவலாகப் பார்த்தேன். இதோ இந்தக் கடிதமே அது. படிக்கிறேன் :

"தங்களையே சரணடைந்த ஒரு ஆத்மா இங்கே காத்திருக்கிறது. தங்கள் இருப்பிடம் இன்றே தெரிந்தது. உடனே இக்கடிதம் எழுதினேன். என்னைத் தாங்கள் அங்கீகரிக்க வேண்டும். தாங்கள் திடீரென்று இவ்வூரை விட்ட பிறகு, நான் படுதுயரடைந்தேன். எங்கள் நிலைமையை இந்த வீட்டுக்காரர் ஜமீந்தாரிடம் சொன்னாராம். அவருக்கு என் தகப்பனாரைத் தெரியும். அவர் ஒரு பெண் பள்ளிக்கூடம் வைத்திருக்கிறார். அதில் நான் போதிக்கிறேன். மாதம் பதினைந்து சம்பளம்; தாயாருக்கும் எனக்கும் தாராளம். கவலை ஒன்றே. தங்களை அடையவேண்டு மென்பதே. இங்கே ஒரு போர்டு பள்ளிக்கூடம் உள்ளது. அதற்கு ஒரு தலைமை யாசிரியர் தேவை. தாங்கள் உடனே மனுப் போட்டால் கிடைக்கும். இங்கே வந்ததும், நாம் தண்டாயுதபாணி சந்நிதியில் விவாகம் செய்துகொண்டு வாழலாம். கிருபை செய்ய வேண்டும். நான் தங்களுக்கு உண்மையான துணைவி.

அடியாள்
காவேரி."

இக் கடிதம் என்னை இளக்கியது. காவேரி என்னை முற்றிலும் கவர்ந்தாள். அக்கணமே மறுபடியும் கடிதமும் எழுதினேன். இதுவே அக்கடிதம் :—

"அன்புடலைத் தேடி அன்புயிர் இதோ வருகிறது. உன் பரிசுத்தமான மனமும் அன்பும் வாழ்வும் எனக்குத் தெரியும். நான் இனி உன்னவன். நீ என்னவள். முருகன் முன்னே இருவரும் [illegible] குல தர்மம் நடத்துவோம். அடுத்த ஞாயிறு புறப்பட்டு அங்கே திங்கட்கிழமை சாயங்காலம் வருவேன். எதிர்பார்க்கவும்.

அன்பு நிறைந்த
சிவராமன்."

திங்கட்கிழமை ஜயன்பாளையம் சென்றேன். கமலாம்பாளும், காவேரியும் மற்றொரு கனவானும் என்னைப் புன்னகையுடன் வரவேற்றனர். வீட்டிற்குள் சென்றேன். தோரணம் கட்டி அலங்கரித்திருந்தது. மனை போட்டிருந்தது. அந்தக் கனவான், "இன்று நல்ல முகூர்த்தம். மாப்பிள்ளை வர வேண்டும். நான் யாரோ என்று நினைக்கிறீர்கள். நான் தண்டபாணி ஐயரின் பள்ளித் தோழன். இந்த ஜமீந்தாரின் மந்திரி. டாக்டர் தண்டபாணி இவருக்கு ஒரு தரம் சிகிச்சை செய்து அபாயமான நோயைத் தீர்த்தார். அந்த நன்றியை அவர் மறக்கவில்லை. எனக்குத் தண்டபாணியிடம் உயிர். அவர் மனைவியும் மகளும் இப்படியானதைக் கண்டு கண்ணீர் விட்டேன். இந்தப் பெண்ணுக்கு நல்ல நல்ல வரன்களைத் தேடினேன். தங்களிடமே அவள் அன்பு கொண்டு விட்டாள். ஆதலால் ......" என்னுமுன் வாசலில் ஜமீந்தாரே வந்திறங்கினார். அவர் "நடக்கட்டுமே காரியம். மாப்பிள்ளை வரட்டும். இனி நம் ஊரிலேதான் இருக்க வேண்டும். மங்கள ஸ்நானம் செய்து வாரும்" என்றார். நான் உடனே தலைமாடிப் புத்தாடை அணிந்து வந்தேன். காவேரியும் அவ்வாறே தயாராக வந்தாள். மனையில் அமர்ந்தோம். ஒருவரை யொருவர் பார்த்துப் புன்னகைத்தோம். ஓமத் தீ வளர்ந்தது. கெட்டி மேளம் கொட்டியது. 'மாங்கல்யே சாவதான' என்றார்கள்.

நானும் [illegible]தான் நல்ல மனைவியை அடைந்தேன். தண்டாயுதபாணிக்கு அபிஷேகம் செய்து, தீப தரிசனம் கண்டோம். என் பிரம்மசரியத்திற்கு முற்றுப் புள்ளி வைத்து, இல்லறம் புகுந்தேன். மறு வாரமே எனக்கு ஜயன்பாளையத்தில் பள்ளித் தலைமை கிடைத்தது. காவேரி, "இனி வேலை வேண்டாம்" என்று விட்டாள். ஆனால் நான் அவளைக் கொண்டு, ஊரில் உள்ள முதிய பெண்களுக் கெல்லாம் எழுத்தறிவு புகட்டினேன். எல்லாம் எங்கள் வீட்டுக் கூடத்தில். எப்படி என் கதை?

இப்படிச் சொல்லி முடித்த சிவராமனைப் பார்த்து நான், "வள்ளுவருக்கு வாசுகி வாய்த்தது போல்உனக்கு வாய்த்தாள் காவேரி. நீ பாக்கியசாலி. இப்படி எல்லாக் குடும்பங்களும் ஒத்திருந்தால், உலகம் பேரின்ப மயமாகும்" என்றேன்.

பூரணச் சந்திரன் எழுந்து காவேரி வெள்ளத்தை வெள்ளி மயமாக்கினான். இனிய தென்றல் வீசியது. காவேரி யாழ் பொங்கிப் பூரித்தது. "இந்தச் சமயந் தான் அவள் தீப ஹாரத்தி காட்டி, பக்தி ரசப் பாட்டுகள் பாடிக் கொண்டிருப்பாள்" என்றான் சிவராமன்.

இருவரும் ஆவலாக எழுந்து அனுஷ்டானங்களை முடித்து வந்தோம். காவேரி, "சகியை நம்பி வாழ்ந் தால், எல்லாம் இன்பமே" என்ற காம்போதி கீர்த் தனம் பாடிக் கொண்டிருந்தாள்.

உண்மை, உண்மை! வள்ளுவர் வீட்டில் கொங் கணர் கற்ற பாடத்தைச் சிவராமன் வீட்டில் கற்றுக் கொண்டு, நான் என் வழியே சென்றேன்.

த்திரக் காட்சி—1

## பொன் வேய்ந்த பராந்தகன்

"கோயில்" என்று சைவர்களால் சிறப்பித்துச் சொல்லப்படும் சிதம்பரத்திலே
யில் கொண்டிருக்கும் நடராஜப் பெருமானது புனிதமான நடன மண்டபத்திற்குப்
ன் ஓடு வேய்ந்து கொண்டிருக்கிறார்கள். இந்தத் திருப்பணியைப் பார்த்துப் பரவச
தம் அரசனைப் பாருங்கள். "பொன் வேய்ந்த பராந்தகன்" என்று பாராட்டப்பட்ட
ழ மன்னன் இவன்; கி. பி. பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே தமிழ்நாட்டின்
ராஜனாக விளங்கியவன். "சோழ சிகாமணி" என்றும், "சூர சிகாமணி" என்
விருதுப் பெயர்கள் பெற்ற இந்த வீரன் வையத்து சிகாமணியாகவும் விளங்கினான்.
ராந்தகன் மரபுகளுக்கு வன்றி போயிருந்தான் பராந்தகன்" என்று திருவாலங்
டுச் செப்பேடுகள் இந்தச் சோழ மன்னனைச் சிறப்பித்துப் பாராட்டுகின்றன.



"கல்கி"
தீபாவளி மலர்
1943

*சரித்திரக் காட்சி—2*

## இலங்கை சென்ற இராஜராஜன்



"கல்கி"
தீபாவளி மலர்
1943

கப்பல்களிலிருந்து இறங்கி அவ்வளவு கம்பீரமாய் விரைந்து போகிறவர்க
போர்க் கோலம் பூண்ட இராஜராஜ சோழனும் அவனைச் சேர்ந்த சோழ நாட்டுப் போ
வீரர்களுந்தான். அவர்கள் இறங்கியிருப்பது இயற்கை அழகில் சிறந்த இலங்கை
தீவு. ஆனால், இலங்கையின் இயற்கை வளத்தைப் பார்ப்பதற்காக அவர்க
வந்தவர்களல்ல. இலங்கை யரசனான ஐந்தாம் மகிந்தனைப் போர்க் களத்தில் பார்க்க
அவர்கள் வந்திருக்கிறார்கள். ஆனால் அவ்வளவு அவசரமாகச் சென்றும், மகிந்தன
முகத்தை அவர்களால் காண முடியவில்லை; அவனது முதுகையும் காண முடியவில்லை
மகிந்தன் இவர்களோடு சண்டை போட முன் வராமலே ஓடிப் போய்க் காட்டில் ஒளிந்து
கொண்டான்! தஞ்சைப் பெரிய கோயில் கட்டிய பக்த மணியான இராஜராஜன்தா
இலங்கையில் இத்தகைய அதிசய வெற்றி சூடிய வீரமணியாகவும் விளங்குகிறான்.

திரக் காட்சி—3

## இலங்கை கொண்ட ராஜேந்திரன்

இராஜராஜ சோழனது இலங்கைப் படையெடுப்பு, அவனுடைய மகா வீரப் புதல்வ
இராஜேந்திர சோழன் காலத்திலே பூரண வெற்றியாக முடிந்தது. "இனி ஒளிந்
பதில் பயன் இல்லை; ஒளிந்தாலும் விடாத ஊழ்வினை போன்றது ராஜேந்திரனது
!" என்பதை உணர்ந்து கொண்டான் இலங்கை மன்னன். இராஜேந்திர சோழ
அடிகளில் முடியையும் வீர வாளையும் வைத்து ஐந்தாம் மஹிந்தன் சரணாகதி
ந்ததாக இலங்கைச் சரித்திரமாகிய "மகா வம்சம்" தெரிவிக்கிறது. "கங்கை
ண்ட சோழன்" என்று பிரசித்தி பெற்ற இராஜேந்திரனை, "பொருகடல் ஈழத்து
த்தம் முடியும் கொண்டவன்" — என்று குறிப்பிடுகின்றன நமது நாட்டிலே
த்துள்ள புராதனச் செப்பேடுகள். தமிழர்களுக்குப் பெருமை தரும் இந்த
்சி இ. பி. 1017—8 ல் நடந்திருக்க வேண்டுமென்று சரித்திரம் சொல்லுகிறது.



"கல்கி"
தீபாவளி மலர்
1943

*சரித்திரக் காட்சி—4*

## ஆண்டியைப் போற்றும் அரசன்

"கடல் சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான், — காடவர்கோன் கழற்சிங்
அடியார்க்கும் அடியேன்!" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் போற்றுகிறார். அந்
பல்லவ ராஜ ஸிம்ம சக்கரவர்த்திதான் வந்திருக்கிறார் ராஜ பரிவாரங்களுடன். தமிழ
வின் சிறந்த சிற்பச் செல்வமான கைலாஸநாதர் கோயிலைக் கட்டிக் கும்பாபிஷேகத்தி
நாள் வைத்ததும், ஸாக்ஷாத் கைலாஸநாதரே அவர் கனவில் வந்து, "அரசே
உன் பிரதிஷ்டையைப் பின் ஒரு நாள் வைத்துக் கொள். நாளை நாம் நமது அன்பர
பூசலார் கட்டிய கோயிலில் நடக்கும் கும்பாபிஷேகத்திற்குப் போக வேண்டியிருக்கிறது
என்று சொல்லிவிட்டாராம். அந்தப் பூசலார்தான் படத்தில் தவக் கோலத்தில் இ
பவர். இராஜஸிம்ம பல்லவன் காஞ்சியில் கோயில் கட்டுகிறான் என்று கேள்விப்ப
இந்தச் சிவயோகியும் தம் மனதிற்குள்ளே ஒரு திருக் கோயில் நிர்மாணிக்கத் தொட
ளர். அரசன் பெரும் பொருள் செலவிட்டுக் கட்டிய கோயிலைக் காட்டிலும் இ
ஆண்டி அன்பினால் கட்டிய ஞானக் கோயிலையே பெரிதாக மதித்தார் இறைவ
அரசன் ஆண்டியைப் போற்றி நிற்பதின் காரணம் இப்போது தெரிகிறதல்லவா?



"கல்கி"
தீபாவளி மலர்
1943




தீபாவளி அன்பளிப்பை ஒவ்வொரு
வரும் தனது வாழ்நாள் முழுதும் மற
வாது சந்தோஷத்துடன் பாதுகாப்பர்!



## மியோசர்னி "Q-2"

18 காரட் சாலிட் கோல்டு ரூ. 264
அராபிக் அல்லது புது மாதிரி
எண்களுடையது ஒரே விலை



## நியூ காலிபர் "E"

| | |
|---|---|
| நிக்கல் சில்வர் | ... ரூ. 62 |
| எவர்பிரைட் ஸ்டீல் | ... ரூ. 71 |
| ரோல்டு கோல்டு | ... ரூ. 84 |
| 18 காரட் சாலிட் கோல்டு | ... ரூ. 197 |



## மினியேசர் "M"

உருண்டைக் கண்ணாடியுடன்
கூடிய நவீன மாடல்
18 காரட் சாலிட் கோல்டு ... ரூ. 168

[illegible] காரணத்தால் விளம்பரப்
படுத்தியிருக்கும் எல்லாவிதமான மாடல்களையும்
சப்ளை செய்ய இயலாது. ஸ்டாக் உள்ளவரை கூடுமான
வரையில் ஆர்டர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

# WEST END WATCH Co.

BOMBAY — CALCUTTA.

வெஸ்ட் எண்டு வாட்ச் கோ., பம்பாய் — கல்கத்தா.

# என் தந்தை

ஸ்ரீமதி அம்புஜம்மாள்

உடுப்புத் தைத்தால் ஆயிரம் ரூபாய்க்குக் குறையாது! "மோனின்" உடுப்புத்தான். ஆனால் அப்பேர்ப்பட்ட உடுப்பை விரும்பி ஆர அமர அணிந்து கொள்வதுண்டா? அதுதான் இல்லை!

கடிகாரமும் 'பத்து' காட்டும்வரையில் ஆபீஸ் அறையிலே இருப்பு. அல்லது ட்ராயிங்ரூமில் நாலைந்து பேச்சுக் கச்சேரி. பிறகு அவசர ஸ்நானம். அதற்குள் சமையல்காரன் இரசம் குழம்பு சாதங்களைக் கலந்து கிண்ணங்களில் தயாராக ஏந்தி நிற்க வேண்டும். ஒரு கை, சாப்பாட்டை வாய்க்குள் செலுத்த, ஒரு கை கோட்டுப் பித்தானை மாட்டிக் கொண்டிருக்கும். யாராவது ஒரு 'அப்பிரண்டிஸ்' வக்கீல் சப்பட்டாவை வைக்கட்டித் தயாராக வைத்திருப்பார். கால் பூட்ஸை மாட்டி விடுவான் வேலை ஆள். டையை முடித்து விடுவாள் என் தாயார்.

தகப்பனார் கோர்ட்டுக்குப் புறப்பட்டுப் போனதும் மழை பெய்து ஓய்ந்ததுபோல் ஆகிவிடும் வீடு. காரியம் வந்த பிறகு தான் "அப்பாடா" என்று ஆசுவாசம் எங்களுக்கும் அவருக்குங்கூட. காந்தி மீது மோகம் பிறந்தும், அந்தப் பழைய கோட்டு, டை, பூட்ஸ் மீது மோகம் பிறக்காதது ஒரு நல்ல காலம் என்றே தோன்றியது. காந்தியையும் காங்கிரஸையும் விட்டுப் பிரிந்துபோன காலத்திலும் இவர் பழைய வாழ்க்கை முறைக்குத் திரும்பாதது, மகாத்மாவின் சந்திப்பால் ஒரு திட்டமான மாறுதல் இவர் வாழ்க்கையில் ஏற்பட்டு விட்டதென்பதைக் காட்டுகிறது.

மாசம் பதினாயிரத்திற்குச் சற்றும் குறையாத வருவாயிலும் தாமே பூட்டிச் சாவி வைத்துக்கொள்ளும் வழக்கம் இல்லை. வரவு செலவுக் கணக்கும் இவர் வைத்துக்கொள்ள மாட்டார். குடும்ப நிர்வாக மெல்லாம் தாயார் பொறுப்பு. தவறினால், எங்கள் பொறுப்பு. 'செக்'குப் புஸ்தகம் மட்டும் இவர் கையில் இருக்கும். அதில் எழுதியிருந்த தாள்களுக்கு விவரம் கூட இருக்காது. இவர் தாராளமாக வழங்கிய கொடைகள் பெரும்பாலும் வெளி மனிதர்கள் மூலமாகத்தான் எங்களுக்குத் தெரியவரும்.

பிரயாணம் புறப்பட்டால் இவருக்கென்று தனியாக வைக்கப்பட்டிருக்கும் அரிசி, பருப்பு, நெய், வடகம், ஊறுகாய் முதற்கொண்டு எல்லாம் கூடவே புறப்படும். இந்த வழக்கம் மாமனார் வீட்டிலிருந்து வந்த சீதனச் சொத்து.

சொந்த நாட்டில் இந்த ரீதியிலே பிரயாணம் செய்து வந்தவர், காங்கிரஸில் ஈடுபட்ட பிற்காலத்தில், சீமைக்குப் புறப்பட்டுப் போகும்போது "எனக்கு ஒருவேலையாளும் வேண்டாம். நான் தனியாகத்தான் பிரயாணம் செய்யப் போகிறேன்; எல்லாம் நானே சமாளித்துக் கொள்வேன்!" என்று விருப்பும் பேசி அதன்படியே மூன்று மாதம் ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து திரும்பி வந்தார் என்றால், எங்களுக்கு எவ்வளவு ஆச்சரியமாக இராது!

பெரிய தோட்டக் கச்சேரிகள் அடிக்கடி நடக்கும் "அம்புஜ் பாக்"இல்; எல்லாம் நாகரிகமான விநியோகம் தான். தென் ஆப்பிரிக்காவிலிருந்து வந்த காந்திக்கு அளித்த தோட்டக்கச்சேரி மட்டும் இதற்கு விலக்கு.

அந்த நாளிலே அடிக்கடி நாங்களும் "கவர்மெண்டு ஹௌஸ்" பார்ட்டிகளுக்குப் போவதுண்டு. எங்கள் அகத்தில் லேடி பெண்ட்லண்டுக்குக்கூட ஒரு "லேடீஸ் பார்ட்டி" கொடுத்திருக்கிறோம். வெள்ளையர்களைத் தெய்வப் பிறவி என்று கருதாவிட்டாலும் ஏதோ ஒரு உயர்ந்த ரக மனிதப் பிறவி எனக் கருதி வந்த காலம் அது.

என் தந்தையார் காந்தியடிகளைச் சந்தித்துக் காங்கிரஸ் வேலையில் தீவிரமாக ஈடுபடுவதற்கு முன்னால் நாங்கள் வாழ்ந்த வாழ்க்கை அது. தொழில் முறையில் இவர் முதன்மையாக விளங்கத் தொடங்கியதும் அக்காலத்து வழக்கப்படி ஆடம்பரமான வாழ்க்கை முறையைப் பின்பற்றினார்.

எனினும், மகாத்மாவைச் சந்திப்பதற்குப் பல வருஷங்களுக்கு முன்பே அரசியல் துறையிலும் சமூகத் துறையிலும் உழைத்து வந்திருக்கிறார். அந்நாளில் தொழில் முறையிலும் மற்றத் துறைகளிலும் பிரசித்தி பெற்றிருந்த வழக்கறிஞர் ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயர். அவரை இவர் தமக்கு வழி காட்டியாகக் கொண்டிருந்தார். தொழில் முறையில் மட்டும் அல்ல; அரசியல் துறைகளிலும் மற்றத் துறைகளிலுங்கூட.

அன்னிபெஸண்ட் அம்மையார் 'ஹோம்ரூல்' இயக்கம் ஆரம்பித்தபோது என் தந்தையின் உள்ளம் அந்த இயக்கத்தை ஆதரித்தது. ஆனால் அப்போது அட்வகேட் ஜெனரலாக இருந்ததால் கட்டுப்பட்டிருந்தார். மேலும் அன்னிபெஸண்டின் இரகசியச் சங்கங்களும் கொள்கைகளும் இவருக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. டாக்டர் நஞ்சுண்ட ராவின் மூலம் அந்த அம்மையாரிடம் ஒருவகையில் பகைமை கூட ஏற்பட்டிருந்தது.

• • •

அந்தக் காலத்தில் தகப்பனார் அட்வகேட் ஜெனரல் ஆனது எங்களுக்கு ரொம்பவும் பெருமைதான். அவர் மட்டும் எந்த ஸ்தானம் கிடைத்தாலும் சகஜமாகவே இருப்பார். எப்பேர்ப்பட்ட பதவியிலும் தமக்கு உரிமை உண்டு என்பதுபோலவே பதட்டம் இல்லாமல் நடந்துகொள்ளுவார்.

லார்ட் வில்லிங்டன் பதவி ஏற்றதும் தந்தையாருக்குத் தம் பதவியில் இருப்பது முள்மேல் இருப்பதாகவே தோன்றியது. இருவருக்கும் அடிக்கடி அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டன தொழில் முறையிலே.

அன்னி பெஸண்டைக் கைது செய்ய வேண்டுமென்று சர்க்கார் அபிப்பிராயம் கோரிய போது, தகப்பனார் அதற்கு விரோதமாக அபிப்பிராயம் கொடுத்தார். அது வில்லிங்டன் பிரபுவுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. இவருடைய அபிப்பிராயத்தைப் புறக்கணித்தே சீக்கிரத்தில் பெஸண்டு அம்மையாரை 'அரெஸ்ட்' செய்ய உத்தரவு போட்டார் வில்லிங்டன் பிரபு-

அதுமுதல் இவருக்குச் சர்க்கார் உத்தியோகம் கசந்து விட்டது.

தினம் ஒருமுறை என் தாயாரிடம் "இந்த விலங்கிட்டன் உபத்திரவம் எனக்குச் சற்றும் பிடிக்கவில்லை, மனச் சாட்சிக்கு விரோதமாக நடக்க வேண்டியிருக்கிறது! இந்த வேலையை விட்டுத் தொலைந்து விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே இருந்தார்.

அன்னிபெஸண்டைக் கைது செய்வதற்கு முன் அவருக்கு எதிராக என் தந்தையார் அச்சுச் சட்ட வழக்கில் பேச வேண்டியிருந்தது. அப்போது பல மொட்டைக் கடிதங்கள் வந்தன. இவரை பயமுறுத்தி, "உயிருக்கே உலைவைத்து விடுவோம்" என்ற மிரட்டல்களும் காணப்பட்டன சில கடிதங்களிலே. ஆனால் இவர் அவைகளுக்குச் சற்றும் அசையவில்லை.

ஆறுமாதத்திற்குப் பிறகு பெஸண்ட் அம்மையும் விடுதலை பெற்றார். அப்போது காந்தி இயக்கம் ஆரம்பமாயிருந்தது தேசத்திலே. முதலில் இந்த இயக்கத்தைச் "சட்ட சம்பிரதாயங்களுக்கு முரணானது" எனக்கருதியது இவருள்ளம். எனினும் மெள்ள மெள்ள எப்படியோ அதில் ஒரு பற்று உண்டாகி விட்டது.

* * *

ஒரு நாள் என் தாயாரைப் பார்த்து, "நான் இந்த உத்தியோகத்தை விட்டு விட நினைக்கிறேன். நீ என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டார்.

என் தகப்பனார் சொல்லுக்கு மறுவார்த்தை சொல்வது தாயார் சுபாவமில்லை. அது இவருக்கும் தெரியும். எனினும் என் தாயாரிடம் தெரிவித்து விட்டே எதையும் செய்வார். நல்லது, பொல்லாதது எல்லாம் அவள் காதில் போடுவார். சொல்ல வேண்டிய விஷயம் ஏதாவது இருந்தால் காரிலிருந்து இறங்கிக் கொண்டே "எங்கே, ரெங்கநாயகி!" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வருவார் விரைவாக. அவள் என்ன காரியமாக இருந்தாலும் சரி, அந்த விஷயத்தைக் கேட்டுத்தான் தீரவேணும். அது ஒரு தமாஷான கிலேயாக இருக்கலாம்; ஒரு மகத்தான தேசப் பிரச்னையாக இருக்கலாம். இவரிடம்தான் இடம், காலம், பாத்திரம் இவைகளின் யுக்தா யுக்தங்களை அறிந்து பேசும் வழக்கமில்லையே!

1920-ல் உத்தியோகத்தை விட்டதும் தீவிரமாகக் காங்கிரஸ் வேலையில் ஈடுபடலானார். சேர்ந்தாற்போல நாலு நாள் வீட்டில் தங்காமல் சுற்றுப் பிரயாணம் செய்வார்; நாள் கிழமை ஒன்றும் பார்க்க மாட்டார். எப்பொழுதும் வீட்டிலும் வெளியிலும் இவருடன் கூட ஒரு ஜமா அரசியல் ஊழியர்கள், காங்கிரஸ் அபிமானிகள் இருப்பார்கள். எங்களுக்கு இவரிடம் பேசுவதற்கே சந்தர்ப்பம் கிடைக்காது.

கதர்ப் பிரசாரம், நூல் நூற்பது முதலிய காங்கிரஸின் நிர்மாணத் திட்டங்களினால் சுயராஜ்யம் வரும் என்ற நம்பிக்கை அப்போதும் இவருக்கு இல்லை. ஆயினும் கதர் உடுத்திக் கொண்டார். எங்களையும் கதர் தரிக்கச் சொன்னார். தமிழில் பேசத் தலைப்பட்டார் பொதுக் கூட்டங்களிலே.

ஜாதி மத பேதம் பாராட்டும் வழக்கம் இவருக்கு ரொம்ப நாளாகவே கிடையாது. 'ஹரிஜன' முன்னேற்றத்தைக் காங்கிரஸின் கொள்கைகளில் ஒரு முக்கிய அம்சமாகக் கருதினார். ஆனால் "ஆலயப் பிரவேசத்தைச் சட்ட பூர்வமாகக் கொண்டுவர முயற்சி செய்யக் கூடாது. அந்த இயக்கம் தானாகவே வரவேணும்" என்பது இவர் அபிப்பிராயம்.

ஹிந்தி கற்க முயன்றார். ராட்டினத்தில் நூல் நூற்கவும் கற்று வந்தார். ஆனால் இவை இரண்டும் இரண்டே நாளுக்குப்பிறகு கல்லாத கலையாகவே நின்று விட்டன.

திருநெல்வேலி மகாநாட்டிற்குப் பிறகு ஸி. ஐ. இ. பட்டத்தையும் துறந்தார். வீடெங்கும் 'விதேசி' இருந்த இடத்தில் 'சுதேசி' பரவிற்று.

* * *

தகப்பனார் காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்தது முதல் எங்கள் வீட்டுக்கு எத்தனையோ தலைவர்கள் வருவதுண்டு. ஆனால் நாங்கள் (வீட்டு ஸ்திரீகள்) அவர்களிடம் நேரில் பேசிப் பழகினதில்லை. உள்ளே அவர்கள் உணவு கொள்ள வரும்போதுதான் பார்த்திருக்கிறோம். வடநாட்டு நண்பர்களின் ஒரு அரிய வழக்கம் எங்கள் மனதை மிகவும் கவர்ந்தது. எவ்வளவு பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்களானாலும் ஊருக்குத் திரும்பும் போது "மாதாஜி" என்று அழைத்து என் தாயார் காலைத் தொட்டு நமஸ்கரித்து விடை பெற்றுக்கொண்டு போவது வழக்கம். மஹாதேவ தேசாய் அந்த மரியாதையை ஒரு தனி அழகுடன் செய்வார்.

காந்திஜியும், ஸ்வாமி ச்ரத்தானந்தரும் எங்கள் வீட்டிற்கு வந்த போது அவர்களை உட்புற ஹாலுக்கே கூட்டிக்கொண்டு வந்து விட்டார் தகப்பனார். எங்களைக் கொண்டு நமஸ்காரமும் செய்து வைத்தார்.

காந்திஜி எங்களை அருகில் அமர்த்தி வைத்துக்கொண்டு தாராளமாகப் பேசிக்கொடுத்தார். ஸ்வாமி ச்ரத்தானந்தர் தூய காவியுடையில் கம்பீரத் தோற்றத்துடன் விளங்கினார். அவரைப் பய பக்தியுடன் நமஸ்கரிப்பதோடு திருப்தி அடைந்தோம்.

1925-ம் வருஷம் மகாத்மா காந்தி எங்கள் அகத்திற்கு வந்திருந்தபோது என் தாயாரைப் பார்த்து, "உங்கள் கணவர் அட்வகேட் ஜெனரல் பதவியை விட்டதில் உங்களுக்கு மனவருத்தமா? அந்த ஆடம்பர வாழ்க்கை என்ன! வீட்டிலே சதா இரண்டு வில்லைச் சேவகர்கள் என்ன? இப்பொழுது ஒன்றும் கிடையாதல்லவா?" என்று கேட்டார்.

அதற்குத் தாயார், "இப்போது மட்டும் என்ன குறைவு? மாலைகள் என்ன? வாலண்டியர் படை சூழ்ந்த ஊர்வலங்கள் என்ன? ராஜ மரியாதைகள் நடக்கின்றனவே காங்கிரஸ் தலைவர்களுக்கு?" என்றார். அதுகேட்டு மகாத்மா 'கொல்' லென்று சிரித்து விட்டார்.

மகாத்மா உட்புறத்து ஹாலில் வீற்றிருந்தபோது, சிலர் பின்புற வழியாக அவரைத் தரிசிக்க வந்து விட்டார்கள். காந்திஜி அவர்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, "முன்புற ஹாலில் காவல் காக்கும் ஜவான்காரரையுமா ஏமாற்றி வந்து விட்டீர்கள்?" என்று கேட்டார். அதற்கு நாங்கள் "அவர்கள் பின்புற வாசல் வழியாக நுழைந்து விட்டார்கள்" என்று தெரிவித்ததும், அவர், "ஆமாம். உங்கள் வீடு ஒரு தர்ம சத்திரம்போல்தான் இருக்கிறதே. எங்கேயும் திறந்த வாசல்கள்; யாருக்கு வேணுமானாலும் போஜனம்!" என்றார்.

மற்றொரு முறை அவர் வந்திருந்த போது என் தகப்பனாரைப் பார்த்து, "முதல் தடவை உங்கள் வீட்டுக்கு வந்தபோது வாசலுடன் நின்றுவிட்டேன். இரண்டாம் முறை வந்தபோது உட்புற ஹால் வரை வந்துவிட்டேன். மூன்றும் முறை கஸ்தூரி பாய் உங்கள் சமையலறைக்குள்ளேயே நுழைந்தாகி விட்டது! எப்படி இருக்கிறது இந்தச் சீர்திருத்தம்?" என்று சொல்லிச் சிரித்தார்.

பிடிக்காமல் போய்விட்டது. நானும் என் தம்பியும்கூட இந்த எலெக்ஷன் வேலையில் பங்கு எடுத்துக் கொண்டோம். என் தந்தையின் பொது வேலைகளுக்கெல்லாம் மௌனமாக மறைவிலிருந்து வேலை செய்து உதவுவது என் தம்பி பார்த்தசாரதியின் வழக்கம். அவரும் அவருடைய சகாக்களும் சேர்ந்து செய்த வேலையே அந்தத் தேர்தலை ஒரு பெரிய வெற்றியாக்கி விட்டது.

• • •

ஸ்வராஜ்யக் கட்சியை ஆரம்பிக்கும் தறுவாயில் ஸி. ஆர். தாஸ் என் தகப்பனாரைச் சந்தித்துப் பேசுவதற்காகப் பெங்களூரில் எங்கள் அகத்திற்கு வந்தார். அவர் வந்த போது மாலை சுமார் 5 மணி இருக்கும். இராப் போஜனத்திற்கான பூரி, பாயஸம், ஹல்வா முதலிய வட நாட்டுச் சாப்பாட்டை நாங்கள் சிரமப்பட்டுத் தயாரித்து வைத்திருந்தோம்.

கலந்து பேசியதில் என் தகப்பனாருக்கும் தாஸுக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. அதன் விளைவாக இருவர் குரல்களும் மேலோங்கிக் கேட்டன. இரவு தங்குவதாக இருந்த ஸி. ஆர். தாஸ் சட்டென்று புறப்பட்டு விட்டார், அன்றிரவே ஊருக்குத் திரும்ப வேணுமென்று. தகப்பனார் என்ன சொல்லியும் கேட்கவில்லை.

இந்தச் செய்தியைத் தகப்பனார் உள்ளே வந்து எங்களிடம் சொன்னார். "என்ன குழந்தை போல் நடந்துகொள்ளுகிறான், இந்த தாஸ்! திடீர் என்று புறப்பட்டுவிட்டான்!" என்றார். ஸி. ஆர். தாஸின் முகம் ஒரு குழந்தையின் முகம் போலத்தான் இருக்கும் பார்ப்பதற்கு.

தகப்பனார் ரயில் ஏற்றப் போனார் தாஸை. நாங்கள் வீட்டு அலுவல்களை முடித்துக்கொண்டு படுக்கப்போனோம். போன கார் திரும்பி வந்தது-போனபடியே! வியப்புற்றோம்! இப்பொழுது இருவரும் கலகலப்பாகப் பேசிச் சிரித்துக் கொண்டே காரிலிருந்து இறங்கினார்கள். ரயிலடியில் போனதும் அவர்களிடையே இருந்து வந்த அபிப்பிராய பேதம் மறைந்துவிட்டதாம். பரஸ்பரம் ஒத்துப்போய் விட்டார்கள். எனவே ஸ்வராஜ்யக் கட்சி சம்பந்தமான பேச்சுகளைத் தொடர்ந்து பேசி முடிப்பதற்காகத் திரும்பி விட்டார் தாஸ்!

ஸ்ரீ ஸி. ஆர். தாஸிடமும் ஸுபாஷ் போஸிடமும் என் தகப்பனாருக்கு ஒரு தனிப் பிரியம். அவர்களின் குணாதிசயங்களைச் சொல்லிச் சொல்லிப் பெருமைப் படுவார். சில விஷயங்களில் கண்டனமும் செய்வதுண்டு.

மிஸஸ் தாஸைப் பற்றியும் "நல்ல குணவதி" என்ற அபிப்பிராயம். 'வஸந்தி' என்ற அவர் பெயரையே தம் பேத்திக்குச் சூட்டினார். ஸ்ரீமதி ஸரோஜினி நாயுடுவை 'நல்ல அறிவாளி' என்று அவர் சொல்வதுண்டு. ஸ்திரீகளில் இவ்விருவரையும் அடிக்கடி என்னிடம் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார்.

• • •

ஸ்வராஜ்யக் கட்சி ஏற்பட்டதிலிருந்தே காந்திஜிக்கும் தகப்பனாருக்கும் இடையே அபிப்பிராய பேதம் சற்று வலுக்க ஆரம்பித்து விட்டது. இதற்குப் பல காரணங்களுண்டு. இவற்றுள் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவைகள் நான்கு. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை விஷயம். அந்த ஒற்றுமையைத் தம்மால் உண்டாக்க முடியும் என்று தந்தையார் நம்பினார். காந்திஜி காங்கிரஸைச் சார்ந்த பிற்போக்காளரான இந்துக்களின் பேச்சைக் கேட்டதால், இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஏற்பட இருந்த உடன்பாடுகளை முறித்ததென்றும் கருதினார்.

இரண்டாவது: பூர்ண ஸ்வராஜ்யம் வேணுமென்ற தீர்மானத்திற்கு மகாத்மா அந்நாளில் எதிரிடையாக இருந்தது.

மூன்றாவது: அடிக்கடி காங்கிரஸ்காரர்களைச் சிறைசெல்லச் சொல்வதும், உத்தியோகங்களையும் பள்ளிக்கூடங்களையும் விடச் சொல்வதும் வியர்த்தமான பலி. வீணான தியாகம் என்று என் தந்தை கருதியது.

நாலாவது: மதத்தையும் அரசியலையும் ஒன்றாக்கி விடுவதால் இரண்டும் குழம்பிக் கெட்டுப்போகும் என்று தந்தை நினைத்தது. அஹிம்ஸா தர்மம் முதலியன மதக் கொள்கைகள்தான் என்பது இவர் அபிப்பிராயம். இத்யாதி காரணங்களால் மகாத்மாவுக்கும் என் தந்தையாருக்கும் இடையே இருந்த பிளவு அதிகரித்தது.

தகப்பனார் கௌஹாதி காங்கிரஸுக்குத் தீர்மானங்களைத் தயாரித்துக் கொண்டிருந்த சமயம் மகாத்மாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அவர், "நீ ஆழம் தெரியாமல் காலைவைத்து விடுகிறாய்! எச்சரிக்கை செய்கிறேன்" என்று பொருள்பட எழுதி யிருந்தார். அதைத் தந்தையார் என் தாயாரிடம் சொல்லி, "நான் என்ன பதில் எழுதினேன், தெரியுமா? 'உங்கள் ஆசீர்வாதத்தினால் நான் நீந்திக் கரையேறிவிடுவேன்' என்று எழுதிவிட்டேன்" என்றார்.

• • •

கௌஹாதி காங்கிரஸுக்கு என்னைக் கூட்டிக்கொண்டு போகும்படி எவ்வளவோ கேட்டுப் பார்த்தேன். "நீங்கள் தலைவராக இருந்து நடத்தும் காங்கிரஸ் நடவடிக்கைகளையும், அந்த நாற்பத்தொரு யானை பூட்டிய ஊர்வலத்தையும் நான் பார்க்கவேண்டாமா?" என்றும் கேட்டுப் பார்த்தேன். தமக்குக் கிடைக்கும் புகழையும் பதவியையும் தம் குடும்பத்தார் பார்த்தும் கேட்டும் அனுபவிக்க வேணும் என்று தகப்பனார் எப்பொழுதும் விரும்பியது இல்லை. எங்களை எந்தக் கூட்டத்திற்கும் அழைத்துக் கொண்டுபோக மாட்டார். வீட்டை விட்டு வெளியே போய்விட்டாலோ, வீட்டு ஞாபகமும் வீட்டார் ஞாபகமும் வருவதே இல்லை!

ஆனாலும் இவருக்குத் தம் குடும்பத்தாரின் மீதிருந்த பாசத்திற்குக் குறைவுண்டா? இவருடைய வாத்ஸல்யத்தின் ஆழம் குடும்பத்தில் நாங்கள் யாராவது நோய் வாய்ப்படும்போது புலனாகும். மணிக்கொருதரம் டாக்டரை வரவழைப்பார். அரைமணிக்கொருதரம், "குழந்தைக்கு என்னமாக இருக்கிறது? டெம்பரேச்சர் எத்தனை?" என்றெல்லாம் தொண தொணப்பார். 20, 25 வயதானாலும் நாங்கள் இவர் கண்ணில் என்றும் குழந்தைகள்தான்!

ஒரு சமயம் தகப்பனார் நாகபுரி காங்கிரஸுக்குப் புறப்பட எல்லாம் தயாராகி விட்டது. சாமான் வண்டியும் ஆளும் ரயிலுக்குப் போய்விட்டார்கள். அன்று என் பையனுக்குக் கடும் ஜுரம். மாலை 105 டிகிரி ஏறிவிட்டது. இந்தச் செய்தி தகப்பனாருக்குத் தெரிந்தது. அவர்முன் எதையும் மறைக்க முடியாது. பொய் சொன்னாலும் அகப்பட்டுக் கொள்வோம். தூண்டித் தூண்டிக் கேட்டு உண்மையை வரவழைத்து விடுவார்.

டெம்பரேச்சர் '105' என்று தெரிந்ததுதான் தாமதம்: "ஐ! போச்சு! போச்சு!" என்று அலறினார். ஓடினார் கேட்டுவரை. "டாக்டரை நானே கூட்டிக்கொண்டு வருகிறேன்" என்று கிளம்பினார். அவரைச் சமாதானம் செய்வதற்குள் போதுமென்றாகிவிட்டது. "குழந்தை இப்படி இருக்கும்போது


KRS


K. R SUBBAIYER
TRADE
151
MARK
BALL THREAD

நான் நாகப்பூருக்குப் போகிற தில்லை" என்று முடிவு கூறி விட்டார். அந்தக் காங்கிரஸுக்கு இவர் போகவே யில்லை.

1930 - 32-ம் வருஷம் நான் காந்தி இயக்கத்தில் ஈடுபட்டு இவர் சம்மதமின்றி வேலை செய்து வந்த போது சுமார் இரண்டு வருஷ காலம் என்னுடன் சரியாக முகங் கொடுத்துப் பேசாமலிருந்து விட்டார். ஆனால் நான் சிறைப்பட்டது தான் தாமதம்: வாரா வாரம் பெரும் பழக் கூடைகளுடன் தாயாரையும் அழைத்துக் கொண்டு 'இண்டர்வ்யூ'வுக்கு வந்துவிடுவார் வேலூர் ஜெயிலுக்கு.

முதல் இண்டர்வ்யூவில் இருவருக்கும் இடையே கம்பிக்கூடு இருந்ததைக் கண்டு, "இந்தக் கூட்டுக்கு இடையே அவளை நான் பார்க்கமாட்டேன்!" என்று சொல்லிவிட்டு வெளியே போய்விட்டார். நல்ல வேளையாக இரண்டாவது 'இண்டர்வ்யூ'வுக்குமுன் அந்தக் கூட்டை எடுத்து விட்டார்கள்.

சென்னைக் காங்கிரஸுக்குப் பிறகு 1928-ம் வருஷம் ஏப்ரல் மாதம் இவர் ஐரோப்பாவுக்குப் போனார். ஆஸ்டிரியா, ஸ்விட்ஸர்லண்டு, ஜெர்மனி, பிரான்ஸ், ருஷ்யா, இங்கிலாந்து முதலிய தேசங்களில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு இந்தியாவுக்குத் திரும்பினார். இதற்குள் 'நேரு யாதாஸ்து' வெளியாகி விட்டது. அதில் தாம் கூறிய அபிப்பிராயங்களைக் காணாத படியால் "இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு இனி வழியில்லை!" என்று கூறி மனமுடைந்து போனார். நேருவின் சார்பில் மகாத்மா இருந்து கொண்டு தமக்குப் பட்சபாதமாக நடப்பதாக அவர்மீது குற்றம் சாட்டினார்; கோபம் கொண்டார். முன்னமே புகைந்து கொண்டிருந்தது இப்பொழுது பன்மடங்கு அதிகரித்துவிட்டது.

தமது உழைப்பு, தாம் செய்த தியாகம், பட்ட சிரமம் எல்லாம் வீணாகிவிட்டன—தேசத்திற்காவது, சமூகத்திற்காவது யாதொரு லாபமும் இல்லை என்ற எண்ணம் மனதிலே வேரூன்றிப் போனதே தகப்பனார் காங்கிரஸை விட்டு விலகியதற்கு முக்கிய காரணம்.

இவர் காங்கிரஸிலிருந்து விலகியதை யொட்டி வெறுப்போடு மிகக் காரமாக எழுதினார் மகாத்மா. அதைப் படித்ததும் தகப்பனாருக்கு எரிகிற நெருப்பிலே எண்ணெய் ஊற்றினதுபோல் இருந்தது. மகாத்மாவின் மீது அசாத்தியக் கோபம் வந்து விட்டது. நான் எவ்வளவோ முயன்றேன் சமாதானப்படுத்த. என் உள்ளம் படாத பாடு பட்டது. மகாத்மாவின்மீது எனக்குக்கூடச் சிறிது கோபம் உண்டாயிற்று. "எந்த நிலைமையிலும் சாந்தமூர்த்தியாய்த் துலங்குபவர், சிநேகமாய் நடந்து கொள்பவர், இப்படி ஏன் காரமாக எழுதித் தந்தையைப் பின்னும் விரோதித்துக்கொண்டார்?" என்று எண்ணி எண்ணி வருந்தினேன். மகாத்மா அந்தக் கடிதத்தை எழுதிவிராவிட்டால், தகப்பனார் அவ்வளவு தூரம் அவரை விட்டும், காங்கிரஸை விட்டும் பிரிந்து போயிருக்கமாட்டார் என்பது என் கருத்து.

• • •

நான் முரண்டு செய்து வார்தா ஆசிரமத்துக்குச் சென்ற போது, அந்த வணங்கா முடிச் சிங்கமும், இந்தப் பேதைப் பெண்ணுக்காகத் தலைவணங்க நேர்ந்தது. என்னைத் தாமே கூட்டிக்கொண்டு போய் ஆசிரமத்தில் விட்டார்.

மகாத்மாவும் உண்மையான மகாத்மா ஆனதால், அவரை அன்புடன் வரவேற்று ஒரு பழைய நண்பனுகவே பேசித் தேற்றி யனுப்பினார்.

நான் சென்னைக்குத் திரும்பிவந்த பிறகு மகாத்மாவிடமிருந்து பின் வரும் கடிதம் என் தந்தைக்கு வந்தது.

அன்புள்ள நண்பரே,

தங்கள் கடிதத்திற்கு வந்தனம். என்னோடு தங்கியது அம்புஜத்திற்கும் பிரயோஜனமாயிருந்த தென்று தாங்கள் இருவரும் (தாங்களும் தங்கள் மனைவியாரும்) அபிப்ராயப் படுகிறீர்கள் என்பதை அறிந்து நான் பெரு மகிழ்ச்சி அடைந்தேன். என்னால் இயன்ற வரை அம்புஜத்திற்கு எந்த வழியிலாவது உதவி புரியக் கூடுமானால், அதை நான் ஓர் உரிமையாகவே மதிக்கிறேன். அவளுக்கு வழி காட்டும் என் முயற்சி விஷயமாகத் தாங்கள் சொல்லுகிற எந்த யோசனையையும் நான் வரவேற்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

11—12—34. எம். கே. காந்தி.

இந்தக் கடிதத்தை என் தந்தைக்கு என் ஸ்வீகாரத் தந்தையிடமிருந்து வந்த கடிதமாகவே போற்றுகிறேன்.

மகாத்மா உலகத்துக்கே வழி காட்டப் பிறந்த ஒரு இலட்சிய புருஷர்: தீர்க்கதரிசி: சமயாசாரியருமாவர். சத்தியம், அஹிம்சை என்ற இந்த தர்மத்தின் இரண்டு வேதமொழிகளையும் தம் இருதயக் கோயிலிலே வைத்துத் தொழும் பக்தமணி அவர். பாரதமாதாவின் பணி பீடத்திலே தமது உடல், பொருள், ஆவி மூன்றையும் பலி கொடுக்க என்றும் சித்தமாய் இருப்பவர். தம்மைச் சேர்ந்தவர்களை அத்தகைய தியாகத்துக்கு உட்படுத்தவும் பின்வாங்காதவர். அவரை ஸ்வீகாரத் தந்தையாகப் பெறும் பாக்கியம் எப்பேர்ப்பட்ட பாக்கியம்!

ஸ்ரீமான் ஸ்ரீனிவாச ஐயங்காரோ விடா முயற்சியுடன் உண்மையாகத் தொண்டுபுரிந்த தேசபக்தர்: தேசத்திலே கிடைத்தற்கு அரிய அறிவாளி—மேதாவி. குடும்பத்தாருடையவும், நண்பர்களுடையவும் நலமெல்லாம் தாங்கி ஆதரவு அளிக்கும் ஆதார ஸ்தம்பம். பரந்த மனம் படைத்த பரோபகாரி. இவரைச் சொந்தத் தந்தையாகப் பெற்ற பாக்கியந்தான் என்ன பாக்கியம்!

ஆனால் இவர்கள் இருவரையும் ஒன்று சேராமல் பிரித்துவைத்த என் துர்ப்பாக்கியமானது, அம்மம்மா, கொடிது, கொடிது, மிகவும் கொடிது. அந்த நினைவே என் உள்ளத்தை இன்றும் வாட்டுகிறது. என் பொருட்டாக மட்டும் அன்று; என் தாய்நாட்டின் பொருட்டாகவும்தான்.

• • •

தகப்பனாருக்குச் "சுய சரித்திரம்" என்றாலே பிடிக்காது. சுய சரித்திரம் எழுதுவோரைக் கேலி செய்வதுமுண்டு. பட்சபாதமில்லாமல் தம்மைப் பற்றித் தாமே எழுதுவது (மகாத்மா நீங்கலாக) எவருக்கும் சாத்தியமில்லை என்பது அவர் கொள்கை. அதுவே என் அபிப்பிராயமும்.

சொந்த மனிதரைப்பற்றி எழுதுவோரையும் அதே கோஷ்டியில் தான் சேர்க்கவேணும். என்றாலும் கூடுமட்டும் எனக்குத் தெரிந்த உண்மைகளையே இந்த நினைவு மலர்களாகத் தொகுக்க முயன்றேன்: மலர் மாலையாகத் தொடுத்தேன் என்றுகூடச் சொல்ல முடியவில்லை!

• • •

மேலான வைரங்களுக்கும், நாகரீகமான பவுன் நகைகளுக்கும்
அசல் வெள்ளி சாமான்களுக்கும், நம்பிக்கையான இடம்.

P. A. ராஜா செட்டியார் & பிரதர்



P.A. ராஜா செட்டியார் & பிரதர்

தந்தி:ராஜா, போன். 218-A, P.B.139, கோயமுத்தூர்

# மணிப்பிரவாளம்!

ஸர். ஆர். கே. ஷண்முகம் செட்டியார்

வேணுசாமி நாயுடுவும் நானும் ஒருநாள் எங்கள் நண்பர் கிருஷ்ணராவிடம் ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது, "நீங்கள் 'மென்ஷன்' பண்ணின 'மேட்டரை'ப்பற்றி நான் 'கன்ஸிடர்' செய்து நாளை 'ஈவினிங்' 'மீட்' பண்ணும்போது 'பைனல்' ஆக 'ரிப்ளை' சொல்லுகிறேன்" என்று கிருஷ்ணராவ் கூறினார். கிருஷ்ணராவ் பேச்சில் விசேஷமாகக் கவனிக்கக் கூடியது ஒன்றுமில்லை. ஆங்கிலம் படித்த தமிழர்கள் தங்களுக்குள் சாதாரணமாகப் பேசுவது இந்த மாதிரிதான். ஆனாலும் அன்று எனக்கு என்னவோ ஒரு எண்ணம் தோன்றியது. கிருஷ்ணராவ் மொத்தம் பேசிய வார்த்தைகள் பதினைந்து; அவற்றில் எட்டு வார்த்தைகள் ஆங்கிலம்!

கிருஷ்ணராவ் வீட்டிலிருந்து நாங்கள் திரும்பி வரும் வழியில் எனக்குத் தோன்றிய எண்ணத்தை வேணுசாமி நாயுடுவிடம் சொன்னேன். "நம்முடைய தாய்மொழியில் சாதாரணமாகப் பேசும் சக்தியைக் கூட நாம் இழந்து விட்டோமல்லவா? நாம் பேசும் போது நூற்றுக்கு அறுபது வார்த்தைக்கு மேல் ஆங்கிலச் சொற்களை உபயோகிக்கிறோமே. அதுவும் எவ்வளவு ஆபாசமாக உபயோகிக்கிறோம்? அநேகமாகத் தமிழில் வழக்கிலில்லாத சொற்களுக்குப் பதிலாக ஆங்கில வார்த்தைகளை உபயோகித்தாலும் பரவாயில்லை. ஆனால் எளிதான தமிழ் வார்த்தைகளைக் கூட ஆங்கிலப்படுத்தி விடுகிறோம். 'நாளைய தினம் சந்திக்கலாம்' என்பதற்கு, 'நாளைய தினம் 'மீட்' பண்ணலாம்' என்றல்லவா சொல்லுகிறோம்? இந்த வழக்கம் இப்படியே போய்க் கொண்டிருந்தால் தமிழ் மொழிக்கும் பதிலாக ஒரு மணிப் பிரவாள நடை அல்லவா தமிழ்நாட்டில் ஏற்பட்டுவிடும்? இதை மாற்ற நாம் முயற்சி செய்ய வேண்டாமா?" என்றேன்.

நான் சொல்வது ரொம்பவும் சரி என்று நாயுடு ஒப்புக் கொண்டார். ஒரு சீர்திருத்தத்தைப் பற்றிச் சும்மா பேசிக் கொண்டிருப்பதைவிட அதைச் செய்து காட்டுவதுதான் உத்தமம் என்று நானும், நாயுடுவும் முடிவு செய்தோம். இனிமேல் இருவரும் தமிழில் பேசும்போது ஆங்கில வார்த்தைகளை உபயோகிக்காமல் பேசுவது என்று தீர்மானம் செய்தோம். நம்முடைய தீர்மானம் பயன்பட வேண்டுமானால் தவறுதலுக்கு ஏதாவது தண்டனையிருந்தால்தான் சீர்ப்படுமென்று நாயுடு தம் அபிப்பிராயத்தைச் சொன்னார். நானும் அதை ஒப்புக் கொண்டேன். தமிழில் பேசும்போது ஆங்கில வார்த்தைகளை உபயோகித்தால் ஒவ்வொரு வார்த்தைக்கும் காலணா அபராதம் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்தோம்.

இந்த முடிவை எப்பொழுதிருந்து அமுலுக்குக் கொண்டுவருவது என்று அடுத்தபடியாக யோசனை நடந்தது. அபராதத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்குமுன் இடையில் சில காலம் அப்பியசிக்க வேண்டுமென்று நாயுடு அபிப்பிராயப் பட்டார். விநாயக சதுர்த்தி வர இன்னும் எட்டு நாள்தான் இருந்தது. அன்று முதல் இந்த நடவடிக்கை அமுலுக்கு வர வேண்டியதென ஏற்பாடு செய்தோம்.

இவ்விதம் நாங்கள் முடிவுசெய்த அன்று சாயங்காலமே கிளப்பில் எங்கள் நண்பர்கள், கனகசபை முதலியார், பாலசுப்ரமண்ய செட்டியார், சென்னிமலை முதலியார், ஜானகிராம அய்யர், கிருஷ்ணராவ், ராமசாமி முதலியார் முதலியவர்களிடத்தில் எங்கள் முடிவைப்பற்றிச் சொன்னோம். அவர்களெல்லோரும், "நாங்களும் இதில் சேருகிறோம்" என்று வெகு ஆவலாகச் சொன்னார்கள். அபராதங்களை எல்லாம் வசூல் செய்து போட்டு வைக்க ஓர் உண்டியல் பெட்டி வேண்டுமென்று ஒரு நண்பர் சொன்னார். உடனே ஒரு பெட்டியையும் தயார் செய்தோம். அந்த எட்டாம் நாள் விநாயகசதுர்த்தி தினத்திலிருந்து இந்தத் திட்டம் அமுலுக்கு வருமென்று எல்லோருக்கும் தெரிவிக்கப்பட்டது.

விநாயக சதுர்த்தியும் வந்தது. அன்று காலை என்னுடைய பங்களாத்தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தேன். சுமார் ஒன்பது மணிக்கு வேணுசாமி நாயுடு வந்தார். புதுத்திட்டம் அன்றைய தினம் அமுலுக்கு வந்திருக்கிற விஷயத்தை நான் மறந்து விட்டேன். வேணுசாமி நாயுடு கேட்ட ஏதோ ஒரு கேள்விக்கு, "நான் அதைப்பற்றி என்னுடைய 'லாயர்' இடம் கேட்கவேண்டும்" என்று பதில் சொன்னேன். உடனே, "காலணா அபராதம்!" என்று எக்களிப்போடு நாயுடு கூச்சல் போட்டார். அப்பொழுதான் எங்களுடைய திட்டமும் என் நினைவுக்கு வந்தது. "முதல் அபராதத்தை உங்களுக்கே விதிக்க வேண்டுமென்று நினைத்திருந்தேன். என் எண்ணமும் நிறைவேறிவிட்டது" என்றார் வேணுசாமி நாயுடு. அதற்குப்



பிறகு எவ்வளவோ ஜாக்கிரதையாகப் பேசினேன். எப்படியாவது நாயுடுவிடம் ஒரு காலணா அபராதம் வாங்க வேண்டுமென அன்று நான் எவ்வளவோ சூழ்ச்சி செய்தும் பயன்படவில்லை.

அன்று சாயங்காலம் கிளப்பில் எல்லோரும் சந்தித்தோம். நாங்கள் நாற்காலியில் உட்கார்ந்தவுடனே வேலைக்காரன் எங்கள் மத்தியில் ஒரு சின்ன மேஜையைப் போட்டு அதன்மேல் தகரத்தால் செய்த ஒரு உண்டியல் பெட்டியையும் வைத்தான். உண்டியல் பெட்டியைப் பார்த்ததும் அனைவரும் ஜாக்கிரதையாகி விட்டார்கள். பேச்சு மட்டும் அதிகமாகக் காணோம். பேச்சில் தாராளமாகக் கலந்து கொள்ளும் பாலசுப்ரமணிய செட்டியார் மௌனம் சாதித்தார். ராமசாமி முதலியார் எப்போதுமே அதிகமாகப் பேச மாட்டார். அன்றைய தினம் முழுக்க முழுக்க மௌன விரதத்தை அனுஷ்டித்தார். அபராதத்திற்கும் பயந்து கொண்டு பேசாமலிருப்பது சரியல்ல என்று நாயுடு பேசினார்.

யுத்த விஷயங்களில் கிருஷ்ணராவ் நிபுணர். யுத்தப் போக்கைப்பற்றி எல்லோரும் அவரைத்தான் கேட்பது வழக்கம். "சமாசாரம் 'வார் நியூஸ்' என்ன?" என்றார் கனகசபை முதலியார். "கிருஷ்ணராவ் பதில் அளிப்பதற்கு முன் முதலியார் தயவுசெய்து அரையணாவைப் பெட்டியில் போட வேண்டும்" என்றார் நாயுடு. முதலியாரும் பெட்டியில் அரையணாவைப் போட்டார்.

யுத்த சமாசாரத்தைப் பற்றிக் கிருஷ்ணராவ் பேச ஆரம்பித்தார். "ஜெர்மன் படைவீரர்கள் பல போர் முனைகளிலிருந்து புறங்காட்டி ஓடுகிறார்கள் என்று ரேடியோ வாயிலாகச் செய்தி சொல்லப்பட்டது" என்றார். "என்ன இவ்வளவு இலக்கணமாகத் தமிழ் வந்துவிட்டதே!" என்றேன். "ஆமாம். நிதானமாகவும், இலக்கணமாகவும் பேசினதால் அபராதத்திலிருந்து என்றும் தப்பிக்க முடியும்" என்றார் கிருஷ்ணராவ்.

அன்று கூட்டம் கலைவதற்குள் இரண்டு ரூபாய் அபராதமாகக் கனகசபை முதலியார் பெட்டியில் போட வேண்டி வந்தது. சுத்தமாகத் தமிழ் பேசுவது முதலியாருக்கு வெகு கஷ்டமாக இருந்தது. "வாரம் ஒன்றுக்கு மொத்தமாக ஐந்து ரூபாய் அபராதம் முன் பணமாகச் செலுத்திவிடுகிறேன்" என்று கனகசபை முதலியார் சொன்னார். ஆனால் மற்றவர்கள் இதற்குச் சம்மதிக்கவில்லை.

நான்கு தினங்களில் உண்டியல் பெட்டியும் நிறைந்துவிட்டது. இந்தத் திட்டத்தின் காரணமாகப் பல சந்தேகங்களும், தர்க்கங்களும் ஏற்பட்டன. டாக்டர், ஸ்டேஷன், கிளப், ஹாஸ்பிடல், ட்ரெயின், கார்—முதலிய இதுபோன்ற வார்த்தைகளை உபயோகிக்கலாமா என்பதைப்பற்றிப் பெரிய தர்க்கம் உண்டாயிற்று. கிராமவாசிகளும் சாதாரணமாக உபயோகிக்கும் ஆங்கிலச் சொற்களை உபயோகிக்கலாம் என்று முடிவு செய்தோம். இந்த முடிவுக்கும் பின்னும் "டைம்" என்னும் வார்த்தையை ஒருவர் உபயோகித்தார். இதற்கு அபராதம் உண்டா இல்லையா என்று பின்னும் தர்க்கம் உண்டாயிற்று. இவ்வித சந்தேகங்கள் ஏற்படும்போது இறுதியான முடிவைச்சொல்ல ஒருவரை நியமிக்க வேண்டுமென்று ஆலோசனை தோன்றியது. எங்கள் நண்பர்களில் மாணிக்கவுண்டர் என்று ஒருவர் இருக்கிறார். அவருக்கு ஆங்கிலம் தெரியாது. வழக்கை முடிவு செய்து தீர்ப்புக்கூற இவர்தான் சரியான நீதிபதி என்று மாணிக்கவுண்டரை எங்கள் கூட்டத்திற்குத் தலைவராக நியமித்தோம். ஏதாவது ஒரு ஆங்கில வார்த்தை தமிழில் வழக்கத்திற்கு வந்துவிட்டதா என்ற சந்தேகம் ஏற்பட்டால் அது விஷயத்தில் முடிவான தீர்ப்பைச் சொல்ல வேண்டியவர் மாணிக்கவுண்டர்தான்.

எங்கள் கூட்டத்தில் இப்போது இன்னும் அநேக நண்பர்கள் சேர்ந்திருக்கிறார்கள். கிளப்பில் கூடும் போது எங்கள் சம்பாஷணை வெகு ருசிகரமாக இருக்கும். கனகசபை முதலியார் இப்போது சுத்தமாகத் தமிழ் பேசுகிறார். அவர் கொடுக்கும் அபராதம் குறைந்துவிட்டது! ஆனால் மனைவி என்பதற்கு அவர் எப்போதும் 'வைய்ப்' என்ற ஆங்கிலச் சொல்லையே உபயோகித்து அபராதம் கொடுக்கிறார். இவ்வளவு சுலபமான தமிழ் வார்த்தையை ஏன் மறந்துவிடுகிறீர்கள் என்று ஒரு கேள்வி வந்தபோது, "மனைவி அல்லது சம்சாரம் என்னும் வார்த்தைகளை உபயோகிப்பதற்கு வெட்கமாயிருக்கிறது!" என்றார் முதலியார். இந்த ஒரு வார்த்தைக்கு மட்டும் தனக்கு விலக்குக் கொடுக்க வேண்டுமென்று அவர் கேட்டும் நாங்கள் யாரும் சம்மதிக்கவில்லை.

நேற்றையதினம் வேணுசாமி நாயுடு ஒன்றே முக்கால் அணா அபராதம் கொடுக்கவேண்டி நேர்ந்தது. அவரிடம் அப்போது பணம் இல்லை. ஆகையால் கிருஷ்ணராவிடம் கடன் கேட்டார். கிருஷ்ணராவிடம் சில்லறைக் காசுகள் இல்லை. இரண்டு அணாப் பணம் ஒன்று எடுத்துக் காலணாவைச் சேர்த்தே போட்டு விடுகிறேன் என்று உண்டியல் பெட்டியில் அவர் அந்த இரண்டணாவைப் போடப் போனார். வேணுசாமி நாயுடு "தாங்ஸ்" என்றார். அதிகமாக விழப்போன காலணாவும் சரிப்பட்டுப் போய்விட்டது!

உண்டியல் பெட்டியில் சேரும் பணத்தை எல்லாம் தமிழ் வளர்ச்சிக்காகச் செலவிடுவதென்று தீர்மானித்திருக்கிறோம்.

# தீர்த்த யாத்திரை

கே. வி. ரங்கசாமி ஐயங்கார்

நம் நாட்டில் யாத்திரீகர்களுக்கு எப்போதுமே நல்ல கௌரவம் உண்டு. தம்மால் யாத்திரை செய்ய முடியாதவர்கள் யாத்திரீகர்களை இரண்டு மடங்கு உற்சாகத்தோடு கொண்டாடுவார்கள். ஸ்ரீ காசியிலிருந்து இராமேச்வரத்துக்கு யாத்திரை போகும் கூட்டங்கள் நம்முடைய கிராமங்களில் பிரவேசித்த மாத்திரத்திலேயே கிராம வாசிகள் அவர்களைக் கொண்டாடுவார்கள். அவர்களுக்கு ஊணுக்கும், வசதிக்கும், உபசாரத்திற்கும் யாதொரு கவலையும் இருக்காது.

தீர்த்த யாத்திரையில் பொதுஜன நம்பிக்கை இப்பொழுதும் செழித்தோங்கி யிருக்கிறது. ஆனால் புராதன காலங்களில் தூர தேச யாத்திரையில் ஏற்படும் கஷ்ட நிஷ்டூரங்கள் இப்போது இல்லை. முற்காலத்தில் நாட்டில் சரியான இராஜபாட்டைகள் எங்கும் இல்லை. வழியில் திருட்டு பயமதிகம். காடுகளையும், மலைகளையும், பாலம், தோணி முதலிய வசதி யில்லாத பெரிய ஆறுகளையும் கடந்து செல்ல வேண்டி யிருக்கும்.

வெகு நாட்களுக்கு முன்பே, யாத்திரீகர்கள் பிரயாணத்திற்கு ஆயத்தம் செய்வார்கள். கூட்டம் கூட்டமாகவே நெடுவழி போவார்கள். திரும்பி வீடு வரலாமென்ற நம்பிக்கை இல்லாதபடியால், வைகுண்ட யாத்திரைக்குப் போவது போலவே புறப்படுவார்கள். தென்னாட்டிலிருந்து காசி யாத்திரை போனவர்கள் தங்கள் யோக க்ஷேமங்களை உறவினர்களுக்குத் தெரிவிக்கும் சௌகரியங்கள் இல்லை. பல வருடங்கள் கழித்து அவர்கள் தம்முடைய கிராமங்களுக்குத் திரும்பிவந்தால் அயலுலகத்தி லிருந்து வந்தவர்களைப் போலவே கொண்டாடப்படுவார்கள். யாத்திரை போனவர்களில் ஒரு பகுதி கூடத் திரும்பி வந்து சேர்வதரிது.

சிலர் காசி க்ஷேத்திரத்தை யடைந்ததும், அந்தப் புண்ணிய நகரத்தின் மான்மியத்தில் ஈடுபட்டு, அங்கேயே ஆயுள் முடியும்வரையில் இருப்பதாகத் தீர்மானித்து, அங்கேயே நின்றுவிடுவதும் உண்டு. இதற்கு க்ஷேத்திர சந்நியாசமென்று பெயர். காசியில் மரித்தவர்களுக்கு உடனே முக்தியென்று புராணங்களில் உறுதியாகச் சொல்லப்படவில்லையா? அந்தக் கொள்கையில் திடநம்பிக்கையினால், ஆயிரக்கணக்காகக் கிழவர்களும், துறவறம் பெற்றவர்களும் அந்தப் புண்ணிய நகரத்தில் இருப்பதை எப்பவும் காணலாம். சகல ஜீவன்களுக்கும் அங்கே மரண காலத்தில் முக்தி தரும் திரு மந்திரத்தைப் பரமசிவனே காதில் உபதேசிக்கிறாரென்கிற நம்பிக்கை நம்முடைய சமுதாயத்தில் உண்டு.

யாத்திரையிலேயே உயிர் துறப்பவர் பலர்; அவர்களை நினைந்து அவர்களுடைய பந்துக்கள் வருந்துவதில்லை. அவர்கள் யாத்திரை மூலமாக முக்தி யடைந்தார்களென்னும் நம்பிக்கைதான் காரணம். பலவித கஷ்ட நிஷ்டூரங்களையும் பொருட்படுத்தாமல், பல தீர்த்தங்களையும் க்ஷேத்திரங்களையும் சேவித்துக் களிப்படைந்து திரும்பிய பிரயாணிகளின் உற்சாகம் ததும்பிய கதைகளைக் கேட்டு, அவர்களுடைய உறவினர் தமக்கும் அந்த பாக்யம் கிடைக்கவில்லையே என்று மனமுருகுவார்கள். இல்லற வாழ்க்கையில் பலவித துன்பங்களனுபவித்து வாழ்க்கையிலேயே சலிப்படைந்தவர்க்கு, இவ்வித யாத்திரையே ஆறுதல் மார்க்கத்தைக் காட்டும்.

அறுநூறு வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீவைஷ்ணவ சமய ஆசிரியரான வேதாந்த தேசிகன் கால் நடையாகவே, துருக்கரால் ஆக்கிரமிக்கப்பட்ட நாடுகளைத் தாண்டி, காசிக்குச் சென்று மணிகர்ணிகைக் குண்டத்தில் நீராடினதாக, அவரே சொல்லியிருக்கிறார். சுமார் நூறு வருஷம் சென்ற பிறகு, ஸ்ரீ கண்ணனின் திருவவதாரமாகக் கொள்ளப்படும் ஸ்ரீ சைதன்ய மகாப்பிரபு வங்கதேசத்தில் இருந்து தொடங்கிக் கன்னியாகுமரி வழியாக, திருக்கோகர்ணம், பஞ்சவடி முதலிய தலங்களைத் தரிசித்து, ஜகன்னாதபுரிக்குத் திரும்பிச் சென்றார்.

அதற்குப் பிறகு சுமார் இருநூறு வருஷங்களுக்கப்பால், ஹைந்தவ சாம்ராஜ்யத்தை நிலைநிறுத்திய ஸ்ரீ சிவாஜி மஹாராஜாவின் உபதேசகரான இராமதாஸர் அவ்விதமே பரதகண்டம் முழுவதும் திருவலம் வந்தார். அவர்களுடைய யாத்திரைகளெல்லாம் வருடக்கணக்கில்தான் முடிவுபெற்றன.

நாமோ, புகைவண்டியில், யாத்திரைக்காரர் 'ஸ்பெஷலில்' ஆறுவாரத்தில் அவ்வளவு யாத்திரையையும் முடித்து விடுகிறோம். எங்கே போயிருந்தாலும், உறவினரோடு தபால், தந்தி, டெலிபோன் மூலம் சம்பந்தம் விடாமலிருக்கலாம். நம்முன்னோர்களைப்போல் இக்காலத்துப் பிரயாணிகள் நாள்தோறும் அனுபவிக்கும் சௌகரியங்கள் ஒன்றைக் கூட விடவேண்டாம். கைவிரல்கள் விறைத்துப் போகும் குளிர்ந்த கங்கைப் பிரவாகத்தில் நீராடமாகும் முன்போ, பின்போ, சூடான காப்பியை அருந்தலாம்.

நம்முடைய காலத்தில யாத்திரைக்கும் வனபோஜனத்துக்கும் பேதம் அதிகமாயில்லை. பலவித உதவிகள் பிரயாணிகளுக்குக் கிடைக்கிறபடியால், பண்டைக்காலத்தை விடத் தற்காலத் தீர்த்த

யாத்திரைக்காரர்களின் தொகுதி மிகவும் அதிகரித்திருக்கிறது. தவிர, முன்னாட்களில் போல், யாத்திரைக்குத் தூண்டுதல் பக்தியினால் மட்டுமல்ல. மாமரத்தடியில் தர்ப்பணத் தண்ணீரைவிட்டு இருவித சௌகரியமுமடைந்த அந்தணர்போல், தற்கால யாத்திரைக்காரர்கள் பல உத்தேசங்களையும் ஒரே பிரயாணத்தில் நிறைவேற்ற முயல்கிறார்கள். உத்தியோக, வர்த்தக காரியங்களை நடப்பிக்க ஏற்பட்ட பிரயாணங்களிலேயே, வழியில் இருக்கும் க்ஷேத்திரங்களில் தரிசனத்தையும், நதிகளில் ஸ்நானத்தையும் நடத்துவது சர்வ சாமான்யமாகி விட்டது; மெய்ஞ்ஞானம் மட்டும் முன்போல் இல்லை.

மூவாயிரம் மைலுக்கப்பால் இருக்கும் சீன தேசத்திலிருந்து, பல நூற்றாண்டுகளுக்கு முன்பு, புத்த பெருமான் திருவவதாரம் செய்த நம் நாட்டிற்குப் பல பிரபல சீனர்கள் யாத்திரைசெய்து, தாண்டமுடியாத பனிநிறைந்த பெரும் மலைகளையும் கடந்து, தரிசித்துப்போன வரலாற்றைச் சரித்திரத்தில் காணலாம். அத்தகைய திட பக்தியுள்ள யாத்திரைக்காரர்களைத் தற்காலத்தில் காண்பதரிது.

இயற்கை அன்னையின் பலவிதமான மனங் கவரும் தோற்றங்களில் தெய்விகத் தன்மையைக் காண்பது மனிதரின் சுபாவமே. கோடிக்கணக்கான ஜீவன்களைப் போஷித்து வரும் கங்கையை அன்னையைப் போலெண்ணுவதில் என்ன வியப்பு? அந்தப் புண்ணியப் பிரவாகத்தைக் கண்ணால் கண்டவுடன் மனமுருகி, 'கங்கைத் தாயே' என்று கதறி நமஸ்கரிப்பதும் நம்முடைய இயல்புக்குரியதே!

அந்த தேவ நதியை, கங்கோத்தரியிலும், யமுனையோடு சேரும் திரிவேணி சங்கமத்திலும் கண்டு களித்தவர் எவர் ஆயுள் முடியும் வரை அந்தக் காட்சியை மறக்கமுடியும்? திரைகடலோடி, உலக முழுவதும் கண்டுகளித்த ஸர் ரிச்சேர்டு டெம்பிள் (Sir Richard Temple) என்னும் பெரியார் காசியில் வரும் கங்கையின் காட்சிக்கு நிகரான உள்ளம் கவரும் காட்சி உலகத்தில் வேறு எந்த இடத்திலும் காண முடியாது என்று அழுத்தமாய்ச் சொன்னதில் என்ன வியப்பு?

சாந்த குணமே திருவுருக் கொண்டதுபோல் காணும் இமய மலையின் உன்னத ஸ்தலங்களைக் கண்டு அனுபவித்தவர் எவர்தான் திரும்பிச் சச்சரவு நிறைந்த தம் ஊர்களுக்கு மனதோடு திரும்புவார்கள்? அவ்விதமான இடங்களிலல்லவோ தவம் புரிய வேண்டும்! பதரிகாச்சிரமம் என்னும் மகா க்ஷேத்திரத்தில், பகவான் பக்தி மார்க்க தத்துவங்கள் துலங்கும் பொருட்டு, நர - நாராயணராக அவதரித்தார் என்னும் புராண வரலாற்றில் நம்பிக்கை எவருக்குத் தோன்றாது? இப்பொழுதும், பதரி தரிசனம் கிடைத்தவர்கள் முழு மனதோடு, திரும்பித் தம் நாடுகளுக்கு வருவது அரிது. ஆதி சங்கராச்சாரியார் அந்த மகா க்ஷேத்திரத்திலேயே ஸமாதி யடைந்தாரென்பதில் வியப்பு ஒன்றுமில்லை.

எத்தனையோ தெய்வாலயங்களைக் 'கண்ணாரக் கண்டேனே' என்று போற்றிப் பாடியிருக்கும் திருமங்கை ஆழ்வார் திருப்பிரிதி யென்னும் நந்த பிரயாகையையும், பதரிகாசிரமத்தையும் மனமுருகப்



காசி க்ஷேத்திரத்தில் ஒரு காட்சி

பாடினதில்தான் என்ன ஆச்சரியம்? தென்னாட்டு வைஷ்ணவ க்ஷேத்திரங்களை யெல்லாம் தரிசித்த அவ்வாழ்வார், மெய்தளர்ந்து போனபின் நேராக அடையமுடியாத பதரிகாசிரமத்தையும், அதன் மகிமையையும், தாமனுபவித்ததுபோல், பிறரும் அடைய வேண்டுமென்று ஆண்ட எவ்வளவு உருக்கமாகப் பாடி இருக்கிறார்?

"முற்றமூத்துக் கோல்துணையா
முன்னடி நோக்கி வளைந்து
இற்றகால் போல் தள்ளி
மெள்ள இருந்தங் கிளையாமுன்
பெற்றதாய் போல்வந்த பேய்ச்சி
பெருமுலையூடு உயிரை
வற்ற வாங்கியுண்ட வாயான்
வதரி வணங்குதுமே."

இவ்வாறு பகவானுடைய ஞாபகங்களைத் தருகிற தீர்த்தங்களைக் கண்டவாறு அவருடைய திருவவதார லீலைகளை நினைத்துக் களித்து அனுபவிப்பது பக்தர்களுக்குரிய தன்மையே.

எவ்வளவு தூரம் தீர்த்த சேவையில் நம் நாட்டார் ஈடுபட்டிருக்கிறார்களென்பது ஒரு சிறு பழக்கத்தால் வெளியாகும். தீபாவளி தினம், உதயத்திற்கு முன்பே மங்கள ஸ்நானம் செய்வது மிகவும் புண்ணியத்தைத் தரும் கர்மமென்று நாம் நம்பி வருகிறோம். உதயமான பிறகு, நண்பர்கள் ஒருவர் ஒருவரைக் காணும் சமயம், "கங்கா ஸ்நானம் ஆய் விட்டதா?" என்று கேட்பது வழக்கம். அதாவது, தீபாவளி ஸ்நானத்தின் பெருமை கங்கையில் ஸ்நானம் செய்வதற்குச் சமம் என்பது கருத்து. அவ்விதமே, தீர்த்த யாத்திரையின் பெருமையைக் காண்பிக்கும்போது, அது பெரும் யாகத்திற்கு நிகரானதென்று சாஸ்திரங்கள் அழுத்தமாய்ச் சொல்லுகின்றன.

கர்ம பாசத்தினின்று விடுதலை பெறப் பல முறைகள் கூறப்பட்டிருக்கின்றன. ஞான மார்க்கம் முனிவர்களுக்கும், அவர் போல் மனப்பான்மை வாய்ந்தவர்களுக்குந்தான் கைகூடும். அரசர்களுக்கும், அந்தணர்களுக்கும், இல்லற வாழ்க்கை யுள்ளவருக்கும் தான் யாகங்கள் நடத்த அதிகாரம் சாஸ்திரங்கள் கொடுக்கின்றன. எவருக்கும் சுலபமாய்க் கிடைக்கக் கூடிய வழி, யாத்திரை வழிதான். தீர்த்த யாத்திரையில் எல்லோருக்கும் சமமான அதிகாரம் உண்டு. பயனும் சமமே. யாத்திரையில் தீண்டல் முதலிய நிர்ப்பந்தங்கள் இல்லை. தீவிர பக்தியோடும், நியமத்தோடும் யாத்திரையைத் தொடங்கினவன், தன்னெண்ணம் பூர்த்தியாகும் முன்பே பிராணனை விட்டாலும் அவனுக்குப் பூரண யாத்திரையின் குணம் கிடைக்குமென்று புராணங்கள் உறுதி மொழி கொடுக்கின்றன.

பூர்வ ஜன்மத்தில் சேர்த்துவைத்திருக்கிற கர்மமே நம்மை இவ்வாழ்க்கையிலும் நல்லதிற்கோ, கேடுக்கோ தொடருகின்றன என்கிற கொள்கை நம் நாட்டாரெல்லாரும் கொண்டிருக்கிறார்கள். யாகங்களாலும், அதற்குச் சமமான மற்ற கர்மங்களாலும், பூர்வ ஜன்ம பாவங்களைப் போக்கடிக்கலாமென்னும் நம்பிக்கை நம் மனதில் வேர் கொண்டிருக்கிறது. துயரங்களும், தீராத வியாதிகளும், பூர்வ ஜன்மத்தில் செய்த கேடுகளின் தொடர்ச்சியாம். இதுகொண்டே, கஷ்டங்கள் அனுபவிப்பவரையும் கடும் நோயால் துன்பப் படுபவர்களையும் இராமேசுவரத்திற்கோ, காசிக்கோ யாத்திரை செய்ய வேண்டுமென்று தூண்டுவதுண்டு.

நம் நாட்டுக்கு, யாத்திரையால் மற்றொரு பெரிய உபகாரம் ஏற்பட்டிருக்கிறது. ஒற்றுமையற்றுச் சிதறுண்ட நாட்டை ஒன்றுபடச் செய்யும் சக்தி க்ஷேத்திரங்களைத்தேடித் திரியும்பழக்கத்துக்குத்தான் உண்டு என்று சரித்திர போதகர்கள் ஹெல்லாஸ் (Hellas) நாட்டின் கதையைக் கொண்டு நிரூபணம் செய்வார்கள். நமது பாரத நாட்டிலும், அவ்விதமே அன்னியர் ஆட்சி பரவின காலங்களில் கூட, எல்லா ஜாதியாரையும் ஒரே கொள்கையின் பலத்தால் சேர்த்து, பாரதியார் பாடினபடி "ஒன்று பட்டாலுண்டு வாழ்வே" யென்ற கொள்கையை நிலை நிறுத்தி, 'அகண்ட ஹிந்துஸ்தானே' உஜ்ஜீவிப்பித்து வருவது பண்டைத் தீர்த்த யாத்திரைப் பழக்கமே.

● ● ●

எங்க ஆத்துக்காரருக்கு ரொம்ப ஞாபகமறதி. உடுப்பைக்
கழற்றாமலே ஸ்நானம் செய்வார். நல்ல மழையில் குடைக்குப்
பதிலாக தடியைப் பிடித்துக்கொண்டு வருவார்... கூஜாவைக்
கட்டி ரோடில் இழுத்துக்கொண்டு நாயைக்
கையில் தூக்கிக்கொண்டு வருவார்.......
ஆனால்.......

...ஆனால் அசோகா
பொட்டலம்
வாங்கிக்கொண்டு
வர ஒருநாளும்
மறக்கமாட்டார்.

அசோகா 1506

சாமா.



தயாரிப்பவர்
M.K. கிருஷ்ண செட்டியார்
கோயமுத்தூர்.




விளக்கு எரிவதை அப்படியே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறாளே! —யார் இவள்? அந்த விளக்கு இப்போது விளக்காக மட்டும் தோன்றவில்லை — என்ன விந்தை! — விளக்கு ஒரு தோழியாக மாறிவிட்டது. அந்த விளக்குத் தோழியிடம்தான் என்ன அன்பு! எவ்வளவு அனுதாபம்!

"ஐயோ, பாவம்! நீயும் என்னைப்போல் வெந்து கொண்டிருக்கிறாயே!" என்று பரிதவிக்கிறாள் அந்தப் பெண். தீயால் அந்த விளக்கு வெந்து கொண்டிருப்பது போல், ஆசைத் தீயால் இவளும் வெந்து கொண்டிருக்கிறாளாம். காதல் என்ற ஆசைத் தீயைத்தான் குறிப்பிடுகிறாள் காதலி.

தனிமையும் தானுமாக உருகிக் கொண்டிருந்தவளுக்கு ஒரு தோழி கிடைத்துவிட்டாள்! விரக தாபத்தால் தவித்துக் கொண்டிருக்கும் காதலிகளுக்குத் தோழிகளால் எப்போதும் ஆறுதல் அளிக்க முடியாது. தோழிகளின் பேச்சு வேதனையாகவே யிருக்கும். ஆனால் இந்த விளக்குத் தோழியோ, பேசித் தொல்லை தராததோடு, இவளோடு துக்கத்தையும் சமமாக அனுபவிக்கிறாளாம்.

அது எப்படி? தலைவியின் வாக்கு மூலமாகவே தெரிந்து கொள்ளலாம்:

தோந்தாராக் காதல்நோய்
மெல்லாவி உள்ளுலர்த்த,
நந்தா விளக்கமே!
நீயும் அளியத்தாய்:
செந்தா மரைத்தடங்கண்
செங்கனிவாய் எம்பெருமான்
அந்தாமத் தண்துழாய்
ஆசையால் வேவாயே?

[தோந்து ஆரா: தோந்தும் தீராத: மெல் ஆவி: மென்மையாக, அதாவது லேசாக, உடலோடு ஒட்டிக் கொண்டிருக்கும் உயிர்: உள் உலர்த்த: உள்ளே உலரச் செய்ய, அதாவது உள்ளுக்குள்ளே தவிக்கச் செய்ய: நந்தா விளக்கம்: வாடா விளக்கு; அளியத்தாய்: இரங்கத் தக்கவளாயிருக்கிறாய்; தடங்கண்: பெரிய கண்; அந்தாமம்: அழகிய மாலை; தண்துழாய்: குளிர்ந்த துளசி; வேவாயே: வேகிறாயோ?]

காதல்நோய் தன்னை எவ்வளவோ நோகச் செய்தும் தீர்ந்தபாடில்லையாம். உடம்போடு எவ்வளவு லேசாக ஒட்டிக்கொண்டிருக்கிறது காதலியின் உயிர்! அந்த உயிருக்கு உள்ளேயும், காதல் நோய் புகுந்து தவிக்கச் செய்கிறதாம். இவ்விதம் தன்னைத் தகிக்கும் காதல் நோய் தன்னுடைய விளக்குத் தோழியையும் பிடிக்கிறது என்று கருதுகிறாள் காதலி.

அந்தத் தோழியைத்தான் எவ்வளவு அருமையாக "நந்தா விளக்கமே!" (வாடாத மணி விளக்கே!) என்று அழைக்கிறாள்! அழைத்து, "நீயும் இரங்கத் தக்கவள்தான்!" என்று அனுதாபப்படுகிறாள். தன்னைப் போலவே "ஸம துக்கி"யாக வெந்து கொண்டிருக்கிறாளாம் விளக்குத் தோழியும். எனவே அந்த விளக்கை நோக்கி, "அம்மா, தீபமே! நீயும் அந்தக் கண்ணனின் பேச்சினிமையை நம்பிவிட்டாயா? அந்த மார்பை அலங்கரிக்கும் மாலைமீது ஆசைகொண்டு மோசம் போனாயா? அதனால் தான் நீயும் வெந்து கொண்டிருக்கிறாயா?" என்றெல்லாம் கேட்கிறாள்.

செந்தா மரைத்தடங்கண்
செங்கனிவாய் எம்பெருமான்
அந்தாமத் தண்துழாய்
ஆசையால் வேவாயே?

என்ற இந்தக் கேள்வியில்தான், காதலியின் இதயத்தை எவ்வளவு தெளிவாய்ப் பார்க்கிறோம்! அந்த அழகு வலையிலும் ஆசை வலையிலும் சிக்கிக்கொண்டு இந்த இதயம் எப்படித் துடிக்கிறது! உள்ளத்திலே கொழுந்து விட்டெரியும் காதல் தீயை அந்தத் தீபம் எவ்வளவு தெளிவாக ஜொலிக்கச் செய்து காட்டுகிறது!

இப்பொழுது தெரிந்து விடுகிறது காதலி கண்ணனுடைய காதலிதான் என்று. அப்படியானால் இந்தக் கோபிகை யார்? உண்மையில் இவள் கோபிகையில்லை; இவள் இருக்கும் இடமும் கோகுலமில்லை! செந்தமிழ் நாட்டில் உள்ள குருகூர் என்ற திருநகரிதான்.

இந்தக் காதலி வேறு யாரும் இல்லை: வகுள பூஷண நாயகி தான்! அப்படியானால் இவளும் பழைய கோபிகைகளைப் போல், அல்லது ஆண்டாளைப் போல், கண்ணனையே காதலனாக வரித்த ஒரு பெண்மணிதானா? அதுவும் இல்லை: இவள் ஸாக்ஷாத் நம்மாழ்வார் தான்! ஆழ்வார்களின் பக்திக் காதலே ஆச்சரியமானது: நாயக நாயகி பாவமான காதலின் ஸாரத்தையெல்லாம் அவர்களுடைய பக்திக் காதலில் காணலாம்.

நம்மாழ்வாரை வகுள பூஷண பாஸ்கரர் (அதாவது மகிழம்பூ மாலை யணிந்த ஞான சூரியன்) என்று சொல்லுவதுண்டு. அவர்தான், பாவனா சக்தியால் இப்படி ஒரு ஞானநாயகியாக மாறிப் பிறந்து, பகவான் மீது அளவு கடந்த பக்திக் காதலைச் செலுத்துகிறார்.

"தனிமையும் தானும் தோழி"யுமாக நம்மாழ்வார் காட்டிய இந்தக் காதல் வழி பக்தி வுலகிலே ஓர் உயர்ந்த ராஜ பாதையாக மதிக்கப் படுகிறது.



★

# காலக் கண்ணாடி

டெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையின் பிரசித்தி பெற்ற கார்ட்டூன்—சித்திரக்காரர் ஸ்ரீ சங்கர் இந்தக் காலக் கண்ணாடிக் காட்சிகளை கல்கி தீபாவளி மலருக்காகப் பிரத்தியேகமாக வரைந்துள்ளார்.

★

இந்தியாவைக் கொடிய பஞ்சம்
வியாபாரத்தில் கொள்ளை லாபத்துக்கு



வங்காளத்தில் ஒண்டவந்த ஒட்டகம் பஸ்லுல் ஹக்கை வெளியேற்றிற்று.

கவர்னர்

லீக் ஒட்டகம்

வங்காள மந்திரிசபை

...திலும் இங்கிலீஷ்
...றைவில்லை.

கட்சியில்லாத் தலைவர்கள் வழக்கம்போல்கூடி
கும்மியடித்து வருகிறார்கள்.







வங்காள நிர்வாக ஊழல்கள் மேலும்
மேலும் வெளியாகிவருகின்றன.

காந்திஜியின் உபவாசத்தின்போது அதிகாரவர்க்கத்தின் விறைப்பு அதிகமாயிற்று. மூன்று இந்திய அங்கத்தினர் மூட்டை கட்டினர்.

வைஸராய் லின்லித்கோ ஊருக்குக் கொண்டுபோகும் மூட்டையில் இந்தத் திவ்யபரிமள சாமான்களும் அடங்கியிருக்கும்.

...ட்டம் சமாதியில் ...தந்து கிடக்கிறது.

கிரிப்ஸ் திட்டம்












RAYAL TALKIE
DISTRIBUTORS
MADURA

# யாழும் குழலும்



பல்லடம்
சஞ்சீவி ராவ்



காரைக்குடி
சாம்பசிவ ஐயர்

## புதியதோர் முறுவல்

ஓதிமம் ஒதுங்கக்கண் ட
    உத்தமன் உழையளா கும்
சீதைதன் நடையைக்கண் டு
    சிறியதோர் முறுவல்செய் தான்:
மாதவள் தானும்ஆண் டு
    வந்துநீர் உண்டுமீ ளும்
போதகம் நடப்பநோக் கிப்
    புதியதோர் முறுவல்பூத் தாள்.

— கம்பர்

மணியம்.





பூகலூர்
கிருஷ்ணமூர்த்தி
சாஸ்திரி



திருப்பாம்புரம்
சாமிநாதபிள்ளை



கே. எஸ். நாராயண ஐயங்கார்

கல்கி
தீபாவளி மலர்
1943




# ஜகதலப்ரதாபன்

12 மந்திரி கதை

டைரக்ஷன்.. S.M. ஸ்ரீராமுலு நாயுடு

சின்னப்பா · ஸந்தானலக்ஷ்மி · ஸரோஜினி · ஜீவரத்தினம்

வரலக்ஷ்மி · கிருஷ்ணன் · மதுரம்




குழந்தை
தன் தோழனை
வுட்வர்ட்ஸ் கிரைப்
வாடரைத் தானகவே
தெரிந்து கொள்கிறது

# WOODWARD'S
## GRIPE WATER

***keeps baby well***

W. WOODWARD LTD. LONDON, ENGLAND

ஏஜண்டு :

டி. டி. கிருஷ்ணமாச்சாரி

12/A, லிங்க செட்டித் தெரு :: ஜி. டி., மதராஸ்

# சந்திரமதி

கே. சந்தானம்

"நாளைக்கு மெயிலில் வருகிறேன் — மோகன்."

இந்தத் தந்திக்காகச் சந்திரமதி ஒரு மாத காலம் காத்திருந்தாள். ஆனால் அதைக் கையில் வாங்கிப் படித்ததும் அவள் மனத்தில் பல உணர்ச்சிகள் பொங்கிக் கண்களில் நீர் சொரிய ஆரம்பித்தது. தன் அறைக்குள் போய்த் தாளிட்டுக் கொண்டாள். கட்டிலின்மேல் உட்கார்ந்து கண்ணாடியைப் பார்த்தாள். அம்மையைப் போல் கொடிய வியாதி இவ்வுலகில் இல்லை. மற்ற வியாதிகள் மனிதனைக் கொல்லும், அல்லது சில நாட்கள் வருத்திவிட்டுப் போய்விடும். ஆனால் பழைய அடையாளந் தெரியாமல் பயங்கரமாக உருவைக் கெடுத்து ஆயுள் முழுதும் அவமானப்படுத்துகிறது. பெரிய அம்மை. தன் தாயைப் பார்க்க ஒரு மாதம் முன் சந்திரமதி மதுரை நகர் சேர்ந்த பொழுது அவளுக்கு நிகரான அழகுள்ளவளைக் காண்பது துர்லபமென்று கூறுதல் மிகையாகாது. மெல்லிய கொடி போல், சந்திரன் போல். பார்த்தவர் கண்களைக் கவர்ந்தாள். வந்து மூன்று நாளைக்கெல்லாம் படுத்தாள். இருபது நாட்கள் பிழைப்பாளோ, பிழைக்க மாட்டாளோ வென்று சந்தேகமாக இருந்தது. முடிவில் பிழைத்தாள். ஆனால் படுக்கையில் படுத்த பெண்ணுக்கும் எழுந்த பெண்ணுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. முகம், உடல், கைகால்களெல்லாம் கோரமான புள்ளிகள். கண்களில் பார்வை கோணிவிட்டது. இதுவும் போதாதென்று உடலும் பருத்துவிட்டது. இதைக் கண்டு சந்திரமதியின் பெற்றோர்களே அருவருப்பை அடக்கிக் கொள்ளக் கஷ்டப்பட்டார்களென்றால் இம் மாற்றத்தை வர்ணிக்க வேண்டியதில்லை.

தன் அழகோடு தன் கணவனின் அன்பும் போய்விடுமா? இந்தக் கவலையே சந்திரமதியை இரவும் பகலும் கலக்கிற்று. அவள் தாயார் எவ்வளவோ ஆறுதல் சொல்லிப் பார்த்தாள். "பன்னிரண்டு வருஷம் கூட வசித்த பதிவிரதையின் தோற்றத்தைப் பிரதானமாகக் கருதுவாரா? உங்களன்பிற்கு ஆணி வேர் விழுந்திருக்கும்! கவலைப் படாதே, மகளே" என்றாள் அன்னை. ஆனால் தாயின் 'முகத்திலிருந்து அதை அவளே நம்பவில்லை யென்று சந்திரமதி கண்டாள். "நீகூட என்னிடத்தில் உண்மையை மறைக்க வேண்டுமா, அம்மா? உன் கழுத்திலிருக்கும் தங்கச் சங்கிலி திடீரென்று பித்தளையாக மாறிவிட்டால் அதைப் பழைய சினேகத்திலும் பிரியமுடன் அணிந்து கொள்வாயா? பெண்களாகப் பிறந்த நாமும் புருஷர்களுக்கு வெறும் அலங்காரங்களே அல்லவா! நான் செத்திருந்தால் எவ்வளவோ நலமாக இருக்கும். அவரை எப்படிப் பார்ப்பதென்று புரியவில்லை" என்று கண்ணீர் உகுத்தாள். தாய் ஒன்றும் பேசவில்லை. மோகன் அடிக்கடி நான் வருவதாக எழுதிய போதிலும் வரக்கூடாதென்று கண்டிப்பாய்ப் பதிலெழுதிவிட்டாள். அவனும் ஆபத்திற்கு ஆளாகக்கூடாதென்பது வெளி வியாஜம். சில நாளைக்குப் பின் தழும்புகள் மறையக்கூடாதா வென்ற ஆசையே அந்தரங்கக் காரணம். ஆனால் எதிர்பார்த்ததற்கு மாறாக அவளது பொன்னிறத்த மேனியில் தழும்புகள் நாளுக்கு நாள் கருத்து அவலக்ஷணத்தை விருத்தி செய்தன. இனிக் கஷ்டத்தை ஒத்தி வைக்கக் காரணமில்லை. வரலாமென்று எழுதினாள். மறு தினமே தந்தி வந்தது. அதைப் பார்த்ததும் இன்னும் இரண்டு வாரம் தள்ளிப் போட்டிருக்கலாமே என்று எண்ணினாள். புனர்ஜன்மம் எப்படியிருக்கு மென்பதை நேரில் அனுபவித்தாள். ஆனாலும், இப்படித்தானா புனர் ஜன்மம் எடுக்கவேண்டும்? பழைய பிறப்பில் செய்த தீமைகளின் பலனா இது? அல்லது ஈசுவரன் லீலையா? சென்ற வருஷம் எடுத்த அவள் படம் சுவரில் மாட்டியிருந்தது. அதைப் பார்த்தாள்; அப்படிச் செய்த ஈசுவரன்தான் இப்படியும் செய்து பார்க்க விரும்புகிறாரா? இதுவும் ஒரு லீலையாக இருக்குமாயின் அந்த ஈசுவரனிடம் அகோர குணமும் இருக்க வேண்டும். தன்னைவிடக் கடினமான சோதனை புருஷனுக்கன்றோ? இவ்வித மாற்றத்தைச் சகித்து முன்போல் பிரியமாக இருப்பதற்கும் அவன் தெய்வப் பிறவியாக இருக்க வேண்டுமல்லவா? — இவ்வாறு சிந்தித்துத் தூக்கமின்றி இரவைக் கழித்தாள்.

மோகன் சென்னையில் ஒரு தினசரிப் பத்திரிகையில் பிரதம நிருபர். உயர்ந்த கட்டமைந்த உடல். கம்பீரமான தோற்றம். நல்ல நிறம். வசீகரமான முகம்; கூரிய புத்தி. மாதம் ஐம்பது ரூபாய்க்கு வேலையமர்ந்தான். பத்து வருஷத்திற்குள் சென்னையில் தனக்கு மிஞ்சிய பத்திரிகை நிருபரில்லை என்ற பெயர் எடுத்து மாதம் முந்நூறு ரூபாய் சம்பாதித்தான். எப்பொழுதும் அவனை மோட்டார் சைக்கிள் மீதுதான் பார்க்கலாம். பெரிய ராஜீயத் தலைவர்களாக இருந்தாலும் சரி, புகழ் பெற்ற சினிமா நட்சத்திரங்களாக இருந்தாலும் சரி, அவனை எப்பொழுதும் பார்க்க மறுப்பதில்லை. எந்த சமாசாரத்தையும் முதலில் மோகன்தான் கொண்டு வருவான். எந்த முக்கியக் கூட்டத்திலும் கச்சேரியிலும் அவனை நிச்சயமாகப் பார்க்கலாம். தன் பத்திரிகாலயத்திற்கு அருகிலிருப்பதற்காகத் தம்புச் செட்டித் தெருவில் ஒரு வீட்டு மேல் மாடியின்மேல் குடியிருந்தான். அதிகக் குடும்பத் தொந்தரவில்லை. பரீட்சை முடிந்து வேலையாகும் பொழுது தாயார் ஒருத்தி மட்டும்தான் இருந்தாள். அவளையும் சந்திரமதியையும் தவிர வேறு பொறுப்பில்லை. மூவரும் நான்கு வருஷம் சந்தோஷமாகக் கழித்தனர்.

ஒரு நாள் சினிமா நேசர்களின் விருந்திற்கு மோகன் போயிருந்த போது கமலாக்ஷியைக் கண்டான். அடுத்த ஒரு மாதத்திற்குள் இருவரும் இணை பிரியாத காதலர்களாகி விட்டார்கள். தன் மனைவியிடம் மோகனுக்கு அன்பு குறைந்து விடவில்லை. வீட்டிற்கு வரும்பொழுது சந்திரமதியின் முகத்தைப் பார்த்து ஆனந்தம் உண்டாகும். அவளுக்குமுன் கமலாக்ஷிக்கு அழகேயில்லை

"பட்டு, இந்த நெய்யின் வாசனையையும், ருசியையும் பார்த்தாயா!"

"கிருஷ்ணா பிராண்ட்" என்றும் கேட்பானேன்? அதற்கு ஈடு வேறெதுவும் கிடையாது தான்!

TRADE MARK.

# கிருஷ்ண பிராண்ட் ஸ்பெஷல் வெண்ணெ & நெய் வியாபாரம்,

BLOCKS-EMPORIUM, COIMBATORE.

**A.N.A. நாயுடு பிரதர்ஸ் ~ கோயமுத்தூர்.**

மதராஸ் [illegible]: B. வெங்கடேஸ்வர ராவ், புரசவாக்கம் ஹைரோடு, மதராஸ்.

---

*your heart's desire*

Deepavali is all bright and every heart should wake up and lit

*THERE IS NOTHING LIKE A WRIST WATCH AS A PRESENT TO DO THE JOB — SOMETHING THAT IS ALWAYS REMEMBERED AND COVETED — AND A THING TO SET YOU ON TIME ALWAYS.*

FOR A FINE SELECTION OF GENTS AND LADY'S WRIST WATCHES, DON'T MISS

# CARAT WATCH Co

*Near NEW ELPHINSTONE — MOUNT ROAD — MADRAS.*

கொண்ட போதிலும் சந்திரமதிக்கு அந்தப் பார்வை இடி விழுந்தது போலிருந்தது. ஒரு க்ஷணத்திற்குள் மோகன் பிரக்ஞை பெற்றுச் சந்திரமதிக்கு ஆறுதல் சொல்ல ஆரம்பித்தான். தன் அன்பு என்னளவும் குறையாதென்று சபதம் செய்தான். அதைச் சந்திரமதி மௌனமாகக் காதால் கேட்டுக் கொண்டிருந்தாள். நம்பவில்லை; ஆனால் ஏதோ நல்ல வார்த்தையாவது சொல்லும் பொழுது தடுப்பானேன்? மோகன்மேல் குற்றமென்ன? விதி செய்த கொடுமைக்கு மற்றவர்மீது கோபித்து என்ன பயன்? தன் புருஷன் மனோபாவம் எப்படியிருந்தாலும் அவனுக்குப் பணிவிடை செய்து காலம் தள்ளுவதே கடமை என்று தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டாள் சந்திரமதி. ஆனால் உள்ளிருக்கும் புண் மட்டும் சிறிதும் ஓயாமல் குத்திக் கொண்டே யிருந்தது.

செடியின் வேரில் கரையான் விழுந்துவிட்டால் எவ்வளவு தண்ணீர் வார்த்தாலும் முளைகள் கருகிக் கொண்டே வரும். சந்திரமதியின் புதிய இல்லற வாழ்க்கையும் அவ்விதமே இருந்தது. வீட்டுக்காரியங்களை யெல்லாம் முன்னைவிடப் பதின் மடங்கு ஜாக்கிரதையாகச் செய்தாள். தன் புருஷன் முகத்தின் குறிகளைக் கவலையுடன் கவனித்தாள். அவனுக்குத் திருப்தி செய்ய வேண்டுமென்ற பேராவல் கொண்டாள். மோகனும் அவளிடம் அன்பு குறையவில்லை யென்று காண்பிக்க முயன்றான். ஓய்வு நேரத்தை யெல்லாம் வீட்டில் கழித்தான். மோட்டார் வண்டியில் சாயங்காலத்தில் கடற்கரைக்கும் சினிமாவுக்கும் அவளை அழைத்துப் போவான். தினம் ஒரு முறை வீட்டுச் செலவிற்குப் பணமிருக்கிறதாவென்று கேட்டு வேண்டிய பணத்தைக் கொடுத்தான். இருவரும் ஒருவரோடொருவர் பேசும் பொழுது முகத்தில் புன்சிரிப்பை வர வழைத்துக்கொண்டனர். பக்கத்து வீட்டார்கள் இவர்களின் அன்னியோன்னியத்தையும் சந்திரமதியின் விசாரத்தையும் கண்டு வியந்தனர். மோகன் ஒரு தெய்வப் பிறவியாக இருக்கவேண்டுமென்று நிர்மானித்தனர்.

ஆனால் கடமைக்காகக் காதலிப்பது கூலிக்காக மாரடிப்பதுபோலாகும். தம்பதிகளுக்கு நடுவில் தோன்றிய அகழி நாளுக்கு நாள் அகன்றுவந்தது. சந்திரமதிக்கு மோகன்மேல் ஓயாமல் சந்தேகம் உதித்துக்கொண்டே வந்தது. ஒரு நாள் சமையல் செய்துகொண்டிருக்கும் பொழுது மோகன் அறையில் வேலைக்காரியின் குரல் கேட்டது. அவளை அன்றே நிறுத்திவிட்டான். மோகன் தினம் காலையில் ஏழு மணிக்குத்தான் எழுந்திருப்பான். சந்திரமதி ஐந்து மணிக்கே எழுந்து அவன் சட்டைப் பையில் இருக்கும் கடிதங்களை யெல்லாம் எடுத்துப் பார்ப்பாள். ஒரு நாள் அதில் இரண்டு குழந்தைகளின் படம் இருந்தது. தனக்கு அப்படிக் குழந்தைகளிருந்தால் இந்த நிலைமையில் எவ்வளவு ஆறுதலா யிருக்கும் என்று நினைத்தாள். இக் குழந்தைகளின் படம் மோகன் சட்டைப்பையில் எப்படி வந்தது? அவனை நேரில் கேட்க மனம் வரவில்லை.

மோகன் தன் மேஜையிலுள்ள இரண்டு அறைகளையும் எப்பொழுதும் பூட்டிவைத்திருந்தான். சாவியையும் கூடவே கொண்டு போவான். ஒரு நாள் மறதியில் சாவிக் கொத்தை மேஜையின்மேல் வைத்து விட்டுப் போய்விட்டான். அறைகளைத் திறந்து சந்திரமதி பரிசோதிக்கலானாள். முதலில் செக் புஸ்தகத்தை எடுத்துப் பார்த்தாள். மாதா மாதம் ஒரு பெண்

## மரியாதைக்காரர் !



# கனவில் கண்டது!



"மோஹினி என்றால் நீ தான். ஆஹா! என்ன அழகு! என்ன அழகு! கருவண்டு போன்ற கூந்தல்! வில்லைப் போன்ற புருவம்! மீனைப் போன்ற விழிகள்! எள்ளுப்பூ போன்ற மூக்கு! கோவைப்பழம் மாதிரி உதடுகள்! கொடியைப் போன்ற உடம்பு!"




கணவன் வர்ணனை உருவத்தைக் கனவிலே கண்டால்.....




அலறி அடித்துக்கொண்டு எழுந்திருப்பதில் வியப்பு என்ன?
—சாமா—




"என்னைப் பிடிக்கவில்லை யென்றால் பிடிக்கவில்லை என்று சொல்லுங்களேன்! வண்டு, மீன் என்றெல்லாம் ஏன் கண்டதைச் சொல்லவேணும்? நான் அவ்வளவு கோரமாகவா இருக்கிறேன்?"

# சாம்பசிவத்தின் அதிசயம்

ஸ்ரீமதி கி. ஸரஸ்வதி அம்மாள்

மிராசுதார் சாம்பசிவம் புத்தகமும் கையுமாக உட்கார்ந்திருக்கும் கமலத்தைப் பார்த்தார். உடனே காலையில் அவர் பெண் தங்கம் சொன்ன வார்த்தைகள் நினைவிற்கு வந்து வேதனையைக் கொடுத்தன. "அப்பா, பேசாமல் இருக்கிறீர்களே! கமலத்திற்கு வரன் தேடவேண்டாமா? இந்த வருஷமும் கல்யாணம் பண்ணாவிட்டால் நன்றாயிருக்குமா?" என்றாள் கவலையுடன்.

கமலம் அவருடைய பேத்தி. நேற்றுத்தான் பிறந்தாள் போலிருக்கிறது. அதற்குள் பதினைந்து வருஷ காலம் ஓடிவிட்டது. அவள் நன்கு உயர்ந்து வளர்ந்திருந்தாள். அவளுக்குக் கணவன் தேடும் பொறுப்பு சாம்பசிவத்தின் பேரில் விழுந்தது. கமலத்தின் தந்தை இறந்து இப்பொழுது பத்து வருஷத்திற்கு மேலாகி விட்டது. ஒரே பெண் குழந்தையுடன் கைம் பெண்ணாகி வீடு வந்து விட்டாள், சாம்பசிவத்தின் பெண் தங்கம். அப்பொழுதிருந்து சாம்பசிவமும் வேறு மனிதராகி விட்டார். பெண்கள் கல்வியும், பெண்கள் சுதந்திரமுந்தான் அவர் முக்கிய லட்சியங்களாகி விட்டன.

தங்கத்தைச் சிறு வயதில் கல்யாணம் செய்ததில் அவருக்கோ அவர் பெண்ணுக்கோ சிறிதுகூடச் சுகமில்லை. "அப்பா, சாம்பசிவம்! கன்னிகாதானம் செய்து கொடு. பின்னே பிறக்கட்டும்" என்று அவரைச் சதா தொந்தரவு செய்து, பத்து வயதுச் சிறுமி தங்கத்துக்கு மணம் முடிக்கும்படி செய்து விட்டாள் அவரது தாய்.

அன்று ஆரம்பமான சம்பந்திச் சண்டை, தங்கம் கைம் பெண்ணாகி வீடு வந்த பிறகுதான் ஓய்ந்தது. சாம்பசிவம் ஒரு மிராசுதாரின் பிள்ளைக்குத்தான் பெண்ணைக் கொடுத்திருந்தார். அப்பொழுது பிள்ளைக்கு வயது பதினெட்டு. ஏதோ படித்துக் கொண்டிருந்தான். பார்ப்பதற்கு லக்ஷணமாயிருந்தான். இன்னும் என்ன வேண்டும்? கல்யாணமும் நிச்சயமாகிச் சுபமாக நடந்தேறிற்று. ஆனால் கல்யாணத்தின் பொழுதே சீர், செனத்தி, அவமரியாதை, மரியாதை என்பதாக மனஸ்தாபம் ஆரம்பமாயிற்று.

"இடக்கிறார்கள்; பெண்ணைக் கொடுத்து விட்டால் அடிமை என்பதாக எண்ணம் போலும்" என்று எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல் அலட்சியமாக இருந்தார் சாம்பசிவம். அவர் கொஞ்சம் சுயமரியாதையில் நம்பிக்கை உள்ளவர். "நம்மைத் தாழ்த்திக் கொண்டு பிறரை எதற்காகப் பிரமாதமாக உபசரிப்பது?" என்று நினைப்பவர். இவர் அலட்சியம் காரணமாகப் பிள்ளையின் தந்தைக்கும் கோபம் விருத்தியாயிற்று.

இரண்டு மூன்று வருஷம் கழித்துப் பெண்ணின் சாந்திக் கல்யாணத்தின் பொழுது அவர்கள் சச்சரவு உச்ச நிலையை அடைந்தது. நேருக்கு நேராகவே சம்பந்திகளுள் வார்த்தைகள் தடித்து விட்டன. "பெண்ணைப் பெற்றவனுக்கு இவ்வளவு அகம்பாவமா?" என்றார் பிள்ளையின் தந்தை. "பிள்ளையைப் பெற்றுவிட்டதனால் இவன் உயர்ந்து விட்டானா?" என்றார் சாம்பசிவம். சாம்பசிவத்தின் கர்வத்தை அடக்க ஒரு வழி கண்டுபிடித்தார் அவருடைய சம்பந்தி. சாந்திக் கல்யாணமாகி வீடு வந்த நாட்டுப் பெண்ணைத் திரும்பித் தந்தை வீட்டுக்கு அனுப்பவில்லை. "அப்பா! அவர்கள் குழந்தையை அனுப்பாமலே இருக்கிறார்களே?" என்று அவர் தாயார் அங்கலாய்த்தாள். "அம்மா, நீதானே பிள்ளைக்காகப் பெண்ணைத் தானம் செய்யச் சொன்னாய்? பிள்ளை பிறக்கா விட்டாலும் பெண்ணைத் தானம் செய்தாயிற்று. பிறகு என்ன!" என்பார்.

"ஐயோ! நான் அதற்காகவா சொன்னேன்? ரொம்ப அழகாயிருக்கு! ஏதாவது சமாதானம் சொல்லிக் குழந்தையை அழைத்து வாடாப்பா. என் கண்மணியைப் பாராமல் என்னால் இருக்க முடியவில்லை" என்று அவள் கண்ணீர் விட ஆரம்பித்தாள். "அம்மா, நல்ல வேலை செய்தாய். பதினாயிரக் கணக்கில் செலவு செய்து பெண்ணைக் கொடுத்துவிட்டு மறுபடியும் நம் வீட்டில் அழைத்துச் சோறு போடுவதா? நீ சொல்வது சரியாயில்லையே" என்று பேச்சை வேடிக்கையாகத் திருப்பி விடுவார் சாம்பசிவம். இப்படி அவர் சொன்னாரே தவிர, பெண்ணைக் காணாத துக்கம் அவர் உள்ளத்தில் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்தது.

பிறகு பிள்ளைப் பேறுக்குப் பெண் வந்ததுகூடப் பலபேர் மத்தியஸ்தத்திலும் சமாதானத்திலும் தான் நடந்தது. இவர்கள் உறவு முறை இந்நிலையில் இருக்கும் பொழுது பெண் புக்ககத்தில் சந்தோஷமாய் வாழ முடியுமா? அவளும் எவ்வளவோ சொற்களைக் கேட்டு மனம் புண்பட்டிருந்தாள். கணவனுடைய பலம் கொண்டு எதையும் லட்சியம் செய்யாமல் இருக்கும் காலம் வருவதற்குள் அவன் காலமாகி விட்டான். அவள் வாழ்வே முடிந்துவிட்டது.

இனிச் சம்பந்திகள் மனமொத்து இருக்க வேண்டிய அவசியம் இல்லாமலே போயிற்று. தம்முடைய துக்கத்தை விடச் சாம்பசிவத்தின் துக்கம் அதிகமென்று உணர்ந்த சம்பந்தி, சாம்பசிவம் விரும்பியபடியே தங்கத்துடன் குழந்தை கமலத்தையும் அவரிடம் ஒப்புவித்தார்.

ஆகையால் கமலத்திற்கு வரன் தேடும் விஷயத்தில் தம் மனம் போல் நடக்க முழு சுதந்திரமும் சாம்பசிவத்திற்கு இருந்தது. தங்கத்

தைக் கொடுத்ததுபோல் சொற்பப் படிப்புப் படித்துக் கொண்டு பெற்றோருக்கு அடங்கியிருக்கும் சிறு பையனுக்கு அவர் கமலத்தைக் கொடுக்க விரும்பவில்லை. நன்றாகப் படித்து உத்தியோக மேற்றுச் சுயமே புத்தி தெரிந்து நடக்கும் பிள்ளைக்குத்தான் கொடுக்க வேண்டும். மேலும் அவன் ஸ்திரீகளைச் சமமாகப் பாவித்து நடத்துபவனாகவும் இருக்கவேண்டும். இது நிச்சயம்—இவ்விதம் தமக்குள்ளே சங்கல்பம் செய்து கொண்டார் சாம்பசிவம்.

முதலிலிருந்தே இந்த எண்ணத்தோடு கிராமத்தை விட்டுத் திருச்சிக்கு வந்து குடித்தனம் நடத்தினார். பேத்தியைப் பள்ளிக்கூடத்தில் படிக்க வைத்தார். பெண்ணும் தனியே மனம் புழுங்காமல் இருக்க வேண்டி ஒரு உபாத்தியாயினியை நியமித்துக் கல்வி கற்பிக்கச் செய்தார். அவர் மனைவியின் காலம் முடிந்து விட்டது. பெண்ணின் வைதவ்யமே அவளுக்குத் தீராத வியாதியாக முடிந்தது. வயது சென்ற அவருடைய தாய் மட்டும் "அவள் போகணுமா, நான் இருக்கணுமா?" என்று சொல்லிக் கொண்டு கூடத்தில் விசுபலகையோடு பலகையாகக் கிடந்தாள். ஆனால் கிழவிக்குப் புத்தி மாறாட்டம் என்பது மட்டும் சிறிதும் இல்லை. "கமலத்துக்குக் கல்யாணம் பண்ணடா அப்பா" என்று அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொண்டே வந்தாள். "ஆரம்பித்து விட்டாயா, அம்மா? உன் விருப்பத்தின்படி முன்பு தங்கத்துக்குக் கல்யாணம் நடத்திச் சுகமடைந்தாய் விட்டது. போதும்" என்பார் சாம்பசிவம். "ஏதோ நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். அதற்கும் இதற்கும் என்ன?" என்று கிழவி சொல்வாள்.

## 2

இந்த வருஷம் கமலம் ஸ்கூல் பைனல் பரீட்சைக்குப் போகிறாள். வயது பதினைந்து நிரம்பி விட்டது. பார்வைக்குச் செழித்து வளர்ந்திருக்கும் கொடி போல் தளதளப்பாய் வளர்ந்திருக்கிறாள். இனி வரன் தேடவேண்டியதுதான் என்று சாம்பசிவம் நினைத்தார். அடிக்கடி அவர் பெண் தங்கம் அவருக்கு அதை நினைப்பு மூட்டத் தொடங்கினாள். கல்யாணமே இல்லாவிட்டால் என்ன என்று நினைக்குமளவுக்கு அவருக்கு அதில் வெறுப்பு ஏற்படவில்லை. நல்ல குடும்பங்களில் நன்கு படித்துப் புது நாகரிக எண்ணங்களுள்ள பிள்ளைகள் எவ்வளவோ பேர் இருப்பார்கள். "சிறிது பொறுத்திருந்தாவது அப்படிப்பட்ட பிள்ளையாண்டான் ஒருவனைத் தேடிப் பிடிக்க வேண்டும். அதுவரை இன்னும் ஒன்றிரண்டு வருஷம் கமலம் எப். ஏ., பி. ஏ., என்று படிக்கட்டுமே? அப்புறம் கல்யாணம் செய்து கொண்டாலென்ன?" என்று ஒவ்வொரு சமயம் உள்ளூற அவர் எண்ணுவதுண்டு. ஆனால், பெண் தங்கத்தைத் திருப்தி செய்ய அவர் கடமைப்பட்டிருக்கிறார். அவள் சிறிது காலமாகப் பெண் கல்யாணத்தைப் பற்றிக் கவலைப்படத் தொடங்கியிருந்தாள். "கணவன் இருந்தால் தந்தை தவலைத் தேட வேண்டியிருந்திருக்குமா?" என்று அவள் வருந்த இடம் கொடுக்கக் கூடாது என்ற தீர்மானத்துடன் வரன் தேடத் தொடங்கினார் சாம்பசிவம். அவர் அதிகம் தேடி அலைய வேண்டியிருக்கவில்லை. பட்டணத்தில்



தீபாவளி முதல் நாள் கமலமும், அவள் கணவனும் காரில் வந்து வீட்டு வாயிலில் இறங்குகிற தென்றால், அப்பொழுது அந்த வீடு என்னமா யிருந்திருக்கும்?



சேஷாத்திரி என்ற ஒரு வக்கீலுடைய மகன் மேல் நாடு சென்று கல்வி கற்று நாகபுரி காலேஜில் ஆங்கில ஆசிரியனாக இருந்தான். அவன் பெயர் வைத்தியநாதன். அதை அவன் எஸ். வி. நாதன் என்பதாகக் குறுக்கி வைத்துக் கொண்டிருந்தான். எல்லா விதத்திலும் அவன் தேவலை என்பதாகச் சாம்பசிவம் நினைத்தார். கல்யாணம் நிச்சயமாவதற்கு வேண்டிய பிரயத்தனங்களைச் செய்தார். எஸ். வி. நாதன் பெண் பார்க்க வந்தபோது அவன் நடை உடை யாவும் பெரும்பாலும் மேல் நாட்டைப் பின் பற்றினவையாக இருந்தன. தங்கம் மட்டும், "இவ்வளவு மேல் நாட்டு நாகரிகம் உள்ளவன் நம்மிடம் பெண் கொள்வானா? அப்படிச் செய்து கொண்டாலும் பிறகு சரிப்பட்டு வருமா?" என்று சந்தேகித்தாள். "இவன் நாகரிகமாகத்தான் இருக்கட்டுமே; கர்நாடகப் பேர்வழிக்குக் கல்யாணம் செய்து கொடுத்து என்ன சுகப்பட்டோம்?" என்றார் சாம்பசிவம்.

"என்னை மணப்பதில் உனக்கு விருப்பந்தானே?" என்று நாதன் கேட்டபொழுது கமலம் தனது பெரிய கருவிழிகளால் அவனை ஒரு பார்வை பார்த்துக் கண்களைத் தாழ்த்தித் தலையைக் குனிந்து கொண்டாள். அவ்வளவுதான். அதையே அவள் சம்மதத்தைத் தெரிவிக்கும் பதிலாகக்கொண்டு தனக்கும் விருப்பம் என்பதைத் தெரிவித்து விட்டான் நாதன். பிறகு, சாம்பசிவம் பெண்ணுடன் சேர்ந்து கமலத்தின் விருப்பத்தைத் தனியே விசாரித்த பொழுது, "உனக்கும் அம்மாவுக்கும் இஷ்டமானால் எனக்கும் இஷ்டந்தான்" என்று ஒரே வார்த்தையில் சொல்லி விட்டாள் அவள். அந்தப் பதிலிலுள்ள அடக்கமும் சமர்த்தும் சாம்பசிவத்தை உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கச் செய்தன. கமலத்துக்குத் தகுந்த கணவனாக அவன் இருக்க வேண்டுமே என்று அவர் பகவானைப் பிரார்த்தித்தார்.

**வ**க்கீல் சேஷாத்திரி பதினாயிரம் ரூபாய் வரதட்சிணை கேட்டது சாம்பசிவத்திற்கு ஆச்சரியத்தைக் கொடுக்கவில்லை; ஆனால் நாதன் அதை ஆட்சேபிக்காததுதான் ஏமாற்றத்தைக் கொடுத்தது. "தந்தை ஏதோ சீமைப் படிப்புக்குச் செலவு செய்த பணத்தை இந்தச் சாக்கில் வாங்கிவிட வேண்டுமென்று நினைக்கிறார்; ஆனால் இவ்வளவு படித்த மகனுமா அதை மறுத்துக் கூறாமலிருக்கிறான்? இவன் படித்த லட்சணம் இதுதானா?" என்று வியந்தார்.

ஆனால் அதற்காக இவ்வளவு தூரம் ஏற்பாடான கல்யாணம் நிற்குமா? யாவும் மேலே நடந்தது. வைதிகக் காரியம் ஒன்றிலும் தனக்கு நம்பிக்கையில்லை என்று நாதன் சொல்லி விட்டான். தாலி கட்டுவதே தவிர மற்ற வைதிகக் காரியங்கள் ஒன்றும் செய்யவில்லை. இது சாம்பசிவத்துக்குத் தம்மையே அவமதிப்பது போல் இருந்தது. அவர் அழைப்புக்காக வந்திருக்கும் அவ்வளவு பெரிய மனிதர்கள் முன்னிலையில் மாப்பிள்ளை விசித்திரமாக நடந்து கொண்டது அவருக்கு மிகுந்த வருத்தத்தையும் அவமானத்தையும் கொடுத்தது.

"தனக்கு நம்பிக்கையில்லாவிட்டாலும் வயதில் மூத்த நம்மையாவது கௌரவம் செய்தானா?" என்று வருத்தப்பட்டார். என்னவானாலென்ன? கல்யாணம் நடந்து விட்டது.

3

**கா**லேஜ் விடுமுறை கழிந்து நாதன் ஊருக்குப் புறப்படும்

பொழுது கமலத்தையும் உடன் அழைத்துப் போக வேண்டுமென்று சொன்னான். சாம்பசிவத்திற்கு இது பெரிய அதிர்ச்சியாக இருந்தது. "இன்னும் ஆறு மாதம் போகட்டுமே" என்றார். தங்கமோ, "அவள் குழந்தை. திடீரென்று அவ்வளவு தொலைவில் தனியே போய் எப்படி இருப்பாள்?" என்று கவலைப்படத் தொடங்கினாள். இதெல்லாம் மாப்பிள்ளையின் காதில் ஏறுவதாயில்லை. அவன் இருக்கும்பொழுது தனியேன்ன? கமலம் அவனோடு போவதையே விரும்புவதாகச் சொன்னான். அவள் விருப்பத்தை அவர்களைவிட அவன் நன்கு அறிந்திருந்தது போலிருந்தது அவன் பேச்சு. படித்தவனாயிற்றே, ஒன்றிரண்டு வருஷம் கமலம் காலேஜில் சேர்ந்து படிப்பதை ஆட்சேபிக்க மாட்டான் என்று அவர் நினைத்திருந்தார். அதொன்றும் அவசியமில்லையென்று மாப்பிள்ளை சொல்லி விட்டதன் பொருள் அவருக்கு விளங்கவேயில்லை.

புருஷனுடன் ஊருக்குப் புறப்படுமுன் கமலம் கண் கலக்கத்துடன் தாத்தாவை நமஸ்கரித்தாள். அவளுக்குச் சகல நன்மைகளையும் கொடுக்கும்படி பகவானைப் பிரார்த்திப்பது தவிர வேறொன்றும் சாம்பசிவம் செய்யக் கூடவில்லை. அவர் சொல்லுக்கு மதிப்பு இருந்தாலல்லவோ அவர் ஏதாவது நடத்த முடியும்? முன்பு பழைய நாகரிகத்தில் பெண்ணை இழந்தார். இப்பொழுது புது நாகரிகத்திலும் பேத்தியை இழக்க நேர்ந்துவிட்டது.

அந்தச் சம்பந்தத்தில் மாப்பிள்ளையின் தந்தையைக் குறை கூறினார். இப்பொழுது மாப்பிள்ளையேதான் அவரை அவமதிக்கிறான். பெரியவரான அவர் சொல்லுக்கு அற்ப வெளி மரியாதை காண்பிக்கக் கூட அவன் சிரமம் எடுத்துக் கொள்ளவில்லை. இதை நினைத்துப் பார்த்ததும் இன்னொரு எண்ணமும் திடீரென்று தோன்றி அவரைத் துடிக்க வைத்தது. "ஐயோ! இவன் கமலத்தை எவ்விதம் நடத்துவானோ? அவனது மேல் நாட்டுத் தோரணையில் கமலம் மனுஷியாகத் தோன்றப் போகிறாளா? நமக்குப் பிறகு தங்கத்தின் கதி என்ன? கமலத்தை விட்டால் தங்கத்துக்கு வேறு திக்கில்லையே? தந்தையாகிய நானே அவளுக்கு இரு முறையும் கெடுதல் செய்து விட்டேனே?" என்பதை நினைக்க நினைக்க அவருக்கு இராத் தூக்கமில்லாமல் போயிற்று. ஸ்திரீ சுதந்திரம் வேண்டுமென்றும் கல்யாணமே கூடாது போலும் என்று கருதினார்.

மாப்பிள்ளைக்கு இரண்டொரு கடிதங்கள் போட்டுப் பார்த்தார். அவன் அவைகளுக்கு உடனுக்குடன் பதில் போடாதது அவரிடத்தில் அவனுக்கு இருந்த மரியாதைக் குறைவையே பின்னும் எடுத்துக் காண்பித்தது. கமலத்திடமிருந்து அவ்வப்போது வந்த கடிதங்களிலிருந்து க்ஷேம சமாசாரம் கேட்டு ஒருவாறு ஆறுதல் அடைந்து வந்தார்கள்.

இருந்தாலும் சாம்பசிவம் முதலில் மாப்பிள்ளை, பிறகு மனைவி இவர்கள் இறந்தபொழுது இருந்ததை எல்லாம் விட மனம் குன்றி இருந்தார்.

"அப்பா, என்னால் உங்களுக்கு என்றும் கஷ்டமாய்ப் போய்விட்டது" என்று தங்கம் வருத்தத்துடன் ஒரு நாள் சொன்னாள். "அப்படி அல்ல அம்மா! நான்தான் உனக்குச் சத்ருவாகக் காரியம் செய்திருக்கிறேன்" என்று சாம்பசிவம் பதிலளித்தார்.

இதன் மத்தியில் தீபாவளிப் பண்டிகை வேறு நெருங்கிவிட்டது. "மாப்பிள்ளையும், கமலமும் வருவார்களா?" என்று கிழவி கேட்கத் தொடங்கிவிட்டாள். சாம்பசிவத்திற்கும் மாப்பிள்ளையை அழைக்க ஆசைதான். ஆனால் கடிதமெழுதி அவமானப்படுவதற்கு அவர் மனம் கூசிற்று. கடைசியாக அவர் போட்ட கடிதத்திற்கு அவன் பதிலே போடவில்லை. மேலும் தீபாவளிப் பண்டிகையில் அவனுக்கு நம்பிக்கை எங்கே இருக்கப் போகிறது? அவன்தான் மதப்பற்று இல்லாதவனாயிற்றே!

தந்தையின் மனோ நிலையைத் தங்கம் அறியாதவளல்ல. அவர் வாய் விட்டுச் சொல்லா விட்டாலும் அவள் ஊகித்துக் கொண்டாள். அவரை அனாவசியமாகப் புண்படுத்த அவள் விரும்பவில்லை. ஒரு புடவையும், வேஷ்டியும் வாங்கிப் பெண்ணுக்கு அனுப்பிவிட்டுப் பேசாமல் இருந்து விடுவோமென்பதாகத் தீர்மானித்துக்கொண்டாள். அதன்படியே செய்து, பின்வரும் கடிதத்தைப் பெண்ணுக்கு எழுதி அனுப்பி வைத்தாள்:

"குழந்தை! உன்னையும், உன் கணவனையும் இந்தத் தீபாவளியைச் சாக்கிட்டாவது பார்க்க வேண்டுமென்று எனக்கும் உன் தாத்தாவுக்கும் எவ்வளவோ ஆசையாயிருக்கிறது. பாட்டிக்குக் கூட சதா உன் ஸ்மரணைதான். ஆனால் எதற்கும் கொடுத்து வைத்தது தானே கிடைக்கும்? மாப்பிள்ளைக்குத் தீபாவளிப் பண்டிகையில் நம்பிக்கை இல்லை யென்பது தாத்தாவுக்குத் தெரியும். மாப்பிள்ளை தொந்தரவாக நினைப்பார் என்பதை உத்தேசித்து மரியாதைக்குக் கடிதம் போடக்கூட அவர் துணியவில்லை. அவர் ஆசீர்வாதத்தோடு இந்தப் புடவையையும் வேஷ்டியையும் பெற்றுக் கொள்!"

## 4

இந்த தீபாவளி ஒரு தடபுடலும் இல்லாமல் இருப்பதைப் பாட்டியும் அறியாமலில்லை. "ஏண்டி, தங்கம்! மாப்பிள்ளையும் கமலமும் வரப் போகிறதில்லையா? உங்க அப்பா போய் அழைத்து வரப்படாதோ?" என்று கேட்டுக் கொண்டிருந்தாள். "கிழவியால் சும்மா கிடக்க முடியாது. ஏதாவது நச்சரிப்பு" என்பதாக யாரும் அவளுக்குப் பதில் சொல்லுவாரில்லை.

தீபாவளி முதல் நாள் கமலமும், அவள் கணவனும் காரில் வந்து வீட்டு வாயிலில் இறங்கினார்களென்றால், அப்பொழுது அந்த வீடு என்னமா யிருந்திருக்கும்? "அம்மா!" என்று கூவிக் கமலம் தாயைக் கட்டியணைத்தாள். சாம்பசிவத்துக்கும் தங்கத்துக்கும் தங்கள் கண்களையே நம்ப முடியவில்லை. சிறிது நேரம் சென்றது சமாளித்துக் கொண்டு வந்தவர்களை வரவேற்பதற்கு. "ஸ்டேஷனுக்கு வரும்படி தந்தி கொடுத்தேனே, வரவில்லையா? முன்னாடி கடிதம் போட முடியவில்லை. வடக்கே தீபாவளி ரொம்ப முக்கியமான பண்டிகை. காலேஜ் ஒரு வாரத்திற்குச் சாத்தி விட்டார்கள்" என்றான் வைத்தியநாதன்.

"ஏதோ வந்தீர்களே, சந்தோஷம்" என்றார் சாம்பசிவம்.

உணர்ச்சி மேலிட்டால் அவரால் அதிகம் பேச முடியவில்லை.

கமலம் கணவன் முன்னிலையில் தாத்தாவிடமும், அம்மாவிடமும் மாறி மாறி வெகு கலகலப்பாய்ப் பேசி வீட்டிற்கே தனிச்சோபையையும் அழகையும் அளித்தாள். அது வரையும் சாவு வீடுபோல் ஓய்ந்து கிடந்த வீட்டில், ஆள் படைகள் உள்பட உற்சாகம் மேலிட்டு, கல்யாண வீட்டைப்போல் கலகலப்பு உண்டாகி விட்டது.

மறுநாள் காலை ஸ்நானம் முடிந்து கையோடு கொண்டுவந்த சேலையையும் வேஷ்டியையும் உடுத்துக் கொண்டு கமலமும் அவள் கணவனும் சாம்பசிவத்தை நமஸ்கரித்தார்கள். மாப்பிள்ளையிடத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல் அவரைப் பிரமிக்கச் செய்தது. "அப்பா! நீகூடக்

கங்கா ஸ்நானம் செய்தாயா?" என்று அவர் ஆச்சரியத்தோடு கேட்டார். "இல்லாவிட்டால் உங்கள் பேத்தி சும்மா விடுகிறாளா? என் சொல்படியெல்லாம் நடப்பதாகப் பாசாங்கு செய்து தன் இஷ்டப்படியே என்னை ஆட்டி வைக்கிறாள்!" என்றான் வைத்தியநாதன் மனைவியைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே. வாஸ்தவத்தில் அவனிடம் உண்டான மாறுதல் சாம்பசிவத்துக்கு ஆச்சர்யமாக இருந்தது. பெண்களுக்கு இவ்வளவு சக்தியா என்று அதிசயித்து அவர் தம் பேத்தியை உவகையுடன் பார்த்தார். "தாத்தா, அவர் வார்த்தையை நம்பாதே! அந்த ஊர்களில் இந்தப் பண்டிகை அவ்வளவு முக்கியம். தீபாவளி கொண்டாடாதவர்களை அவர்கள் இந்துக்களென்றே நினைப்பதில்லை. அவர்களது உத்வேகம் இவரையும் கொஞ்சம் பிடித்துக் கொண்டிருக்கிறது. அவ்வளவு தான்!" என்றாள் கமலம்.

சாம்பசிவம் தனியாகப் பேத்தியைக் கூப்பிட்டு "எப்பொழுது இப்படி இவன் மாறினான்; அம்மா! ஏதாவது மந்திரம் தந்திரம் கற்றுக் கொண்டு அவனை மயக்கி விட்டாயா? அவன் 'லாட்'டைத் தவிர்த்து வேஷ்டி கட்டுவானென்று நான் நினைக்கவேயில்லையே! கல்யாணத்தில் அவன் ஒரு மந்திரம் சொன்னானா? அம்மி மிதிப்பது, ஸப்தபதி ஒன்றுமே செய்யவில்லையே! அப்பொழுது இருந்ததற்கும் இப்பொழுது இருப்பதற்கும் எவ்வளவு வித்தியாசம்!" என்று கேட்டார். "என்ன தாத்தா, இதைப் போய்ப் பிரமாதப் படுத்துகிறாய்" என்றாள் கமலம் சாதாரணமாய்.

"கல்யாணத்தின்போது நாங்கள் சொன்னதை அவன் துளிக்கூட லக்ஷியம் செய்யவில்லையே! மனையை விட்டு எழுந்து விட்டானே! ஒரு அனாசாரப் பயலுக்குக் கொண்டு போய்க் கொடுத்து விட்டோமே என்று நான் வருந்தினது எனக்குத் தான் தெரியும்" என்றார்.

"விநாயக சதுர்த்தியின் போது பூஜைகூட அவரே செய்தாரே? எல்லாம் சொன்னால் தானே செய்வார்!" என்றாள் கமலம். மனைவி சொன்னால் கேளாத கணவன் இருக்கிறானா என்பது போலத் தொனித்தது அவள் பதில்.

இவ்வளவு வயது சென்ற தங்கள் வார்த்தைக்கு மதிப்பு வைக்காதவன் ஒரு சிறு பெண்ணின் சொற்படி நடப்பதென்பதை நினைக்க நினைக்கச் சாம்பசிவத்துக்கு அதிசயமாகவே யிருந்தது.

கமலம் தாயிடம் தனிமையில் "அம்மா, உன் கடிதம் பார்க்கவும் நீயும் தாத்தாவும் என் பிரிவாற்றாமையால் எவ்வளவு வருந்துகிறீர்களென்று தெரிய வந்தது. உடனே அவரிடம் பலவாறு எடுத்துச் சொல்லிப் புறப்பட்டு வந்தேன். உன் மாப்பிள்ளை புது நாகரிகத்தில் இருந்தாலும் வெகுநல்லவர். அம்மா, கவலைப்படாதே!" என்று சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டபோது சாம்பசிவத்தின் அதிசயம் பன்மடங்கு ஆயிற்று. அது வரையில் துக்க மயமாயிருந்தவர் இப்பொழுது அதிசய மயமாகி விட்டார்.

பாட்டியின் முக பாவத்திலும் இப்பொழுது சந்தோஷத்தின் அறிகுறிகள் தென்படுகின்றன. இனிமேல், தான் நிம்மதியாய்க் கண் மூடத் தயார் என்பது அதன் பொருள் போலும்.

• • •

# பாக்கிய சாலி

"விஸந்தன்"

வேதவல்லி ஜன்னல் வழியாகத் தெருவில் குழந்தைகள் விளையாடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவர்களின் மழலை மொழிகளும், 'கலீர்' 'கலீர்' என்ற சிரிப்பும் வேதவல்லியை மெய் மறக்கச்செய்தன. விளையாடும்பொழுது குழந்தைகள் முகத்தில் காணும் விஷமம், பரபரப்பு, கோபம் எல்லாவற்றையும் பார்த்து உள்ளம் பூரித்தாள்.

சட்டென்று அவளுக்கு ஒரு நினைவு வந்து வேதனையை உண்டாக்கிற்று. "ஐயோ! நமக்கும் ஒரு குழந்தை இல்லையே" என்ற வேதனையைத் தவிர அது வேறு எதுவாகத்தான் இருக்கும்? இந்த ஜன்மத்தில் அவளுக்குக் குழந்தைப் பேறு கிடையாதுதான்; இதை நினைக்க நினைக்க அவளுக்கு ஆறாத் துயரம் உண்டாயிற்று.

வேதவல்லிக்கு இருபத்தைந்து வயதுதான் இருக்கும். அவளது கணவன் ஆலையில் நூறு ரூபாய் சம்பளத்தில் ஒரு உத்தியோகம் பார்த்து வந்தான். அந்த மில்லில் வேலை நிறுத்தம், அடி தடி என்றெல்லாம் அமர்க்களம் நடந்தது. அதில் யாரோ சில காலிகள் தூண்டுதலின்பேரில் அவன் தலையைப் புடைக்கப்பட்டு, ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டான். தன் இளம் மனைவியை அனாதையாக விட்டு விட்டுத் துரதிருஷ்டவசமாக அவன் கண்ணை மூடிவிட்டான்.

உலகமே இன்பமயமாகத் தோன்றிய யௌவனப் பருவத்தில் வேதவல்லி வாழ்வை இழந்து விட்டாள்.

வேதவல்லியின் தாய் தகப்பன் இருவரும் அவளை எட்டிக் கூடப் பார்க்காததற்குத் தகுந்த காரணம் இருந்தது. "காதல் மணம்" என்று சொல்கிறார்களல்லவா, அப்படியே வேதவல்லியும் காதல் கல்யாணம் செய்துகொண்டாள். அவள் தாய் தகப்பன் அந்தக் கல்யாணத்தைத் தடுத்துப் பார்த்தும், பிடிவாதமாக அந்த வாலிபனையே கலியாணம் செய்து கொள்வேனென்று வேதம் சொல்லி விட்டாள். கல்யாணம் நடந்ததிலிருந்து அவளது தாய் தகப்பன் இருவரும் அவள் முகத்தில் விழிப்பதில்லை.

மில் சொந்தக்காரர்கள் புருஷனை இழந்த வேதவல்லிக்கு நஷ்ட ஈடாக ரூபாய் ஆறாயிரம் கொடுத்தார்கள். அதை வட்டிக்குப் போட்டு, அந்த வருமானத்தைக் கொண்டு காலம் தள்ளி வந்தாள்.

வேதவல்லிக்கு இப்போது 'குழந்தை இல்லையே!' என்ற குறைதான் பெருங் குறையாக இருந்தது. அவள் அன்பையும் ஆசையையும் காட்டுவதற்கு உலகில் யாருமே இல்லாதிருக்கும்போது ஒரு குழந்தையைக் கூடக் கொடுக்காமல் சதிசெய்த தெய்வத்தை நொந்தாள்.

வேதம் வாசலில் நின்று குழந்தைகள் விளையாடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தாளல்லவா? அப்பொழுது ஒரே ஒரு குழந்தை மட்டும் அவள் கவனத்தை முற்றிலும் கவர்ந்து கொண்டிருந்தான். அவன்தான் அடுத்த வீட்டுப் பையன். வயது ஐந்து இருக்கும். சியாமள வர்ணம். பெரிய அகலமான விழிகள். முகத்திலே நல்ல குறுகுறுப்பு.

கதவைப் பிடித்துக்கொண்டு ஆசை ததும்ப அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் வேதம். அவனைக் கட்டி அணைக்க அவள் கைகள் துடிப்பதுபோல் தோன்றியது. அந்த சமயத்தில் குழந்தை தற்செயலாக அவள் பக்கம் ஓடி வந்தான். வேதம் அவனைப் பிடித்து "ஆமாம், இப்படித் தெருவிலே விளையாடுகிறாயே? மோட்டார் கீட்டார் வந்து விட்டால் என்ன செய்கிறது?" என்று கேட்டு அவனைத் தழுவி முத்தம் கொடுத்தாள். எதிர்பாராத இந்த அன்புக்கு வசப்பட்ட குழந்தை அவள் முகத்தைக் கூர்ந்து கவனித்தான்.

"மோட்டார் வந்துவிட்டால் இப்பொழுது ஓடி வந்தது போல் இங்கே ஓடியே வந்துவிடுவேன்" என்று பதில் சொன்னான் குழந்தை.

வேதம் புன்னகை பூத்தாள்.

"உன் பெயர் என்ன?" என்று கேட்டு வாத்ஸல்யத்துடன் அவன் தலையை வருடினாள்.

"செல்வராஜு" என்று பதில் சொன்னான் குழந்தை.

அப்பொழுதிருந்து குழந்தையும் வேதமும் ஒன்றுபட்டு விட்டார்கள். நினைத்தால் குழந்தை ஓடி வந்து விடுவான் அடுத்த வீட்டுக்கு. செல்வராஜுவுக்குத் தாயார் இல்லை என்பது அவளுக்குத் தெரியும். தகப்பன் ஒரு நொண்டி; பரம ஏழை. ஆகையால் அவள் அந்தக் குழந்தைபேரில் பன்மடங்கு அன்பும் ஆதரவும் காட்டத் தொடங்கினாள். சற்று நேரம் அவனைக் காணாவிட்டால் வாசலில் நின்றுகொண்டு, "செல்வராஜு! செல்வராஜு!" என்று கூப்பிடுவாள்.

விநாயக சதுர்த்தி யன்று வேதம் கொழுக்கட்டை செய்து வைத்திருந்தாள். பூஜை முடிந்த பிறகு, குழந்தைக்குக் கொடுப்பதற்காக வாசலில் நின்றுகொண்டு கூப்பிட்டாள். குழந்தையைக் காணோம். குழந்தைக்குக் கொடுக்காமல் சாப்பிட அவளுக்கு மனம் வரவில்லை.

ஒரு தட்டில் பட்சணங்களை எடுத்து வைத்துக்கொண்டு அவள் முதன் முதலாக அடுத்த வீட்டுக்குப் போனாள். உள்ளே நடந்த சம்பாஷணையைக் கேட்டு மலைத்துப் போய் நின்றுவிட்டாள்.

"ஏண்டா ராஜு! அடுத்த வீட்டு அம்மாள் கூப்பிட்டால் எதற்கு 'விழுந்தேன், கெட்டேன்' என்று ஓடுகிறாய்? அங்கே உனக்கு என்ன வேலை?" என்று கேட்டுக் கொண்டிருந்தான் தகப்பன்.

"அப்பா! அந்த அம்மா ரொம்ப நல்லவள் அப்பா!" என்றான் குழந்தை.

"நல்லவளா? யாருடா நல்லவள்? அவள் ஏதாவது உனக்குக் கொடுக்கிறாளா?" என்று தகப்பன் விசாரித்தான்.

"என்னைக் கட்டிக்கொண்டு முத்தம் கொடுக்கிறாள், அப்பா! 'கண்ணே!' என்கிறாள்."

"ஓஹோ! இப்படியெல்லாம் செய்கிறாளா?" என்று வெறுப்புடன் கேட்டான் தகப்பன்.

"அப்பா! அந்த அம்மாளை எனக்குக் கூட அடிக்கடி பார்க்க வேண்டும் போலிருக்கிறது. ஏன், அப்பா! எனக்குத் தான் அம்மா இல்லையே, என் அம்மாவா இருக்கட்டுமே!" என்று கேட்டான் குழந்தை.

"சீ! அம்மாவும் ஆச்சு! ஆட்டுக் குட்டியும் ஆச்சு! இனிமேல் அடுத்த வீட்டுப் பக்கம் போ, சொல்கிறேன்" என்று கண்டித்து விட்டு, "இந்தச் சனியன் பிடித்தவள் எங்கே யிருந்து வந்து சேர்ந்தாள்? ஏதோ குழந்தையை வைத்துக்கொண்டு கடைசிக் காலத்தை நிம்மதியாக ஓட்டுவோ மென்றால் விடமாட்டாள் போலிருக்கிறதே" என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டு விட்டு வேதம் பிரமித்து நின்றாள். கொண்டு வந்த பட்சணத்தை எடுத்துக்கொண்டு அப்படியே வீட்டுக்குத் திரும்பி விட்டாள்.

"ஐயோ! குழந்தையிடம் ஆசை வைப்பது கூடப் பாவமா? நான் அவ்வளவு துர்ப்பாக்கியசாலி யாகிவிட்டேனா?" என்று மனம் நொந்தாள்.

தகப்பன் கோபம் குழந்தையின் அன்பை எப்படி அணை போட்டுத் தடுக்க முடியும்? செல்வராஜு மட்டும் வேதத்தின் வீட்டுக்கு வருவதை நிறுத்தவில்லை.

## 2

ஒருநாள் செல்வராஜு தெருவிலே விளையாடிக் கொண்டிருந்தான். தூரத்திலே 'பூம்' 'பூம்' என்று சத்தம் போட்டுக்கொண்டு ஒரு சாறுவ லாரி வந்தது. "அடே ராஜு! லாரி வருகிறது! ஓடி வா! சீக்கிரம்" என்று கூவினான் வாசலில் உட்கார்ந்திருந்த தகப்பன். அது குழந்தையின் காதில் விழவில்லை. சாறுவ மோட்டார் டிரைவர்களுக்கு, பகவான் பிடரியில் கண்ணை வைத்திருப்பதால் மோட்டார் குழந்தையின் அருகில் வந்துவிட்டது. "ஐயோ! குழந்தை! குழந்தை!" என்று கத்திக்கொண்டே தான் முடம் என்பதையும் மறந்து குழந்தையைக் காப்பாற்றத் தெருவில் ஓடினான் தகப்பன்.

'கிரீச்' என்று அலறிவிட்டு லாரி நின்றது. கையி லிருந்த பாத்திரத்தை அப்படியே போட்டுவிட்டு வேதம் வெளியில் ஓடி வந்து பார்த்தாள். செல்வராஜுவின் தகப்பன் மோட்டாருடன் மோதுண்டு உயிரற்றுக் கீழே விழுவதைப் பார்த்தாள். ஆனால் யாருக்காக அவன் தன் உயிரைத் தியாகம் செய்தானோ, யாருக்காக அவன் உயிர் வாழ்ந்து வந்தானோ, அந்தக் குழந்தை தெய்வாதீனமாக உயிர் தப்பியதையும் பார்த்தாள். தன் நிலைமை மறந்து தெருவில் ஓடினாள். "கண்ணே! பிழைத்தாயா?" என்று கூவிக் குழந்தையைக் கட்டிக் கொண்டாள்.

அந்த சம்பவத்தி லிருந்து செல்வராஜு வேதவல்லியின் குழந்தையாகி விட்டான். ஏற்கெனவே குழந்தையிடம் அவளுக்கு இருந்த அன்பு தகப்பனின் கோர மரணத்துக்குப் பிறகு பெரும் பாசமாக வளர்ந்தது. அவளது அன்பிலும் குழந்தையும் தந்தையின் நினைவைக்கூடக் கொஞ்சம் கொஞ்சமாக மறந்துவிட ஆரம்பித்தான்.

ஒரு நல்ல நாள் பார்த்து வேதவல்லி செல்வராஜுவைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினாள். பட்டுச் சட்டை போட்டுக் கொண்டு, கையில் பையுடன் பள்ளிக்கூடம் சென்ற செல்வ ராஜுவைப் பார்த்து வேதம் பெருமிதம் கொண்டாள். சாயங்காலம் ஆனதும், "எப்பொழுது குழந்தை வரும்?" என்று வாசலில் நின்று எதிர் பார்ப்பாள். ஆனால் அழுக்குச் சட்டையுடன் செல்வராஜு திரும்பி வருவான்.

"ராஜு! என் சட்டை யெல்லாம் அழுக்கா யிருக் கிறது?" என்பாள் வேதம்.

"எப்படியோ அழுக்குப்பட்டு விட்டது அம்மா" என் பான் குழந்தை.

"போனால் போகிறது" என்று பையனைத் தழுவி, சாப்பிட அழைத்துப் போவாள். குழந்தைக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதில் அவளுக்கு அபார ஆசை. ஆனால் குழந்தைக்கு என்னவோ படிப்பில் அவ்வளவு ஆசை உண் டாகவில்லை. பாடம் படிக்கும்போது திடீர் திடீர் என்று வெளியே ஓடிவிடுவான் ராஜு. "விளையாட்டுப் பிள்ளை தானே! அப்படித்தான் இருக்கும்" என்று எண்ணி வேதம் அவனைப் பிடித்துக்கொண்டு வந்து பாடம் சொல்லிக் கொடுப்பாள்.

மூன்று வருஷம் சென்றது. இப்பொழுது குழந்தைக்கு வயது பத்து. ஒரு நாள் வேதம் தெருவில் பள்ளிக் கூட உபாத்தியாயரைத் தற்செயலாய்ச் சந்தித்தாள். "குழந்தை நன்றாகப் படிக்கிறானா?" என்று அவரை விசாரித்தாள்.

"ஆமா! நீ வளர்க்கிறாயே அழகான பிள்ளை, அதைத் தானே கேட்கிறாய்! அந்த உருப்படாப் பிள்ளையைக் கட்டிக்கொண்டு ஏன் அம்மா அழுகிறாய்?" என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார் அவர்.

"அதென்ன ஐயா? யார் உருப்படாப் பிள்ளை? என் குழந்தையைப் பார்த்தா அப்படிச் சொல்கிறீர்கள்?" என்று கோபத்துடன் கேட்டாள் வேதம்.

"பள்ளிக்கூடத்துக்குப் போகிறேன் என்று உன்னை ஏமாற்றி விட்டு அவன் பையன்களுடன் கோலி விளையாடு கிறான் அம்மா! எங்கேயோ யாரோ குன்றிச் சண்டை





சொல்லிக் கொடுக்கிறானும். இவன் தினம் போய்த் தவறாமல் கற்றுக்கொண்டு வருகிறான். போதுமல்லவா உன் பையன் லட்சணம்?"

"குஸ்திச் சண்டை கற்றுக்கொள்கிறானா? என்ன வேடிக்கையாக இருக்கிறது?" என்று கேட்டாள் வேதம்.

"அவன் அப்பன் பயில்வானா யிருந்தானோ இல்லையோ? பயில்வான் மகன் குஸ்தி போடக் கற்றுக் கொள்ளாமல் வேறு வேலை செய்யக் கற்றுக் கொள்வானா?"

"அவன் அப்பன் பயில்வானா?"

"ஆமாம்; பயில்வான் பட்டணம் மாணிக்கம் என்றால் பிரசித்தமாயிற்றே! உனக்குத் தெரியாதா?"

"பயில்வான் என்கிறீர்களே. அவர் நொண்டியல்லவா?"

"பயில்வானாக இருந்தபடியால் தான் நொண்டியானான்; ஒரு குஸ்திச் சண்டையில் கால் எலும்பு முறிந்து நொண்டியாயிற்று. அப்பனுக்கும் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கிறது!" வேதத்தை என்னவோ செய்தது.

"பையன் அடிக்கிற கொட்டம் சகிக்கவில்லை. அம்மா! அவனை நீ வழிக்குக் கொண்டு வரா விட்டால் பள்ளிக்கூடத்தை விட்டுத் துரத்த வேண்டியதுதான்" என்றார் உபாத்தியாயர்.

வேதம் மனம் ஒடிந்து விட்டுத் திரும்பினாள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அழுக்குச் சட்டையுடன் உள்ளே வந்த குழந்தையை அவள் ஏறெடுத்தும் பார்க்கவில்லை. பையன், "அம்மா!" என்று கூப்பிட்டுக் கொண்டு அவள் அருகில் சென்றான். அவள் நிஷ்பிரமை பிடித்து உட்கார்ந்திருப்பதைக் கண்டு வியப்புடன் நின்றான்.

"அம்மா! என்ன இது? ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய்?"

அவள் பேசவில்லை.

"என்னோடு பேசமாட்டாயா?"

"மாட்டேன்."

"ஹோ" என்று பையன் அழ ஆரம்பித்தான்.

"அழு! நன்றாக அழு! ஒழுங்காகப் பள்ளிக்கூடம் போகிறவரையில் உன்னோடு நான் பேசமாட்டேன். காலிப் பையன்கள் சகவாசத்தை விடுகிற வரையில் நான் உன்னோடு பேசமாட்டேன்; அப்பன் மாதிரி குஸ்திச் சண்டை கற்றுக்கொள்கிறாயா, குஸ்திச் சண்டை? நீ என்ன செய்வாய், அப்பா! என் தலைவிதி!" என்று மனம் வெதும்பினாள் வேதம்.

பையன் அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டு, "அம்மா! இனி மேல் ஒழுங்காகப் பள்ளிக்கூடம் போகிறேன். இனி மேல் குஸ்திச் சண்டை கற்றுக் கொள்ளவில்லை, அம்மா!" என்று கதறினான்.

## 3

செல்வராஜு வளர் பிறைபோல் வளர்ந்து வாலிபனாகிக் கொண்டிருந்தான். அவன் முகத்திலே கவர்ச்சியையும் கண்களிலே ஜோதியையும் பார்க்கப் பார்க்க வேதத்தின் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கிற்று. இந்த சமயத்தில்தான் அந்தத் தெருவிலுள்ள ஒருவர் வேதத்திடம் வந்து ஒரு பொட்டணத்தைக் கொடுத்துப் பிரித்துப் பார்க்கச் சொன்னார்.

வேதம் அதில் மூன்று பற்கள் மட்டும் இருந்ததைக் கண்டு "இது என்ன?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை; இது என் மகன் பல். உன் செல்வக் குழந்தை இருக்கிறானே, அவன் என் மகன் முகத்தில் விட்ட குத்தில் பற்கள் மூன்றும் உதிர்ந்து விட்டன" என்றார்.

"ஐயோ! அவன் இப்பொழுது எங்கே?" என்று கேட்டாள் வேதம்.

"அதைத்தான் உன்னைக் கேட்கிறேன். இந்தப் பக்கம் தான் ஓடி வந்தான். இங்கேதான் இருப்பான். அவனை ஒளித்து வைத்துக்கொண்டு எங்கே என்று கேட்கிறாயா?"

"அவன் இங்கே வரவில்லையே!"

"ஓ! குழந்தை வளர்க்கிறாளாம் குழந்தை! நானாயிருந்தால் அந்தக் குழந்தையைக் கொன்று குழியை வெட்டிப் புதைத்து விடுவேன்."



"அடே, என்ன சொன்னாய்?" என்று அப்பொழுது அசரீரி வாக்குக் கேட்டது.

"பையன் அதோ இருக்கிறான் பார்!" என்று கத்தினார் வந்தவர்.

"ஆமாம்; வந்து விட்டேன். இன்னும் மூன்று பல்லை உதிர்த்து விட்டால் கணக்கு அரைட்டஜனாக இருக்கும்" என்று சொல்லி விட்டு ராஜு கைச்சட்டையை மடித்து விட்டுக் கொண்டு ஒரு ரூமிலிருந்து வெளியே வந்தான்.

அந்த மனிதர், "இரு! இரு! உன்னுடன் பேசிக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு அவசரமாக வெளியே போய்விட்டார்.

"எதற்காக அவர் குழந்தையைப் போய் அடித்தாய்?" என்று கேட்டாள் வேதம்.

ராஜு சிரித்தான்.

"குழந்தையா? இருபது வயதான தடிப்பயல் அம்மா! அவன் என்னைக் கேலி செய்தான். விட்டேன் ஒரு குத்து" என்றான். "ராஜு! கை நீட்டும் வழக்கத்தை நிறுத்தப் போகிறாயா இல்லையா?" என்றாள் வேதம் கவலைத் துடன். "யாராவது உதைத்தால்கூட நன்றாக அடி வாங்கிக்கொள்ள வேண்டும் என்கிறாய். பயந்தாங் கொள்ளியாக இருக்கவேண்டும் என்கிறாய். அதுதான் நான் இருக்க மாட்டேன்" என்று சொல்லிக் கொண்டே வெளியே போனான் ராஜு.

"போகாதேடா, வேண்டாம்! அவன் உன்னை வழியில் மறித்துக்கொண்டு அடிக்கப் போகிறான்!" என்று கெஞ்சினாள் வேதம்.

"அதைப்பார்த்தான் பார்க்கிறேன்" என்று சொல்லி விட்டுச் சிரித்துக்கொண்டே போனான் ராஜு.



வேதம் சிரிக்கவில்லை. அவள் முகம் மாறிற்று. அருகிலிருந்த ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தாள். இத்தனை நாளாய் அவள் மனதில் தோன்றிய சந்தேகம் வாஸ்தவமாகவே ஆகிவிடுமோ என்பதுதான் அவள் பயம். கொஞ்ச நாளாகவே, அடிதடி, குத்து வெட்டென்று பையன் ஆரம்பித்திருந்தான். கடைசியில் அப்பன் மாதிரியே அவனும் கையைக் காலை ஒடித்துக்கொண்டு வந்து சேருவானோ? "உருப்படாத பிள்ளையைக் கட்டிக்கொண்டு ஏன் அழுகிறாய்?" என்று எல்லோரும் சொல்லிருக்கவே, அவர்கள் சொல்வது கடைசியில் உண்மையாகி விடுமோ?

சட்டென்று தன் நிலைமை அப்பொழுது அவளுக்கு நினைவுவந்தது. 'குழந்தை, குழந்தை' என்று கையிலிருந்த பணம் மூக்கால் வாரி காலியாகிவிட்டது. பாக்கியும் செலவழிந்து விட்டால், அப்புறம் அவள் கதி என்ன?

சற்று நேரத்திற்கெல்லாம் ராஜு உள்ளே வந்ததும், வேதம், "அப்பா! இனிமேல் படிப்பை நிறுத்திவிட வேண்டும். ஏதாவது வேலையைத் தேடிக்கொள். கையில் இருந்த பணம் செலவழிந்து விட்டது. குடும்பம் நடத்துவதே கஷ்டமாயிருக்கிறது" என்றாள்.

ராஜு சாஷ்டாங்கமாகத் தாயை நமஸ்கரித்தான்.

"அம்மா, படிப்பை நிறுத்திவிடச் சொன்னதற்காக ரொம்பவும் சந்தோஷம்" என்றான்.

"அப்படியானாலும் நாளைக்கு என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டாள் வேதம்.

"ஏன்? வேலை சம்பாதித்துக் கொள்ளப் போகிறேன். இனி வேலையைப் பற்றிக் கவலைப் படாதே, அம்மா. நான் இருக்கும்போது உனக்கு என்ன குறைச்சல்?" என்றான் ராஜு.

அதைக் கேட்டபோது அந்தக் கோப சமயத்திலகூட வேதத்துக்குச் சிரிப்பு வந்தது. "சரி! பார்க்கலாம்" என்றாள்.

ஆமாம், அவள் பார்த்துக்கொண்டே தானிருந்தாள். வருஷங்களும் ஓடிக் கொண்டிருந்தன. ஆனால் பிள்ளையாண்டானுக்கு வேலை கிடைக்கிற



வழியாக இல்லை. வேதத்தின் கையிலிருந்த பணமெல்லாம் செலவழிந்து விட்டது.

“இன்னும் உனக்கு வேலை கிடைக்க வில்லையே? கையில் பணமும் இல்லை. இனி என்ன செய்கிறது?” என்றாள் வேதம்.

“கவலைப்படாதே அம்மா! நான் சம்பாதித்துக் கொண்டு வருகிறேன்” என்றான் ராஜு.

“அப்படித்தானே மூன்று வருஷமாகச் சொல்கிறாய்?” என்றாள் வேதம்.

அன்று இரவு செல்வராஜு வீட்டுக்குத் திரும்பிய போது தான் சொன்ன சொல்லைக் காப்பாற்றினான். ஒரு பத்து ரூபாய் நோட்டை வேதத்தின் கையில் கொடுத்தான். அவள் கண்களில் ஆனந்தம் தோன்றிற்று. “ஏது?” என்றாள்.

“குதிரைப் பந்தயத்தில் ஜெயித்தது அம்மா” என்று சந்தோஷத்தில் சிரித்துச் சொன்னான்.

வேதத்தின் வயிறு பகீரென்றது. நோட்டு அவள் கையினின்று நழுவிற்று.

“ஏன், அம்மா?” என்று கேட்டான் ராஜு.

“ஐயோ! குதிரைப் பந்தயத்துக்குப் போகாதே, வேண்டாம் என்று சிறு வயதிலே யிருந்து சொன்னேனே இல்லையோ? ‘படாத இடத்தில் பட்டுவிட்டால்’ நான் என்னடா செய்வேன்? இதைத் தவிர வேறு நல்ல வழியில் உன் புத்தி போகாதா?” என்றாள்.

பையன் கீழே விழுந்திருந்த நோட்டை எடுத்துத் தாயாரிடம் கொடுத்தான்.

“வீட்டில் அரிசி இல்லையே, ஏன் பணம் வேண்டாம் என்கிறாய்?”

“நீ இனிமேல் குதிரைப் பந்தயத்திற்குப் போவதில்லை என்று சத்தியம் செய்து கொடு. இல்லா விட்டால் நான் அதை விரலாலும் தொட மாட்டேன்” என்றாள்.

செல்வராஜு தாயாரின் முகத்தைப் பார்த்தான். முகத்தில் குடிகொண்டிருந்த உணர்ச்சியையும் தாபத்தையும் பார்த்தான்.

“அம்மா!” என்றான் செல்வராஜு.

“கடவுளறியச் சொல்கிறேன். இனிமேல் குதிரைப் பந்தயத்துக்குப் போகமாட்டேன். நீ பணத்தை இப்பொழுது எடுத்துக்கொள்” என்று கெஞ்சினான். வேதம் பெருமூச்சு விட்டு அதை எடுத்துக் கொண்டாள்.

“நீ உடனே எங்கேயாவது மாதச் சம்பளத்தில் ஒரு வேலை பார்த்துக்கொள்ள வேண்டும், தெரிந்ததா?” என்றாள்.

## 4

ஒரு வாரம் கழித்து செல்வராஜு ஒரு சந்தோஷச் செய்தி கொண்டு வந்தான். “அம்மா! எனக்கு வேலை கிடைத்து விட்டது. சம்பளம் நூறு ரூபாய்” என்றான்.

“என்னடா இது? கேலி செய்கிறாயா?” என்றாள் வேதம்.

“இல்லை, அம்மா. புதிதாக இந்த ஊருக்கு ஒரு சர்க்கஸ் கம்பெனி வந்திருக்கிறது. ‘பார்’ வேலை செய்து காண்பித்தேன். உடனே அவர்கள் ஆச்சரியப்பட்டுப்போய் என்னை வேலைக்கு எடுத்துக்கொண்டு விட்டார்கள்.”

வேதத்திற்குத் தூக்கிவாரிப் போட்டது.

“‘பார்’ வேலையா? அதுகூடக் கற்றுக்கொண்டிருக்கிறாயா? இரும்புக் கம்பியைப் பிடித்து ஆகாயத்தில் குட்டிக் கரணம் போடுகிற வேலை தானேடா அது? அதாவது கீழே விழுந்து பல்லை உடைத்துக்கொள்கிற வேலை.”

செல்வராஜு சிரித்தான்.

“நீதான் குதிரைப் பந்தயத்திற்குப் போக வேண்டாமென்று சத்தியம் செய்துகொடுக்கச் சொன்னாய். அதைத் தான் அப்படியே செய்து விட்டேனே! இனிமேல் உனக்கு என்ன குறை?”

வேதத்திற்குக் கோபம் பொங்கிற்று “போதுமடா, போதும். வேலை பார்க்கிறானாம் வேலை! கேட்டால் யாராவது சிரிக்கப்போகிறார்கள்” என்றாள்.

அந்த வேலையை விட்டு விடும்படி வேதம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ராஜு கேட்கிற வழியாயில்லை. “சந்தையிலே போய்க் கத்தரிக்காய் விற்கச் சொல்கிறாயா?” என்று கேட்டான். “ஐயோ! கரணம் தப்பினால் மரணம். அந்த வேலை வேண்டாம்?” என்றாள் வேதம்.

செல்வராஜு சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்த பிறகு அவனிடம் ஒருவித மாறுதலைக் கவனித்ததும் வேதத்தின் வயிற்றில் புளியைக் கரைத்தது போலிருந்தது. அவன் இப்பொழுதெல்லாம் வீட்டிலேயே தங்குவதில்லை. இரவெல்லாம் சர்க்கஸ் வேலை செய்துவிட்டுப் பகலெல்லாம் ஓய்வு இல்லாமல் எங்கே சுற்றுகிறான்? இது வேதத்துக்குப் புரியாத மர்மமாக இருந்தது.

இதே சமயத்தில் செல்வராஜுவைப் பற்றிய ரஸமான செய்திகள் அவள் காதில் விழ ஆரம்பித்தன. அவன் செய்யும் அற்புதமான வித்தைகளைப் பார்த்துப் பட்டணமே பிரமித்து விட்டதாம். அவன் வேலையைப் பார்ப்பதற்காகவே ஜனங்கள் வந்து கூடுகிறார்களாம்.

“அம்மா! உங்கள் பையன் செல்வராஜு செய்கிற வித்தையை வந்து பாருங்களேன்! ஒரு பனை மர உயரத்துக்கு மேலேயிருந்து தாவிக் கரணம் போட்டு நெஞ்சை வாருகிறார்” என்றாள் எதிர் வீட்டுப்பெண்.

இதைத் தவிர வேறொரு செய்தியும் அவள் காதில் விழுந்தது. அதாவது, செல்வராஜு சர்க்கஸில் கூத்தாடும் ஒரு பெண்ணைச் சுற்றிக்கொண்டு அலைவதாகவும் அவள் கேள்விப்பட்டாள். “நான் அப்பவே சொன்னேனே! கடைசிக் காலத்தில் உன்னைத் திண்டாடவிட்டு அவன் ஓடிப் போய் விடுவான் என்று. அந்தச் சிறுக்கி சர்க்கஸ்காரன் பெண்ணும். அவனும்தான் கூட்டம் கூடுகிறதென்று கண்டு கொண்டு பெண்ணைத் தூண்டிலாகப் போட்டு உன் மகனைப் பிடிக்கச் சொல்லியிருக்கிறான் அம்மா! அது இனி மேல் உன் பிள்ளை அல்ல. என்னத்துக்காக அசட்டு ஆசை வைத்துக்கொண்டு திண்டாடுகிறாய்?” என்று அவளுக்குத் தெரிந்த சிலர் இடித்துக் காட்டினார்கள்.

## 5

அன்று சாயங்காலம் செல்வராஜு வீட்டுக்கு வந்தான். தனியாக வரவில்லை; சர்க்கஸ்காரப் பெண்ணையும் அழைத்துக்கொண்டு வந்தான்.

“அம்மா, இவள்தான் மஞ்சுளா; சர்க்கஸ் எஜமானருடைய பெண். உன்னைப் பார்க்கவேண்டும் என்று

சொன்னாள். அதனால் அழைத்துக்கொண்டு வந்தேன்" என்றான்.

வேதத்தின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. "இவளை இங்கே அழைத்துவர இவனுக்கு இவ்வளவு ஆசையா?" என்று எண்ணினாள்.

"உனக்கு வெட்கமாக இல்லே, இவளை இங்கே அழைத்து வர?" என்று தன்னையும் மறந்து கேட்டுவிட்டாள் வேதம்.

உள்ளே வந்த இளம் பெண் தீயில் இட்டிருந்தது போலிருந்தது. வாய் பேசாமல் அவள் திரும்பி வெளியே சென்றாள்.

"மஞ்சுளா! மஞ்சுளா! நில்! போகாதே!" என்று சொல்லிக்கொண்டே அவளைப் பின்தொடர்ந்தான் செல்வராஜு.

அதற்குப் பிறகு செல்வராஜு அன்று இரவு வீட்டுக்குத் திரும்பவேயில்லை. அன்று இரவு வேதத்தின் மனம் பட்ட அவஸ்தை ஆண்டவனுக்குத்தான் தெரியும்.

மறு நாள் செல்வராஜு வீட்டுக்கு வந்தான். சாப்பிட்டான். வேறு என்னென்னவோ பேசிக்கொண்டிருந்தான். ஆனால் முதல் நாள் நடந்த சம்பவத்தைப்பற்றி ஒரு வார்த்தை வாயால் பேசவேயில்லை. வேதமும் அதைப்பற்றி வாயைத் திறக்கவில்லை.

செல்வராஜு வெளியே போனதும் வேதம் வாசற் பக்கம் வந்தாள். அங்கே கண்ட காட்சி அவளைத் திகைக்க வைத்தது. செல்வராஜுவின் பெரிய பெரிய படங்களை வண்டியில் வைத்துத் தட்டிக்கொண்டே போனார்கள். 'சர்க்கஸ் சாம்பியன் செல்வராஜுவின் பார் விளையாட்டை வந்து பாருங்கள்!' "மயிர்க் கூச்செறியும் வேடிக்கைகள்!" "50 அடி உயரத்துக்கு மேலே செல்வராஜு கரணம் போடுகிறார்!" என்றெல்லாம் அப் படங்களில் எழுதியிருந்தது.

வேதம் சிறிது நேரம் அதைப் பார்த்துக் கொண்டே நின்றாள். இதுவரை தோன்றாத ஒரு புதிய எண்ணம் திடீரென்று அவளுக்குத் தோன்றியது. "இரவு ஏன் சர்க்கஸுக்குப் போகக்கூடாது? அவன் என்னதான் செய்கிறான் பார்ப்போமே" என்று தீர்மானித்தாள்.

இரவு சர்க்கஸில் பதினாயிரக் கணக்கான ஜனங்கள் கூடியிருந்தார்கள். வேதம் ஒருவரும் அறியாமல் மெதுவாக ஸ்திரீகள் இருக்குமிடம் போய் காலரியில் உட்கார்ந்து கொண்டாள். சர்க்கஸ் ஆரம்பமாகி, என்னென்னவோ வேடிக்கைகள் நடந்தன. குதிரைகள், யானைகள், சிங்கங்கள் எல்லாம் வந்தன.

"செல்வராஜு! அதோ செல்வராஜு!" ஜனக் கூட்டத்தின் ஆரவாரத்தைக் கேட்டு வேதம் தலை நிமிர்ந்து பார்த்தாள். செல்வராஜு அழகான சர்க்கஸ் உடையணிந்து வந்தான். தங்க மெடல்கள் அவன் மார்பில் மின்னின. அவனுக்குப் பின்னால் மஞ்சுளாவும் ஓடி வந்து நின்றாள்.

செல்வராஜு செய்த 'பார்' வித்தைகளை யெல்லாம் பார்த்து ஜனங்கள் ஆரவாரம் செய்தார்கள். அளவில்லாமல் எழுந்த ஆரவாரத்தைக் கேட்டு வேதத்திற்கு மயிர்க்கூச் செறிந்தது.

செல்வராஜு 50 அடிக்கு மேலே இருந்த 'பாரி'ல் ஏறினான். அங்கே ஊஞ்சலாடிவிட்டு எதிர்த்தாற்போல் இருந்த மற்றொரு 'பாரு'க்குத் தாவினான். எல்லோரும் மூச்சை அடக்கிக்கொண்டு அக் காட்சியைப் பார்த்தார்கள். அதற்குப் பிறகு ஆகாயத்தில் மூன்று குட்டிக் கரணங்கள்



போட்டுக் கொண்டே தாவினான். "ஹா!" என்று ஜனங்கள் ஆர்ப்பரித்தார்கள்.

"அட பாவிகளா, என் குழந்தை என்ன பாவஞ்செய்தான்! கரணம் தப்பினால் மரணம் என்று இருப்பதைப் பார்த்து சந்தோஷப்படுகிறீர்கள்? நீங்கள் எல்லோரும் மனிதர்கள் தானா? உங்களுக்குக் குழந்தை குட்டிகள் இல்லையா?" என்று கத்திவிட வேண்டுமென்று நினைத்தாள் வேதம். ஆனால் பைத்தியம் பிடித்த ஜனங்கள், தன்னைப் பைத்தியம் என்று நினைக்கக் கூடுமோ என்ற உணர்ச்சியை அடக்கிக் கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தாள்.

அடுத்தாற்போல் அவள் ஒரு ஆச்சரியமான காட்சியைப் பார்த்தாள். அதைச் சாதாரண மனுஷன் செய்ய முடியாது. கந்தர்வ கின்னரர்கள் தான் செய்யலாம். அதாவது, ஆகாயத்திலுள்ள 'பார்'களுக்கு மத்தியில் செல்வராஜு மஞ்சுளாவையும் தூக்கிக்கொண்டு கரணம் போடவேண்டும்!

ஜனங்கள் வாயைப் பிளந்து கொண்டு மந்திரத்தால் கட்டுண்டவர்கள்போல உட்கார்ந்திருந்தார்கள். செல்வராஜு மஞ்சுளாவை அணைத்து, ஒரு 'பாரி'லிருந்து மின்னென்று ஆகாயத்தில் புறப்பட்டுவிட்டான். அவன் பாதி வழி வந்தானோ இல்லையோ, வேதம், "ஐயோ" என்று அலறி மூர்ச்சையாகிக் காலரியிலிருந்து கீழே விழுந்தாள்.

நல்ல வேளையாக, காரியத்தில் கண்ணாயிருந்த செல்வராஜுவின் காதில் அவளது தீனக் கதறல் விழவில்லை! சௌகரியமாக அவன் குட்டிக்கரணம் போட்டு வேலையை முடித்தான். கரகோஷம் வானைப் பிளந்தது. ஜனங்கள் காலரிகளில் எழுந்து நின்று தொண்டை கிழிய ஆரவாரித்தார்கள். அதே சமயத்தில் கீழே விழுந்த வேதத்தைச் சிகிச்சை செய்ய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனது யாருக்குத் தெரியப் போகிறது?

## 5

மறு நாள் காலை சர்க்கஸ் போட்டிருந்த இடத்தில் பரபரப்பான காரியம் ஒன்று நடந்துகொண்டிருந்தது. பெரிய பெரிய கூடாரங்களை யெல்லாம் அவிழ்த்து மூட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள். சர்க்கஸ் வேறு ஒரு ஊருக்குக் கிளம்பு வதற்கான ஆயத்தங்கள் ஜரூராக நடந்துகொண்டிருந்தன.

"அம்மாவைக் கூட்டிக்கொண்டு உடனே கிளம்பி விடு கிறேன்" என்று செல்வராஜு சர்க்கஸ் முதலாளியிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

"நானும் ஊருக்கு வரட்டுமா?" என்று கேட்டாள் மஞ்சுளா.

"வாயேன். அம்மாகூட உன்னைப் பார்க்கவேண்டும் என்று ஆசைப்படுகிறாள்" என்று செல்வராஜு சொல்லிச் சிரித்தான், போன தடவை நடந்ததை நினைத்துக்கொண்டு.

செல்வராஜு வீட்டிக்குச் சென்று வாசற்கதவை இடித்தான். கதவு திறக்கவில்லை. நிமிர்ந்து பார்த்ததும்தான் வீடு பூட்டப்பட்டிருந்தது தெரிந்தது.

அவனுக்குத் 'திக்' கென்றது. "அம்மா எங்கே? முந்தா நாள் நடந்த சம்பவத்தினால் மனம் சோர்ந்து எங்கே யாவது போய்விட்டாளா? ஐயோ, அம்மா எங்கே?" பைத்தியம் பிடித்தவன்போல் அவன் அங்குமிங்கும் ஓடினான். அக்கம்பக்கத்தில் தாயாரைப் பற்றி விசாரித்தான். ஒருவரும் தெரியாதென்று சொல்லிவிட்டார்கள்.

உடம்பில் ஒரு குண்டு ஊடுருவி மார்பில் பாய்ந்து விட்டது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. செயலற்று வாசற்படியில் உட்கார்ந்து விட்டான். எத்தனை நேரம் அப்படி உட்கார்ந்திருந்தானோ தெரியாது. "ஐயா! எஜமான் கூட்டிக்கிட்டு வரச் சொன்னாங்க!" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். அவன் சர்க்கஸ் முதலாளியின் ஆள் தான். "நான் சர்க்கஸிலிருந்து விலகி விட்டேன். எனக்கு அங்கே வேலையும் வேண்டாம், பெட்டியும் வேண்டாம் என்று சொல்" என்றான்.

"இல்லை. உங்களை......" என்று ஆரம்பித்தான் சேவகன். "போகிறாயா, இல்லையா?" என்று செல்வராஜு அதட்டினதும், அவன் ஒரு பர்லாங்கு தூரம் போய்த் திரும்பிப் பார்த்தான்.

பித்தம் பிடித்தவன் மாதிரி செல்வராஜு இரண்டு நாட்கள் அலைந்துகொண்டிருந்தான். கடையில் பழைய பத்திரிகை ஒன்றைப் புரட்டிப் பார்த்தபோது, யாரோ ஒரு கிழவி சர்க்கஸில் மூர்ச்சையாகி ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்ட விவரம் இருந்தது. சட்டென்று அவன் மனதில் சந்தேகம் தோன்றிற்று; ஓடினான் ஆஸ்பத்திரிக்கு.

தூரத்திலேயே, தலையில் கட்டுடன் ஆஸ்பத்திரியில் படுக்கையில் கிடந்த வேதத்தைப் பார்த்துவிட்டான். "அம்மா!" என்று கதறிக்கொண்டே அருகில் ஓடினான்.

"ராஜு! உயிர் தப்பிப் பிழைத்தாயா? பனை மர உயரத்தில் அப்படிக் கரணம் போட்டாயே, உனக்கு என்ன ஆபத்து வருமோ என்று எண்ணினேன். அப்போது எனக்கு நினைவு தவறிவிட்டது" என்றாள் வேதம் மெதுவாக.

"அம்மா! எவ்வளவோ சர்க்கஸ் வேலைகள் செய்கிறேன். எனக்கு ஆபத்து ஒன்றும் வரவில்லையே. அதைப் பார்த்துக் கொண்டிருந்த உனக்கு இப்படி ஆபத்து வந்ததே, நான் என்ன செய்வேன்!" என்றான் ராஜு.

வேதத்தின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

"பலமாக அடி பட்டதோ, அம்மா!"

"இல்லை, கண்ணே! அதிகமாக அடிபடவில்லை."

"அம்மா! கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன். இனி நான் சர்க்கஸுக்குப் போக மாட்டேன். இரண்டு நாளாகவே சர்க்கஸை விட்டு விட்டேன்; உலகத்தையே வெறுத்து விட்டேன்."

"உலகத்தை ஏன் வெறுத்தாய்?"

"நான் என்னென்னவோ நினைத்துவிட்டேன், அம்மா! நீ இல்லாத உலகம் எனக்கு என்னத்துக்கு என்று தோன்றி விட்டது. நீ இங்கே இருப்பது தெரிந்ததோ, நான் பிழைத்தேனோ?" என்றான்.

"அப்படி யெல்லாம் சொல்லாதே, ராஜு! பாவம், அந்தப் பெண்ணைத் தூக்கிக்கொண்டு தாவினாயே, அவள் உயிரோடு இருக்கிறாளா? ஐயோ, பாவம்! அந்தக் குழந்தையை நினைத்தாலே எனக்குப் பகீரென்கிறது" என்றாள் வேதம்.

"கவலைப்படாதீர்கள், அம்மா! நான் சௌக்கியமாக இருக்கிறேன்" என்ற குரல் கேட்டு இருவரும் திடுக் கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். மஞ்சுளா நின்று கொண்டிருந்தாள்.

"ஊருக்குப் புறப்பட்டுப் போகவில்லையா?" என்று கேட்டான் செல்வராஜு.

"அவர்கள் எல்லோரும் போய்விட்டார்கள். ஆனால் அவர்களோடு எனக்கு என்ன வேலை? நீங்கள் இல்லாத இடத்தில் நான் மட்டும் எதற்கு?" என்று அவள் மனம் கசிந்து சொன்னபோது, அவளுடைய கண்களில் நீர் துளித்தது.

"நான் சர்க்கஸிலிருந்து விலகிவிட்டேன். இனிமேல் வர மாட்டேன். என்னை அழைத்துக்கொண்டு போகும் ஆசையை விட்டுவிடு!" என்றான் செல்வராஜு.

"நீங்கள் சர்க்கஸிலிருந்து விலகியதும் நானும் விலகி விட்டேன். அப்பாவிடமும் சொல்லிவிட்டேன்!" என்றாள் மஞ்சுளா. வேதம் ஆச்சரியத்துடன் செல்வராஜுவையும் மஞ்சுளாவையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"இங்கே வா, அம்மா! உன் பெயர் என்ன?" என்று கேட்டு மஞ்சுளாவை வேதம் தன் அருகில் உட்காரச் சொன்னாள்.

* * *

இந்த சம்பவம் நடந்த சில நாட்களுக்கெல்லாம் வேதத்தின் வீட்டில் பெருத்த சண்டை நடந்து கொண்டிருந்தது. "உன்மாதிரி மருமகள் கிடைத்தாளே, நான் பாக்கியசாலி!" என்றாள் வேதம்.

"இல்லை. நான்தான் பாக்கியசாலி. தங்கள் மாதிரி மாமியார் எனக்குக் கிடைப்பார்களா?" என்றாள் மஞ்சுளா.

"என்ன வார்த்தை சொன்னாய்? ஏது வார்த்தை சொன்னாய்! பாக்கியசாலி யார் என்பதில் சந்தேகம் வேறேயா? பாக்கியசாலி நான்தான்" என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தான் செல்வராஜு.

• • •

# கல்லும் சொல்லாதோ கவி!

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

'மலைப் பளியர்' என்று ஒரு வகுப்பார் உண்டு. மலைகளிலே வசிப்பவர்கள் இவர்கள். காயும், கனியும், கிழங்கும் வேருமே இவர்களது ஆகாரம். மரப்பட்டைகளும் தழைகளுமே இவர்கள் ஆடைகள். எழுதவோ படிக்கவோ இவர்களுக்குத் தெரியாது. பேசுகிற பாஷையும் எல்லாம் 'சைகையே' பாஷையாகத்தானிருக்கும். பட்டண நாகரிகம் இன்னதென்று இவர்கள் அறிந்ததில்லை. நகரங்கள் — ஏன்? — கிராமங்களை அடுத்துக் கூட இவர்கள் வந்ததில்லை. ஏனைய உலக மக்களோடு அளவளாவ இவர்களுக்குச் சந்தர்ப்பமும் கிடைக்கிறதில்லை. இப்படி வாழ்ந்துவரும் 'மலைப் பளியர்' என்னும் வகுப்பினர் இன்னும் பொதிகை மலையில், பாண தீர்த்தத்திற்கும் அப்பாற்பட்ட இடங்களில் வசித்து வருகிறார்கள் என்று கேள்வி.

இவர்களிடையே நாகரிகத்தைப் பரப்பவும் இவர்களை மலைப் பளியர் நிலையிலிருந்து மனிதர் நிலைக்கு உயர்த்தவும் முனைந்து புறப்பட்டார் ஒருவர் பல வருஷங்களுக்கு முன்பு. உடன் புறப்பட்டாள் அவருடைய மனைவியும். இருவருமாகச் சென்று இவர்கள் இடையே குடியேறினார்கள். மலைப் பளியர்கள் முதலில் இவர்களை முறைத்து முறைத்துப் பார்த்தார்கள். பின்னும் கொஞ்சம் நெருங்கி வந்தார்கள். இவர்களும் அவர்களோடு அளவளாவி அவர்களை மனிதர்களாக்க முயன்றனர். மலைப் பளியரில் ஒருவன் புதிதாய்க் குடிபுகுந்தவரோடு நெருங்கிய நண்பனும் வாழ்ந்து வந்தான். எங்கு சென்றாலும் ஒன்றாகவே செல்வார்கள் இருவரும்.

ஒருநாள் இரண்டு பேரும் காட்டினுள் வெகுதூரம் சென்று விட்டார்கள். அங்கு பட்ட மரம் ஒன்றைக் கண்டார் அவர். அதை வெட்டி வீட்டிற்குக் கொண்டு வந்தால் நல்ல விறகாகுமே என்று நினைத்தார். கையிலோ கோடரியில்லை. வீடோ வெகு தூரத்தில் இருந்தது. 'வீட்டிலே போய்க் கோடரி வாங்கிவா' என்று பளியனிடம் சொன்னால் அவன் அதைத் தெரிந்து கொள்வதே கஷ்டம். அதைத் தன் மனைவியிடம் போய்த் தெரிவித்துக் கோடரி வாங்கி வருவான் என்று கருதவோ இடமில்லை. ஆதலால், அந்த இடத்தில் கிடந்த ஒரு கல்லையும் கரித் துண்டையும் எடுத்து, கரித்துண்டால் கல்லில் 'வருகிற பளியன் வசம் கோடரியைக் கொடுத்தனுப்பு' என்று எழுதி அதைப் பளியன் மூலம் தன் மனைவிக்கு அனுப்பி வைத்தார் அவர். மனைவியும் அவ்விதமே கோடரியைக் கொடுத்தனுப்பினாள்.

இதைப் பார்த்தான் பளியன். அவனுக்கு ஒரே ஆச்சரியமாய்ப் போய்விட்டது. காட்டி லிருந்த புருஷனுக்குக் கோடரி வேண்டுமென்று வீட்டி லிருந்த மனைவிக்கு எப்படித் தெரிந்தது? ஆம்: நாம் கொண்டு வந்து கொடுத்த கல்தான் பேசி இருக்க வேண்டும். அடடா! இவர் எப்பேர்ப்பட்ட மனிதர்? கல்லைப் பேசவைக்கும் கைகாரராயிருக்கிறாரே?" என்றெல்லாம் எண்ணினான். விஷயத்தை எப்படியோ மற்றப் பளியர்களிடமும் தெரிவித்து விட்டான். எல்லோரும் இந்த மனிதரைத் தெய்வமாகவே மதித்தனர். அவர் கருதி வந்த வேலையும் லேசாகக் கைகூடுவதாயிற்று.

இப்படித்தான் **கல்லானது மனிதனோடு முதல் முதல் பேசிற்று** என்று அறிகிறோம். இது கல்லின் கதையிலே ஒரு நிலை.

## 2

பண்டைத் தமிழ் நாட்டில் நடந்த போர்களுக்கும் குறைவில்லை. போர் வீரர்களுக்கும் குறைவில்லை. போரிலே வெற்றி பெற்ற அரசர்கள் தங்கள் தங்களுடைய வெற்றியைக் கல்லிலேதான் பொறித்து வைத்திருக்கிறார்கள். போரிலே காயம்பட்டுப் போர்க்களத்திலேயே மாண்டு மடிந்தவர்களுக்குக் கல்நட்டு வழி படுகின்ற வழக்கமும் தமிழ் நாட்டில் இருந்து வந்திருக்கிறது. '**கல் நின்றான்**' என்று சொன்னாலே, போரிலே மடிந்து வீர சொர்க்கம் எய்தினான் என்று தான் பொருள். தமிழ் நாட்டிலே கல் நின்றவர்கள் கதைகளோ எண்ணிறந்தவை.

இன்னும் வெற்றிச் சின்னங்களாக, கல் வெட்டுகளும், கல் தூண்களும், கல் சிலைகளும் தமிழ் நாடெங்கும் காணப்படுகின்றன. 'கங்கை கொண்ட சோழன் மகனாகிய விஜய ராஜேந்திர சோழன் மேலைச் சாளுக்கியரது நகரமாகிய கல்யாணபுரத்தை ஜயித்து அங்குள்ள துவாரபாலகர் சிலை ஒன்றைத் தன் ராஜதானித் தலைநகருக்குக் கொண்டு வந்தான்' என்று தாராசுரம் கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டு கூறுகிறது.

அந்தச் சிலையின் பீடத்தில், 'கல்யாணபுரம் எறிந்து உடையார் விஜய ராஜேந்திர சோழதேவர் கொண்டு வந்த துவாரபாலகர்' என்று பொறிக்கப் பட்டிருக்கிறது. சிலையோ பேரழகு வாய்ந்தது. கம்பீரமான தோற்ற முடையது. கைகளிலே திரிசூலமும் நாக சர்ப்பமும் காட்சி அளிக்கின்றன. நீண்டுயர்ந்த மகுடம் தலையை அலங்கரிக்கிறது; கண்களிலே உள்ள வீரத் திருவிழிப் பார்வையும், உதடுகளில் தவழும் புன்னகையும் அதை உயிரோவிய மாக்குகின்றன. இந்தச் சிலை தற்போது தாராசுரம் கோயிலில் இருந்து, தஞ்சைப் பெரிய கோயிலுக்குக் கொண்டுவரப்பெற்று அங்குள்ள சோழர் பொருட் காட்சி சாலையில் வைக்கப் பட்டிருக்கிறது. பக்கத்தில் காண்பது அச்சிலையின் உருவமே. இன்று, சோழ சாம்ராஜ்ய சரித்திரத்தின் ஒரு அழியாத ஞாபகச் சின்னம் அது.

ஆகவே கல் பேசுவதோடு மட்டும் நின்று விடவில்லை. **கல் கதையும் சொல்கிறது.** ஏன்? சரித்திரத்தையே உருவாக்கவும் செய்கின்றதல்லவா?

## 3

கல் பேசுவதைக் கேட்டோம். கல் கதை சொல்வதை அறிந்தோம். இன்னும் கல் சங்கீதம் பாடுகிறது என்பதை நீங்கள் அறிவீர்களா?

**மதுரை மீனாக்ஷி கோவிலின்** வெளிப் பிராகாரத்தைச் சுற்றி வரும்போது வடக்குக் கோபுர வாயிலின் கீழ்ப்பக்கம் பாருங்கள். ஒரு தூண் மொட்டையாக நிற்பதைக் காண்பீர்கள். அது ஒரே கல்லில் செதுக்கப்பட்டது. அதில் உள்ள சிறு தூண்களைக் கோல் கொண்டு தட்டினால் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு ஸ்வரம் எழுவதைக் கேட்கலாம். என்னவோ பீங்கான் கோப்பையில் தண்ணீரைக் குறைவாகவும் நிறைவாகவும் ஊற்றி அதில் ஜலதரங்கம் வாசிக்கிறார்களே, அந்த ஜலதரங்கம் இந்தக் கல்லிலே வாசிக்கும் **'கல் தரங்க'த்துக்கு** எம்மட்டு என்றுதான் தோன்றும்.

சங்கீத ஸ்தம்பம் மதுரையில் மட்டுமல்ல. **திருநெல்வேலி ஸ்ரீ நெல்லையப்பர் சந்நிதி** உள் பிராகாரத்திலும் பார்க்கலாம். சிறு தூண்களில் வேறு வேறு விதமான ஸ்வரம் உண்டாவதற்குச் சிற்பி இங்கு கையாண்டிருக்கும் முறையே அவன் கலை உணர்ச்சியைக் காட்டுகிறது. தூண்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சிறு அணில் ஏறிப் பாய்வதுபோல் செதுக்கப்பட்டுள்ளது. ஒரு தூணில் இருக்கும் அணிலை அடுத்த தூணில் உள்ள அணில் எட்டிப் பிடிக்க முயலுவது போல் இருக்கும். அணில் மரங்களில் தத்தித் தத்தித் திரியும் காட்சியைக் கல்லிலே பார்க்கலாம். அதே சமயத்தில் தூண்களில் நின்று எழும் ஸ்வரபேதங்களோ—சரியான கலைஞன் கையில்—உயர்ந்த சங்கீதத்தைப் பொழிந்து விடும். எப்படி இருக்கிறது, **கல்லைக் கனிவிக்கும் கலைஞன் வித்தை!**

° ° °

அற்புதங்களுக்கு நம் நாட்டில் குறைவில்லை. பாண்டி நாட்டில் தலைநகரான மதுரையம்பதியிலே பல நூற்றாண்டுகளுக்கு முன் நடந்த அற்புதங்கள் எத்தனை எத்தனையோ?

**அபிஷேக பாண்டியன்** மதுரையை ஆண்டு வந்த காலத்தே சிவபிரான் எல்லாம் வல்ல சித்தராக உருமாறி மதுரைநகர் வீதிகளிலே அங்குமிங்கும் உலாவினார். அவர் காட்டிய மாயாஜால வித்தைகளோ, தற்போது சினிமாவில் காட்டப்படும் ஜாலவித்தைகளையெல்லாம் தோற்கடிக்கக் கூடியவையாயிருந்தன. தூரத்திலிருக்கும் மலையைச் சமீபத்தில் வரப் பண்ணினார்; சமீபத்தில் உள்ளதைத் தூரப் போகச் சொன்னார்; கிழவனைக் குமரன் ஆக்கினார்; குமரனைக் கிழவன் ஆக்கினார்; ஆணைப் பெண்ணாக்கினார்; பெண்ணை ஆணாக்கினார்; இன்னும் என்ன என்னவோ செய்தார்.

இவருடைய சித்து விளையாட்டுகளைக் கேட்டு அறிந்த அபிஷேக பாண்டியன் அவரை நேரிலே காணப் புறப்பட்டு வந்தான். கோவிலின் வடமேற்கு மூலையிலிருந்த சித்தரை வந்து கண்டான். அப்போது ஒரு உழவன், கரும்பு என்று நினைக்கத்தக்கவண்ணம் செழித்து வளர்ந்திருந்த கரும்பொன்றைக் கையில் கொண்டு வந்தான். கோவில் தூணிலோ கல்யானை ஒன்று அழகாகச் செதுக்கப்பட்டிருந்தது. சித்தரைப் பரீட்சை பார்க்க எண்ணிய பாண்டியன், உழவன்





கையிலிருந்த கரும்பை வாங்கி, சித்தரைப் பார்த்து, 'இந்தக் கல்யானை இந்தக் கரும்பைத் தின்னுமா?' என்று ஏளனமாகக் கேட்டான்.

அவ்வளவுதான்; சித்தர் கல்யானையைக் கடைக்கண்ணால் பார்த்தார். உடனே கல்யானையும் உயிர் பெற்று எழுந்து மன்னன் கையிலிருந்த கரும்பைத் தன் துதிக்கையால் பிடித்து இழுத்துச் சுவைக்க ஆரம்பித்து விட்டது. அதோடு விட்டதா யானை? மன்னவன் மார்பில் கிடந்த மணி வாரத்தையும் எட்டிப் பறிக்கத் துணிந்து விட்டது! மன்னன் சித்தர் அடியினை வீழ்ந்து வணங்கித் துதித்தான். இது ஹாலாஸ்ய மகாத்மியத்தில் ஒரு கதை.

இந்தக் கல்யானை தின்னக் கரும்பீந்த கதையைப் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் புராணத்தில் அழகாக எடுத்துரைக்கிறார். 'கல்யானை கன்னற் கறிக்கின்றது காண்டி.' என்று எல்லாம் வல்ல ஆனந்த சித்தர் மன்னனை நோக்கிக் கூறிய உடனே

......... .........
......... கல்யானை
மடைக்கண் திறந்து,
மதம்மூன்றும் வழிய, விண்வாய்
அடைக்கும்படி வாய்திறந்து,
ஆர்த்து, புழைக்கை நீட்டி
தொடைக்குன்று அன்னான்
கைக்கழைத் தன்னைப் பறித்த'

காட்சியைக் கவிஞர் அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

எத்தனையோ ஆயிரம் வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவம் இது. கவியில் கூறினார் முனிவர். ஆனால் கற்றவரும் கல்லாதவரும்' கண்டு களிக்கும் வண்ணம் இதைக் கல்லில் செதுக்கினான் ஒரு சிற்பி.

இந்தக் காட்சியைக் காண விரும்பினால் நேரே மதுரைப் புது மண்டபத்திற்குப் போங்கள். கடைகள் எல்லாம் இருக்கும் வெளிப் பிராகாரத்தை விட்டு விட்டு, இரும்புக் கம்பி போட்டு பந்தோபஸ்து செய்திருக்கும் உள் கட்டிலேயே நுழையுங்கள். மேற்கு ஓரத்திலே கரும் கல்லிலே கட்டப்பட்டிருக்கும் வசந்த மண்டபத்தை ஒரு சுற்றுச் சுற்றுங்கள். வசந்த மண்டபத்துக்கும் மேற்கே உள்ள இரண்டு தூண்களில் தெற்குத் தூணைப் பாருங்கள். கல்யானை கரும்பு அருந்துவதைக் காண்பீர்கள்.

மதுரைக்குப் போக முடியாதவர்கள், பக்கத்தில் இருக்கும் படத்திலாவது அக் காட்சியைக் கண்டு மகிழுங்கள். சிலையில் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும் பாண்டியனைப் பார்க்கலாம். சாந்த ஸ்வரூபியாய் உலகத்தையே ஆட்டி வைக்கும் சித்தரைப் பார்க்கலாம். எல்லாவற்றிற்கும் மேலாகக் கல்யானை உயிர்பெற்று எழுந்து மன்னன் கையிலுள்ள கரும்பைப் பிடித்து இழுத்து முறித்துச் சுவைப்பதை நம் கண்ணாலே பார்க்கலாம். பரஞ்சோதி முனிவருடைய பாட்டிற்கு விளக்கம் அல்லவா பெறுகிறோம், இந்தக் கல்யானை கரும்பருந்தும் காட்சியிலே? ஆம், **கல் கவிதைதான் சொல்கிறது**, பண்டிதர்களும் பாமரர்களும் லேசாகத் தெரிந்து கொள்ளும்படி.

## 4

'கல்லின் கதைகள் எல்லாம் — இரு
காது குளிரக் கேட்பேன்
புல்லின் பேச்சை அறிவேன் — அதைப்
புராண மாக விரிப்பேன்'

என்று பாடினார் **கவிமணி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை**. ஆம், இன்று தமிழ் நாட்டில் நாம் காணும் கல் நம்மோடு பேசுகிறது; கதை சொல்கிறது; சித்திரம் எழுதுகிறது; ஏன்? சங்கீதம் கூடப் பாடுகிறது. எல்லாவற்றிற்கும் மேலாகக் கல்லைக் கனிவித்துக் கவிதையையே உருவாக்குகிறது. கல்லின் கதையை, கவிமணியுடன் நாமும் இரு காது குளிரக் கேட்கிறோம்.

'படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடிகமழ்பூந் தாமரைபோல் கையும் — துடி
[யிடையும்
அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும் சொல்லாதோ கவி'

என்று கவிச் சக்கரவர்த்தி கம்பர் சும்மாவா பாடினார்?

தேசங்கள் ஒன்றை யொன்று மென்
னியைப் பிடித்துக் கொண்டு
நிற்கும்போது நாடோடிகள்
சத்தியத்திற்காகவும் நேர்
மைக்காகவும் நியாயத்
திற்காகவும் சண்டை
போடுகிறார்கள்.



# 'ராம சாஸ்திரி'



என்ற நாடோடி
பீஷ்வாவின் சபையில்
நக்ஷத்திரமாக ஒளி வீசியவர்.
— நியாயத்திற்காகப் போராடு
கிறார். அவர் கதைதான் வெள்ளித்
திரைக்குக் கொண்டு வரப்படுகிறது.

டைரக்டர்கள்:

டாம்லே & ராஜா நேனே

★ இது ஒரு பிரபாத் படம் ★

வினியோகிப்பவர்கள்:

பேமஸ் பிக்சர்ஸ்

Grams: "FAMOUSFILM" ] பெங்களூர் ஸிடி. [ Phone: 2663

# வானொலி மண்டலம்

கல்கி
தீபாவளி மலர்
1943



வி.வி.சடகோபன்



ஸ்.கிருஷ்ணன்



வி.கிருஷ்ணன்



எஸ்.கே.சதாசிவம் பிள்ளை



எஸ்.கே.வெங்கட்டராமணன்



எம்.தியாகராஜன்

# வானொலி மண்டலம்

கல்கி தீபாவளி மலர் 1943















1. சிதம்பரம் ஜயராமன்
2. டி. கே. ஜயராமன்
3. வேலூர் சுப்ரமண்ய ஐயர்
4. எம். எஸ். ரங்கராஜன்
5. பாலமுரளி கிருஷ்ணன்
6. எஸ். சோமசுந்தரம்
7. வஜ்ரவேலு முதலியார்
8. டி. வி. நமச்சிவாயம்



# வானொலி மண்டலம்

கல்கி தீபாவளி மலர் 1943

















1. ஜி. ஏ. நடராஜன்
2. எம். கே. கோவிந்தராஜன்
3. கே. சி. தியாகராஜன்
4. சேலம் ஜி. தேசிகன்
5. பாலூர் கனகசபாபதி ஐயர்
6. டி. வி. சீனிவாஸாச்சாரி
7. பாலூர் வேங்கட்ராம ஐயர்
8. ஆர். எஸ். சீனிவாசன்

# வானொலி மண்டலம்





குள்ளக்குடி
வெங்கட்டராமய்யர்



கே.வி.கேசவ
பாகவதர்

டி.புட்டுசாமய்யா

என்.எஸ்.கிருஷ்ணசாமி
ஐயங்கார்

பி.எஸ்.வேதாசலம்

சி.எஸ்.ரத்தினசாமி



திருச்சி
டி.எஸ்.சாமிநாதய்யர்



# உங்கள் மனதிற்குகந்தது

டி லக்ஸ் டெனர் சிகரெட்டின் நறு மணத்தை நீங்கள் மிகவும் விரும்பு வீர்கள். உத்தரவாதமுள்ள 100% பொருக்கின வர்ஜீனியா புகை யிலைதான் டெனர் செய்ய உப யோகிக்கப்படுகிறது. இதுவே எல் லோரும் விரும்பி ரஸிப்பதற்கும், தொண்டைக்கு கெடுதல் செய்யா திருப்பதற்கும் காரணம். மனோ ரம்மியமான இந்த சிகரெட்டை வாங்கி உபயோகியுங்கள்

**டி லக்ஸ் டெனர் சிகரெட்ஸ்**
**ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்**

**tenor** is truly a de Luxe Cigarette

JAMES CARLTON LTD., LONDON. EASTERN LICENCEES. POST BOX NO. 9029, CALCUTTA



# ஜீவ கலை



"குகப்ரியை"

"அடே! ராசு! வருகிறாயா! போவோம்" என்று உரத்த குரலில் கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தான் சோமு. நான் அப்பொழுதுதான் சற்றே கண் அயர்ந்தேன். எங்கிருந்தோ சுற்றுவன் போல வந்து தொலைந்தானே என்று மனத்துள் சபித்துக் கொண்டே "எங்கே வருகிறது? என்னால் முடியாதடா, போ" என்றேன்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. காலை ஒன்பது மணிக்கு பஸ். தயாரா யிரு" என்று கூறிச் சென்றான்.

சோமு ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டால் அப்புறம் அவனிடமிருந்து தப்ப முடியாது. அவன் சொன்னபடியே மறுநாள் அவனுடன் கிளம்பினேன்: ஹொஸப் பேட்டையில் இறங்கி ஹம்பிக்கு ஜட்காவில் போய்ச் சேர்ந்தோம்.

பொதுவாக, ஹம்பியை இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். ஒன்று பாழடைந்த நகரம். மற்றொன்று கோயில்களால் நிறைந்த ஹம்பி கிராமம். பாறைகளின் இடையே 'ஹோ' வென்று பேரிரைச்சலுடன் கொதித்துச் செல்லும் துங்கபத்ரை காண்பவர்களின் மனதைக் குளிரச் செய்யும். பாறைகளில் மோதுவதனால் ஏற்படும் அந்த ஓசை இனிய நாதம்போல் அந்தக் கிராமம் முழுவதும் எதிரொலிக்கும். கண்ணுக்கெட்டிய வரையில் ஒரே பசுமை. எங்கே பார்த்தாலும் கரும்பு வயல்கள். கரும்பைக் காட்டிலும் இனிய துங்கபத்ரையின் கால்வாய்களைக் கண்டாலே களை தீரும்.

காலையிலிருந்து சுற்றிச் சுற்றிக் கால்வலி. வந்து சேரும்பொழுதே மணி பதினொன்று. "இன்று ஹம்பி கிராமத்தையும், நாளை பாழடைந்த நகரையும் பார்ப்போம்" என்று ஆனவரையில் சொல்லிப்பார்த்தேன். அவன் அவசரக் குடுக்கை. ஒரே நாளில் பார்த்து விடவேண்டுமென்று, இராணியின் ஸ்நான மண்டபம் தொடங்கி ஒன்று விடாமல் சுற்றியடித்தான். இரண்டரை மணிக்கு விருபாக்ஷீச்வரர் கோயிலுக்கு வந்து சேர்ந்தோம். யார் செய்த புண்ணியமோ, விருபாக்ஷீச்வரர் கொஞ்சம் பிரஸாதம் கொடுத்தார். ஆனால் பாதி சாப்பிடுவதற்குள் குரங்கு கொண்டு போய்விட்டது.

ஒரு பெரியவர் மூக்குக்கண்ணாடி, கடிகாரம், பொடிடப்பி, இவைகளை வைத்துவிட்டு நாராயணா வென்று கன்னத்தில் போட்டுக்கொண்டாராம். அவ்வளவுதான் ஒரு வானர வீரன் அவைகளைச் சொந்த உபயோகத்துக்கு எடுத்துப்போய் விட்டானாம். கிழவர் அழமாட்டாக் குறையாய் அவைகளை மறுபடியும் பெற முயற்சி செய்து கொண்டிருந்தார்.

நாங்கள் கொண்டு வந்திருந்த மூட்டை முடிச்சுகளைக் கோயில் திவான் வசம் ஒப்புவித்துவிட்டு, ஹேமகூடத்திலுள்ள கடலைக்கல் கணபதி, லக்ஷ்மீ நரஸிம்மர், கண்ணன் கோயில், மாதங்க பர்வதம், விட்டல் ஸ்வாமி கோயில் இவைகளைச் சுற்றிப்பார்க்கக் கிளம்பினோம். வழிகாட்டி, தனக்குத் தெரிந்த எல்லா பாஷைகளையும் கலந்து விவரித்துக் கொண்டே வந்தான்.

சோமு பழைய பெருச்சாளி. அவனுக்கு அங்கே உள்ள மூலை முடுக்குகள் ஒன்று விடாமல் தெரியும். குழந்தைப் பருவத்தில் எப்பொழுதோ வந்திருக்கிறானாம். ஆகவே, வழிகாட்டியைப் பேச வேண்டாமென்று நிறுத்திவிட்டு இவன் ஆரம்பித்துவிட்டான்.

• • •

கோதண்டராமன் சந்நிதி. விசாலமான துங்கபத்ரையின் கரை. அந்த இடத்திலே நதி வளைந்து மேற்கிலிருந்து வந்து தெற்கே திரும்புவதனால் ஏற்பட்ட பெரிய சுழல். அதற்கு "சக்கரதீர்த்தம்" என்று பெயர். ஆடிப்பெருக்கிலே சில சமயம் கோதண்டபாணியே மூழ்கி விடுவாராம்.

கோயிலை அடுத்த மணல்வெளியில் ஆனந்தமான காற்று. அஸ்தமிக்கும் தருணம்; செக்கர் வானம் விதம் விதமாக வர்ணம் தீட்டிக் கலந்துகொண்டிருந்தது. நண்பர்களின் கூட்டம். உற்சாகத்திற்குக் கேட்கவேணுமா? சோமு ஆனந்தமாய் "**காற்று வெளியிடைக் கண்ணம்மா**" என்று பாட ஆரம்பித்தான்.

"அடே! இப்படியே ஆடிப்பாடிக் கொண்டிருந்தால் விட்டல் ஸ்வாமி கோயிலுக்கு நேரமாகி விடாதா?" என்றான் கோபு.

"போவதற்குள் இருட்டிவிடும், பிறகு திரும்புவது கஷ்டமாயிருக்கும். இன்று இங்கேயே இருப்போம், நாளை போவோம்" என்றேன் நான்.

"இருட்டுமில்லை, பயமும் இல்லை. முன் நிலாக்காலம். என்னடா பயம்? போனால் போயிற்று" என்றான் சோமு.

கோபு என்னிடம் நெருங்கி "அச்சு பூச்சாண்டீ! புச்சக்கோ" என்று அழகு காட்டினான்.

திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டவன்போல "ஏன்டா ராசு! மதுரை ஆயிரக்கால் மண்டபம் பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

"ஆகா! பார்த்திருக்கிறேன்" என்றேன் நான்.

"நான் பார்த்ததில்லை" என்றான் கோபு.

"திடீரென்று இங்கிருந்து மதுரைக்கு எங்கே கிளம்பினாய்?"

"அங்கே விசுவநாத நாயக்கர் காலத்தில் வீரண்ணா என்று ஒரு சிற்பி இருந்தான். அவன்தான் அந்த ஆயிரக்கால் மண்டபத்தில் உள்ள முன் வரிசைத் தூண்களைச் செய்தவன். அதிலிருக்கிற சிலைகளைப் பார்க்கப் பதினாயிரங்கண் வேணும். ஓடி வந்து நிற்கும் மயிலின் தோற்றம், காளியின் கால் அடிகள்…………………" என்று சொல்லுகையில் கோபு இடைமறித்து, "நீ சொல்லுவது காலம் ஒவ்வாது போலிருக்கிறதே" என்று சந்தேகத்தோடு கேட்டான்.

"காலம்! உன்னைப்போல் சரித்திரக் கண்ணோடு பார்க்கிறவர்களுக்குத்தான் அந்தப் பிடுங்கல்கள். எங்களுக்கு அதெல்லா மில்லை. எந்தக் காலத்திலே யார் செய்திருந்தாலென்ன? நம் பேச்சு கிடக்கட்டும். சோமு ஏதோ சொல்ல வந்தானே, அது விட்டுப்போய் விடப்போகிறது" என்றேன்.

"வீரண்ணாவுக்கும் நம்பிக்கும் என்ன சம்பந்தம்?"

"சம்பந்த மில்லாமல் விஷயம் நினைவுக்கு வருமா? அவன் செய்த அற்புதச் சிலையின் ஞாபகம் வந்தது. கிருஷ்ண தேவ ராயர்......"

"இதோ பிரசங்கியார் விஷயத்தின் வாலைப் பிடித்து விட்டார். கேளுங்கள்" என்று கூவினான் கோபு.

• • •

கிருஷ்ண தேவராயர் காலம். ராயருடைய கலைத்திறனையும், ரஸிகத் தன்மையையும் நகைச் சுவையையும், நுண்ணறிவையும் வெளிநாட்டாரும் கண்டு புகழ்ந்தார்கள் என்பது சரித்திரப் பிரசித்தம். பெத்தண்ணா என்கிற கவிஞரை அரியணையில் அமர்த்திக் கால்களுக்குப் பொன் கழல் அணிவித்த பெருமை ராயருக்கே உரியது. அரசரும் தொழத் தக்கவர் கவிஞர் என்பது அவர் கொள்கை.

அந்தக் காலத்தில் சிற்பி வீரண்ணாவின் புகழ் இமயம் முதல் குமரி வரையில் பரவி இருந்தது. விஜயநகரத்திலுள்ள அற்புதமான சிற்பங்களைப் பார்க்கப் பாரசீகம், எகிப்து, சீனா, ஜப்பான் முதலிய நாடுகளிலிருந்தெல்லாம் கூட்டம் கூட்டமாய் யாத்ரீகர்கள் வந்து குவிந்தார்கள். ராயரது மனது எல்லையற்ற மகிழ்ச்சியிலும் பொங்கிக்கொண்டிருந்தது.

சிற்பியின் கைவன்மையையும், சங்கீதத்திலும் மற்ற கலைகளிலும் அவனுக்குள்ள திறமையையும் பற்றித் தனக்குத்தானே எண்ணிப் பூரிப்பார். திடீரென்று ஒரு நாள், விட்டல் ஸ்வாமி கோவிலும், அதையடுத்து ஒரு சங்கீத நடன மண்டபமும் அமைக்க வேண்டுமென்ற கட்டளை பிறந்தது. வீரண்ணாவுக்கு அழைப்பு. அவ்வளவுதான். திடீரென்று ஏககாலத்தில் நூற்றுக் கணக்கான உளிகளின் சத்தம் அந்த மலைப்பிரதேசம் முழுவதும் எதிரொலிக்க ஆரம்பித்தது.

இந்திர ஜாலத்தால் முளைத்து எழுந்ததோ என்று தோன்றும்படி அற்புதமான மண்டபங்கள் எழுந்தன. நூற்றுக்கணக்கான அழகிய தூண்கள்; தூண்கள்தோறும், யாளி, குதிரை, வீரர், தெய்வங்களின் சிலைகள்; எல்லாம் உயிர் பெற்று நிற்பவைபோல்தோன்றின.



பார்த்துப் பார்த்துப் பரவசமானார் ராயர்.

இந்தப் பல்வேறு வகையான மண்டபங்களுக்கு நடுவிலேதான் பெரியதும் அகன்றதுமான நடன மண்டபம். பக்கத்திற்குப் பதினாறு தூண்கள். வரிசைக்கும் ஒரே கல் விதானமான மேல் வளைவு. ஒவ்வொரு தூணிலும் சின்னஞ் சிறு தூண்கள் பன்னிரண்டு. ஒவ்வொரு தூணும் ஒவ்வொரு மேள கர்த்தா



ராகம் பேசும். சிறிய வெண்கலக் குச்சியினால் அவற்றைத் தட்டி, அழகிய வர்ணங்களை இசைத்து இசைத்துப் பரீட்சித்துக் கொண்டிருப்பான் வீரண்ணா.

ஆயிற்று. வேலைகள் ஒருவாறு முடிந்து விட்டன. ஒரு நல்ல நாளிலே அரசர் வந்து பார்வை யிடுவார். அதற்குள் ஒன்றும் குறையின்றி முடித்து விட வேண்டும் என்று ஒரு மனதாய் வேலை செய்து கொண்டிருந்தான். அவன் தூண்களைப் பரீட்சித்துக் கொண்டிருந்த சமயம். ஒரு தூணில், மோகன ராகத்தின் ஸ்வரங்கள் வெகு சுத்தமாய் அமைந்திருந்தன. அது அவனையும் அறியாமல் அமைந்து விட்டது. அதன் இனிமையிலே ஈடுபட்ட அவன் ஒரு அற்புதமான மோகன கீதத்தை இசைத்துக் கொண்டிருந்தான். அவன் கண்கள் மூடி யிருந்தன. ஒரு அற்புதமான சங்கதி கலகலவென்று விழுந்தது. தன்னையும் மறந்து, "பேஷ்! பேஷ்! சபாஷ்!" என்று ராயரின் குரல் போலக் கேட்டது. அவன் திகைத்தான். குரல் வந்த பக்கம் தாமாகவே அவன் கண்கள் திரும்பின. யாரோ ஒரு சாமானியன் போன்ற உடையில், இள முறுவலுடன் அவனையே பார்த்து நின்றார் ராயர்.

* * *

அன்று பூர்ணிமை. நடுநிசி. ஏனோ அவனுக்குத் தூக்கமே வரவில்லை. ஆனந்த மிகுதியினால் அவன் மனம் நிரம்பி அலை மோதிக் கொண்டிருந்தது. இந்த இன்ப நிலையில் தூக்கம் எப்படி வரும்? எழுந்தான். உட்கார்ந்தான்; மீண்டும் படுக்கையில் படுத்தான்; புரண்டான். ராயரது சொற்கள் புதிய உருவத்துடன் மீண்டும் மீண்டும் அவன் கண்களுக்கெதிரே எழுந்து நின்றன. அன்று நடந்த சம்பவங்களை நினைக்க நினைக்க அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. அவர் குறித்தபடி பொதுவாக ஒன்பது சிலைகள் செய்வதாய் ஒப்புக்கொண்டதும் நினைவுக்கு வந்தது. தன்னையும் மீறிக் கலகலவென்று சிரித்து விட்டான். அவன் தாய் அரைத் தூக்கத்தி லிருந்தபடியே "என்னடா அப்பா!" என்று மெலிந்த குரலில் கேட்ட வண்ணம் புரண்டு படுத்தாள்.

"ஆம்! ஒப்புக்கொண்டேன். கற்பனை தானாக எழ வேண்டுமேயன்றி வாவென்று அழைத்தால் வருமா? ராயர் சிறந்த மேதாவியாயிருந்தும் இது தெரியவில்லையே. இருக்கட்டும். அவர் கேட்ட கலாரூபங்களை எத்தனையோ இருப்பவைகளி லிருந்தே பொறுக்கி விடலாம். அன்று ராயர் மண்டபத்திலே மெய் மறந்து நின்ற பொழுது எப்படி இருந்திருப்பார்? அதைச் செதுக்கிப் பார்ப்போம்"—என்று எழுந்து விட்டான். கலைஞனுக்கு இரவேது, பகல் ஏது?

* * *

தசரா உற்சவத்தின் கடைசி நாள். மகா நவமி. ஊர் முழுவதும் ஒரே கோலாகலம். அரசர் புதிய மண்டபத்திலே விழாவைக் கொண்டாடப்போகிறார். இந்த வைபவத்தைக் காணப் பாரதநாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஜனங்கள் வந்து நிறைந்திருந்தார்கள். அதுமட்டுமல்ல. வெளி நாட்டிலிருந்து வரும் இராஜகுலப் பெண்களுக்கென்று ஒரு தனி மண்டபம் மறைவிலிருந்து பார்ப்பதற்கு அமைக்கப்பட்டிருந்தது. இவ்வளவு கோலாகலத்திற்குக் காரணம் அந்தப் புதிய மண்டபம் மட்டுமன்று. சிற்பி வீரண்ணா மிகவும் அற்புதமான சிலை ஒன்று செய்திருக்கிறான். சிலை, நடன மண்டபத்தில் அரசரது சிம்மாசனத்தின் அருகே வைக்கப்பட்டிருக்கிறது. கற்சிலைதான். அதில் அந்த அழகை எப்படித்தான் அமைத்தானோ! என்ன காம்பீர்யம்! முகத்திலே தான் என்ன பாவம்! அரசர் மெய் மறந்து இசை இன்பத்தைப் பருகுவது போல அமைந்திருந்தது. அந்தச் சிலைக் கண்களில் இன்ப வெறி. இதழ்க் கடையில் இளமுறுவல். பேஷ்! என்று சொல்வதற்கு உதடுகள் சற்றே குவிகின்றன போல் தோன்றியது.

ஆயிற்று! அரசர் கொலுவில் அமர்ந்து அந்த மகா சிற்பியைக் கௌரவிக்கப் போகிறார்! இரட்டைத் தோடாக்கள், இரட்டைச் சால்வைகள், வைரமும் கெம்பும் வைத்து இழைத்த ஒரு உளியும் கத்தியும். வீரண்ணாவின் தாய், அகத்திலும் முகத்திலும் மகிழ்ச்சி பொங்கத் தள்ளாடி நடந்து வந்து ஒரு புறம் உட்கார்ந்திருக்கிறாள். வீரண்ணா தன் தோழர்களுடன் வந்து விட்டான்! அரசர் வருவதற்குமுன் எல்லோரும் வந்து அமர்ந்துவிட வேண்டும். அவர் எழுந்த பிறகே மற்றவர்கள் எழவேண்டும்.

ஆகவே, கூட்டம் கூட்டமாய் ஜனங்கள் வந்து வந்து சாய்ந்தார்கள்.

இரவின் முதல் சாமம் தொடங்கிற்று. தீப வரிசைகள் ஜ்வலிக்க ஆரம்பித்தன. அரசர் இன்னும் வரக் காணோம். வந்தவர்கள் அமைதி இழந்தவர்களாய்ப் பேசத் தொடங்கினார்கள். ஒருவர் அந்த அற்புதமான சிலையைப் பார்த்து வியந்தவராய், "சிலையைத் தான் செதுக்கினான். அதில் பச்சை நரம்புகளை எப்படி அமைத்தான்?" என்றார். மற்றவர், "அது கற்களைத் தேர்ந்தெடுக்கும்போதே பச்சை ஓடிய கற்களாய்ப் பொறுக்கிச் செய்ய முடியும்" என்றார்.

இந்த சமயத்தில், "மகா ராஜாதி ராஜ ராஜ கம்பீர ராஜ மார்த்தாண்ட ஸ்ரீ புவனும்பா வித்யா சண்பதாள ஸ்ரீ கிருஷ்ணதேவராய பூபதிக்கு பராக்" — என்று கட்டியம் கூறியது அந்த சபா மண்டபம் முழுவதும் கிலே போடிற்று. மண்டபத்தில் ஊசி விழுந்தாலும் கேட்கக் கூடிய நிசப்தம். முதலில் கடவுள் வணக்கம் ஆயிற்று. மங்கள கீதம். அடுத்தபடியாக ராஜராஜ புவன மோகினியின் நடனம்.

புவனமோகினியின் கலா சௌந்தர்யமும் ரூப சௌந்தர்யமும் இவைகளுக்கெல்லாம் மேலாக அவளது குண சௌந்தர்யமும் விஜய நகர ராஜ்யத்தின் பெருமையையே ஒரு படி உயர்த்தி நின்றதென்று சொல்லலாம். கிருஷ்ண தேவ ராயரைத் தவிர மற்ற தனிகர்கள் எல்லாரும் அவளுடைய ஒரு கடைக் கண் பார்வைக்காகத் தங்கள் உடல் பொருள், ஆவி, எல்லாவற்றையும் துறக்கச் சித்தமா யிருந்தார்கள். ஆனால் அந்தப் பேதைப் பெண் அவர்களுள் ஒருவரையும் நிமிர்ந்து கூடப் பார்த்தவளல்ல. அவள் நெஞ்சத்தைக் கொள்ளை கொண்டவன் எளிய சிற்பி வீரண்ணா. அவனது நெஞ்சிலோ கலைவாணி ஒருத்திக்கே இடம். புவனமோகினி தன்னைக் காதலிக்கிறாளென்பது அவனுக்கே தெரியாது. செல்வத்திலே பிறந்து செல்வத்திலே வளர்ந்து புரளும் அவள், குடிசையிலே வாழும் தன்னை நேசிக்கக் கூடுமென்று அவனுக்குத் தோன்றவுமில்லை.

ஆட்டம் தொடங்கிய உடன் அவள் கண்கள் அவன் கூட்டத்தில் எந்த மூலையிலாவது இருக்கிறானோ வென்று துருவித் தேடும். அவனில்லாவிட்டால் அவளுக்கு ஏதோ குறைவாய்த் தோன்றும். அதையும் சேர்த்து, "பிரிவு" என்ற துறையில் பதங்கள் பாடும்பொழுது ஒரே சோக மயமாய், 'ஏக்கமாய்ப் பொழிந்து விடுவாள். உண்மை, நடிப்பை விட மேன்மையா யிருப்பது சகஜந்தானே!

வழக்கமாய்ப் பாடும் நட்டுவனுக்கு ஏதோ அசௌக்யமாம். வேறொருவன் நயமில்லை. வீரண்ணாவின் மேல் எழுந்த பொறாமைதான் காரணம். அவ்வளவு பெரிய ஊரில் வேறு ஒருவருமே கிடைக்கவில்லை. எங்கிருந்தோ ஒரு மகானுபாவனைப் பிடித்து வந்திருந்தான் அவன்.

முதலில் சின்னமேள வாசிப் போடு தொடக்கம். புவனமோகினி தன் இனிய குரலில் பாடத் தொடங்கினாளோ இல்லையோ சபை முழுவதும் ஒரே இன்பக் கடலுள் ஆழ்ந்தது. அவள் தன் தாமரை இதழ்க் கண்களால் சபை முழுவதும் ஒரு வீச வீசினாள். அவள் முகத்திலே ஒரு புதிய ஒளி.

"நம்மைத் தான் குறிப்பாய்த் தேடுகிறாளோ?" என்று ஒரு சிறு சந்தேகம் மின்னல்போல் அவன் மனத்துள் எழுந்து மறைந்தது. வைத்த கண் வாங்காமல் அவளையே விழுங்கி விடுபவன்போல் பார்த்தான் அவன். ஜல் ஜல், என்ற சதங்கைகளின் ஒலியும் மிருதங்கத்தின் ஒலியும் மிகவும் மெல்லியதாகிக் கொண்டே வருவதுபோலவும், அவளைத் தவிர மற்ற எல்லாப் பொருள்களும் மறைந்து அவள் ஒருத்தி மட்டுமே அந்த மண்டப முழுவதும் வியாபித்து நிற்பது போலவும் அவன் கண்களுக்குத் தோன்றிற்று.

புவனா ஆடிக் களைத்துப்போனாள். அரை மணி நேரத்துக்குள், அலாரிப்பு, ஜதிஸ்வரம், வர்ணம் பதம் எல்லாம் தானே பாடிக் கொண்டு ஆட வேணுமென்றால், களைக்காமல் என்ன செய்வாள்? பின்னால் நின்று கொண்டு இதுவரை பொறுத்திருந்த வடிவேல் நட்டுவனார் இதுதான் சமய மென்று "தாதித்தாம், தைதத்தாம்" என்று தமது கர்ண கொடூரமான குரலில் சுருதியிலும் சேராமல் கூச்சலிடத் தொடங்கினார். அப்போதுதான் அந்த அற்புதம் நிகழ்ந்தது! வீரண்ணா அமைத்த அந்தக் கிருஷ்ண தேவராயர் சிலை முகத்திலே வெறுப்புச் சொட்ட இரண்டு கைகளையும் தூக்கிக் காதைப் பொத்திக் கொண்டது. "ஐயோ!" என்று அலறி விட்டாள் அதுவரையில் அந்தச் சிலையையே பார்த்த வண்ணம் ஆடிய புவனா!

உயிர் பெற்ற அந்தச் சிலையைப் பார்த்து ஆச்சர்ய மிகுதியினால் திகைத்து விட்டார் ராயர்.

எங்கிருந்தோ ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து புவனாவைத் தூக்கினான் வீரண்ணா.

சபையில் ஒரே கலவரம். "அடாடா! ஆச்சர்யம்! ஆச்சர்யம்! அற்புதம்! அற்புதம்!" என்று நாற்புறமும் குரல்கள் எழுந்தன. ஒரு கண நேரம். அரசர் இருக்கிறார் என்பதையும் மறந்து, ஒரே 'கசமுச' வென்ற பேச்சு.

மண்டபத்திலே அமைதி நிலவ வெகு நேரமாயிற்று. புவனா மூர்ச்சையாகி அவன் மடிமீது கிடந்தாள். கவலைதோய்ந்த முகத்தோடு அவளையே பார்த்துக்

கொண்டிருந்தான் வீரண்ணா. ராயர் ஆசனத்திலிருந்து இறங்கினார். அவன் மெல்ல மெல்லக் கண்களை விழித்தான். ராயருக்குக் கூட்டில் உயிர் வந்தது. எதிர்பாராத இந்த அற்புதத்துக்கு அவனே பலியாகிவிடுவானோ என்ற பயம் அவர் முகத்திலே அதுவரையில் குடிகொண்டிருந்தது. தலையிலிருந்த பெரிய சுமை கீழே விழுந்ததும் "அப்பாடா" என்பதுபோல் ஒரு நெடிய பெருமூச்சுடன் அவர் வீரண்ணாவை நெருங்கினார். இன்ப மிகுதியிலும் துன்ப மிகுதியிலும் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பேதமுண்டா?

வீரண்ணா அப்பொழுதே உணர்வு வரப்பெற்றவன்போல் அவளைக் கீழே விடுத்து எழுந்திருக்க முயன்றான். புவனா நாணத்தோடு மெல்ல எழுந்து ஒதுங்கினாள். ராயரது ஆனந்தம் எல்லையைக் கடந்தது. இரு கரங்களையும் நீட்டி "அப்பா! வீரண்ணா! நீ வெற்றி. உயிர் பெற்ற உன் சிலையே அத்தாட்சி" என்று அவனைத் தழுவிக் கொண்டார்.

வீரண்ணாவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. திகைத்துப் போனான். அவர் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்வதா, அப்படியே இருப்பதா என்றே தெரியவில்லை. அவர் மிகவும் மெல்லிய குரலில் "வீரண்ணா! உனக்கு ஏற்ற பரிசு, கேவலம் நான் சொல்லும் புகழ் மொழிகளும் பொருள்களும் அல்ல. கலைவடிவாகிய புவன மோகினியையே உனக்கு அளித்தேன். அரசன் என்ற முறையில் அல்ல; அன்பின் பரிசாக அவளை உனக்கு அளிக்கின்றேன்!" என்றார்.

ஆச்சரியத்தினால் மலர்ந்த கண்களுடன் அவரை ஏறிட்டுப் பார்த்தாள் புவனமோகினி. நூற்றுக்கணக்கான கேள்விகள் அவள் நெஞ்சத்தே எழுந்தன. மனதி லடக்க முடியாத நன்றியறிதலோடு அவரை ஏறிட்டுப் பார்த்துக் கைகுவித்தாள்.

• • •

"எங்கே அந்தச் சிலை? எழுந்திரு. பார்ப்போம்" என்று துடித்தேன் நான்.

"அதோ தெரிகிறதே அதுதான்" என்றான் சோமு.

எழுந்து அருகே சென்றோம். அங்கே நாங்கள் கண்டதென்ன? ஒரு உடைந்த சிலையின் வீரக்கழல் அணிந்த இரு பாதங்கள்மட்டும் தான். "சிலை?" என்று மேலே கேட்கத் தயங்கினான் கோபு.

"கால வெள்ளத்தை எதிர்க்க முடியவில்லை" என்று விஷமச் சிரிப்புடன் சொன்னான் சோமு.

## திவான்பகதூர் ஆபீஸ் போகிறார்!



சொந்த மோட்டாருக்கும் பெட்ரோல் இல்லை.



கார் பஸ்ஸில் ஏறினால் அது நகர்ந்தால்தானே!



சைக்கிளில் ஏறினால் டயர் பங்சர்!



கடைசியில் மூன்று சக்கரக் குழந்தை சைக்கிளில் ஏறிக் கொண்டு ஆபீஸ் போகிறார்!

தயாராகிவிட்டது ! சரணமய்யப்பா. ! எதிர்பாருங்கள்.

**ஆலப்புழை பகவதீ விலாஸ் தியேட்டரில்.**

இகபர நன்மை தரும் தெய்வீகக்கதை ! நவரசம் நிறைந்தது. ! ஒருவருட ஓயா உழைப்பைப் பெற்றது. ! அதிகப் பொருட்செலவில் தயாரானது. ! எமக்கே உரிமை உள்ளது. ! சினிமா. நாடக உலகுக்குமுற்றும் புதியது.

.......சீன்.உடை.நடனம்.பாட்டு.வசனம்



# கோப்பன் ஹேகன் மகாநாடு

ஏ.கே.செட்டியார்

நமது நாட்டில் மகாநாடுகள் நடைபெறுவதற்குப் பல நாட்களுக்கு முன்னரே, தினசரிப்பத்திரிகைகளில் அறிக்கைகள் வெளிவந்து கொண்டேயிருக்கும். இந்த அறிக்கைகளைப் படித்து அவற்றில் கண்டபடி நடக்காவிட்டால், மகாநாட்டிற்குச் செல்லும் பிரதிநிதிகள் பல கஷ்டங்களுக்கு ஆளாக நேரிடும். பிரதிநிதிகளுக்கு இலவசமாக ஜாகைகள் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாகவும், (சில மகாநாடுகளில்) உணவு இலவசமாகக் கிடைக்குமென்றும், ஆனால் பிரதிநிதிகள் தங்கள் சொந்தப் படுக்கைகளைத் தாங்களே கொண்டுவர வேண்டுமென்றும், முக்கிய அறிக்கைகள் வெளிவரும். பல மகாநாடுகளுக்குச் சென்று அனுபவம் வாய்ந்தவர்கள், தங்கள் படுக்கையுடன் கம்பளியையும் எடுத்துச் செல்ல மறக்கமாட்டார்கள். அதோடு கூஜாவையும் கையில் எடுத்துச் செல்வார்கள்.

நான்கு வருடங்களுக்கு முன் டென்மார்க்கில் நடைபெற்ற சர்வதேச வியாபார மகாநாட்டிற்கும் பர்மா செட்டியார்கள் சங்கப் பிரதிநிதியாகச் சென்றிருந்தேன். ஆனால் எனது சொந்தப் படுக்கையை நான் எடுத்துச் செல்லவில்லை. ரயிலிலும் சரி, கப்பலிலும் சரி, ஹோட்டல்களிலும் சரி, நல்ல சுத்தமான மிருதுவான படுக்கை கொடுத்தார்கள்.

பாரிஸ் நகரத்திலிருந்த சர்வதேச வியாபாரச் சங்கத்தின் தலைமைக் காரியாலயத்தில், பிரதிநிதிக் கட்டணம் 500 பிராங்கைச் செலுத்தி விட்டு, பேர்லினுக்குச் சென்றேன். பேர்லினிலிருந்து ஒரு ஸ்வீடிஷ் ஆகாய விமானத்தில் டென்மார்க்கின் தலைநகரான கோப்பன் ஹேகனுக்குப் பிரயாணமானேன். சுமார் ஒன்றரை மணி நேரத்தில், விமானம் கோப்பன் ஹேகன் ஆகாய விமான நிலையத்தை யடைந்தது. கோப்பன் ஹேகன் நகரத்துக்கும், ஆகாய விமான நிலையத்துக்கும் இடையிலுள்ள தூரம் சுமார் இருபது மைல். நியூயார்க் நகரில் என்னுடன் தங்கி யிருந்த டேனிஷ் இளைஞரான ஜான் ஜாக்ஸனும், அவன் மனைவியும், எங்களுடைய பழைய நண்பருமான கேன் என்ற அமெரிக்க மாணவனும், விமான நிலையத்துக்கு வந்திருந்தனர். பேர்லினிலிருந்து, கோப்பன் ஹேகனுக்கு நான் புறப்பட்ட அதே நேரத்தில் தான், இந்த நண்பர்கள் கோப்பன் ஹேகன் நகரத்திலுள்ள தங்கள் வீட்டிலிருந்து ஆகாய விமான நிலையத்துக்குப் புறப்பட்டார்கள். விமானம் வருவதற்குப் பத்து நிமிஷங்களுக்கு முன்பாக விமான நிலையத்தை அடைந்தார்கள்.

என்னைக் கண்டதும் ஜானுக்கும் அவன் மனைவிக்கும் உண்டான சந்தோஷத்திற்கும் பெருமைக்கும் அளவே யில்லை. ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பாலிருந்து, தங்களுக்குப் பழக்கமான ஓர் இந்தியன் தங்கள் வீட்டிற்கு வருவதை நினைக்கும்பொழுது அவர்கள் கர்வ மடைந்தார்கள். ஆயிரக் கணக்கான மகாநாட்டுப் பிரதிநிதிகள் ஹோட்டல்களில் தங்கி யிருந்த பொழுது, ஒரு நண்பர் வீட்டில் தங்கும் பாக்கியம் கிடைத்ததில் எனக்கும் அளவு கடந்த மகிழ்ச்சி யுண்டாயிற்று.

ஜான், கப்பல் கம்பெனி யொன்றில் வேலை பார்ப்பவன். அவன் மனைவி ஆஸ்பத்திரியில் வேலை பார்க்கிறாள். கேன் என்ற அமெரிக்க மாணவனும் அவர்கள் வீட்டிலேயே தங்கி யிருந்தான். நான் அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுத்த பொருள்களை அவர்கள் கண்ணாடி அலமாரியில் காட்சியாக வைத்திருந்தார்கள். அவை என்ன தெரியுமா? ஓலைப்பெட்டி, கறிப் பவுடர், டின்னில் அடைத்த மாம்பழம், குடகு நாட்டுத் தேன், மைசூர் ஊதுவத்தி.

* * *

நாற்பத்தொரு தேசங்களிலிருந்து ஆயிரத்துக்கு மேற்பட்ட பிரதிநிதிகள் டென்மார்க்கில் கூடினர். அவர்களுடன் வந்த, அவர்கள் குடும்பத்தினர் தொகையைக் கணக்கிட்டால் 2000 பேர்களுக்கு மேல் ஆகும். மகாநாடு, ஒரு நாள் காலையில் டவுன் ஹாலில் ஆரம்பமாயிற்று. அரச குடும்பத்தினர் வந்திருந்தனர். பிரதம மந்திரி, பலருக்கும் புரியாத டேனிஷ் பாஷையில் பேசினார். அவர் பேசி முடித்ததும், அவர் எங்களை அன்போடு வரவேற்றதாக எங்களுக்கு ஆங்கிலத்தில் அறிவிக்கப்பட்டது.

அன்று பிற்பகல், பார்லிமெண்டுக் கட்டடத்தில் மகாநாடு ஆரம்பமாயிற்று. பார்லிமெண்டுக் கட்டடத்துக்குச் செல்லும் பாதையில் வழி நெடுகப் போட்டோ பிடிப்பவர்களும், தங்கள் புத்தகங்களில் கையெழுத்து வாங்கும் மாணவ மாணவிகளும் அணி வகுத்து நின்றனர். இவர்களுடைய பார்வையிலிருந்து தப்பிப் பார்லிமெண்டுக் கட்டடத்துக்குச் செல்வதே பெரிய கஷ்டமாகி விட்டது. பார்லிமெண்டுக் கட்டடத்துக்குள் நுழைந்தால், நூற்றுக் கணக்கான அழகிய இளம் பெண்களும், சுறுசுறுப்பான வாலிபர்களும் புன்முறுவலோடு வரவேற்கிறார்கள். ஒரு வாலிபன் நம்மிடம் வந்து இங்கிலிஷ், பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய பாஷைகளில் பேசுகிறான். நாம் ஏதாவது நமக்குத் தெரிந்த பாஷையில் பதில் சொல்லியதும், அந்த பாஷை தெரிந்த வாலிபனிடமோ அல்லது பெண்ணிடமோ நம்மை ஒப்புவிக்கிறான். அவர்கள் நம்மை ஒரு மேஜையருகில் கூட்டிச் செல்கிறார்கள். நமது பெயரைப் பதிவு செய்ததும் மற்றொரு மேஜைக்கு நாம் அழைத்துச் செல்லப்படுகிறோம். அங்கிருக்கும் பெண் நமது பெயரைத் தப்பும் தவறுமாக உச்சரித்துவிட்டு, ஒரு பெரிய காகிதப் பையைக் கொடுக்கிறாள். பையில் என்ன இருக்கிறதோ என்று சந்தேகம். பிரித்துப் பார்த்தால் சாக்லட் இல்லையென்று தெரிகிறது. பல வர்ணங்களில் அச்சடித்த ஏராளமான அழைப்புக்கள். மகாநாடு நடைபெறும் ஏழு தினங்களுக்கும் ஏற்பாடு செய்யப்பட்

நடுக்கும் விருந்துகள். எத்தனை டின்னர்கள்? எத்தனை டான்ஸ்கள்? கப்பல் கம்பெனியார் விருந்து! வியாபாரச் சபையார் விருந்து! நகரசபை உபசாரம்! பத்திராதிபர்கள் உபசாரம்! விளையாட்டுச் சபைகள் விருந்து! எல்லாவற்றிற்கும் மேலாக அரச குடும்பத்தாரின் தேநீர், தோட்ட விருந்து! சென்னையில் அரிசிப் பங்கீடு கார்டுகளைப் பார்க்கும்போது, இந்த மகாநாட்டு ஞாபகம்தான் வருகிறது?

டென்மார்க்கிலே மிக்க அழகுள்ள நூற்றுக்கணக்கான மாணவிகளும், சுறு சுறுப்பும் பணிவுமுள்ள நூற்றுக்கணக்கான மாணவர்களும், இம் மகாநாட்டில் தொண்டாற்றுவதற்காகப் பொறுக்கி எடுக்கப்பட்டார்கள். ஆயிரக்கணக்கான அந்நியர்கள் டென்மார்க்கைப் பற்றி நல்ல அபிப்பிராயத்தோடு திரும்பியதற்குக் காரணம், இம் மாணவ மாணவிகளின் அன்பும் உபசாரமும் பணிவும்தான்.

எனது சட்டையில் இந்தியா என்ற பாட்ஜைக் கண்ட ஒரு மாணவன் என்னை நேராக எழுங்கரிடம் அழைத்துச் சென்றான். எழுங்கர் இந்தியாவைச் சேர்ந்த யூதர். இந்தியா கம்பெனியின் மானேஜிங் டைரக்டர். லண்டனில் வசிப்பவர். இவர் தான் இந்தியப் பிரதிநிதிகள் கோஷ்டியின் காரியதரிசி. இந்தியப் பிரதிநிதிகள் பன்னிரண்டு பேர் வருவதாக அறிவித்தபோதிலும், ஆறு பேர்தான் வந்திருந்தார்கள். தலைவர் வால்சந்த் ஹீராசந்த். கராச்சியின் பிரபல பணக்காரரான கவாஸ்ஜி என்ற பார்ஸிக்காரர், தென்னிந்தியாவிலிருந்து குண்டூர் நரசிம்மராவ், மட்டி சுதர்சனம் என்ற இரு ஆந்திர வியாபாரிகள்.

பார்லிமெண்டுக் கட்டடத்திலேயே, ஒவ்வொரு நாட்டினருக்கும் தனிக் காரியாலயம் உண்டு. மகா நாட்டுக்குச் செல்வதற்கு முன் இங்கு அனைவரும் கூடினோம். ஒவ்வொருவரும், மற்றவர்களுக்குத் தங்களைத் தாங்களே அறிமுகம் செய்துகொண்டோம்.

வால்சந்த் ஹீராசந்த், மிகவும் அமைதியாக எங்களுக்கு ஒரு சிறு பிரசங்கம் செய்தார். அதன் சாரம்: "இந்த மகாநாட்டில் ஓட்டுப் போடுவதைக் குறித்து நீங்கள் எனது யோசனைகளுக்காகக் காத்திருக்க வேண்டாம். எந்தத் தீர்மானம் வந்தாலும் விரோதமாக ஓட்டுப் போடுங்கள். ஏனென்றால் இம் மகாநாட்டில் நிறைவேற்றப்படும் தீர்மானம் ஒன்று கூட நமக்குச் சாதகமாயிராது."

வால்சந்த் கூறியது முற்றிலும் உண்மை என்பதை அம் மகாநாட்டின் தீர்மானங்களிலிருந்து அறிந்துகொண்டோம். பார்லிமெண்டு நாளில் மகாநாடு ஆரம்பமாயிற்று. தேர்ந்தெடுக்கப்படாமலேயே டேனிஷ் பார்லிமெண்டில் உட்கார்ந்தோம்.

ஒவ்வொரு மேஜையிலும் ஒவ்வொரு டெலிபோனும், மூன்று ஸ்விட்ச்களும் உண்டு. பிரசங்கங்கள் ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு பாஷைகளில்தான் நடைபெறும். ஒருவர் ஜெர்மன் பாஷையில் பிரசங்கம் செய்தால், அப் பிரசங்கத்தின் ஆங்கில, பிரெஞ்சு பாஷை மொழிபெயர்ப்புக்களை, இருவர் தனித் தனிக் கண்ணாடிப் பெட்டிகளுக்குள் இருந்து படிப்பார்கள். மூன்று ஸ்விட்ச்களும் மூன்று பாஷைகளுக்கு. நமக்கு எந்தப் பாஷை வேண்டுமோ, அந்தப் பாஷைக்குரிய ஸ்விட்சைப் போட்டால், அந்தப் பாஷையில் நடைபெறும் பிரசங்கத்தைக் கேட்கலாம். இதனால் எவ்வளவோ காலம் மிச்சமாயிற்று.

இம் மகாநாடு யுத்தத்துக்கு முன் நடைபெற்றது. எனவே நேசக்கட்சியின் விரோதிகளும், விரோதியின் நேசக் கட்சிகளும் சரிசமானத் தமர்ந்து இம் மகாநாட்டை நடத்தினார்கள். இம் மகாநாட்டின் முக்கிய தீர்மானம் ஓட்டுக்கு வந்தது. உலகத்தில் சண்டை வராமல் தடுப்பதற்கு, உலகத்திலுள்ள மூலப்பொருள்களைச் சரிசமானபடி பங்கீடு செய்ய வேண்டுமென்றும், அதற்கு அமெரிக்கா, இங்கிலாந்து, இத்தாலி, பிரான்ஸ், ஜெர்மனி, ஜப்பான் ஆகிய வல்லரசுகளை ஒன்று கூட்டி, பங்கீட்டு முறையை நிர்ணயம் செய்ய வேண்டுமென்பதும் தீர்மானத்தின் சாரம்.

மூலப் பொருள் உற்பத்தியில் இந்தியாவுக்கு நிறையப் பங்குண்டு. இத்தாலியைவிட, ஜப்பானைவிட, அதிகமாக மூலப்பொருள் உற்பத்தி செய்யும் இந்தியாவுக்கு மேற்படி வல்லரசு சபையில் பிரதிநிதித்துவம் இல்லை. வால்சந்த் சண்டை போடுவதிலே சமர்த்தர். ஆறு வல்லரசுகளுடன் இந்தியாவையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றார். காரியம் பலிக்கவில்லை. மூலப் பொருள் பங்கீடு விஷயத்தில், ஆறு வல்லரசுகளின் நல்லெண்ணத்தில் இந்தியர்களுக்கு நம்பிக்கை இல்லை என்றும் வால்சந்த் எடுத்துக் காட்டினார். இந்தியா மட்டும் விரோதமாக ஓட்டளிக்க, மற்ற நாற்பது தேசப் பிரதிநிதிகளும் ஏகமனதாக இத் தீர்மானத்தை ஆதரித்தனர். உலக சகோதரத்துவம் வாழ்க!

• • •

பொதுவாக மகாநாட்டில் கண்ட பலன் விருந்துகள் தான். உள்ள விருந்துகள் போதாதென்று, கோப்பன் ஹேகனிலுள்ள பிரிட்டிஷ் அம்பாஸடர் இந்தியப் பிரதிநிதிகளை விருந்துக்கு அழைத்தார். அடிமை இந்தியர்களுக்கு உபசாரம் வேறு. இந்தியப் பிரதிநிதிகள் அனைவரும், விருந்தை ஏற்றுக்கொள்ள இயலாதெனத் தலைவர் வால்சந்த் மூலம் தெரிவித்தோம். அன்றைய டேனிஷ் பத்திரிகைகளுக்கு இது முக்கியமான செய்தி.

இதற்கு முன் நடைபெற்ற இதே மகாநாடுகளில், ஆங்கிலேயர்கள் இந்தியாவின் பிரதிநிதியாகச் சென்றகாலம் ஒன்றிருந்தது. ஆனால் இப்பொழுதோ இந்தியாவின் சார்பாக இந்தியர்கள் செல்கிறார்கள். இந்த இந்தியர்களில் எத்தனை பேர் நாட்டுப் பற்று உள்ளவர்கள் என்று கூறுவது கடினம்.

பெர்லினில் நடைபெற்ற சர்வதேச வியாபார மகாநாட்டில் ஒரு ருசிகரமான சம்பவம்



டென்மார்க் அரசரும் ராணியும்

நிகழ்ந்தது. ஒவ்வொரு நாடும் தனது பிரதிநிதிகளை அனுப்பிற்று. இந்திய வியாபாரச் சபைகள் இந்தியப் பிரதிநிதிகளை அனுப்பின. ஆனால் ஆங்கிலேயர்கள் சூழ்ச்சி செய்து, ஓர் ஆங்கிலேயரை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதி என்று அனுப்பினார்கள். வாலசந்த் வழக்கப்படி சண்டை போட்டு, இந்த ஏகாதிபத்தியப் பிரதிநிதியை மகாநாட்டை விட்டு வெளியேற்றிய பின்னர்தான் மகாநாட்டில் கலந்து கொண்டார்.

மகாநாட்டுப் பிரதிநிதிகளுக்கு டேனிஷ் அரசாங்கத்தார் டென்மார்க் என்ற படங்கள் நிறைந்த அருமையான புத்தகமொன்றை அன்பளிப்பாகக் கொடுத்தனர். புத்தகத்தின் விலை ஒரு பவுனுக்கு மேலிருக்கும். வெளியில் விற்பனைக்குக் கிடைக்காது. எனது நண்பன் ஜான் எப்படியாவது இப் புத்தகம் வேண்டுமென்று விரும்பினான். எனக்குக் கிடைத்த ஒரு புத்தகத்தைத் தாய் நாட்டுக்கு எடுத்துச் செல்ல நான் விரும்பியதால், ஜானுக்கு வேறு புத்தகம் வாங்க வேண்டுமென்று தீர்மானித்தேன்.

இப் புத்தகங்களை வழங்கும் பெண்ணிடம் சென்று ''எப்படியாவது எனக்கு ஒரு புத்தகம் வேண்டும்'' என்றேன்.

''உங்களுக்குத்தான் ஒன்று கொடுத்து விட்டேனே'' என்றாள்.

''அதை ஊருக்கு அனுப்பி விட்டேன். இன்னொரு புத்தகம் வேண்டும்'' என்றேன்.

அவளுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஒருவருக்கு ஒரு புத்தகம் தான் கொடுக்கலாம். சுற்றும் முற்றும் பார்த்தாள். ''உங்களுக்கு மற்றுமொரு புத்தகம் கொடுக்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை'' என்றாள்.

''தயார்'' என்றேன்.

''நான் உங்களுக்கு இரண்டு புத்தகங்கள் கொடுத்ததாக நீங்கள் இங்கு யாரிடமும் சொல்லக் கூடாது'' என்றாள்.

அவளுடைய நன்மையைக் கருதி இந்த விஷயத்தை டென்மார்க்கில் இருந்தவரை நான் யாரிடமும் கூறவே யில்லை. ஆனால் ஜானுக்கு மட்டும் இது தெரியும்!

* * *

மகாநாட்டுப் பிரதிநிதிகளுக்கும், அவர்களுடைய உறவினர்களுக்கும் அரச தம்பதிகள், தங்கள் அரண்மனைத் தோட்டத்தில் தேனீர் விருந்தளித்தனர். பிரதிநிதிகள் அனைவரும் உறவினர்களுடன் சுமார் 200 நல்ல மோட்டார் வண்டிகளில் அரண்மனைக்குச் சென்றனர். வழிநெடுக, மைல் கணக்காக, ஆண்களும் பெண்களும், குழந்தைகளும் குட்டிகளும் கூடி நின்று, டேனிஷ் கொடிகளை வீசி ஆர்ப்பரித்த காட்சி இன்னும் பசுமையாகவே இருக்கிறது.

அரச தம்பதிகள் இரண்டாயிரம் பேரோடு கைகுலுக்கினார்கள். அரசி இரண்டாயிரம் பேரையும் ''சௌக்கியமா? சௌக்கியமா?'' என்று விசாரித்தாள். ஆனால் இரண்டாயிரம் பேரோடு நின்ற இடத்திலேயே நின்று கைகுலுக்கிய அரச தம்பதிகளை ''சௌக்கியமா?'' என்று ஒருவரும் கேட்கவே யில்லை.

டென்மார்க்கின் அரசர் பத்தாவது கிறிஸ்டியன். அறுபது வயதுக்கு மேற்பட்டவர்; காட்சிக்கு எளியவர்; ஆடம்பர மில்லாதவர். அரைமணி நேரம் அவர் இந்தியப் பிரதிநிதிகளோடு சம்பாஷித்துக் கொண்டிருந்தது சில வெள்ளையர்களுக்குப் பிடிக்கவே யில்லை. அவ்வளவு நல்ல அரசர் இன்று ஜெர்மானியர்களால் தமது சொந்த நாட்டில் சிறைப்படுத்தப் பட்டிருக்கிறார் என்பதை நினைக்க நினைக்க மிக வருத்தமாயிருக்கிறது. உலகத்தில் பெரிய மனிதர்களின் வாழ்க்கை இதுதான் போலும்!

• • •

# அரசனும் புலவரும்

மு. அருணாசலம்

சரஸ்வதி பூஜை நம் வீடுகளில் ஆண்டு தவறாமல் நடந்து வருகிறது. விஜய தசமியன்று சிறு குழந்தைகளை முதன் முதலாகப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புகிறோம். நல்ல காரியந்தான். படிப்புக்கு இவ்வளவு பூஜையும் மரியாதையும் செய்வது பாராட்டத்தக்கது என்பதில் ஐயமில்லை.

ஆனால் இந்தப் படிப்பு எதற்கு? இதன் லட்சியம் என்ன? முதலிலே குழந்தையைப் பார்த்துக் கேட்போம். குழந்தை என்ன சொல்கிறது?

“எங்கள் அப்பா பள்ளிக்கூடம் போகச்சொன்னார். போகிறேன்” என்கிறான், ஒன்றுந் தெரியாத சிறுவன்.

கொஞ்சம் விவரம் தெரிந்த பையன் என்ன சொல்லுகிறான்? “படித்துப் பெரியவனானதும், உத்தியோகத்துக்குப் போவேன். நிறையச் சம்பாதிப்பேன்” என்கிறான்.

இன்னும் சிறிது விவரம் தெரிந்த பையனைக் கேட்டாலும் இப்படித்தான். இவனுக்கு முதலில் ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. பிறகு தன் கருத்தை நம்மிடம் அந்தரங்கமாக வெளியிடுகிறான். “இந்தக் காலத்தில் படிக்காவிட்டால் யார் மதிக்கிறார்கள்? படிக்கவில்லையென்றால், கலியாணத்துக்குப் பெண்ணும் கிடைப்பதில்லை. கொஞ்சமாவது படித்துப் பட்டம் பெற்றுவிட்டால் கலியாணம் எளிதில் நடக்கும். நல்ல அழகான பெண்ணாகத் தேர்ந்தெடுக்கலாம்; பணக்காரப் பெண்ணாகவும் பார்க்கலாம்” என்கிறான்.

படிப்புக்கு எவ்வளவு மேலான நோக்கம்!

இந்த நோக்கங்களெல்லாம் இந்தப் பிள்ளைகளுக்குச் சொந்தமாக ஏற்பட்டவையா? அல்ல. வீட்டிலுள்ள பெற்றோரும் பெரியோரும் சொல்லுகிறார்கள்; “பையன் நாலெழுத்துப் படித்திருந்தால், ஏதாவது ஒரு வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கலாம். சம்பாதிக்காவிட்டாலும், பெரிய இடமாகப் பார்த்துக் கலியாணம் பண்ணலாம். கலியாணத்துக்குப் பிறகு வேலை அமர்ந்துவிடும் சௌகரியமாயிருக்கும்” என்கிறார்கள். இதைக் கேட்டுக்கொண்டிருக்கிற பிள்ளைகள் இதே நோக்கம் கொண்டிருப்பதில் வியப்பென்ன?

படிப்பிற்கு இன்னும் எத்தனையோ நோக்கங்கள்: பிரசங்க மேடையிலே ஏறி நின்று பிறர் மெச்சும் முறையிலே பேசவேண்டுமென்ற எண்ணத்தோடு எவ்வளவோ பேர் படிக்கிறார்கள். வேறு சிலர், மற்றவர்கள் பேசுவதிலும் எழுதுவதிலும் குற்றம் காணவேண்டும் என்ற ஒரே எண்ணத்தோடு படிக்கிறார்கள்.

இவற்றோடு ஒட்டிய படிப்பு ஒன்று முற்காலத்திலும் இருந்தது. ஏதோ இரண்டொரு நூல்கள் படிக்க வேண்டியது; பிறகு செல்வர்மீது பாட்டுப் பாடி, அவர்களிடம் பொருள் பெற்று வாழ்க்கை நடத்தவேண்டியது என்ற எண்ணத்தோடு மட்டும் படித்த ‘செந்தமிழ்ப் பாவலர்’ முற்காலத்திலே அநேகர். ‘கன்னா, பின்னா, காமா, சோமா’ என்று ஒருவனைப் பாடிப் பிழைக்க இவர்கள் கற்றிருந்தார்கள்.



இந்தச் சாமானியமான செந்தமிழ்ப் பாவலர் வாழ்க்கை நடத்திய காலத்திலே, நிரம்பக் கற்றவர்களுமிருந்தார்கள். அவர்களுடைய படிப்பு அவர்களுக்கு எவ்வழியிலே உதவிற்று? பிறர் கவியிலே குற்றம் கூறும் ஆற்றல் அவர்களுக்கு உதவிற்று. அவர்களைப் பற்றியும் எவ்வளவோ கதைகளை நாம் அறிவோம். பாவலர், ஏழைப் புலவர், பாடிவந்த பாடல்களிலே குற்றங்கூறி, அவருக்கு வரவிருந்த பரிசுகளை நிறுத்தியவர்கள் பலர். அன்றியும், அக் குற்றங்களுக்காகப் புலவர் தலையிலே குட்டுவதற்கும் அவர் காதைக் குடைந்து தோண்டி அறுப்பதற்கும், தலையை வெட்டுவதற்கும் துணிந்த அறிஞர்களுக்குக் குறைவில்லை. பின்னைப் பாண்டியனும், வில்லிபுத்தூராரும், ஒட்டக்கூத்தரும் எத்தனை எத்தனையோ பேர்.

இப்படிக் குற்றங் காணுந் திறமை வாய்ந்த படிப்பாளிகளிலே தலை சிறந்தவராயிருந்தார், நக்கீரர். பாண்டியன் ஒரு சமயம், தன் மனத்திலிருந்த கருத்தைப் பாட்டிலே வெளியிடும் புலவனுக்கு நிறையப் பொன் தருவதாகச் சொல்லி ஒரு பொற்கிழி கட்டி வைத்தானாம். மிக்க எளிய

வனும் பக்தனுமான தருமி என்ற அந்தணன்மீது கருணைகொண்டு, சிவபெருமான், அப் பாண்டியன் கருத்தை ஒரு பாடலாக எழுதி அவ் வந்தணனிடம் அளித்துப் பொன்னைப் பெற்றுக் கொள்ளும்படி சொன்னார். தருமி காட்டிய பாடலை ஏற்று, பாண்டியன் பொன்னைக் கொடுத்து விட்டான். இதைக் கேட்டார் நக்கீரர்: படிப்பிலே பெரியவ ரல்லவா அவர்? "கொண்டு வா, பாடலை" என்றார். பாடலைப் பார்த்தார். குற்றஞ் சொல்லவா தெரியாது அவருக்கு? சொன்னார். "சிவபெருமானே தந்த பாடல்" என்று தருமி கொஞ்சம் பெருமையோடு சொல்லியும் பார்த்தான். நக்கீரரிடம் பலிக்கவில்லை. சிவபெருமானாகத்தான் இருக்கட்டும், இன்னும் எந்தப் பெருமானாகத்தான் இருக்கட்டும், குற்றம் குற்றம்தான் என்று சாதித்து விட்டார் நக்கீரர்.

இப்படியாக, படிப்பிலே சாரமில்லாமற் போனது மாத்திரமின்றி, பிறர் படிப்பையும் சாரமில்லாமற் போகச் செய்வதே வில்லிபுத்தூரர், நக்கீரர் கதைகள் தோன்றிய காலத்திலே ஓர் அரிய வித்தையாக இருந்து வந்தது. அந்த வித்தையிலே தேர்ந்த புலவர்கள் பண்டிதர்கள் பலர்; பண்டிதரல்லாதோர் சிலரும் இவ் வித்தையில் தேர்ந்திருந்தார்கள்.

இவ்விதம் தேர்ந்தவர்களிலே சிற்றரசனொருவன் இருந்தான். தமிழ் நாட்டின் வட பகுதியிலே எங்கோ ஒரு மூலையில் வாழ்ந்து வந்தான். இவனுக்கு நல்ல ஞாபக சக்தி உண்டு. ஒரு முறை காதால் கேட்ட பாடல் எதையும் நினைவு வைத்திருந்து, கேட்டபடியே திருப்பிச் சொல்லும் ஆற்றல் இவனுக்கு வாய்த்திருந்தது. புலவர் பலர்—யாராவது ஒரு வள்ளலைத் தேடி வந்து அவன்மீது ஏதோ இரண்டு பாட்டுப்பாடி, அவன் கொடுத்த பொருளைக்கொண்டு வயிறு வளர்க்கும் புலவர்கள்—வருவார்கள். அவர்கள் பாடலைக் கேட்குமுன், இவ்வரசன் ஒரே ஒரு நிபந்தனை சொல்லுவான்: "உங்கள் பாடல் சொந்தப் பாடலாயிருக்கவேண்டும்; அதாவது புதிதாக நீங்கள் பாடியதாயிருக்கவேண்டும்" என்பான். புலவர் ஒப்புக்கொண்டு பெரிதும் முயன்று ஒரு பாடலை இயற்றிக் கொண்டு வருவார். அரசசபையிலே பாடலை எடுத்துச் சொல்லி விளக்கத் தொடங்குவார்.

ஆனால் அவர் பாடலைச் சொன்னவுடனே, அரசன் குறுக்கிடுவான். அவனுக்குத்தான் அப் பாடலை ஒரு தடவைக் கேட்டவுடனே மனப்பாடமாகி யிருக்குமே! "ஐயா, உங்கள் பாடல் சொந்தப் பாடல் அன்று; எல்லோருக்கும் தெரிந்த பாடல்; வேண்டுமானால் நான் சொல்லுகிறேன், கேளுங்கள்" என்று கூறிவிட்டுப் பாடலைப் பிழையின்றிச் சொல்வான். புலவர் என்ன செய்வார்? பாவம், ஒன்றும் தெரியாமல் ஏமாந்து விழிப்பார்.

அரசனோ விடமாட்டான்! "என் மந்திரியையும் என் அரண்மனைச் சேடியையும் சொல்லச் செய்கிறேன் கேளுங்கள்" என்று கூறிவிட்டு, பாட்டைச் சொல்லுமாறு மந்திரிக்குக் கட்டளை யிடுவான். இவ் வரசனுக் கேற்றாற் போல, மந்திரியும் அந்தப்புரச் சேடி யொருத்தியும் வாய்த் திருந்தார்கள். இரண்டு முறை ஒரு பாட்டைக் காதால் கேட்டு விட்டால், மந்திரி அதைத் திருப்பிச் சொல்லி விடுவான். மூன்று முறை கேட்ட பாட்டை அச் சேடி சொல்லி விடுவாள். ஆகவே, அரசன் கட்டளை யிட்டவுடனே, புலவர் சொல்லியதையும் அரசன் சொல்லியதையும் கேட்டுக் கொண்டிருந்த மந்திரி அப்பாட்டை எளிதாகச் சொல்லி விடுவான். இவன் சொல்லியதையும் கேட்டுக் கொண்டிருந்த சேடி, தானும் அதை ஒப்புவிப்பாள். இவ்வளவையும் அரசன் புலவருக்குக் காட்டி அவர் பாடிய பாடல் புதுப்பாடலன்று, பழம் பாடல்தான் என்று நிரூபித்து விடுவான். புலவர் இதற்கு மேலும் என்ன செய்வார்? வந்த வழியே வெறுங் கையோடு திரும்பி விடுவார்.

இப்படியாக இவ்வரசன் படித்த படிப்பெல்லாம், தன்னை நாடி வந்த ஏழைப் புலவருக்கு 'இல்லை' என்று சொல்லத்தான் கற்றுக்கொடுத்தது.

இவனிடம் பரிசில் பெற எண்ணி வந்து ஏமாந்து சென்ற புலவர் பலர். சோழ நாட்டிலுள்ள மிழலை என்ற ஊரிலிருந்த புலவ ரொருவர், வடக்கே காசி வரையில் எல்லாம் யாத்திரை செய்து திரும்பி, காளத்தி திருவேங்கடம் முதலிய தலங்களைத் தரிசித்துவிட்டு, இவ்வரசனை வந்து கண்டார். இவருக்கும் மற்றப் புலவர்களுடைய கதிதான் நேர்ந்தது. அரசன் வழக்கம் போலவே ஏளனம் செய்து அனுப்பிவிட்டான். பரிசிலுக்காக வென்று இவர் போகா விட்டாலும் தம்மை அவ்வரசன் மதிக்காதபடி அவமானப் படுத்தியது இவருக்கு மிக்க வருத்தத்தைத் தந்தது.

அப்போது அவர் எண்ணலானார். "நாம் எதன் பொருட்டுப்படித்தோம்? கல்வி கற்றதன் பயன், கற்றபடி நடக்க வேண்டும். கற்பவற்றைக் கசடறக் கற்று, கற்றவற்றுக்குத் தக்கவாறு நிற்பதல்லவா அறிவுடையவனுக்கு அழகு? தொழுவதானும் பரம்பொருள் ஒன்றைத் தொழுவதே கற்றதனாலாய பயன். மேலும், கல்வியானது அறிவு விளக்கமல்லவா தரவேண்டும்? இவ்வுணர்ச்சியின்றி ஒருவனிடம் போய்க் கையேந்தி இரக்க நின்றோமே!" என்றெல்லாம் எண்ணி அவர் மனம் மிகவும் நொந்து போயிற்று.

தம்மூர் வந்து சேர்ந்தார்.



விழுமலையிலே கோயில் கொண்டுள்ள பெருமானை வழி பட்டுத் திருப்தியோடு வாழலானார்.

நாட்கள் பல சென்றன. அவ்வரசன் ஒரு சமயம் தல யாத்திரையாகப் புறப்பட்டுத் தென்னாடு வந்தான். பல தலங்களுக்குச் சென்று சுவாமி தரிசனஞ் செய்து கொண்டு, அடியார்கள் பொருட்டு அற்புதங்கள் நிகழ்த்த பெருமையுடைய விழுமலையை யடைந்தான். பிறநாட்டு அரசன் என்றமையாலே, அவ்வூர்ப் பெரியவர்கள் ஒன்றுகூடி அவனை எதிர் கொண்டு வரவேற்று, கோயிலுக்கு அழைத்துச் சென்று சுவாமி தரிசனஞ் செய்வித்து உபசரித்தார்கள். அவனுக்காக ஆடலும் பாடலும் சிறப்பாக நடை பெற்றன.

உபசாரங்கள் நடந்த மண்டபத்திலே, நாம் மேலே பார்த்த விழுமலைப் புலவரும் இருந்தார். இவ் வரசனைத் தாம் முன்னமே கண்டதும் அவன் அற்பத் தனமாக நடந்துகொண்டதும் அவருக்கு உடனே நினைவுக்கு வந்தன.

அரசனைப் புகழ்ந்து அவ்வூரிலுள்ள 'செந்தமிழ்ப் பாவலர்' வாழ்த்துப் பாடல் பாடினார்கள். அவனு ரானமையாலே, அவனும் தன் திறமையை யெல்லாம் நிறுத்திக் கொண்டு பாடல்களைக் கேட்டு வந்தான். நம்முடைய விழுமலைப் புலவர் பாட வேண்டிய முறை வந்தது. சபையிலே இருந்து கொண்டு, பாட மாட்டேன் என்று கூறுவது நாகரிகமன்று. ஆகவே, அவர் பாடுவதற்கு இசைய வேண்டியவரானார். ஆயினும், அவ்வரசன்மீது செய்யுளியற்ற அவருக்கு நா எழவில்லை. சிறிது நேரம் சிந்தனை செய்தார். செய்து, "நம் நாட்டினர்மீதே பாடுவோம்; விழுமலை நாட்டார் பெருமையை இவனுக்கு உணர்த்தி, தன் சிறுமையை எண்ணி இவன் வெட்கமடையும்படி செய்வோம்" என்று தம் மனத்துள் முடிவு செய்தார்.

அச்சிற்றரசனுடைய அறியாமையை முதன்மையதாகச் சுட்டிக் காட்டினார்: 'ஏதோ, ஒருவரை அடுத்துப் பிழைப்போம் என்று வருகின்ற சாதாரணப் புலவர்களைத் தடுத்துப் பேசி அவமதிப்பது கல்விக்கு அழகாகாது.'

அடுக்கப் படிக்கின்ற செந்தமிழ்ப்
பாவலர் ஆசிலையும்
நடுக்கப் படிக்கின்ற கல்விகள்ளார்;

விழுமலை நாட்டினர் இப்படிப்பட்ட கல்வி கற்க மாட்டார்கள். பின், கொடுக்கக் கற்பார்களா? மாட்டார்கள்: இக் கல்வியும் அவர்களுக்கு வேண்டுவ தன்று. ஏன்? மேகத்துக்கு மழை பெய்வது எப்படி இயல்பா யமைந்த பண்போ; அதேபோல, கொடை வழங்குகின்ற பண்பும் இவர்களுக்கு இயல்பாய் வந்து பொருந்தி யிருக்கிறது: கல்விகற்று அதன் பயனாக வருகிற பண்பன்று. இவர்களுடைய கொடைத்திறம்:

இந்தத் தாரணியில்
கொடுக்கப் படிக்கின்ற கல்விநன்
முயலுந்து கூடியபின் —

'சரி, அப்படியானால் இவர்களுக்கு வேறு எதுவும் வேண்டுவதில்லையே, இன்னுமா கற்கிறார்கள்?' என்ற கேள்வி எழலாம். ஆம், இவர்கள் இன்னும் கற்கத் தான் கற்கிறார்கள்? எதற்காகக் கற்கிறார்கள்? கற்றபடி நடப்பதற்காகக் கல்வி கற்கிறார்கள், விழுமலை நாட்டார்.

அடுக்கப் படிக்கின்ற செந்தமிழ்ப்
பாவலர் ஆசிலையும்

நடுக்கப் படிக்கின்ற கல்விகள்
ளார்; இந்தத் தாரணியில்

கொடுக்கப் படிக்கின்ற கல்விநன்
முயலுந்து கூடியபின்,

நடக்கப் படிக்கின்ற நாட்டார்
விழுமலை நாரதிபரே!

என்ற பாடி முடித்தார் புலவர். பாட்டின் நுட்பம் பழைய கதையை அடிப்படையாகக் கொண்டதாதலால் எல்லோருக்கும் விளங்கவில்லை. ஆயினும், அவ்வரசனுக்கு விளங்கிவிட்டது. அப்படியே வெட்கிப் போனான்; தன் சிறுமையை எண்ணி வருந்திப் புலவரிடம் மன்னிப்புக் கேட்டான்; பின்பு தன்னூர் திரும்பி நல்ல முறையிலே கற்றவர்களிடம் ஒழுகினான்.

படிப்பது எதற்காக என்ற வினாவுக்கு விழுமலைப் புலவர் கூறுகின்ற விடை நாம் கவனித்தற்குரியது. கல்வியானது மக்களுக்கு ஒழுக்கத்தைப் புகட்ட வேண்டும் என்பது அவர் கூற்று.

நடக்கப் படிக்கின்ற நாட்டார்
விழுமலை நாரதிபரே

என்பது இந்த முதல் லட்சியத்தை நமக்குச் சுட்டிக் காட்டுகிறது.

---

# பெண்ணும்




# பட்டும்

எப்பொழுதும் பிரிந்தே இருந்த
தில்லை. பகட்டும் மினுக்கும்
ஜ்வலிக்கும் மிருதுவான பட்டுட
னேயேதான் சேர்ந்து வந்திருக்
கிறது. நீங்கள் எங்கள் பட்டு
துணிகளை வாங்கும்பொழுது மிக
உயர்ந்த ரகத்தையே வாங்கு
கிறீர்கள்

**ஸவுத் இந்தியன்
ஸில்க்ஸ் லிமிடெட்**

குடியாத்தம் தென் இந்தியா

# வானொலி மண்டலம்





மீனாக்ஷி ராமகிருஷ்ணன்



சரோஜினி



லீலா



எம். கல்பகம்



சாஸ்வதி பலராமன்

# வானொலி மண்டலம்



எஸ்.அன்னபூரணி



கே.தமயந்தி



வஸந்தகுமாரி



வி.ஆர்.சந்திரா



ராஜம் வெங்கிடாசலம்

என்.வி.எஸ்.சரஸ்வதி



சீதாமணி





சூடாமணி

வானொலி மண்டலம்

கல்கி தீபாவளி மலர் 1943



என். ஏ. சுந்தரம்



நீலம்மா கடம்பி



கௌசல்யா ரெட்டி



கே. கோமதி



மதுரா
அனந்தலக்ஷ்மி



ஜி. கே. சம்பூர்ணம்



லோகா சுப்ரமண்யம்



டி. எல். வி. கல்பகம்



டி. ஆர். நவநீதம்



சாவித்திரீ அம்மாள்

சரஸ்வதி
லக்ஷ்மி ராம
சுப்பன்





கீரனூர்
ஜயலக்ஷ்மி



குமாரி ருக்ம
ரங்கநாயகி



அபிராம
சுந்தரி

குமாரி
ரத்தினம்



# ஜலமோகினி

ஃகீணஜா

"பகவதி! தீபாவளிக்கு உனக்கு நான் என்ன பரிசளிக்கப் போகிறேன் தெரியுமா? ஒரு மலேயான முண்டும், துண்டுந்தான்" என்றேன் நான் பகவதியைப் பார்த்து. பகவதியின் முகம் சிவந்தது. "ஐயோ! போதுமே! இன்னமுமா அந்தச் சம்பவத்தை நினைவு வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்றாள்.

"பகவதி! அந்தச் சம்பவத்தை மறப்பதா? ஒரு நாளும் இல்லை. அன்று அந்த மாமரத்தடியில் நின்று கொண்டு கையைக் கொட்டிச் சிரித்தாயே! அதை நினைத்தால் மறுபடியும் உன்னைச் சிறு பெண்ணாகப் பார்க்க மாட்டோமா என்றிருக்கு" என்றேன். "இருக்கும்! இருக்கும்! நன்றாக நினைத்துக்கொண்டிருங்கள். நான் போகிறேன்" என்று சொல்லிக் கடைக் கண்ணால் என்னைப் பார்த்துக் கொண்டே எழுந்து போய் விட்டாள் பகவதி. என் நினைவும் பல நாட்களுக்கு முன் சென்றது.

• • •

என் மாமன்மார்களுள் ஒருவர் மலேயாளத்தில் இருந்தார். பாலக்காட்டில் தம் மாமனார் வீட்டிலேயே வசித்து வந்தார். அவர் மட்டும் எப்போதாவது வந்து எங்களையெல்லாம் பார்த்துவிட்டுப் போவார். ஆனால் அவர் மனைவியையோ, அவருடைய பெண் பகவதியையோ நான் வெகு காலம் வரை பார்த்ததில்லை. ஒரு சமயம் நாங்கள் எல்லோரும் அவரைக் கட்டாயம் மாமியையும், பகவதியையும் அழைத்துக் கொண்டு வரும்படி தொந்தரவு செய்தோம்; அடுத்த தடவை வரும்போது பகவதியை மட்டும் கூட்டிக்கொண்டு வருவதாகச் சொன்னார். அவ்விதமே அடுத்த தடவை பகவதியுடன் வந்து சேர்ந்தார். இடுப்பில் மலேயான முண்டும், மேலே ஒரு வெள் பட்டுச் சட்டையும், துண்டுமாக வந்து இறங்கிய பகவதியைப் பார்த்தவுடன், நானும் என் தங்கையும் விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கினோம். "நன்றாக இருக்குடா! குழந்தை நம்மைப் பார்க்கணு மென்று வந்திருக்கிறாள்! அவளைப் பார்த்துச் சிரிக்கிறாயா? அழகாயிருக்கு" என்று கடிந்து விட்டு, என் அம்மா தன் மருமகளைக் கட்டியணைத்துக் கொண்டாள்.

சில தினங்களில் பகவதி எங்களுடன் சிநேகமாகி விட்டாள். அவள் என் மாமாவிடம் கற்றுக்கொண்ட தமிழிலேயே எங்களுடன் பேசினாள். ஆனால் சில சமயம் தெரியாத வார்த்தைகளை மலேயாளத்திலும், கொச்சைத் தமிழிலும் சொல்லுவாள். அப்போதெல்லாம் நாங்கள் சிரித்து விடுவோம். அழுதுகொண்டிருந்த என் தம்பியை, "எந்தா குட்டி கரையுது?" என்று சொல்லிக்கொண்டே பகவதி தூக்கிக் கொள்வாள். அன்று முழுதும் அந்த வார்த்தையையே சொல்லிச் சொல்லி அவளைக் கேலி செய்து கொண்டிருப்போம்.

அன்று என் தாயார் மாமாவுக்கு விருந்துச் சமையல் மும்முரமாகச் செய்து கொண்டிருந்தாள். அம்மாவுக்கு உதவியாகச் சுற்றுக் காரியம் செய்வதில் என் தங்கையும், பகவதியும் ஈடுபட்டிருந்தார்கள். அம்மா பகவதியிடம், "காமரா உள்ளில் அரிசியிருக்கு. ஒரு படி அளந்து போட்டுக் கிணற்றடியில் களைந்து கொண்டு வா" என்று சொல்லிப் பாத்திரத்தை அவள் கையில் கொடுத்தாள். சிறிது நேரத்தில் பகவதி, "களைந்து விட்டேன் அத்தை" என்று சொல்லிப் பாத்திரத்தை அம்மாவிடம் கொடுத்தாள். பாத்திரத்தைக் கையில் வாங்கியவுடன் அம்மா, "அரிசி எங்கேடி?" என்றாள். "அரிசியைக் கிணற்றண்டை களைந்து விட்டேன் அத்தை!" என்றாள் பகவதி. "அடி அசட்டுப் பெண்ணே! அரிசியை என்ன செய்தாய்?" என்று கேட்டுக் கொண்டே கிணற்றடிக்கு ஓடினாள் அம்மா. நானும் பின் தொடர்ந்தேன். கிணற்றடியில் ஒரு மூலையில் அரிசி கொட்டப் பட்டிருந்தது! மலேயாளத்தில் 'களைந்து விடு' என்றால் 'கொட்டி விடு' என்று அர்த்தமாம்!

அன்று மாமாவும் பகவதியைக் கேலி செய்வதில் எங்களுடன் சேர்ந்து கொண்டார். "அரிசியை யாராவது கொட்டச் சொல்வார்களா? நன்றாகக் கேட்டுக் கொண்டு செய்ய வேண்டாமா? அசடே!" என்று சொல்லிச் சிரித்தார். வெறும் வாயை மெல்லுகிறவனுக்கு ஒரு பிடி அவல் அகப்பட்ட மாதிரி, அன்று பகவதியைக் கேலி செய்வதில் எனக்கு ஏற்பட்ட உற்சாகம் கொஞ்ச நஞ்சமல்ல. நாங்கள் கேலி செய்ததும் அவள் முகம் எப்படிச் சிவந்தது! கண்களில் முத்துப் போல் நீர் துளித்தபோது அவள் எவ்வளவு அழகாயிருந்தாள்!

● அன்று மாலை அவளை உற்சாகப் படுத்துவதற்காக வெளியில் அழைத்துச் சென்று எங்கள் கிராமத்தையும், கோவிலையும், குளத்தையும் சுற்றிக் காண்பித்தேன். குளத்துப் படியில் நான் உட்கார்ந்தேன். பகவதி படிக் கட்டின் ஓரத்தில் கட்டப்பட்டிருக்கும் கைப்பிடிச் சுவர்மேல் உட்கார்ந்தாள். நான், "பகவதி! அங்கே உட்காராதே; ஒரு சமயத்தைப் போல் இருக்காது. சறுக்கினால் குளத்தில்தான் விழவேண்டும்" என்றேன். ஆனால், பகவதி என் வார்த்தையைப் பொருட்படுத்தாமல் உட்கார்ந்துகொண்டு, வேண்டு மென்றே சறுக்கிச் சறுக்கிக் கொண்டு ஜலத்தருகில் போய் விட்டாள். எனக்கு உள்ளூற பயம் உதைத்துக் கொண்டேயிருந்தது. தப்பித் தவறி ஜலத்தில் விழுந்துவிட்டால் என்ன செய்வது?

"இதோ எழுந்து விட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே சட்டென எழுந்தாள் பகவதி. நான், என் வேஷ்டி முனையில் மாட்டிக் கொள்ளவே தடுக்கி விழுந்தாள் குளத்தில்! "பகவதி! பகவதி!" என்று அலறினேன். சுற்று முற்றும் பார்த்தேன். அங்கு யாருமே இல்லை. எனக்கோ நன்றாக நீந்தத் தெரியாது. சட்டையைக் கழற்றி எறிந்து விட்டுத் துணிந்து குளத்தில் இறங்கினேன். அப்போதுதான் மறுபடியும் வெளியில் கிளம்பிய பகவதியின் தலை மறைந்தது. அவள் கூந்தலின் அடையாளத்தைக் கொண்டு நீந்திச் சென்

தேன் அவ்விடத்திற்கு. ஆனால், நான் சென்று பார்த்த போது என் கையில் ஒன்றும் அகப்படவில்லை! மெள்ளக் குளத்தையே ஒரு சுற்றுச் சுற்றிவிட்டேன். ஒரு பயனும் இல்லை. எனக்கோ மூச்சுத் திணறுகிறது. அரை குறையான என் நீச்சலை நம்பிக்கொண்டு குளத்தில் இறங்கிய எனக்கு, உயிருடன் கரையேறுவோமா என்றாகி விட்டது. கைகள் சளைத்துப் போய் விட்டன. மெள்ளக் குளத்திற்குள் ஓடியிருந்த மாமரத்தின் வேரைப் பிடித்துக்கொண்டு சற்று நின்று என்னை ஆசுவாசப் படுத்திக்கொண்டேன்.

அப்போது கரையில் கல கல வென்று யாரோ கைதட்டிச் சிரிக்கும் சப்தம் கேட்டு நிமிர்ந்தேன். என்ன விந்தை! அந்த மாமரத்தடியில் நின்று சிரித்தது பகவதிதான்! கருமேகம் போல் தொங்கிய அவள் கூந்தலிலிருந்து தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்தது. ஜலமோகினிபோல் நின்ற பகவதி என்னைப் பார்த்து, "இத்தனூண்டுத் தண்ணீரில் நீஞ்சத் தெரியாமல் திண்டாடுகிறாயே! இனிமேல் என்னைக் கேலி செய்வதில்லை என்று சொல்லு; உன் உயிரைக் காப்பாற்றிக் கரை சேர்க்கிறேன்!" என்றாள்.

அவமானத்தால் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு உயிரை விட்டு விடலாம்போல் தோன்றியது. பரிதாபமாகப் பகவதியைப் பார்த்தேன். அவள் துள்ளிக் குதித்தாள் குளத்தில்! என் கைகளைப் பற்றி இழுத்துக் கொண்டு வந்து என்னைக் கரை சேர்த்தாள். நான் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்து, "உனக்கு நீச்சத் தெரியுமென்று ஏன் சொல்லவில்லை?" என்றேன். அதற்கு அவள், "இதோ நீஞ்சியே காட்டுகிறேன் பார்!" என்று சொல்லிவிட்டு மறுபடியும் தண்ணீரில் குதித்து, தண்ணீருக்குள்ளேயே ஒரு முறையும், தண்ணீருக்கு மேலாக ஒரு முறையும் நீந்திக்காண்பித்தாள். அந்த அந்திப் பொழுதில் மீன் குட்டிபோல் அவள் நீந்திக்கொண்டு வந்த காட்சி வெகு ரம்மியமாயிருந்தது. அப்புறம் பகவதி சொன்னதிலிருந்து, மலையாளத்தில் இந்த வயதுக் குழந்தைக்குக்கூட நீந்தத்தெரியும் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

சில தினங்களில் பகவதியும் அவள் தந்தையும் ஊருக்குச் சென்றனர். போகும்போது பகவதி என்னிடம் வந்து, "நான் இன்னொரு தடவை வரும்போது எப்படித் தமிழ் பேசுகிறேன் பார்!" என்று சொல்லி விட்டுச் சென்றாள்.

● வருஷங்கள் பல ஓடி மறைந்தன. நான் சிறு வயதில் எவ்வளவுக்கெவ்வளவு அரட்டையடித்தேனோ அவ்வளவுக் கவ்வளவு இப்போது பிறருடன் பேசவே சங்கோசப்பட்டேன்! நான் சிறு வயதில் செய்த ஒவ்வொரு செய்கையையும் இப்பொழுது நினைத்துப் பார்த்தால் எனக்கே வெட்கமாக இருந்தது. பகவதியைப் பற்றிய நினைவுகள் அடிக்கடி தோன்றும். அப்பொழுதெல்லாம் ஒரு இன்பமும் வேதனையும் உண்டாகும். அன்று மாமரத்தடியில் ஜலமோகினிபோல் பகவதி நின்ற காட்சி என் மனதைவிட்டு அகலவேயில்லை. அவள் என் உள்ளத்தில் அழியாத இடம் தேடிக் கொண்டுவிட்டாள். ஆனால், அவளும் என்னைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பாளோ? நான்தான் சதா அவளைக் கேலி செய்து, அவள் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டேனே! என் நினைவு அவளுக்கு இருந்தாலும்அது சந்தோஷமான நினைவாக இருக்க முடியாதல்லவா?

கலாசாலை விடுமுறை நாட்களை என் நண்பனுடன் கழிக்கத் தீர்மானித்தேன். அவனுடன் அவன் ஊரான பாபநாசத்திற்குச் சென்றேன். அப்போது தான் அவ்வூர் ஹைஸ்கூலில் வருஷ விழாக் கொண்டாட ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். தென்காசியில் அப்பொழுது சப் கலெக்டரா யிருந்த ஒரு ஐ. ஸி. எஸ். காரரை விழாவுக்குத் தலைமை வகிக்க அழைத்திருந்தார்களென்று தெரிந்தது. வருஷ விழா நாளும் வந்தது. விசேஷமாக ஐ. ஸி. எஸ். அவர்களை வரவேற்று உபசரிக்க வெகு நேர்த்தியான ஏற்பாடுகளையெல்லாம் செய்திருந்தார்கள். குறித்த நேரத்தில் தென்காசியிலிருந்து காரும் வந்து சேர்ந்தது. அதிலிருந்து இறங்கிய ஐ. ஸி. எஸ். வாலிபரைத் தொடர்ந்து இறங்கினாள், ஒரு யௌவன மங்கை. என் கண்களை நன்றாகத் திறந்து பார்த்தேன்! கண்களை நம்ப முடியவேயில்லை. அவள் யார்? என் மாமன் மகள் பகவதிதான்!



நீல நிறப் புடவையும், ரோஜா நிற ஜாக்கெட்டும் அணிந்து நின்ற அவள் தோற்றம் வெகு அற்புதமாக இருந்தது. அவள் இப்போது வெகு நேர்த்தியாக வளர்ந்திருந்தாள்! அவள் கரிய கூந்தல் சுருண்டு சுருண்டு நெற்றியில் புரண்டு அவள் அழகை இன்னும் அதிகமாக்கிற்று. ஐ. ஸி. எஸ். வாலிபரும் அழகாகவே இருந்தார். ஆம்! அவருக் கேற்றவர்

அவர்தான். என் கண்களை இமைக்காமல் இடி விழுந்ததுபோல் ஸ்தம்பித்து நின்றேன். அவர்கள் இருவரையும் பார்க்கப் பார்க்க ஆத்திரமாகத்தான் இருந்தது. "இப்படியும் இருக்குமா? நமக்கு ஒரு கல்யாணக் கடிதாசு கூட இல்லாமல் பகவதிக்குக் கல்யாணம் ஆகியிருக்குமா? இருந்தாலும் அவள் திரும்பும்போது அவளைப் பார்த்து ஒரு வார்த்தை கேட்டு விடவேண்டும்" என்று தீர்மானம் செய்து கொண்டேன்.

இந்த சமயத்தில்தான் பகவதியின் பார்வை தற்செயலாக என் மேல் விழுந்தது. அவள் என்னைப் பார்த்தவுடனே சட்டென்று கண்ணைச் சுழற்றி முகத்தைத் திருப்பிக்கொண்டாள். உலகமே என்னைச் சுற்றிச் சுழல்வதுபோல் இருந்தது. ஆமாம்; அவளுக்கு என்னைப்பார்க்க எப்படி இஷ்டம் இருக்கும்! ஒரு பணக்கார ஐ. ஸி. எஸ். அருகில் இருக்கும்போது மேன்மை தங்கிய சோட்டியாரின் பார்வை என்மேல் எப்படி விழும்? அந்த நொடியில் எனக்கு உலகமே கசந்து விட்டது. இதற்கு மேல் அங்கே இருக்க இஷ்டம் இல்லாமல் ஒருவர் கண்ணிலும் படாமல் வெளியே வந்தேன்.

அன்று சாயங்காலம் என் சிநேகிதன் என்னைப் பார்த்ததும், "ஏண்டா! ஏன் இப்படி நடுவில் ஓடி வந்துவிட்டாய்? கூட்டம் முடிந்ததும் அந்த ஐ. ஸி. எஸ். உன்னைப் பார்க்க வேண்டுமென்று தேடினாரே!" என்றான்.

"எதற்காக என்னைப் பார்க்கவேண்டுமாம்? ஐ. ஸி. எஸ். காரர்களிடம் எனக்கு ஒரு வேலையும் இல்லை. அவர்கள் முகத்திலேயே விழிக்க மாட்டேன்" என்றேன் நான்.

● படிப்பு முடிந்ததும் காட்டிலாகாவில் நூற்றைம்பது ரூபாய் சம்பளத்தில் உத்யோகம் பெற்றேன். அப்போது பலர் எனக்குப் பெண்கொடுக்கப் போட்டியிட்டனர். கடைசியாக ஒரு மிராசுதாரின் பெண்ணை நாட்டுப் பெண்ணாக ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தாள் என் தாய். அவளுக்கு எல்லாவிதத்திலும் அச் சம்பந்தம் பிடித்து விட்டது. அம்மா என்னிடம் வந்து, "பெண்ணைப் பார்க்க வருகிறாயா?" என்று கேட்டாள். "முடியவே முடியாது. கல்யாணமே வேண்டாம்" என்றேன் நான். ஆனால் நூற்றைம்பது ரூபாய் சம்பளத்திலுள்ள என்னைப் பெண்ணின் பெற்றோர்கள் பிரம்மசாரியாக இருக்க விடமாட்டார்கள் அல்லவா? ஆகவே, ஏதாவது ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டால் போச்சு என்று எண்ணினேன். "நான் பெண்ணைப் பார்க்க வேண்டுமென்ற அவசியம் இல்லை. நீங்கள் பார்த்து உங்களுக்குப் பிடித்தால் முகூர்த்தம் வைத்துவிடலாம்" என்று சொல்லிவிட்டேன்.

முகூர்த்த நாள் குறிக்கப்பட்டது. மாமாவுக்குப் பத்திரிகை அனுப்பி அவரையும் பகவதியை அழைத்து வரும்படி அம்மா கடிதம் எழுதி விட்டு என்னிடமும் சொன்னாள். அவள் ஒரு நாளும் வரப் போவதில்லையென்று நான் எண்ணினேன்.

கல்யாணத்திற்கு முதல் நாள் யாத்ரா தானம் செய்துவிட்டுப் புறப்படுகிற சமயத்தில் வந்து சேர்ந்தார்கள் பகவதியும் அவள் மாமாவும்; அவர்களுடன் அந்த ஐ. ஸி. எஸ். காரரும் வந்திருந்தார். எல்லோரும் சேர்ந்து கல்யாணத்திற்குச் சென்னைக்குப் புறப்பட்டோம். பாபநாசத்தைப் பற்றி அவள் பேச்செடுக்கவே இல்லை.

பட்டணம் சேர்ந்து ஜாகையில் இறங்கிய பிறகு, அந்த ஐ. ஸி. எஸ். காரர் வலிய வந்து என்னோடு பேசினார்: "பகவதிக்குச் சதா உங்கள் பேச்சுத் தான். ஏன் நீங்கள் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? பெண்ணைப் பிடிக்க வில்லையா? அல்லது வேறு ஏதாவது



மீன் குட்டி போல் அவள் நீந்திக் கொண்டு வந்த காட்சி வெகு ரம்மியமாக விருந்தது.

குறையுண்டா?" என்று கேட்டார். அப்பொழுது அங்கு வந்த பகவதியும் அவருடன் சேர்ந்து கொண்டு "அப்பொழுதெல்லாம் எவ்வளவு குஷியாகப் பேசுவீர்கள்? இப்பொழுது உங்கள் குரலையே கேட்க முடியவில்லையே, ஏன்?" என்று கேட்டாள். நான் பெண்ணைப் பார்க்கவில்லை என்பதை ஒருவாறு கடைசியில் ஒப்புக் கொண்டேன். உடனே பகவதி என் அம்மாவைக் கூப்பிட்டுத் தான் பெண்ணைப் பார்க்க வேண்டும் என்றும், பெண்ணைக் கூட்டிக் கொண்டு வரும்படியும் சொல்லி அனுப்பினாள்.

சிறிது நேரத்தில் பெண்ணும் வந்தாள். "லலிதா! இப்படி வந்து எல்லோரையும் நமஸ்காரம் செய், அம்மா!" என்றாள் என் அம்மா. பாவம், அந்தப் பெண் எல்லோரையும் நமஸ்காரம் செய்தாள். அவள் நல்ல அழகிதான். ஆனால் என் மனம் அவளை ஏற்க எவ்விதம் சம்மதிக்கும்?

● நான் தனியாக உட்கார்ந்து சிந்தனை செய்து கொண்டிருந்தேன். ஐ. ஸி. எஸ். காரரும் பகவதியும் அங்கே வந்து, "ஏன் முகம் வாட்டமாக இருக்கிறது?" என்று விசாரித்தார்கள். "ஏது? நாளைக்கு நீங்களே மனையில் உட்கார்ந்து விடுவீர்கள் போலிருக்கே!" என்று அவரைக் கேலி செய்தாள் பகவதி.

"இல்லை. பெண் அழகாகத் தான் இருக்கிறாள். நீ நேற்றுப் படித்துக் கொண்டிருந்தாயே, அந்தப் புஸ்தகத்தைக் கொஞ்சம் கொடேன்! பொழுதே

போகவில்லை" என்று பகவதியைக் கேட்டார் வெசாம்பு ஐ. ஸி. எஸ்.

பகவதி பெட்டியைத் திறந்து ஒரு புஸ்தகத்தை எடுத்துக் கொடுக்கும்போது "பகவதி!" என்று கீழேயிருந்து அவள் தகப்பனார் கூப்பிடும் குரல் கேட்டது. அதை அவள் மேஜைமீது வைத்துவிட்டு அவசரமாகக் கீழே சென்றாள்!

ஐ. ஸி. எஸ். காரர் புஸ்தகத்தை எடுத்துக் கொண்டே என்னைப் பார்த்து, "நான் உங்கள் பிராண ஸ்நேகிதன் என்றே எண்ணுங்கள். ஒளியாமல் விஷயத்தைச் சொல்ல வேண்டும். ஏன் நீங்கள் ஏதோ மாதிரி இருக்கிறீர்கள்? உங்களுக்குப் பெண்ணைப் பிடிக்கவில்லையா?" என்று கேட்டார்.

"எனக்குப் பிடித்த பெண்ணை நான் மணக்க முடியவில்லை. வேறு எந்தப் பெண்ணும் எனக்குப் பிடிக்கப் போவதில்லை" என்றேன் துக்கத்துடன். அவர் என்னைக் கூர்ந்து கவனித்துக்கொண்டே "பிடித்த பெண் யார்?" என்று கேட்டார். "அவள் யார் என்று சொன்னால் நீங்கள் வருத்தப்பட நேரிடும். அதை மட்டும் தயவு செய்து கேட்கவேண்டாம்" என்றேன்.

"நான் ஏன் வருத்தப்பட நேரிடும்? நீங்கள் சொல்லுவது எனக்கு ஒன்றும் புரியவில்லையே" என்று சொல்லிக்கொண்டே புஸ்தகத்தைப் புரட்டினார். அப்பொழுது ஒரு படம் புஸ்தகத்திலிருந்து நழுவிக் கீழே விழுந்தது. குனிந்து அந்தப் படத்தை எடுத்தவர் அதை என்னிடம் கொடுத்தார். அதை வாங்கிப் பார்த்த நான் அப்படியே திகைத்துப்போனேன்.

கையால் வரையப்பட்ட அப் படம் என்னுடையதே தான். அதன் அடியில் 'பகவதி' என்று கையெழுத்தும் இருந்தது.

நான் வியப்பை அடக்கிக்கொண்டு "பகவதி வெகு நன்றாகச் சித்திரம் வரைவாள் போலிருக்கிறது" என்றேன்.

"சித்திரம் வரைவதில் அவள் கெட்டிக்காரி என்று சொல்ல முடியாது. ஆனால், இப் படத்தில் அவள் மனதில் பதித்து வைத்துக்கொண்டிருக்கும் உருவத்தை அப்படியே தத்ரூபமாக வரைந்திருக்கிறாள். அதுவரை என் தங்கை கெட்டிக்காரிதான்."

"தங்கையா? என்ன சொன்னீர்கள்?" என்று திடுக்கிட்டுக் கேட்டேன்.

"உங்கள் மாமாவின் மூத்தாள் பிள்ளை நான்: இளையாள் பெண் அவள். அவள் என் தங்கை. இது உங்களுக்குத் தெரியாதா?" என்றார்.

"நான் உங்கள் தங்கையல்ல என்று யார் சொன்னது?" என்று கேட்டுக்கொண்டே வந்த பகவதி, என் கையிலுள்ள படத்தைப் பார்த்துக் கோபத்துடன், "யார் உங்களை இப்படியெல்லாம் படத்தை எடுத்துக் காண்பிக்கச் சொன்னது?" என்று கேட்டாள்.

வெசாம்பு ஐ. ஸி. எஸ். சிரித்துக் கொண்டே, "பகவதி! கோபித்துக் கொள்ளாதே! உனக்குச் சித்திரமும் வரையத் தெரியும் என்று காண்பிப்பதற்குத்தான் இதை இவரிடம் கொடுத்தேன். ஏன்? அவர் கூட நன்றாகச் சித்திரம் வரைவார். இதோ பார்!" என்று தம் கோட் பையிலிருந்து ஒரு படத்தை எடுத்துக் கொடுத்தார்.

என் தலை சுழன்றது. என் பெட்டியில் நான் ரகசியமாய் வைத்திருந்த பகவதியின் படம் அவர் கைக்கு என்னமாக வந்தது? வெசாம்பு என்னைப் பார்த்து, "படம் எப்படி என்னிடம் வந்தது என்று தானே பார்க்கிறீர்கள்? நான் வேறு உடுப்பு அணிவதற்காகச் சற்று முன் என் பெட்டியைத் திறந்தேன்.

அதில் இந்தப் படம் இருந்ததைப் பார்த்து அதிசயித்தேன். அப்பொழுதுதான் உங்கள் பெட்டியைத் தவறாகத் திறந்து விட்டதை அறிந்தேன். நம் இருவருடைய பெட்டியும் ஒரே மாதிரியாக இருந்ததே தவறுக்குக் காரணம். ஆனால் நான் இதைத் தவறாக எண்ணவில்லை. இளம் உள்ளங்களில் ஏற்பட்ட தெய்வீக அன்பைச் சேர்த்து வைக்கத்தான் அந்தப் படத்தை எடுத்து வைத்துக் கொண்டேன்! பகவதியின் மனம் எனக்கு வெகு நன்றாகத் தெரியும். ஆகவே, இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விட்டால் அப்புறம் என் தங்கை பிரம்மசாரிணியாக இருக்க நேரிடும் என்பதை அறிந்தே, அவள் புத்தகத்தையும் எடுத்து வரச் சொன்னேன்" என்றார்.

"இப்பொழுது இதையெல்லாம் பேசி இன்னும் சிறிது நேரத்தில் மணையில் உட்காரப் போகும் அவர் மனதை ஏன் குழப்பி விடுகிறீர்கள்?" என்றாள் பகவதி.

"அவசரப்படாதே, பகவதி! நீதான் சற்று முன் சொன்னாயே—'நாளைக்கு நீங்களே மணையில் உட்கார்ந்து விடுவீர்கள் போலிருக்கிறதே' என்று. அதை உண்மையாக்கப் போகிறேன்" என்றார். நானும் பகவதியும் அவரை நன்றியுடன் பார்த்தோம்.

"மாப்பிள்ளை எங்கே என்று இதே பெல்லாம் தேடுகிறார்களே" என்று சொல்லிக்கொண்டே வந்தார் மாமா. பகவதியும் வெசாம்புவும் அவரிடம் விஷயத்தைச் சொன்னார்கள். இதைக் கேட்ட மாமா "பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. இதோ போய் எல்லோருடைய சம்மதத்தையும் பெற்றுக் கொண்டு வருகிறேன். ஐ. ஸி. எஸ். ஸுக்குப் பெண் கொடுக்க வலிக்குமா?" என்றார்.

அன்று மாலை, நான் மனம் விட்டுப் பகவதியுடன் பேசிக் கொண்டிருந்தபோது, பாபநாசத்தில் அவள் என்னைப் பார்த்து முகத்தைத் திருப்பிக்கொண்ட விஷயத்தைப் பிரஸ்தாபித்தேன். அவள் சொன்ன பதில் என்னைத் திடுக்கிட வைத்தது. அவள் வெறுப்பினால் முகத்தைத் திருப்பிக்கொள்ளவில்லை யென்றும், வெகு நாட்களுக்குப் பிறகு என்னைப் பார்த்ததால் உண்டான உணர்ச்சியோடும் நாணத்தோடும் முகத்தைத் திருப்பிக் கொண்டாளென்றும் தெரிந்து கொண்டேன்.

ஸ்ரீ வெசாம்பு ஐ. ஸி. எஸ். நல்ல சுப முகூர்த்தத்தில் லலிதாவின் கழுத்தில் மஞ்சள் கயிற்றால் மூன்று முடிச்சுக்களைப் போட்டார். அதே முகூர்த்த தினத்தில் எங்களுக்கும் விவாகம் ஆயிற்று.

* * *

மிருதுவான ஸ்பர்சம் பட்டுச் சிந்தனை கலைந்தேன். என் கண்களை பகவதி தன் மலர்க்கையால் பொத்தினாள். கையை விலக்கித் திரும்பிப் பார்த்தேன். பகவதி மோகனப் புன்னகை செய்தாள்.

"இன்னுமா யோசனை?" என்றாள். "ஆமாம். மலையான மூன்று என்ன விலை இருக்கும் என்று யோசிக்கிறேன்?" என்றேன்.

"மறுபடியும் கேலிதானா?" என்றாள் பகவதி.

"ஆமாம், ஜலமோகினி" என்றேன் நான்.

"இப்படி என்னைக் கூப்பிடுகிறவரையில் நான் இங்கே வரமாட்டேன்!" என்று கூறிச் சென்றாள். சிறிது நேரத்துக்கெல்லாம் திரும்பிப் பார்த்தேன்; ஜலமோகினி குளத்தில் நீந்திக் கொண்டிருந்தாள்.

## அப்பவே சொல்லப்படாதோ?



அவரது வாழ்க்கையும் ....



அதோ, 'பட், பட், படார், படார்' என்ற பீரங்கிகள் வெடி தீர்க்கும் சத்தம் காதுகள் செவிடு படும் போல் இருக்கிறது. நமது பீரங்கிப் படை எதிரி சைன்யங்களை நிர்மூலமாக்கிக் கொண் டிருக்கிறது.




ஆகா! எத்தனை டாங்கிகள், விமானங்கள், லாரிகள், மற்றும் தளவாடங்கள் இதோ மலைபோல் குவிந்து கிடக்கின்றன! இவ்வளவையும் நேற்று நடந்த கோர யுத்தத்தில் எதிரிகள் போட்டுவிட்டுத் தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று ஓடிப் போனார்கள்.




நம்முடைய தர்மக்கட்சியில் கடவுள் இருக்கிறார், என்பதில் இதுவரையில் ஏதேனும் சந்தேகம் இருந்தாலும் அது இப்போது தீர்ந்துவிட்டது. கடவுள் எதிரியை அழிக்க 'பிளேக்' நோயையும் அனுப்பி யிருக்கிறார். இன்று நாம் கைப்பற்றிய எதிரிப் பிரதேசத்தில் ஆயிரம் பதினாயிரக் கணக்கில் செத்த எலிகள் கிடக்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சிதான்!

# பரிதாப முடிவும்

-உம்மன்















## நமது பேனா முனை நிருபர்









# உமது குழந்தை ஈரல் குலைகட்டி பெருத் திருந்தால்



எவ்வித வைத்திய முறையிலும் குணப்படுத்த முடியாதிருந்த இக்குறைவை, ஓர் அற்புத ஆராய்ச்சி முறையினால் வைத்தியத்திற்கு கட்டுப்பட்டு, சென்ற 36 வருஷங்களாக பல்லாயிரக்கணக்கான குழந்தைகளை காப்பாற்றியுள்ளது. இந்தியா பூராவிலுமுள்ள வைத்திய நிபுணர்களால் போற்றப்பட்டது.

## ஜம்மியின் லிவர் க்யூர்

உபயோகியுங்கள்.

ஈரல் குலைகட்டி முதலியவைகளுக்கு இது ஒரு அற்புத நிவாரணி.

எல்லா மருந்துஷாப்பிலும் கிடைக்கும்.

ஜம்மி வெங்கடரமணய்யா அண்ட் சன்ஸ்,
மைலாப்பூர் — மதராஸ்.
சப் ஆபீஸ்: கும்பகோணம். பிராஞ்சுகள்: கல்கத்தா, லக்னோ, பம்பாய், பெங்களூர், திருச்சிராப்பள்ளி, விஜயநகரம்.

## ஸ்திரீயின் அழகின் மகத்தான சிகரம்

மிருதுவான, செழிப்பான கூந்தல்தான்.



உங்கள் அழகைக் காப்பாற்றிக் கொள்ளவும், வளர்க்கவும்

**காமினியா ஆயில்** (ரிஜிஸ்டர்டு)

சிறந்ததும் பரிசுத்தமுள்ளவையுமான மூலிகைகளைக் கொண்டு இது தயாரிக்கப்படுவதால் சகலவிதமான தலைவலிகளுக்கும் இது சஞ்சீவியாகும். மயிர்க்கால்களைப் பலப்படுத்தி, கூந்தல் உதிராமல் செய்கிறது. அதன் சுகந்த நறுமணம் மனதிற்கு இன்பம் தருவது.

**காமினியா ஆயில்**

தேசமெங்குமுள்ள நூற்றுக் கணக்கான பிரமுகர்களின் தங்க மெடல்களும் சர்ட்டிபிகேட்டுகளும் பெயர்களும் பெற்று விளங்குகிறது.




எங்கும் கிடைக்கும். எல்லா மருந்து வியாபாரிகளிடமும் ஷாப்புகளிலும் கிடைக்கும்.

வாசனைகளின் அரசன்

**ஆட்டோ டில்பஹார்** (ரிஜிஸ்டர்டு)

உலகமெங்கும் இது உபயோகிக்கப்படுவது ஒன்றே இதன் சிறப்புக்கு அத்தாட்சி. கைக்குட்டையில் ஒரு துளி பட்டால் போதும். மல்லிகை, சம்பங்கி வாசனை கமகமவென்று வீசும்.

சாம்பிளுக்கு 4 அணா அனுப்பவும்.

சோல் ஏஜண்டுகள்:
ஆங்கிலோ-இந்தியன்
டிரக் & கெமிகல் கம்பெனி,
285, ஜும்மா மஸ்ஜித் :: பம்பாய் - 2.

# இன்பத் தொல்லை

கு. ப. ராஜகோபாலன்

"ஏண்டா, எங்கே ஞாபகம் உனக்கு? நாலு மாழுகச் சீட்டைப் போடுகிறாயே!"

"ஆ, ஓ! என்ன, ஓகோ!" என்று அசடு தட்டின வண்ணம் ராஜு ஆட்டத்தில் கவனம் செலுத்த முயன்றான். ஆனால் மறுபடியும் அவன் மனம் அலைய ஆரம்பித்தது.

* * *

"நீயாக வந்தாலொழிய உன்னை வரும்படி நான் கடிதம் போடப் போவதில்லை இந்தத் தடவை!" என்று ராஜு, மனைவி பிறந்தகத்துக்குக் கிளம்பின போது வீராப்பாகச் சொன்னான்.

"இதோ பாருங்கோ! இரண்டு மாதங்களாவது ஆகும் வர! மன்னி பிரசவமாகி ஒரு மாதத்திற்குப் பிறகுதான் கிளம்ப முடியும். நடுவில் கடுதாசி கிடுதாசி போடக் கூடாது. தெரிகிறதா? என் தொல்லை இருக்காது. சௌக்கியமாக சிநேகிதாளோடு இஷ்டப்படி பேசிக்கொண்டு இருங்கள்!" என்று குறும்பாகப் பேசினாள் பங்கஜம்.

"அதான் சொன்னேனே, இந்தத் தடவை கடிதம் போடுகிற பேச்சே கிடையாது. நீ வருகிறபோது வா, ஆட்சேபனை இல்லை. குழந்தைகளை மட்டும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்!"

"நீங்கள் இங்கே குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளுகிறது நட்டுக்கெட்டுப் போகிறது!"

பங்கஜம் பிறந்தகத்திலேயே இரண்டு மாதங்களுக்கு மேலாக இருந்து விட்டாள். அவள் போகிற போது ராஜுவுக்கு உண்மையில் கொஞ்சம் விடுதலை உணர்ச்சி கூட இருந்தது. கொஞ்ச காலம் அவள் தொல்லை இல்லாமல், அவள் கோபங்களும் மனஸ்தாபங்களும் இல்லாமல், நிம்மதியாக இருக்கலாம் என்று எண்ணினான்.

அவள் ஊருக்குப் போன புதிதில் பத்து நாட்கள் ராஜுவுக்கு வெகு உற்சாகமாகவேதான் கழிந்தன. பங்கஜத்தின் கண்டிப்புகள், வற்புறுத்துதல்கள் இல்லாமல் இஷ்டப்படி இருந்தான். தன் சுவேச்சைப்படி இருப்பதாக எண்ணி, பங்கஜம் கூடாது என்று எந்தெந்த விஷயத்தைத் தடுத்தாளோ அதை யெல்லாம் ஒன்றுவிடாமல் செய்தான்—சினிமாவில் இரவில் இரண்டாவது ஆட்டத்திற்குப் போய்க் கண் விழிப்பது. காலை ஒன்பது வரை படுக்கையில் படுத்திருப்பது.—இப்படி. இவை யெல்லாம் எவ்வளவு நாள் செய்து பொழுது போக்கலாம்?

நாட்கள் செல்லச் செல்ல வீட்டிலும் வெளியிலும் ஒரு வெறுப்புத் தட்ட ஆரம்பித்தது. கிளப்பு சாப்பாடு கசக்க ஆரம்பித்தது. இரவில் வீட்டுக்கு வந்தால் என்னவோ போலிருந்தது. ஏக்கம் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தது. பங்கஜத்தின் கோபங்களும் மனஸ்தாபங்களும், அவனுடைய வாழ்க்கைக்கு அத்தியாவசியமானவைதானோ என்று தோன்ற ஆரம்பித்தது. கடந்து போன நாட்களின் சில சம்பவங்கள் நினைவுக்கு வந்து அவனை ஏக்கத்திலும் ஏமாற்றத்திலும் ஆழ்த்தின.

என்ன கோபமாக இருந்தாலும் பங்கஜம் இருந்தால் அவனுடைய சௌகரியங்களில் ஒன்றுகூடக் குறையாது. குளிக்கும் நேரத்தில் வெந்நீர் தயாராக இருக்கும். ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வரும்போது தினமும் ஒரு புதுமாதிரி சிற்றுண்டியாகச் செய்து வைத்திருப்பாள். ஆபீஸ் போகும்போது அவனுக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்துவிட்டுத்தான் தான் சாப்பிடப் போவாள். புதன், சனி அவன் எண்ணெய் தேய்த்துக் கொள்ளாவிட்டால் விடவே மாட்டாள்.

"ஆமாம், வாஸ்தவந்தான். நான் ஊருக்குப் போனா அப்பத் தெரியும் பவிஷு! உடம்பு குட்டிச்சுவர் தான். ஆமாம், இன்னிக்கி கிராப் பண்ணிக்கல்லியா? போங்கோ, வெந்நீர் காயறது!"

"நாழியாகி விட்டதேடி!"

"ஒன்றும் ஆகல்லே. பேசிண்டிருக்கிற போது இலே போட்டு வந்துடலாம்."



"உன் தொல்லை பெரிய தொல்லையாக இருக்கே! சரி, காவேரியிலேயே ஸ்நானம் பண்ணிவிட்டு வந்து விடுகிறேன்."

"படுக்கை போடறத்துக்கா? ஜலதோஷமும், தலை வலி நேத்திக்கு!"

"எனக்கு ஒன்றும் தெரியாதென்று வைத்து விட்டாயா?"

"சேச்சே, எல்லாம் தெரியுமே உங்களுக்கு!" என்று பங்கஜம் கேலி செய்வாள் சிரித்துக் கொண்டே.

நாட்கள் போகப் போக, அவை கழிவது அவனுக்கு வெகு சிரமமாகப் போய்விட்டது. சினிமா போனால் பங்கஜத்தின் ஞாபகம் வரும். கடைத் தெரு பக்கம் போனால் அவள் ஞாபகம். புடவை, ரவிக்கை புது தினுசாகப் பார்த்தால் அவள் விட மாட்டாள். பெட்டியில் டஜன் ரவிக்கைகள் தைத்து வைத்துக் கொண்டிருப்பாள். இன்னும் இரண்டு புதிதாக வேண்டும் என்பாள். "உன்னே இருக்கிறதை எல்லாம் என்ன செய்யப் போகிறாய்?" என்று அவன் கேட்டால் கோபம் வந்துவிடும்.

வெளியே போகும்போது அழகான பெண்களைக் கண்டால் பங்கஜத்தின் நினைப்பு!

"பங்கஜத்தின் மூக்கு இன்னும் எடுப்பு! அவள் நெற்றி இவ்வளவு குறுகி இருக்காது! ஐயய! இந்தப் பெண் அழகாய் இருந்தென்ன, வாத்து மாதிரி நடக்கிறாள்! பங்கஜம் நடையைப் பார்க்க வேண்டும். அவளைப்போல அழகாகக் கொசுவம் விட்டுப் புடவை கட்டிக்கொள்ள யாருக்கும் தெரியாது" — இந்த மாதிரி அவன் எண்ணங்கள் ஓட ஆரம்பிக்கும்.

தீபாவளி வந்து விட்டது. நல்ல வேளை. அதற்குச் சுபமாக வீட்டில் இருக்க வேண்டுமென்று குழந்தைகளுடன் கட்டாயம் வந்து விடுவாள்; நானும் கடிதம் போட்டு வரவழைத்ததாக இருக்காது—என்று சரு நிச்சயம் செய்து கொண்டு, இரண்டு நாட்கள் முன்னதாகவே சென்று வேண்டிய புடவை, ரவிக்கை, குழந்தைகள் சட்டை இவைகளை வாங்கிக் கொண்டு வந்து வைத்து விட்டான்.



அன்று காலை வண்டியிலும் அவள் வரவில்லை. விடிந்தால் தீபாவளி. சருவுக்குக் கோபம் அடக்க முடியாமல் வந்தது. பங்கஜம் வராமற் போனால் அதற்கு மேல் ஒரு நாள் கூடத் தன்னால் முடியாது என்ற நிலைமைக்கு வந்துவிட்டதால்தான் அவனுக்கு அவ்வளவு ஆத்திரம் வந்தது.

"அழைத்துக் கொண்டு வரச் செய்கிறேன்!" என்று சொல்லிக்கொண்டு நாராயணஸ்வாமிக்கும் போய் ஒரு தந்தி கொடுத்தான்:

"உடம்பு சௌகரியம்: உடனே புறப்படு."

இதற்குச் சும்மா இருக்க மாட்டாள். இரவு ஒன்பது மணிக்குத் திருச்சி வரும் வண்டியில் கட்டாயம் வந்து விழுந்து விடுவாள் என்று எண்ணி இருட்டினதும் சட்டென்று சாப்பாட்டை முடித்துக் கொண்டு வந்து கட்டிலில் படுக்கை போட்டுக்கொண்டு படுத்த வண்ணம் வீட்டில் நுழைந்த பிறகும் அவளை வெகுநேரம் படுத்த வேண்டுமென்று தீர்மானித்தான்.

அன்று ஆபீஸ் கிடையாது. வீட்டில் அத்தனை மணி நேரம் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கவும் அவனால் முடியவில்லை. அடுத்த தெருவில் நண்பன் வீட்டுத் திண்ணையில் நடந்த சீட்டுக் கச்சேரியில் போய்க் கலந்து கொண்டான்.

* * *

"உன் அகமுடையாள் ஏன் இன்னும் வரவில்லை?" என்று கேட்டான் நண்பன்.

"வருவாள், வரட்டுமே!"

"இரண்டு மாதங்கள் ஆகவில்லை? கடிதம் போடுகிறதுதானே வரும்படியாக!"

"தானாக வரட்டும், என்ன அவசரம்?"

"ஓஹோ அப்படியா! சரி, நாளைக்கு தீபாவளிக்குத் இங்கேயே இருந்துவிடு, என்ன?"

"அதற்கென்ன பார்த்துக் கொள்வோம்."

மனைவிக்குத் தந்தி கொடுத்திருப்பதாகவோ அவள் வந்து விடுவாள் என்றோ நிச்சயமாகச் சொல்ல அவனுக்குத் தைரியம் இல்லை.

"பார்ப்பதென்ன? ......... அட, அதோ உன் பையன் வருகிறானே!"

சரு திரும்பிப் பார்த்தான்.

"அப்பா, ஆத்துக்கு வா!"

"எப்படா வந்தேள்?"

"இப்பத்தான் அப்பா! சாமான் எல்லாம் வாசல்லே இறக்கி வச்சிருக்கு. வா!"

சரு வீட்டிற்குப் போனான். பல எண்ணங்கள் வெகு துரிதமாகத் தோன்றின. ஒருவேளை தந்தி கிடைப்பதற்கு முன்பே பங்கஜம் புறப்பட்டிருந்தால் நான் அவஸ்தைப்படாமல் தப்பலாம் என்ற ஆசை தலை யெடுத்தது.

உள்ளே நுழைந்ததும் பங்கஜம் புன்னகையுடன் "உடம்பு சரியாகப் போச்சா?" என்றாள்.

சருவின் ஆசையில் மண் விழுந்தது.

# சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (மதராஸ்) லிமிடெட்

நெ. 80, செம்புதாஸ் தெரு, மதராஸ்.

•

தந்தி: "Goodwill" தபால் பெட்டி: நெ. 113 டெலிபோன்: 2724 & 3690

தலைமை ஆபீஸ்: செட்டிநாடு.

**எல்லா முக்கியமான இடங்களிலும் பிராஞ்சுகள் உள்ளன**

எங்களிடம் கட்டிடத்திற்கு வேண்டிய சகல விதமான இரும்பு சாமான், சிமிண்டி, வர்ணச் சாமான், எலெக்ட்ரிக் வயர், பல்பு, மின்சார, பம்பு செட், மோட்டார் முதலிய இதர சாமான்களும் உயர்தரமான துணிகளும் சகாயமான விலைக்கு எப்பொழுதும் கிடைக்கும்.

இஞ்சினீரிங் டிபார்ட்மெண்ட்: எல்லா விதமான காண்டிராக்ட் வேலைகளும் செய்யப்படும்.

---

## கமர்ஷியல் பிரிண்டிங் அன் பப்ளிஷிங் ஹவுஸ்

46, முத்துமாரி செட்டித் தெரு, மதராஸ்.

(போன் நெம்பர் 4679)

எல்லா விதமான அச்சு வேலைகளும், நேர்த்தியான முறையில் செய்து கொடுக்கப்படும்

---

## பீஸ்கூட்ஸ் டிபார்ட்மெண்டு

26, கோடோன் ஸ்ட்ரீட், மதராஸ்.

(போன் நெம்பர் 4642)

சகல விதமான வாயல், சில்க், பாப்லின்களும், இதர ரகங்களும் சகாயமான விலைக்குக் கிடைக்கும்

---

## பிராடியூஸ் டிபார்ட்மெண்டு

207, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதராஸ்.

(போன் நெம்பர் 2991)

---

கீழ்க்கண்டவைகளுக்கு சோல் ஏஜண்டுகள்:

பிளட் விட்டா - இரத்த விருத்தி, இரத்த சுத்தி டானிக்.

ஆ ஸ் க் யூ - மரச் சாமான்களை கரையான், மண், செல்லு அரிக்காமல் பாதுகாக்கும் ரசாயனப் பொருள்.

க ல் ப க ா - கலப்பற்ற உயர்தரமான வாஷிங் ஸோப்.

பி. கே. பால் & கோ. - சகல விதமான மருந்து சாமான்கள்.

நேஷனல் டிரக் அன் கம்பெனி - இன்ஜக்ஷன் மருந்துகள்.

கால்மன் அன் கம்பெனி - கோடைகால வேனக் கட்டிகளுக்கு சிறந்த பவுடர்.

சிப்கோ பிணயில் - உயர்ந்த ரகம்.

லெட்சுமி பிராண்டு - டாட்டா கிட்டபின் பிராடக்டு.



# கண்ணன் பிறந்தான்!

ஓடு வார்,விழு வார்;உகந்(து) ஆலிப்பார்;
நாடு வார்,"நம்பி ரான்எங்குற் றான்?"என்பார்;
பாடு வார்களும், பல்பறை கொட்டநின்(று)
ஆடு வார்களும், ஆயிற்(று)ஆய்ப் பாடியே!

உறியை முற்றத்(து) உருட்டிநின்(று) ஆடுவார்;
நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்;
செறிமென் கூந்தல் அவிழத் திளைத்(து)எங்கும்
அறிவ ழிந்தனர் ஆய்ப்பாடி ஆயரே!

# அன்னை மகிழ்ந்தாள்!

கையும் காலும் நிமிர்த்துக் கடாரநீர்
பைய ஆட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்,
ஐய! நாவழித் தாளுக்(கு)அங் காந்திட,
வையம் ஏழும்கண் டாள்பிள்ளை வாயுளே!

கிடக்கில், தொட்டில் கிழிய உதைத்திடும்;
எடுத்துக் கொள்ளில் மருங்கை இறுத்திடும்;
ஒடுக்கிப் புல்கில், உதரத்தே பாய்ந்திடும்;
மிடுக்கி லாமையால், நான்மெலிந் தேன்,நங்காய்!

—பெரியாழ்வார்.



# தலை தீபாவளி

ராஜ்

கஸ்தூரிக்குத் தன் மாமனாரிடமிருந்து தீபாவளிக்கு வரும்படி கடிதம் வந்துவிட்டது; அவனும் தலை தீபாவளி ஆதலால் வெகு உற்சாகத்துடன் புறப்பட்டுவிட்டான். இவ்வளவு வருஷமாக எவ்வளவோ தீபாவளிகள் வந்து போயிருக்கின்றன. ஆனால் அவன் இப்பொழுது போகும் தீபாவளிக்கும், அந்தப் பழைய தீபாவளிகளுக்கும் எவ்வளவு வித்தியாசம்! இது புது தீபாவளி. அந்தத் தீபாவளி சொந்த வீட்டில் தன் பழைய மனிதர்களுடன் கொண்டாடப்படும் தீபாவளி. இப்பொழுது போகப் போவதோ புது இடம். அந்த இடத்திலோ தன் வரவை ஓர் ஆத்மா எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. இதைப் பற்றி எண்ணியபோது அவன் மனதில் எவ்வளவோ புது எண்ணங்கள் அதி வேகமாகத் தோன்றி அவன் செல்லும் ரயில் வண்டியின் வேகத்தையே குறைக்கின்றன. தீபாவளிக்கென்று வேண்டிய சாமான்களுடன் மத்தாப்புப் பெட்டிகள்தான் கஸ்தூரி அதிகமாக வாங்கியிருந்தான். ஏனென்றால், பச்சை, ஊதா, சிவப்பு இவைகளைக் கொளுத்தித் தன் கமலாவின் முகத்திற்கு நேராகப் பிடித்து அவள் முகமும் அந்த வர்ணங்களாக மாறுவதைப் பார்த்து ரஸிக்க வேண்டுமாம்.

கஸ்தூரி தஞ்சை வந்து சேர்ந்தான். அவன் தான் வாங்கி வந்த சாமான்களை எல்லாம் ஒவ்வொன்றாகக் கமலாவுக்குக் காண்பித்துக் கொண்டே வந்தான். கடைசியாக ஒரு கவர் அவள் கையில் கொடுக்கப்பட்டது. அந்தக் கவரை வாங்கியவுடன் கமலா விலாசத்தைப் பார்த்தாள். ஒன்றும் எழுதவில்லை. "ஆமாம், பழைய விளையாட்டை ஆரம்பித்து விட்டீர்களாக்கும்!" என்றாள்.

இதைக் கேட்ட கஸ்தூரிக்குப் பழைய ஞாபகங்கள் மனதில் தோன்றி மறைந்தன. பழைய ஞாபகங்கள் ஒரு நிமிஷத்தில் தோன்றி மறைந்துவிடும். ஆனால் பழைய ஞாபகங்களை நாம் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் ஒரு நிமிஷம் போதாது.

கஸ்தூரி-கமலாவின் கல்யாணத்திற்குக் காரணமாக இருந்தவர், உலகம் போற்றும் உத்தமர் மகாத்மா காந்திதான் என்றால் நம்ப முடியாமல் இருக்கலாம். ஆனால், கஸ்தூரி என்னவோ மகாத்மா தன் கல்யாணத்தை நேரே வந்து நடத்தி வைக்காமற் போனாலும், அவர் அவனுடைய கல்யாணத்துக்குக் காரணமாக இருந்தார் என்பதை நினைத்து மகிழ்ச்சியடைவான்.

மகாத்மா காந்தி தம் உண்ணாவிரதத்தை ஆரம்பித்த சமயம் ஜனங்கள் எல்லோரும் மனம் பதறி என்ன வருமோ என்று வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருந்த காலம். அப்பொழுது எங்கும் பிரார்த்தனைக் கூட்டங்கள் நடத்தப் பட்டன. ஆனால் அங்கெல்லாம் 144 தடையுத்தரவும் கூடவே வந்து கூட்டத்தைக் கலைத்துக் கொண்டிருந்தது. அப்படிப்பட்ட கூட்டம் ஒன்று தஞ்சைக் கோட்டை மைதானத்தில் நடந்தது. நல்ல கூட்டம். சென்னையை விட்டு ரொம்பக் காரியமாகக் கஸ்தூரி தஞ்சாவூரைப் பார்க்கப் போய்ச் சேர்ந்தான். போனவன் அங்கு ஏதாவது நல்ல காப்பி கிளப்பில் சாப்பிட்டுவிட்டு ஊரைப் பார்த்துக் கொண்டு திரும்பலாமே. அதிர்ஷ்ட தேவதை அவனை அப்படி விட்டுவிடுவதாய் இல்லை. கஸ்தூரியின் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு வந்து அந்தக் கோட்டை மைதானப் பிரார்த்தனைக்கூட்டத்தில் கொண்டு வந்து நிறுத்தியது. எதிர்பார்த்தபடி தடியடிப் பிரயோகம் நடந்தது. எல்லோருக்கும் நல்ல அடி; நம் கஸ்தூரிக்கும் மண்டையில் பலத்த அடி. ரத்தம் கசிய மயக்கமாய் ஓர் இடத்தில் விழுந்து கிடந்தான்.

அதிர்ஷ்ட தேவதை இவனை இப்படி மயக்கமாகத் தள்ளிவிட்டு மைதானத்தில் அருகிலிருக்கும் டாக்டர் சுதர்சனத்தையும் அவனிடம் கொண்டு தள்ளிற்று. பாவம், டாக்டர் பச்சாத்தாபப்படும் மனுஷர். ஓர் இளம் பிள்ளை மண்டையில் அடிபட்டு மயக்கமாகப் படுத்திருப்பதைக் காணச் சகியாதவராய் தம் வீட்டில் வைத்துக்கொண்டு வைத்தியம் செய்ய ஆரம்பித்தார். டாக்டர் சுதர்சன் மட்டும் கஸ்தூரிக்கு வைத்தியம் செய்திருந்தால் ஒருவேளை ஒரே நாளில் கண்ணை விழித்திருப்பான்; ஆனால் அவர் ஒரே பெண், அழகான பெண், கமலாவும் சேர்ந்து அவனுக்கு நர்ஸ் வேலை செய்ததால் கஸ்தூரி கண்ணை விழிக்க மூன்று நாட்கள் ஆயின.

கஸ்தூரியும் கண்ணை விழித்ததும், "ஆ! இதென்ன பூலோகமா, கைலாஸமா! நான் கனவு காண்கிறேனா?" என்று நினைத்துப் பார்க்கவில்லை. ஏனென்றால் அவன் மண்டையில் குண்டாந்தடிப் பிரயோகம் சரியாக விழுந்தது ஞாபகம் இருந்தது. "அம்மா" என்று அலறிக் கீழே விழுந்ததும் ஞாபகம் இருந்தது. ஆகையால் அவன் கண்களைத் திறந்ததும் ஓர் டாக்டர் நிற்பார் என்று எதிர்பார்த்தான்; ஆனால் அங்கு இளம் நங்கை நின்றதைப் பார்த்ததும் கொஞ்சம் ஆச்சரியப்பட்டான், உடனே கண்ணை மூடிக்கொண்டான். பிறகு கொஞ்ச நேரம் கழித்துக் கண்ணைத் திறந்தான். இப்பொழுது அங்கு அந்தப் பெண் இல்லை. டாக்டரே நின்று கொண்டிருந்தார். "பிழைத்தாயப்பா" என்று அவன் தோள்களைத் தட்டிக் கொடுத்தார். சந்தோஷத்துடன் "கமலா, அந்தக் கமலாப் பழரசத்தைக் கொண்டு வா" என்று கூறினார். ஒரு டம்ளரில் பழரசத்தைக் கமலா கொண்டு வந்து கொடுத்தாள். கமலாவைப் பார்த்தவாறே அவள் அழகையும் பழரசத்துடன் சேர்த்துப் பருகி விட்டான் கஸ்தூரி.

டாக்டர் மனது இளகிய மனது. கஸ்தூரிக்குக் கொஞ்சம் குணமானவுடன் அவனை வீட்டை விட்டுத் துரத்தாமல் மனுஷன் பேசாமல் இருந்ததால் ஏற்பட்ட விளைவு என்னவென்றால், கமலாவும் கஸ்தூரியும் பேச்சில் இறங்கி விட்டதுதான். தாயில்லாத தம் ஒரே பெண்ணின் இந்த நடத்தையைக் கண்டு தகப்பனார் வெறுக்கவில்லை. கொஞ்சம் எழுந்து உட்கார்ந்து மெதுவாக நடக்கும் சக்தி வந்ததும் கஸ்தூரி கமலாவைப் பார்த்து, "ஒரு கடிதம் எழுத வேண்டும். பேனாவும் காகிதமும் கொடுக்க முடியுமா?" என்று கேட்டான். அப்

பொழுதுதான் தனக்குச் சென்னையில் ஒரு தாயார் இருக்கிறாள் என்ற ஞாபகம் வந்தது கஸ்தூரிக்கு. கடிதம் எழுத உட்கார்ந்தான். பேனாவைக் கையில் பிடித்தான். எழுத முடிந்தால்தானே? கை எழுத மறுத்துவிட்டது; நடுங்க ஆரம்பித்து விட்டது; எல்லாம் பலஹீனம்தான் காரணம். அப்பொழுது எதிரே இருக்கும் பெண் தெய்வம், "நான் வேணுமானால் எழுதுகிறேன்" என்று சொன்னால் வேண்டாமென்று சொல்லலாமா? "சரி" என்றான். தன் யோக க்ஷேமத்தைப் பற்றி ஓர் அத்தியாயம் எழுதிவிட்டுக் கவரில் போடச்சொல்லி விலாசமும் எழுதச்சொல்லி விட்டான். "சரி, அவ்வளவுதானே" என்று கமலா கேட்டாள். "இல்லை, இன்னொரு கடிதம் எழுத முடியுமா?" என்று கேட்டுக்கொண்டே கஸ்தூரி ஒரு சாத்துக்குடி சுளையை எடுத்து வாயில் போட்டுக்கொண்டான்.

"சரி எழுதுகிறேன்" என்று கமலா சொன்னதும் கஸ்தூரி ஆரம்பித்தான்:

"என்மேல் மிகவும் அன்பாகவும், பிரியமாகவும் இருப்பவளுக்கு: இப்பவும் ஏதோ பகவான் கிருபையால் உன்னை அடையவே ஒரு பேராபத்திலிருந்து தப்பினேன். இனி உன்னைச் சீக்கிரம் அடையப்போகிறேன் என்பதில் சந்தேகமில்லை. நீயும் அவ்விதமே என்னைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பாய் என்று எண்ணுகிறேன். கூடிய சீக்கிரமே என் எண்ணமும், உன் எண்ணமும் நிறைவேறும் என்று நினைக்கும், உன் அன்புக்குப் பாத்திரமான கஸ்தூரி" என்று கூறி முடித்தான்.

இதை யெல்லாம் எழுதும் ஒரு கன்னிகையின் மனோநிலை எப்படியிருக்கும்? அவள் முகம் எவ்வளவு மாறுதல்களை அடைந்தன? அடாடா! தான் எண்ணிய எண்ணம் வீணாகி விடுமோ, வாழ்க்கையிலேயே ஒரு பெருந்தவறு செய்து விட்டோமோ என்றெல்லாம் எண்ணினாள் கமலா. அவர் அன்பிற்குரியவளும் பிரியமுள்ளவளும் யாராக இருக்கக் கூடும், அவருக்குக் கலியாணமாகி விட்டதா என்ற எண்ணங்கள் எல்லாம் தோன்றின. கடிதம் எழுதி முடிந்ததும், "விலாசம் எழுத வேண்டாமா?" என்று கம்மிய குரலில் கேட்டாள் கமலா. "விலாசம் வேண்டாம். கவரில் போட்டுப் புத்தகத்தில் வை. நானே எழுதிக் கொள்கிறேன்" என்று கூறினான் கஸ்தூரி. பிறகு அவளுக்குக் கடிதங்களை எழுதச் சமாசாரங்களை வாயால் சொன்னதால் தாகம் வந்துவிட்டது. கொஞ்சம் தண்ணீர் கேட்டான்.



தண்ணீர் கொண்டு வந்த கமலா, மெதுவாக மேஜையின்மேல் வைத்திருக்கும் புஸ்தகத்தை நோக்கி நகர்ந்தாள். இதைக் கவனித்தான் கஸ்தூரி; போனவள் புத்தகத்தைப் புரட்டுபவள்போல் புரட்டினாள். கவர்மேல் இன்னும் விலாசம் எழுதவில்லை. ஏதோ மறந்தவனை ஞாபக மூட்டுபவள்போல், "கவருக்கு விலாசம் எழுதவில்லையே, தபாலுக்கு நேரமாகி விடுமே" என்றாள்.

இதைக் கேட்ட கஸ்தூரி சிரித்துக் கொண்டே "இல்லை. அதை நான் தபால் மூலமாக அனுப்பப் போவதில்லை" என்றான்.

"ஆள் மூலமாக அனுப்ப வேண்டுமா? அதற்கென்ன, விலாசம் சொல்லுங்கள். வேலைக்காரனை அனுப்பிக் கொடுத்துவிடச் சொல்கிறேன்."

"விலாசத்திலேயே கண்ணாக இருக்கிறாயே, கமலா! அதை வேலைக்காரன் கொண்டுபோய்க் கொடுக்கக் கூடாது. நானுகவே தான் கொடுக்க வேண்டும்."

"நீங்களே கொடுக்கப்போகிறீர்களா? உங்களால் அவ்வளவு தூரம் நடந்து போய்வர முடியுமா? வேணுமானால் அப்பாவிடம் சொல்லி வண்டிக்கு ஏற்பாடு செய்கிறேன்."

"இந்தக் கடிதத்தைக் கொடுக்க ஆட்கள் வேண்டுமா, வண்டி வேண்டுமா? இதோ பார் இந்தக் கடிதம் யாருக்குச் சேரவேண்டுமோ அவர்களிடம் நானே சேர்த்து விடுகிறேன்" என்று கூறிக்கொண்டே அக் கடிதத்தை அவள் கையில் வைத்தான்.

கமலா பிரமித்து நின்றாள். "இப்பொழுது விலாசம் தெரிந்ததா? இனிமேலாவது உன் முக விலாசத்தைச் சரியாக வைத்துக் கொள், பார்ப்போம்" என்றான் கஸ்தூரி. அப்புறம் என்ன நடந்திருக்கும்? கலியாணம்தான்.

* * *

கஸ்தூரி தலை தீபாவளிக்கும் வந்து விட்டான். இப்பொழுது விலாசமில்லாமல் கொடுத்த கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று தெரிந்துகொள்ள உங்களுக்கு ஆவலாக இருக்குமல்லவா? அதில் பிரமாதமாக ஒன்றுமில்லை.

"கமலா! இக்கடிதம் கண்டவுடன் நீ வேறு பக்கம் திரும்பிக்கொண்டு, கண்களை இறுக மூடிக்கொள்ள வேண்டியது. அதற்குப் பிறகு ஏற்படும் பலாபலன்களை அனுபவிக்கத் தயாராக இருக்க வேண்டியது" என்று எழுதியிருந்தது.

# மடாலயத் தொண்டு

செப்டம்பர் மாதம் 5, 6, 7 தேதிகளில் தமிழ் நாட்டில் மகத்தான சம்பவம் ஒன்று நடந்தது. தருமபுர ஆதீன ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் பத்தாண்டு அருள் ஆட்சி விழாக்கொண்டாட்டந்தான் அது. திருவாங்கூர் திவான், சச்சிவோத்தம சர் சி. பி. இராமசாமி ஐயர் தலைமையில் நடந்த அவ்விழாவிற்குத் தமிழ் நாட்டுப் பிரமுகர்களும், சிவநேசச் செல்வர்களும் விஜயம் செய்திருந்தார்கள். அந்த மூன்று நாட்களும் தருமபுரம் அபிலோக சிவலோகமாகப்பட்டது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தைப் பாராட்டி வாழ்த்துரைகள் பல வாசிக்கப்பட்டன. சந்நிதானம் பட்டத்திற்குவந்து தமிழுக்கும் சைவத்துக்கும் செய்த சேவைகளைப்பற்றிப் பலர் பாராட்டிப் பேசினார்கள். அந்த விழாவின் முழு விவரங்களும் பத்திரிகைகளில் வெளியாயின. இந்தச்சமயத்தில் தருமபுர மடத்தின் வரலாற்றைப்பற்றியும், ஆதீனம் பல்வேறு துறைகளில் செய்துவரும் தொண்டுகளைப்பற்றியும் தெரிந்துகொள்வது பொருத்தமாயிருக்கும்.

ஐந்நூறு வருஷங்களுக்கு முன்னால் ஸ்ரீகுரு ஞானசம்பந்த சுவாமிகள் தருமபுர மடாலயத்தை ஸ்தாபனம் செய்தார். அப்பொழுது ஒரு சிறு ஆசிரமமாகத்தான் இருந்தது அது. சுவாமிகளின் அறிவாற்றலையும், மேன்மையையும் கண்டு அவர்களுடைய அருளைப்பெற சிஷ்யகோடிகள் வந்து சேர்ந்தனர். கொஞ்சம் கொஞ்சமாக ஆசிரமம் பெரிதாக வளர்ந்தது. குருஞானசம்பந்தருக்குப் பிறகு சைவசித்தாந்தத்தைக் கரைகண்டவர்களும் தீர்க்கதரிசிகளுமான பல பெரியார்கள் குருபீடத்தை அலங்கரித்தார்கள். பல திருக்கோயில்களின் நிர்வாகத்தை அரசாங்கத்தினர் ஆதீனத்தாரிடம் ஒப்படைத்தார்கள். ஆதீனத்தின் சிஷ்ய சிகாமணிகள் ஆங்காங்கு சென்று மடங்களைக்கட்டி சைவ சமயத்தைப் பரப்பினார்கள். ஆதீனம் சைவசமயத்தின் ஒளி விளக்காகப் பிரகாசித்தது; பிரகாசிக்கிறது. தமிழ் மக்களின் இதயத்தில் அது அழியாத இடம் பெறலாயிற்று.

வானில் சந்திரனைச்சுற்றி 27 நக்ஷத்திரங்கள் மின்னுவதுபோல, ஆதீனத்தின் நிர்வாகத்தில் இப்பொழுது இருபத்தேழு தேவஸ்தானங்கள் நடத்தப்படுகின்றன. இப்பொழுது ஆட்சி நடத்திவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக பரமாசாரிய



ஸ்ரீ மெய்கண்டார்

சுவாமிகள் 1933-ம் வருஷம் 24-வது மகாசந்நிதானமாகப் பட்டத்துக்கு வந்தார்கள். அவர்கள் ஆட்சி ஏற்றதும் ஆதீன சரித்திரத்திலேயே இல்லாத ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாயிற்று.

## புனருத்தாரணம்

சுவாமிகள் தாம்மேற்கொண்ட சேவையைத் திறம்படச் செய்யவும், மேற்கொண்டு இன்னும் பல சேவைகளைச் செய்யவும், நிர்வாகத்தைச் சீர்திருத்தம் செய்து அதிலிருந்த குற்றங்குறைகளை நீக்கவேண்டிய அவசியத்தையும் உணர்ந்தார்கள். தேவஸ்தானங்களின் நிர்வாகத்தின் வரவு செலவுகளைக் கவனிக்கத் திறமைசாலிகளான ஏஜண்டுகளை நியமித்தார்கள். கணக்குகளைப் பரிசீலனைசெய்யப் பரிசோதகர்களை நியமித்தார்கள். தேவஸ்தானக் காரியங்கள் சரியாக நடக்கின்றனவாவென்று தாமே நேர் விஜயம்செய்து கவனிப்பார்கள். இன்னும் உயர்ந்தவன் என்று மதிப்புக்கொடுக்காமலும், ஹரிஜனன் என்று தாழ்த்தாமலும் எல்லோரையும் சமநோக்குடனேயே நடத்திவருகிறார்கள். தமிழ் நாட்டில் சைவம் தழைத்தோங்கவேண்டுமானால் திருக்கோயில்களின் நிர்வாகமும் பராமரிப்பும் பரிசுத்தமாக இருக்கவேண்டும் என்பது ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் கொள்கை.

ஆதீனத்துக்குச் சொந்தமான நிலபுலன்களைக் குத்தகைக்கு விடுவதிலும், அவைகளின் வருமான வரும் விஷயங்களிலும் புரட்சிகரமான மாறுதல்கள் செய்யப்பட்டன. ஒரு குழி நிலம்கூடத் தரிசாகாமல் தென்னை, மா, பலா முதலிய பலன்தரு மரங்கள் பயிர் செய்யப்பட்டன. நன்செய் நிலங்களுக்கு நல்ல உரம் போட்டு நவீன முறையில் பயிர் செய்யப்பட்டது. இதனால் எல்லாம் வருமானம் ஒன்று பத்தாகப் பெருகியிருக்கிறது. ஆதீனம் தன் இலட்சியத்தை நிறைவேற்றப் பெரிதும் இது சாத்தியமாகிறது.

பொதுவாகத் தற்கால மடாலயங்கள் சமாளிக்க வேண்டிய பிரச்சினைகள் எவ்வளவோ இருக்கின்றன. நவீன நாகரிகம் பரவிவரும் இக்காலத்தில் ஹிந்து மடாலயங்கள் எதிர்த்துப் போராடவேண்டிய சக்திகள் பல இருக்கின்றன என்பதை ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அறியாமலில்லை. அவற்றை ஒரு பக்கம் சமாளித்துக்கொண்டும் மடாலயத்தின் ஆக்கவேலைகளை மற்றொருபுறம் விஸ்தரித்துக் கொண்டும் போகிறார்கள்.



வைத்தீசுவரன் கோயில்

முதன் முதலில் மடாலயத்தையும் தேவஸ்தானத் திருக்கோயில்களையும் புதுப்பித்துச் செப்பனிடத் திட்டம் போடப்பட்டது. மடாலயத்தில் பல புதிய கட்டிடங்கள் தோன்றின. மடாலயத்தின் முன்புற வாசல் அழகாக அமைக்கப்பட்டது. மடாலயச் சிப்பந்திகளுக்காக மடத்தின் நான்குபுறமும் சகல வசதிகளுடன் வீடுகள் கட்டப்பட்டன. அழகிய வீதிகளும், வளைவுகளும் ஆங்காங்கே தோன்றின. திருக்குளத்துக்குச் சுத்தமான படிக்கட்டுகளும் கட்டப்பட்டன. ஆரம்பத்தில் காவேரி தீரத்தில் சிறு குக்கிராமமாயிருந்த தருமபுரம் இப்பொழுது ஒரு அழகான நகரமாகக் காட்சியளிக்கிறது. இன்று தமிழ் நாட்டில் சிறந்த ஒரு புத்தகசாலை, ஒரு அச்சு நிலையம், தேவாரப்பாடசாலை, ஆரம்பப்பாடசாலை, வேத சிவாகமப் பாடசாலை, விருந்தினர் விடுதிகள் இவைகள் சகிதம் தருமபுரம் விளங்குகிறது. பல்கலைக்கழக மாணவர்களும், யாத்திரிகர்களும், பிரமுகர்களும் தருமபுரத்திற்கு விஜயம் செய்து இந்தச் சைவ பீடத்தின் விமரிசையைக் கண்டு வியந்த வண்ணமாயிருக்கிறார்கள்.

அஸ்திவாரம் பலமானபின் மேலே மாடமாளிகைகள் எழுப்புவது சுலபம்தான். ஆதீனத்தின் தலைமையிலும் நிர்வாகத்திலும் புரட்சி ஏற்பட்டதும், அதன் கீழுள்ள தேவஸ்தானங்கள் எல்லாம் பெருஞ் சீரும் சிறப்பும் பெற்றன. உதாரணமாக வைத்தீசுவரன் கோயில், திருக்கடையூர் அமிர்தகடேசுவரர் கோயில், சீகாழி சட்டைநாதசுவாமி கோயில் இன்னும் திருவையாறு, திருப்பனந்தாள், திருபுவனம் முதலிய பல கோயில்களிலும் பல அபிவிருத்திகள் ஏற்பட்டன. குளங்கள் வெட்டப்பட்டன. கோபுரங்கள் புனர் நிர்மாணம் செய்யப்பட்டன; கும்பாபிஷேகங்கள் நடைபெற்றன. காற்றோட்டமில்லாத இருளடைந்த கோயில்களில் ஜன்னல்கள் வைத்துக் காற்றோட்டமும் வெளிச்சமும் இருக்கும்படி செய்யப்பட்டது. பொதுவாக, சந்நிதானத்தின் அருளாட்சியில் புதுப்பிக்கப்படாத அழகுபெறாத திருக்கோயில்கள் இல்லை என்றே சொல்லலாம். பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடிப் பிரார்த்தனை செய்யும்போது உண்டாகும் ஆத்மசக்தி தனி மகிமை வாய்ந்ததுதான். பக்தகோடிகள் பல்லாயிரக் கணக்கில் உற்சவகாலங்களிலும், சாதாரண சமயங்களிலும் இப்புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு விஜயம் செய்து ஆத்மசாந்தி அடைகிறார்கள். இவ்வளவு மகத்தான விழாக்களை எவ்வளவு நன்றாகவும் எவ்வளவு விமரிசையாகவும் நடத்தலாமோ அவ்வளவு நன்றாக ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

## பிரசாரம்

பிரசாரத்தைப்போன்ற மகிமைவாய்ந்த ஆயுதம் தற்காலத்தில் இல்லை. இதை உத்தேசித்தே ஆதீனத்தில் சைவப்பிரசாரகர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். பிரதினமும் அவர்களால் புராணப் பிரசங்கங்கள் செய்யப்படுகின்றன. சைவப்பிரசங்கங்கள் செய்துவருகிறார்கள். சைவத்துக்காகவும் தமிழுக்காகவும் எங்கே மகாநாடு நடந்தாலும் ஆதீனத்தின் பிரதிநிதிகள் சென்று நடத்திவைக்கிறார்கள். திருநெல்வேலியில் நடைபெற்ற "மெய்கண்டான் சாத்திரமகாநாடு", "சென்னை சைவ சித்தாந்த மகாசமாஜக் கூட்டங்கள்", "பழனித் திருப்புகழ் மகாநாடு" இவைகளுக்கும் ஆதீனத்தார் வேண்டிய உதவிகள் செய்திருக்கிறார்கள்.

சைவசமயத்திற்கும் சாஸ்திரத்திற்கும் புத்துயிர் அளித்த மெய்கண்டாரின் பெயரால் 1941-ல் ஒரு மகாநாடு தருமபுரத்தில் மிகவிமரிசையாக நடந்தது. சைவசித்தாந்தத்தைப் பரப்ப ஆதீனத்தார் பலநூல்களைப் பிரசுரம் செய்திருக்கிறார்கள். இதற்குச் சொந்தமாக ஓர் அச்சுநிலையம் அவசியம் என்பதை அறிந்து நடத்தி வருகிறார்கள். ஆதீனப் பிரசுரங்கள் எல்லாம் அங்கேயே அச்சாகின்றன.

உதாரணமாக கோவை சி. கே. சுப்பிரமணிய முதலியார் பதிப்பித்த சேக்கிழார் பெரியபுராண மூலம் உரையுடன் வெளியிட்டிருக்கிறார்கள். சைவ சித்தாந்த சாஸ்திரம் மூலம் வெளியிட்டிருக்கிறார்கள். அதில் சிவப்பிரகாசம் ஆங்கில மொழிபெயர்ப்பு பிரசுரிக்க ஏற்பாடாகி வருகிறது. சைவ ஆகமங்கள் வெளியிடப்பட்டு வேண்டுவோர்க்கு இலவசமாக வழங்கப்படுகின்றன.



விருந்தினர் விடுதி

ஸ்ரீ ஜம்புநாதன் தமிழில் எழுதிய 'யஜுர் வேதம்' ஸ்ரீ ஆர். கே. விஸ்வநாதன் எழுதிய 'ஒளியும் ஒலியும்', ஸ்ரீ பி. ஸ்ரீ. சுப்பிரமணிய ஐயர் எழுதிய 'தமிழ்ச் சுருக்கெழுத்துத் தற்போதினி' முதலிய பல நூல்கள் ஆதீனத்தின் பொருள் உதவி பெற்று வெளியாகியிருக்கின்றன. இன்னும் சைவத்துக்கும் தமிழுக்கும் பொருளுதவிசெய்து பல நூல்களை வெளியிடத் தயாராகவுமிருக்கிறார்கள்.

நூற்றுக்கணக்கான சைவப் பிரசாரகர்களைத் தயார்செய்து விடுவதோடும் சைவப்பிரகாசம் விளங்கவேண்டுமென்பதுதான் மகாசந்நிதானத்தின் இலட்சியமாகும். அதற்காகப் பல தமிழ்ப்பண்டிதர்களுக்குத் தேர்ந்த அறிவிற்சிறந்த பெரியோர்களைக் கொண்டு சித்தாந்த பாடங்கள் நடத்தச்செய்கிறார்கள். இளமையிலே அதனை விதைத்துச் சைவப் பயிர் வளர்க்கவே, தேவாரப் பாடசாலையும் வேதப் பாடசாலையும் துவங்கப்பட்டன. மாணவர்களுக்கு எல்லா இலவச வசதிகளுடனும் கல்வி பயிற்றப்பட்டு வருகிறது. வேதம், ஆகமம், திருமுறை, ஆங்கிலம் மற்ற எல்லாப் பொது அறிவுப் பாடங்களும் போதிக்கப்படுகின்றன. இம்மாணவர்கள் சிவஞான விளக்கை மங்காமல் பிரகாசிக்கச் செய்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

## புத்தகசாலைகள்

ஆதீனத்தின் புத்தக நிலையத்தில் ஆயிரக்கணக்கான தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், வடமொழிப் புத்தகங்கள் இருக்கின்றன. சைவ சமயத்தைப்பற்றியும், ஹிந்து வேதாந்தம், வைணவம், முகமதியம், கிறிஸ்தவம், பௌத்தம் முதலியவற்றைப் பற்றியும் உலக அறிஞர்கள் எழுதிய புத்தகங்களை அங்கே காணலாம். இந்நூல்களை எல்லோரும் படித்துப் பயனடையும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

ஆதீன நூல்நிலையத்திற்கு அடுத்தபடியாக வைத்தீஸ்வரன் கோவிலில் ஒரு பெரிய நூல்நிலையம் இருக்கிறது. மற்ற தேவஸ்தானங்களிலும் நூல்நிலையங்கள் இருக்கின்றன. மேற்கொண்டும் அபிவிருத்திசெய்ய முயற்சிசெய்யப்பட்டும் வருகிறது.

## சமூகசேவை

எந்த மதஸ்தாபனமும் மதச்செல்வத்திற்குப் பாடுபடுவதுடன் நின்றுவிட முடியாது. சமூக சேவைதான் அதிமுக்கியமானதாகும். சமூகசேவை என்ற திரைமறைவில் ஒளிந்துகொண்டு பல ஸ்தாபனங்கள் வேலை செய்து வருகின்றன. உண்மையான சமூக சேவை செய்யவும் இம்மடாலயம் பத்துவருடகாலமாக முயன்று வருகிறது. குவெட்டா பூகம்பம், போன்ற மகத்தான கஷ்டங்கள் ஏற்பட்டபோது ஆதீனம் நிவாரண வேலைக்கு பொருளுதவி செய்தது. மக்கள் புயலாலும், பஞ்சத்தாலும் அவதியுறும்போது ஆதீனம் தன் கடமையைச் செய்யத் தவறவில்லை. வெள்ளத்தால் தவிக்கும் மக்களுக்கு வீடுகட்டப் பொருளுதவி செய்யப்படுகிறது. குடிதண்ணீர் வசதியில்லாத ஹரிஜனச் சேரிகளில் சுகாதார வசதியான கிணறுகள் கட்டிக்கொடுக்கப்படுகிறது. சாலையோரங்களிலுள்ள குளங்களை அகழ்த்தெடுத்து சுத்தம் செய்து படித்துறைகள் கட்டியிருக்கிறார்கள்; கட்டியும் வருகிறார்கள்.



திருப்புவனம் கோவில்

ஆதீனத்தின் உதவிபெற்ற பொதுஜன ஸ்தாபனங்கள் கணக்கில் அடங்காதவை. கும்பகோணம் குஷ்டநிவாரணச்சங்கம், தஞ்சை விவசாயச்சங்கம், தியாகையர் உற்சவக்கமிட்டி முதலான பல ஸ்தாபனங்கள். தஞ்சை சரஸ்வதிமகால் நூல்நிலையத்தின் புனருத்தாரணத்திற்கு பெரும் பொருள் அளித்ததுடன் அதற்கு ஒரு போஷகராகவும் இருந்துவருகிறார்கள்.

தகுதியுள்ள கலாசாலை மாணவர்களுக்கு ஆதீனம் உபகாரச்சம்பளம் அளித்து வருகிறது. ஏழை மாணவர்களுக்குப் புத்தகங்கள் வாங்கி வழங்கப்படுகின்றன. திருப்பதிக் கீழ்த்திசைப் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் நடைபெற்ற கீழ்த்திசைக்கலை மகாநாட்டில் தமிழ்ப்பகுதிக்கு ரூ. 1000 நன்கொடை



தருமபுர ஆதீன சாரணப்பயிற்சி முகாம்



பண்டாரக்கட்டு

கொடுத்துதவினர். தமிழ் இசைவளர்ச்சிக்கு ரூபாய் 10,000 அளித்துள்ளார்கள். சென்னைத் தமிழ்ச் சங்கத்துக்குப் பெருநிதி அளித்துப் போஷகர்களாக இருப்பதோடு அதன் சார்பில் நடைபெறும் சைவ சித்தாந்த வகுப்பிற்கு ஆகும் செலவையும் ஆதீனம் ஏற்றுக்கொண்டிருக்கிறது.

## பாராட்டு

மடாலயத்தைக் கண்டு தரிசிக்க அவ்வப் போதும் அரசியல் தலைவர்களும், பிரமுகர்களும் வருகிறார்கள். பிரஞ்சிந்திய கவர்னர் பான்வின் தன் குடும்பத்துடன் விஜயம் செய்தார். சர் பி. டி. ராஜன், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், ஸ்ரீ எஸ். ராமனுதன், டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், குமாரராஜா சர் முத்தையாச் செட்டியார், சர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார், ஸ்ரீ எஸ். முத்தையா முதலியார் சி. ஐ. இ., சர் ஆர். எஸ். சர்மா, திருவாங்கூர் திவான் சச்சிவோத்தம சர் சி. பி. ராமசுவாமி ஐயர், டாக்டர் வரதராஜுலு நாயுடு முதலிய பல தமிழ்நாட்டுப் பிரமுகர்களும் ஸ்ரீ பி. கோபால் ரெட்டியார், ஸ்ரீ எம். என். ஆனே முதலிய பல வடநாட்டினரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தைத் தரிசித்துவிட்டும், ஆதீனத் திருக்கோயில்களை வந்து தரிசித்துவிட்டும், செய்திருக்கும் சீர்திருத்தங்களைக் கண்டு, ஸ்ரீ-ல-ஸ்ரீ சந்நிதானம் அவர்களை வெகுவாகப் பாராட்டியிருக்கின்றார்கள். காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்களும் தருமபுரத்திற்கு விஜயம் செய்து ஸ்ரீ-ல-ஸ்ரீ சந்நிதானத்தின் சேவையைப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

தருமபுர ஆதீனம் செய்த சேவைகளுக்காகப் பக்தமணிகளும், அன்பர்களும், சபைகள் பலவும் வாழ்த்துரைகளிலும் பாராட்டின போதிலும், ஆதீனம் செய்யவேண்டிய சேவைகளும் சாதிக்க வேண்டிய காரியங்களும் எவ்வளவோ இருக்கின்றன. பக்தகோடிகளின் அன்பினாலும், அன்பர்களின் ஒத்துழைப்பாலும் அவற்றை யெல்லாம் சாதித்து இலட்சியத்தை அடையும் என்பதில் என்ன சந்தேகம்?

* * *

சைவசித்தாந்தம் ஒரு பொது சமயம். அது எல்லா சமயக் கொள்கைகளையும் தன்னுள் அடக்கி அதற்கும் படிக்கிரமமாக உயர்வு காட்டி வந்து தன்னுடைய உயர்ந்த கொள்கை மேலோங்க நிற்பது. அதைப் பரப்ப முன்வந்துள்ள இந்த மடாலயமும் எல்லாப் பெருமைகளையும் தன்னுள் அடக்கித் தென்னாட்டில் ஒரு பெரும் கலாசாலையாக சமய நிலைகளனைத்துக்கும் உலக போதக பீடமாக ஆக்கப் பெருந்திட்டங்கள் போட்டு வருகின்றார்கள் என அறிய யார்தான் மகிழ்ச்சியுறாமல் இருக்கமுடியும்.

தருமபுரத்தினால் இன்று தமிழ் நாட்டு மடாலயங்களுக்கே, ஏன் பொதுவாக சமய நிலையங்களுக்கே, ஒரு தனிப் பெருமை உண்டாயிருக்கிறது என்பது மிகையாகாது. இவ்வளவு சொற்ப கால அளவில் யாரும் பிரமிக்கத்தக்க சீர்திருத்தங்களும் அபிவிருத்திகளும் செய்து பெருமை கொடுத்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் நீடூழி வாழ்க! வாழ்க அம்மடம்!! தருமை வெல்க!!!



தருமபுரத்தில் ஓர் நடைபாதை

# மேனகை




கே. நாகராஜன்

காட்டுப்பரம்பூர் மிகவும் கட்டுப்பாடு உள்ள கிராமம். அக்கிராமத்தில் சதாசிவ அய்யர் இட்டது சட்டம். கிராமப் பொது விஷயங்களில் அவர் சொல்லுவதைக் குடியானவர்கள் உள்பட எல்லோருமே கேட்பார்கள். அவர் கீறின கோட்டை யாருமே தாண்ட மாட்டார்கள். இவ்வளவு ஒற்றுமையான கிராமம் தெற்கு வட்டகையில் காணவே முடியாது. அந்த கிராமத்தாருக்கு ஆத்ம திருப்தியும் ஏராளமாக உண்டு. அவர்கள் ஜமா கூடி விட்டார்களானால் தங்கள் ஊரின் பெருமையைப் பற்றி ஓயாமல் பேசுவார்கள். "வாசத்திற்குக் காட்டுப் பரம்பூரைப்போல் வராது; இவ்வளவு கட்டுப்பாடு எங்குமே இராது; ஆசாரம் நியமம் ஜாஸ்தி" என்றெல்லாம் பேசுவார்கள். இவ்வளவு ஒழுங்கான கிராமத்தில் ஒவ்வொரு குடும்பத்தாருக்கும் தங்கள் குடும்பத்தைப்போல் சீரும் சிறப்புமுள்ள குடும்பமே வேறு கிடையாது என்ற எண்ணமும் உண்டு. ஆனால் அதை மட்டும் வெளிப் படையாகச் சொல்லிக் கொள்ளுவதில்லை.

இந்தக் கிராமத்தில் கணேசய்யர் குடும்பம் வெகு கட்டுப்பாடானது. அவர்கள் அண்ணன் தம்பிகள் நாலு பேர். ஒரே குடும்பம். கணேசய்யர் மூத்தவர். வெகு கண்டிப்பான பேர் வழி. வழு வழுப்பே கிடையாது. "ஆம்" என்றால் "ஆம்" என்பார். அவருக்குத் தெரிந்த இரண்டொரு இங்கிலீஷ் பதங்களைச் சமயங்களில் பிரயோகம் பண்ணுவதில் அவருக்கு ஆசை. அவரிடத்தில் எல்லோருக்குமே கொஞ்சம் பயந்தான். குடும்பத்தில் யாரும் முக்கியமான விஷயங்களில் கணேசய்யரை யோசனை கேட்காமல் ஒன்றும் செய்வதில்லை. கணேசய்யருக்கு நிலபலம் உண்டு என்பதுடன் கொடுக்கல் வாங்கலும் உண்டு. அதில் வெகு கண்டிப்பு. வட்டியில் ஒரு பைசாக்கூடத் தள்ளிக் கொடுக்கமாட்டார். அவர் கணக்குப் புஸ்தகங்களைப் பார்த்தாலே கடன் வாங்கவேணும் போல் ஆசை ஏற்படும்.

கிராமக் கட்டுப்பாடு கொஞ்சமும் நழுவக்கூடாதென்பது கணேசய்யரின் நோக்கம். கடன் வாங்கின பேர் கடனைப் பைசா மாற்றிக் கெடுப்படி கொடுக்க வேணும். எல்லோரும் பெரியோரிடம் மரியாதையாய் நடந்து கொள்ளவேணும். நவீன முறைகளில் எவரும் ஈடு படக்கூடாது. அச்சுதப்ப நாயக்கர் காலத்தில் ஊர் எப்படி இருந்ததோ அப்படியே எப்போதும் இருக்க வேண்டும்—இதுதான் அவர் கொள்கை.

இந்த நிலைமையில் அவருடைய பக்கத்து வீட்டு ராமசாமி அய்யரின் பெண் விஷயமாக ஊரில் அருவருப்பு ஜாஸ்தியாக இருந்தது என்றால் அது ஆச்சரியமில்லை. அதிலும், முக்கியமாக கணேசய்யருக்கு வெகு நரநரப்பு. அவளைப் பற்றிப் பேச்சு வந்தால் வேப் பெண்ணெய் சாப்பிடுகிறவர்போல் முகத்தை வைத்துக் கொள்ளுவார். அந்தப் பெண் பண்ணின பாவம் என்னவென்று கேளுங்கள்.

## 2

அருவருப்புக்கு முதல் காரணம் அவள் பெயர். வேம்பு அம்மாள்களும், விசாலங்களும், காமாட்சிகளும் தாண்டவமாடும் அவ்வூரில் மேனகை யென்றால் கேட்கவும் வேணுமா? "டிராமாக்காரி மாதிரி பேரைப் பார், பேரை!" என்று பெண் பிள்ளைகள் பேசுவார்கள். மேனகைக்கு ஆதியில் வைத்த பெயர் மீனாட்சி. அவளுக்கு ஒரு தங்கை இருந்தாள். அதனால் அவளை 'மீனக்கா' என்று அழைத்து வந்தார்கள். அவள் சிறு பெண்ணாய் இருக்கும்போதே அவள் தாயார் இறந்து போனாள். அதன் பேரில் ராமசாமி அய்யர் மறு விவாகம் செய்து கொண்டார்.

மீனக்காள் பட்டணத்தில் தன் தாய் மாமன் வீட்டிற்குப் போய் இங்கிலீஷ் படிக்கத் தொடங்கினாள். படிப்பும் நன்றாக வந்தது.

இண்டர்மீடியேட் முடிந்தவுடன் அவள் மெடிகல் காலேஜில் சேர்ந்தாள். பெயரை 'மேனகா' என்று மாற்றிக் கொண்டாள். பரீட்சையிலும் தேறினாள். நடையுடை பாவனை முதலியவற்றைப் பற்றி நான் சொல்ல வேண்டியதில்லை. நீங்களே நினைத்துக் கொள்ளலாம். இதையெல்லாம் பார்க்கப் பார்க்கக் காட்டுப் பரம்பூராருக்குப் பொங்கிக் கொண்டு வந்தது எரிச்சல். ராமசாமி அய்யரை ஏசாத ஏசல் இல்லை. ஜாதியை விட்டே தள்ளி வைத்திருப்பார்கள். தள்ளி வைக்க வில்லை என்றால் அதற்கு இரண்டொரு காரணங்கள் உண்டு. ராமசாமி அய்யர் அப்பாவி என்பது. மேலும், அவருடைய இளையாள் பாலகுஜாம்பாளிடம் ஊராருக்கு வெகு பட்சம். அந்த அம்மாள் மேனகை கெட்ட கேட்டை நினைத்து உருகுவாள். "மூத்தாளின் பெண்ணாயிருந்தாலென்ன? அன்பும் அபிமானமும் விடுமா?" என்பாள். மேனகையின் பவிஷை ஊராரிடம் சொல்லிச் சொல்லி வருந்துவாள். இதனால் அவளிடம் ஊராருக்குக் கொஞ்சம் தாட்சண்யம்.

பொழுது போகாத நேரங்களில் பெண்கள் மேனகையைப் பற்றி வம்புபேசி ரஸமாகப் பொழுதுபோக்குவார்கள். ஆண் பிள்ளைகள் தங்கள் கூட்டங்களில் காலம் கெட்டுப் போனதை நினைத்து வருந்துவார்கள்.

மேனகை இவர்களுக்குப் பின் வாங்கினவளல்ல. நவீன நாகரிகம் முற்றின பெண்களில் சிலர் அடக்கமாக இருப்பார்கள். சிலர் ராங்கியாய் இருப்பார்கள். மேனகையிடம் அடக்கமும் கிடையாது; ராங்கியும் கிடையாது. கொஞ்சம் விளையாட்டுத்தனம் மட்டும் உண்டு. சிரித்த முகம். அகன்ற கண்களில் விளையாட்டின் பிரகாசம் தோன்றிற்று. மேனகையின் பேச்சில் மயங்காதவர் யாருமே இருக்க மாட்டார்கள்.

இந்த ஸ்திதியில் மேனகை கன்னட தேசத்து ராயர் ஒருவரைக் கலியாணம் செய்து கொண்டாள் என்றால் கேட்கவும் வேண்டுமா? காட்டுப்பரம்பூர் அல்லோல கல்லோலப்பட்டது. இந்தத் தகவல் கிடைத்தவுடன் கிராமத்தார் அவர்கள் சுபாவத்திற் கேற்ற வியாக்யானம் செய்தார்கள். சிலர் "சிவ சிவ" என்று சொல்லித் தலையில் கையை வைத்துக் கொண்டார்கள். வாயாடிகள் வாயில் வந்தபடி திட்டினார்கள். பாலகுஜாம்பாள் வெளியில் தலைகாட்ட முடியவில்லை என்று சொல்லிக் கொண்டு வீடு வீடாய்த் திரிந்து கோயிலிலும் குளத்திலும் தன் நிராக் குறையைத் தெரியப் படுத்திக்கொண்டு ஊரார் அநுதாபத்தைப் பெற்ற வண்ணமாய் இருந்தாள். கணேச அய்யர் கண்களிலிருந்து கோபப் பொறி பறந்தது.

ஊரார் பேசி யென்ன? கணேசய்யர் கண்களில் பொறி பறந்தென்ன? கலியாணம் ஆனது ஆகிவிட்டது. காலவடைவில் அமளியும் ஓய்ந்தது.

## 3

பல வருஷங்களாகக் கணேசய்யருக்குக் காசி யாத்திரை போக வேண்டுமென்று இருந்தது. அது அவர் குலாசாரம். அவர் முன்னோர்கள் தவறாமல் கங்காஸ்நானம் செய்தவர்கள். கயாசிராத்தமும் செய்தவர்கள். கணேசய்யருக்கு, தாம் ஏதுவும் பாபம் செய்ததாக எண்ணமில்லை. தமக்குத் தெரிந்த மட்டில் தமது வாழ்க்கை நிர்மலமான வாழ்க்கை யென்று அவருடைய எண்ணம்! ஆயினும் தெரியாமல் ஏதேனும் பாபச் செயல் செய்திருக்கக் கூடும் என்ற சந்தேகம் அவருக்கு இடையிடையே தோன்றும். எல்லாவற்றிற்கும் காசிக்குச் சென்று கங்கையில் ஸ்நானம் செய்தால் உத்தமம் என்று தீர்மானித்துக் கொண்டார்.

காசியில் மூன்று மாதம் வாசம் செய்தார். அவருடன் கூட அவர் சம்சாரம் பர்வதத்தம்மாளும் அவர் பெண் மங்களமும் இருந்தார்கள். பிரதி தினமும் பஞ்ச கங்கா ஸ்நானமும் மணிகர்ணிகை ஸ்நானமும் செய்து விசுவேசுவர தரிசனம் அன்னபூரணி தரிசனம் முதலியவை செய்து திருப்திகரமாகக் காலங் கழித்தார்கள்.

அவர்கள் ஊருக்குத் திரும்பும் சமயம் தேசமே அல்லோல கல்லோலப்பட்டுக் கிடந்தது. காசியிலேயே கொஞ்சம் கலவரம். வழி யெல்லாம் அமர்க்களமாக இருந்தது. கலகக்காரர்களின் செய்கைகளில் இருப்புப் பாதைகளுக்குக் கேடு விளைவிப்பது ஒரு அம்சம். கணேசய்யரும் அவர் குடும்பத்தாரும் காசியை விட்டுப் புறப்பட்டு இரண்டு நாள் வரை சௌகரியமாகவே பிரயாணம் செய்தார்கள். இட நெருக்கடியைத் தவிர வேறு இடைஞ்சல் இல்லை. சென்னை மாகாணத்தை நெருங்கி வரும்போது ஒரு விபத்து நேர்ந்தது. மல்லாப்பூர் ஸ்டேஷனுக்குச் சமீபம் தண்டவாளங்கள் பெயர்க்கப்பட்டிருந்ததால் ரயில் சாய்ந்தது. முன்னால் இருந்த வண்டிகள் மடேர் என்று பாலத்தில் இறங்கி விட்டன. ஜனங்களுக்கு ஏராளமான சேதம். சிலர் இறந்தே போய் விட்டார்கள். சிலர் இசக் கேடாக மாட்டிக் கொண்டு கை கால்களை இழந்தனர். பலருக்குப் பலமான காயங்கள் ஏற்பட்டன. கணேசய்யருக்கு மண்டையில் சரியான அடி. தலை பொத்துப் போய் ரத்தம் பீறிட்டு வந்தது. அவர் பெண் மங்களத்திற்குச் சில்லறைக் காயங்கள் ஏற்பட்டன. பர்வதத்தம்மாளுக்குத் தெய்வாதீனமாக ஒரு கீறல் காயம் கூடக் கிடையாது.

அச்சமயம் அங்கே காயமடைந்த பிரயாணிகளுக்குச் சிகிச்சை செய்ய வந்திருந்த வைத்தியர்களில் மேனகை ஒருத்தி. அவளைக் கணேசய்யருக்காவது அவரது சம்சாரத்திற்காவது அடையாளம் தெரியவில்லை. மங்களம் பத்திரிகைகளில் பல சந்தர்ப்பங்களில் மேனகையின் படத்தைப் பார்த்திருந்ததால் உடனே தெரிந்து கொண்டாள். மேனகையும் இவர்களை அடையாளம் தெரிந்துகொண்டு அன்புடன் விசாரித்தாள். பர்வதத்தம்மாளுக்கு அப்பொழுதுதான் உயிர் வந்தது. மேனகையை இறுகக் கட்டிக் கொண்டு "அம்மா! உன்னைத் தெய்வந்தானடி கொண்டு வந்து விட்டது. இந்தக் குழந்தையைக் காப்பாற்றடி! இருவருக்கும் ஏதாவது செய், நீ நன்றாக இருப்பாய்" என்று மனதார முன்கூட்டியே வாழ்த்திக் கதறினாள்.

மேனகை இவர்களை ஆசுவாசப்படுத்தித் தன்னுடைய காரில் தன் பங்களாவிற்கே அழைத்துச் சென்றாள். காரில் போகும்போதே கணேசய்யருக்குப் பாதி உயிர் வந்துவிட்டது. பங்களாவில் இறங்கினவுடன் அவர்களுக்கு நறுமணம் கொண்ட காபி கொடுத்து கணேசய்யருக்குத் தலைக் காயத்தைச் சுத்தம் செய்து 'போரிக்' தெளித்து, மிருதுவான பஞ்சைத் தாராளமாக வைத்து, சுத்தமான துணியைக் கொண்டு 'பாண்டேஜ்' செய்தாள். காயம் ஆறிவிட்டதாகவே கணேசய்யருக்குத் தோன்றிவிட்டது. மங்களத்திற்கு மட்டும் ரயில் குலுக்கலினாலும் பயத்தினாலும் வயிற்றில் வேதனை ஏற்பட்டது. வந்துவிட்டது கவலை மறுபடியும் பர்வதத்தம்மாளுக்கு. மேனகை அவர்களுக்குச் சமாதானம் சொல்லி மங்களத்திற்கு வேண்டிய சிகிச்சைகளைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்தாள். இரண்டு தினங்கள் கழித்து மங்களமும் பிரசவித்தாள். அழகான ஆண் குழந்தை பிறந்தது. கணேசய்யருக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. பர்வதத்தம்மாளின் முகம் மலர்ந்து பல் வரிசையாகவே காணப்பட்டாள். அவள் அச் சமயம் மேனகையை வாழ்த்திய வாழ்த்துக்களுக்குப் பலனுண்டாகுமானால் மேனகைக்குக் கணக்கிற் கடங்காத மக்கள் பிறந்து அவளும் அவள் புருஷனும் கலியுகம் முடியும் வரையில் ஜீவித்திருப்பார்கள்.

## 4

மூன்று மாதம் வரையில் அவர்கள் மல்லாப்பூரிலேயே மேனகை வீட்டில் தங்கி இருந்தார்கள். குழந்தைக்குப் புண்ணியாகவாசனம் ஆனதும் வேறு ஜாகைக்குப் போகலாமா வென்ற மாதிரியாகக் கொஞ்சம்



ஜாடை காண்பித்தார் கணேசய்யர். "கூடவே கூடாது" என்று நிராகரித்து விட்டாள் மேனகை. அவள் புருஷனும் அவர்கள் அவ்வித எண்ணமே வைத்துக்கொள்ளக் கூடாது என்று உண்மையான விநயத்துடன் சொன்

ளூர். கணேசய்யரும் அந்த எண்ணத்தை அடியுடன் விட்டுவிட்டார்.

மூன்று மாத காலம் அவர்களுடைய வாழ்க்கை வெகு இன்பமயமாக நடந்தது. மேனகையின் பங்களா தேவலோகம்போல் இவர்களுக்குத் தோன்றிற்று. பங்களாவைச் சுற்றி அழகிய பூந்தோட்டம். அதில் மலர்ந்த புஷ்பங்களை எடுத்து கணேசய்யர் வெகு உற்சாகத்துடன் பூஜை செய்வார். இந்தமாதிரி புஷ்பம் நமது கிராமத்தில் கிடைக்கவில்லையே என்று சொல்லிக்கொள்வார். சமீபத்தில் தங்கபத்திராவில் அடிக்கடி ஸ்நானம் செய்யப் போவார்கள். போகவர மேனகை 'கார்' கொடுத்ததுடன் சில சமயம் தானும் போய் ஸ்நானம் செய்து சுவாமி தரிசனம் செய்துவருவாள். கணேசய்யர் போஜனப் பிரியர். மேனகை வீட்டில் விதவிதமான போஜனம் கிடைத்தது. கணேசய்யர் கணக்கும் கட்டுப்பாடும் சாப்பாட்டு விஷயத்தில் பிரயோஜனப்படவில்லை. மேனகையிடம் அடிக்கடி ஜீரணசக்தி மாத்திரைகளும் மருந்துகளும் வாங்கிச் சாப்பிடுவார். மாலை நேரங்களில் சினிமாவிற்கு மேனகை இவர்களை அழைத்துப் போவது வழக்கம். சினிமாவில் அவருக்கும் அவர் மனைவிக்கும் மோகம் ஏற்பட்டுவிட்டது. சினிமாவில் பார்த்ததையெல்லாம் இருவரும் சொல்லிச் சொல்லிச் சிரிப்பார்கள். மேனகையின் புருஷனுக்கு நமது நாட்டுப் படங்களில் அவ்வளவாகப் பிடித்தமில்லை. ஏதேனும் இங்கிலீஷ் படங்கள் வந்தால் போய்ப் பார்ப்பார்.

சினிமா பார்க்க வரும் தன் சிநேகிதர்களை மேனகை கணேசய்யருக்கு அறிமுகப்படுத்தி வைப்பதுண்டு. "இவர்கள் எங்கள் கிராமம், பந்துக்கள், காசி யாத்திரை செய்து வருகிறார்கள்!" என்று சொல்லுவாள். அவர்கள் அதை பக்தி சிரத்தையுடன் கேட்பதுபோல் முகத்தை வைத்துக்கொள்ளுவார்கள். மல்லாப்பூர் விபத்தில் மாட்டிக் கொண்டவர்கள் என்று சொன்ன தன்மேல் அநுதாபம் காட்டுவார்கள். கணேசய்யருக்கு ஹிந்தி, மகாராஷ்டிரம், இங்கிலீஷ் ஒன்றுமே தெரியாது. ஆகையால் மரியாதைக் கவனத்துடன் நின்று கொண்டு சிரிப்பு, புன்னகை முதலிய ஜாடைகளால் தமது திருப்தியைக் காட்டுவார். புருஷர்கள் மேனகையுடன் சரளமாகப் பேசுவதும் புழங்குவதும் அவருக்கு அருவருப்பு உண்டாக்கவில்லை. "என்ன மட்டு மரியாதை! எவ்வளவு விநய சம்பத்து!" என்று புகழ்வார். "என்ன குணம், என்ன மரியாதை! பார்த்தாயாடி, புருஷன் என்றும் வாரிச் சுருட்டிக்கொண்டு ஓடுகிறீர்களே நீங்கள்!" என்பார் மனைவியைப் பார்த்து.

அதற்குப் பர்வதத்தம்மாள், "இரண்டு வார்த்தை பேசிவிட்டால் உங்கள் ஊரில் சும்மா விட்டு விடுவார்களே!" என்று பதில் சொல்லுவாள்.



"வெறும் கர்நாடகக் கட்டுப்பெட்டிகள் தானேடி. படிக்கப் பிடிச்சிருந்தான்னு விஷயம் தெரியும்? காது ஊர் போய் காலையும் பார்த்தான்னு தெரியும்? வெறும் மண்டூகங்கள்" என்பார் கணேசய்யர்.

"என்னமோ மாப்பிள்ளைக்கு இந்த மாதிரி பட்டணங்களிலே வேலையானால் தேவலை. திருவாரூரும் திருக்கோஷ்டியூரும் என்ன வேண்டியிருக்கு" என்று அந்த அம்மாள் சொன்னாள்.

கணேசய்யர் தலையைத் தாழ்த்திக்கொண்டு "உன் மாப்பிள்ளைக்கு அவ்வளவு சமத்துப் போதாது" என்று ஈனஸ்வரத்தில் சொன்னார்.

அச்சமயம் மங்களம் குழந்தையுடன் வந்தாள். குழந்தையைப் பர்வதத்தம்மாளிடம் கொடுத்தாள். அதை அம்மாள் கொஞ்சிக்கொண்டு "இவனைச் சீமைக்கு அனுப்பணும். ஐ. ஸி. எஸ். பரீட்சை கொடுப்பான்" என்றாள்.

"எல்லாம் பகவான் இருக்கார்" என்று கம்பீரமாகச் சொன்னார் கணேசய்யர்.

பகவான் மட்டும் இருந்துகொண்டு குழந்தையும் ஆயுசுடன் இருந்தால் சீமைப் படிப்புக் கிடைக்கும் போலத்தான் அச்சமயம் தோன்றியது.

காட்டுப்பரம்பூரிலிருந்து கணேசய்யருக்குக் கடிதம் வந்தது. போட்டது போட்டபடி கிடக்கிறதென்றும் காசி விட்டபடியால் திரும்பி வரவேண்டுமென்றும் கணேசய்யரின் மூத்த குமாரர் எழுதினார். அதன்மேல் கணேசய்யர் ஊருக்குப் புறப்பட ஏற்பாடு செய்தார்.

## 5

கணேசய்யர் குடும்பத்தாருடன் ஊருக்குப் புறப்பட்டார். வழியெல்லாம் மேனகையைப் பற்றிய பேச்சுத்தான். என்ன குணம், என்ன மரியாதை, எவ்வளவு பந்து ப்ரீதி என்று புகழ்ந்தார்கள். "என்ன குடித்தனப் பாங்கு" என்று பர்வதத்தம்மாள் புகழ்ந்தாள். மேனகையின் புருஷனுடைய குண விசேஷங்களைச் சொல்லிச் சொல்லிச் சந்தோஷப்பட்டார்கள். ஜாதி வித்தியாசமாகத் தோன்றவே இல்லை என்றார்கள்.

காட்டுப்பரம்பூர் வந்து சேர்ந்தவுடன் கிராமத்தார் எல்லோரும் எதிர்கொண் டழைத்தார்கள். காசி யாத்திரை போவதைக் காட்டிலும் காசியாத்திரை போனவர்களைப் பார்ப்பது விசேஷமல்லவா? வயதில் குறைந்தவர்கள் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து ஆசீர்வாதம் பெற்றார்கள்.

தாங்கள் காசி போய்வந்த வரலாற்றையெல்லாம் கணேசய்யர் சவிஸ்தாரமாகச் சொன்னார். ரயில் விழுந்ததில் தப்பி வந்ததைக்கேட்டு ஊரார் சந்தோஷப் பட்டார்கள். மல்லாப்பூர் சமாசாரங்களையும் கணேசய்யர் சொன்னார். மேனகையின் குடும்ப போக க்ஷேமங்களைப்பற்றி உற்சாகமாகப் பேசினார். கிராமத்தார் பெரும்பாலோர் மௌனமாகக் கேட்டுக்கொண்டார்கள். இரண்டொருவர் சிறு கனைப்புகள் கனைத்தார்கள். விஷயங்களை மனதில் வாங்கிக்கொண்டு அதன்பேரில் ருசிபெற்றவர்கள்போல் பேச்சை மாற்றினார்கள்.

மேனகை ஸ்தோத்திரத்தைக் கேட்டு பாலகுஞ்சம்பாள் முகவாய்க்கட்டையை இடது தோள் பட்டையில் இடித்துக்கொண்ட இடிகளால் ரயில் சாய்ந்ததில் கணேசய்யருக்கு ஏற்பட்ட காயத்தைவிடப் பலமான காயம் ஏற்பட்டுவிடுமோ என்று பயப்படக்கூடியதாக இருந்தது. "ஜாதியாம், கட்டுப்பாடாம், ஊருக்குப் பெரியவராம்" என்று ஏகிக் காண்பித்தாள்.

## 6

நாலு நாட்கள் சென்றன. சந்திர மௌளீச்வர தீக்ஷிதரை வாயாடி சேஷய்யர் கேட்டார்.

"என்ன தீக்ஷிதரே, மேனகையம்மாளிடம் கணேசய்யருக்கு ரொம்ப அபிமானம் ஏற்பட்டுப்போச்சே!"

"அது மட்டும் இல்லை, தீக்ஷிதரே! அவாள் மாதிரியே பிடிச்சுப் போயிட்டாப்பலே இருக்கு. பார்த்தீர்களா மங்களம் கட்டிக்கொண்டிருக்கிற புடவையை? பத்து முழம்கூட இல்லையாம்!" என்று விஸ்தரித்தார் வெங்காச்சமய்யர்.

தீக்ஷிதர் புதிர் பிரித்தார்.

"எங்க தோஷமப்பா, பகவான் சொல்லியிருக்கிறாரே!" என்று கீதா வாக்கியத்தைச் சொன்னார். "அங்கே இருந்த சந்நிவேசம் சங்கம் எல்லாம் அந்த வேலை செய்யும். அந்த அமளியில் இந்தப் பட்டிக்காடு அத்வானப் பொட்டலாகத்தான் படும்" என்றார்.

இவர்கள் பேசிக்கொண்டிருந்த சமயம் கணேசய்யர் அவ்விடம் வந்து சேர்ந்தார். வாயாடி சேஷய்யரிடம் வெற்றிலை வாங்கிப் போட்டுக்கொண்டார்.

"என்ன, மாமா, மல்லாப்பூரிலே வெற்றிலை எல்லாம் எப்படி, நன்றாயிருக்குமா?" என்று கேட்டார் வாயாடி சேஷய்யர்.

"நன்றாயிருந்து காசமாப்போச்சு. வெற்றிலையா? வாழையிலை" என்றார் கணேசய்யர்.

"பின்னே என்னமா அங்கே இத்தனை நாள் காலக்ஷேபம் பண்ணினீர்கள்?"

"கொஞ்சம் சிரமந்தான். போன இடத்திலே இதெல்லாம் பார்த்து முடியுமா?"

"மேனகை வெற்றிலை போடறதில்லையா?"

"அவ்வளவாகப் போடக்காணோம். ஆனால் ரொம்ப விசுவாசம். அதிலே எல்லாம் குறைச்சலில்லை. என்ன என்றாலும் நம்ம ஊராகுமா?" என்றார் கணேசய்யர்.

"என்ன, மல்லாப்பூரைப்பற்றி செய்த ஸ்தோத்திரம் கணக்கு வழக்கு இல்லாமல் இருந்ததே? இதுக்குள்ளாக இப்படி மாறிவிட்டீர்களே?" என்று வியந்தாப்போல் கேட்டார் வெங்காச்சமய்யர்.

"அந்த ஊர் அதன் மட்டிலே நல்ல ஊர்தான். மேனகையும் அவள் புருஷனும் பரம விசுவாசமாகத்தான் நடத்தினார்கள். இருந்தாலும் காட்டுப்பரம்பூர் சுகம் வருமா?"

"ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்?"

"ஊர் பெரிய ஊர்தான். ஆனால் ஆசாரம் என்பதே கிடையாது. வயலும் வரப்பும் தேரும் திருநாளும் இந்த மாதிரி எல்லாம் வருமா? காவேரி ஸ்நானம், தினப்படி ஸ்வாமி தரிசனம். இந்த ஊர் மாதிரியே வேறே. ஊர் வந்த பிறகுதானே நல்ல உயிர் வந்தது!" என்று மனதாரச் சொன்னார் கணேசய்யர்.

வாயாடி சேஷய்யர் தீக்ஷிதரை விஷமமான பார்வையுடன் பார்த்தார். தீக்ஷிதர் புன் சிரிப்புடன் டதில் சொன்னார்:—

"எங்க விசேஷம், அப்பா! எப்போதுமே அக்கரைக்கு இக்கரைதான் பச்சை. பல நாள் போகட்டும்; இந்தப் புல் தரைக்குச் சமானமாகுமா என்று கணேசய்யரே பாடுவார்."




Regd. TRADE MARK





தந்தி: "ஆர்ட்" திருச்சி. Tel: "ART" Trichy.

எமது தொழிற்சாலையில்
நூதன முறையில்
தயாரிக்கப்பட்ட

"ஆர்ட் ஸ்பெஷல் வைரங்கள்"

ஆபரணங்களுக்கு
மிகச் சிறந்தவை.



தோடு சைஸ் வைரம் 1க்கு ரூ. 1- 2-0
பேசரி சைஸ் வைரம் 1க்கு ரூ. 0-14-0

எமது பாக்கெட்டுகள் ஒவ்வொன்றும் சீல் செய்யப்பட்டது.

# திருச்சி ஆர்ட் டைமன் ஒர்க்ஸ்

**130, பெரிய சௌராஷ்டிர தெரு, திருச்சிராப்பள்ளி.**



மணி பவனம்

Head Office:-பெரிய தெரு, கும்பகோணம்.

## திருப்தி நிச்சயம்

எங்களுக்கென்றே கொள்ளேகாலம் முறுக்குப் பட்டில் பலவித புதுக் கலர்களில் நவீன பார்டர்களுடன் தயாராகி வரும் 12, 16, 18, 19 முழம் பட்டு சேலைகளும், கூரா்ச்சி, பனாரஸ் சேலைகள் புது பார்டர்களுடன் புதிய Design களில் சேலைகளும் மற்ற ஜவுளி தினுசுகளும் ஒரே விலையில் மலிவாக கிடைக்கும்

**V. N. சுப்பிரமணிய அய்யர்**

ஜவுளி வியாபாரம்

277, ராஜ வீதி :: கோயமுத்தூர்.

*N. B.* வெளியூர் ஆர்டர்களைக் கவனித்து V.P.யில் அனுப்பப்படும்



"நேற்றந்தி நேரத்திலே நீராடும் துறைதனிலே ........"


தோழியின் உய்த்துணர்வு
ஏனல் காவல் இவளும் அல்லள்.
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்:
நரந்தங் கண்ணி இவனோ(டு) இவளிடை
கரந்த உள்ளமொடு கருதியது பிறிதே:
நம்முன் நாணுநர் போன்று, நம்முன்
மதுமறைந்(து) உண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத் துள்ளே மகிழ்ப:
சொல்லும் ஆடுப கண்ணி னானே
—சங்க காலப் பாட்டு.

# சந்தோஷ முடிவு

கவி.ஜீ.க

"வருசத்துக்கு ஒரு நாள் தீவாளி வரது..." என்று ஆரம்பித்தாள் தங்கம்.

"ஆமாம், அதுக்கென்ன? நீ தினம் தினம் தீவாளி வரணும்னு சொல்றயா?" என்று எரிந்து விழுந்தான் தம்பு.

"அதுக்கில்லே, நான் சொல்றது! நல்ல நாளும் அதுவுமா, கையிலே காசு காக இல்லே. குழந்தையானு, இப்ப இருந்தே, 'அப்பா எனக்குத் தீவாளிக்கு ரொம்ப ரொம்பப் பட்டாசுக் கட்டு வாங்கிக் கொடுப்பாரு, இல்லே!' என்று சொல்லிச் சொல்லிக் குதிக்குது" என்றாள் தங்கம்.

குழந்தை என்றதும், தம்புவின் கோபமெல்லாம் பறந்து விட்டது. "இந்த வருசம்தான் மானம் சதி பண்ணிடுச்சே! என்ன பண்றது? நல்ல நாளும் அதுவுமா எங்கே போய் காசு காக கடன் கேட்கிறது? கூலி வேலையும் கிடைக்கல்லே. நாலு கலம் விதை நெல்லு இருக்குது பாரு. அதை வித்துத்தான் தீவாளி கும்பிடணும். வண்டி மாட்டை வித்துடலாம்னு பார்த்தாலும், நாளைக்குத் திடீர்னு மழை பெய்தால் உழவுக்கு என்ன செய்கிறது?" என்று சொல்லி ஏங்கினான் தம்பு.

"என்ன செய்கிறது? பகவான் தான் நம்ப பங்கிலே இருக்கணும்" என்று சொல்லி விட்டு உள்ளே போவதற்காக நடையை விட்டு எழுந்தாள் தங்கம். தம்புவும் அதுவரை தவடையில் அடக்கி வைத்திருந்த புகையிலைத் திப்பியைத் துப்புவதற்காக வாசற்பக்கம் வந்தான். அந்த சமயத்தில், தபால்காரன் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து தம்புசாமியின் கையில் கொடுத்துவிட்டுப் போனான்.

சென்னை.
5—11—'42.

தேவரீர் அண்ணா அவர்களுக்கு நமஸ்காரம்.

இவ! இந்த வருஷம் தீபாவளிக்குக்கூட அங்கே வர வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருக்கிறீர். 'கல்யாணமாகி நாலு வருஷமாகிறது. இன்னுமா நமக்கு அங்கே தீபாவளி?' என்று நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்; கேட்கவில்லை. உன்னுடைய கஷ்டம் எனக்குத் தெரியும். அவருக்கு என்ன தெரியும்? 'நல்ல நாளும் அதுவுமா நம்ப குழந்தையைக் கூட்டிக் கொண்டு ஒருத்தர் வீட்டுக்கும் போகக் கூடாது' என்றுகூட நல்ல விதமாகச் சொல்லிப் பார்த்தேன். 'எனக்கு உடம்பு சரியாயில்லே. எங்காவது நாட்டுப் புறத்துக்குப் போய் நாலு நாளாவது தங்க வேண்டும் போலிருக்கிறது' என்று சொல்லுகிறார். என்னால் அதைத் தட்டிப் பேச முடியவில்லை. அப்படித் தட்டிப் பேசினாலும், 'உன் ஆத்தான் வீட்டு லட்சணம் அவ்வளவுதான்!' என்று ஏசிக் காட்ட ஆரம்பித்து விடுவார். நான் என்ன செய்வது, அண்ணா! நாங்கள் வந்தால் புடவை, வேஷ்டி, பாவாடை என்றெல்லாம் வாங்கிக் கொடுத்தாக வேண்டும். வீட்டுச் செலவுக்குக் கொடுக்கிற பணத்தில் மிச்சம் பிடித்து நான் பதினைந்து ரூபாய் சேர்த்து வைத்திருக்கிறேன். வரும்போது அதைக் கொண்டு வந்து அவருக்குத் தெரியாமல் உன்னிடம் கொடுக்கிறேன். அதைக் கொண்டு உன் சக்திக்கு ஏற்றபடி ஏதாவது மரியாதை செய்து எங்களை அனுப்பி வைத்துவிடு. என்னால் முடிந்தது அவ்வளவுதான். வேறு நான் என்ன செய்ய முடியும்? தீபாவளிக்கு முதல் நாள் நாங்கள் வருகிறோம். நீ திண்டிவனம் ஸ்டேஷனுக்கு வர வேண்டாம். முறுக்கேரிக்கு வண்டியைக் கட்டிக் கொண்டு வந்து, பஸ் நிற்குமிடத்தில் காத்திருந்தால் போதும்.

உன் அன்புள்ள தங்கை,
தனகோட்டி.

இந்தக் கடிதத்தைத் தம்பு படிக்கக் கேட்ட தங்கம், "இதுவும் நமக்குச் சோதனைதான்! என்ன செய்வது? அவங்க பதினைந்து ரூபா கொண்டு வந்து கொடுத்திட்டா, அதிலே எல்லாம் ஆயிடுமா? அந்த நெல்லையும் வித்துத்தான் அவங்களைச் சரிப்படுத்தி அனுப்ப வேணும். நம்ம அருமைக் குழந்தைக்குக்கூட ஒரு கந்தை எடுத்துக் கொடுக்க முடியாது போலிருக்கிறது!" என்று சொல்லி வருத்தப்பட்டாள்.

அதைக் கேட்டுத் தம்புசாமியும் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுத் தன் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டான்.

## 2

தம்புவின் வீட்டில் அவன் மனைவியையும் குழந்தையையும் தவிர வேறு ஒருவரும் கிடையாது. சிறு வயது. கிராமத்திலேயே அவனைப் போல் ஏழை விவசாயி ஒருவனும் இல்லை. நல்ல உழைப்பாளிதான். இருந்தாலும் என்ன? வறுமை நீங்கி விடுமா? வான மழை பொழிந்தால் தான் அவனுடைய வாடிய வயிறு நிறையும். அவனுக்கு இருந்த சொற்ப நிலத்துக்கு ஏரிப் பாய்ச்சலோ, ஆற்றுப் பாய்ச்சலோ ஒன்றும் கிடையாது. தம்புவின் ஒரே தங்கைதான் தனகோட்டி. பட்டணத்தில் கொடுத்தால் பச்சைப்பசேலென்று வாழ்வாள் என்று எண்ணி, மில் தொழிலாளியான தங்கவேலுக்கு அவளைக் கட்டிக் கொடுத்திருந்தான். பிற்காலத்தில் அவர்கள் நமக்கு ஏதாவது உதவி செய்வார்கள் என்று எண்ணித்தான் தம்பு அவளை அப்படிக் கட்டிக் கொடுத்தது. ஆனால் உலகத்தில் எல்லாம் எதிர்பார்ப்பதுபோல் நடக்கிறதா? அவர்கள் இவனுக்கு உதவி செய்யாமலிருப்பதோடு நின்றிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். அதுதான் இல்லை. அவர்கள் இவனிடம் அடிக்கடி உதவி கோரினார்கள். உபத்திரவம் தாங்க முடியாமல் தம்பு தவித்துக் கொண்டிருந்தான். ஆனால், தன் மனைவி அவர்கள்மீது குற்றம், குறை சொல்வதற்கு மட்டும் அவன் இடம் கொடுப்பதில்லை.

* * *

தீபாவளிக்கு முதல் நாள். தம்பு அன்று காலையில் எழுந்ததும், கட்டை வண்டியைக் கட்டிக் கொண்டு முறுக்கேரிக்குச் சென்று அவர்கள் வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். அவர்களும் வந்தார்கள். வண்டியில் ஏறிக்கொண்டார்கள். தம்பு வேகமாக வண்டியைச் செலுத்தினான். வழியில்

அவள் தன் உண்மை மனோநிலையை ஒளித்து, அவர்களுடன் உற்சாகமாகப் பேசிக்கொண்டு வந்தாள்.

முதல் நாள் இரவு நல்ல மழை பெய்திருந்தது. எனவே, வண்டி வழியில் சேற்றில் சிக்கிக் கொண்டது. தம்பு தன்னால் ஆனமட்டும் வண்டி கிளம்புவதற்காக மாட்டை அடித்து விரட்டிப் பார்த்தான். மாடுகளும் ஆனமட்டும் இழுத்துப் பார்த்தன. வண்டி அசையவில்லை. அப்பொழுது தனகோட்டி, "மாட்டைப் போட்டு சும்மா அடிக்காதே, அண்ணா!" என்று சொல்லிவிட்டுத் தன் கணவனைப் பார்த்து, "அங்கே காரைத் தள்ளுவோ, இல்லையோ? இங்கே இறங்கி இந்தக் கட்டை வண்டியைக் கொஞ்சம் தள்ளேன்" என்று சொல்லிச் சிரித்தாள்.

விஷயம் என்னவென்றால் அவர்கள் வரும்போது வழியில் 'பஸ்' நின்றுவிட்டது. கண்டக்டர், பிரயாணிகளையெல்லாம் இறக்கிவிட்டு 'பஸ்'ஸைக் கொஞ்சம் தள்ளி விடச் சொன்னான். அப்படித் தள்ளிவிட்டவர்களில் தங்கவேலுவும் ஒருவன். ஆனால் அவனுக்குக் காரைத் தள்ளிவிடும்போது அவமானமாயில்லை. கட்டை வண்டியைத் தள்ளச் சொன்ன போதுதான் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல் வண்டியிலிருந்து கீழே இறங்கிச் சும்மா நின்றான். அவனுடைய முகபாவத்திலிருந்து விஷயத்தைத் தெரிந்துகொண்ட தம்பு, தானே இறங்கி வண்டியைத் தள்ளினான். வண்டியும் நகர்ந்தது. எல்லோரும் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.



வீடு வந்து சேர்ந்ததும், விதை நெல்லை விற்றுத் தன் மனைவியிடம் கொடுத்து வைத்திருந்த பத்து ரூபாயைப் பெற்றுக்கொண்டான் தம்பு. அவன் தங்கை தன் கணவனுக்குத் தெரியாமல் கொடுத்த பதினைந்து ரூபாயையும் வாங்கி மடியில் வைத்துக் கொண்டான். தீபாவளிக்கு வேண்டியவற்றை வாங்கிக் கொண்டு வருவதற்காகத் திண்டிவனத்துக்குக் கிளம்பினான்.

"அண்ணா! சேலையில் ரெண்டு இழை பட்டு நூலாவது இருக்கட்டும்" என்று எச்சரித்தாள் தனகோட்டி.

"மாமா! எனக்குக் கொட்டடி போட்ட பாவாடை!" என்றது ஒரு குழந்தை.

"அப்பா! எனக்கு மத்தாப்பு!" என்றது இன்னொரு குழந்தை.

"அப்போ உனக்குப் பாவாடை வேணுமே, கண்ணு!" என்று கேட்டான் தம்பு.

"அதுவுந்தான் வேணும்!" என்றது அந்தச் சமர்த்துக் குழந்தை.

"இதுக்கெல்லாம் பணத்துக்கு எங்கே போறது" என்று எண்ணிக் கொண்டே திண்டிவனத்தை நோக்கி நடந்தான் தம்பு.

## 3

அன்று மாலை ஜவுளி நிறுசுகளுடனும், பட்டாசுக் கட்டுகளுடனும் தம்பு வீடு வந்து சேர்ந்தான். அவற்றைப் பார்த்த தங்கம், தனக்கும் தன் குழந்தைக்கும் ஒரு ஜவுளியும் இல்லாமலிருப்பதைக் கண்டு ஏமாற்றமடைந்தாள். இது முதலிலேயே அவளுக்குத் தெரிந்ததுதான். என்றாலும் அவளுக்கு இப்பொழுது என்னமோ கொஞ்சம் எரிச்சலாய்த்தான் இருந்தது. சுற்றும் முற்றும் பார்த்தாள். தனகோட்டியையும், அவள் கணவனையும் காணவில்லை. எனவே, தம்புவைப் பார்த்து, "ஆமாம், இப்படி வாங்கிக்கிட்டு வந்துட்டியே, நாளைக்கு அவர்கள் புதுத் துணிகளை உடுத்திக் கொண்டால், நாம் என்னத்தைக் கட்டிக் கொண்டு அவர்கள் எதிரில் நிற்பது?" என்றாள்.

"நான் என்ன பண்ணட்டும், தங்கம்! துணிமணிகளின் விலை சொல்ல முடியாத ரொக்கு இப்போது" என்றான் தம்பு.

"நமக்குத்தான் இல்லாமற் போகட்டும். நல்ல நாளும் அதுவுமா, குழந்தைக்கு ஒரு பாவாடைக்குக் கூடவா வழியில்லாமலிருக்கிறது?" என்று கேட்டாள் தங்கம்.

தம்பு தலையைச் சொறிந்தான். "அதுதான் பட்டாசுக் கட்டுகளை வாங்கிக்கிட்டு வந்திருக்கேனே!" என்றான்.

"அதை உன் தலையில் போட்டுக் கொளுத்திக் கொள்ளு!" என்று தங்கம் எரிந்து விழுந்தாள்.

இந்த சமயத்தில், தனகோட்டி வாடிய முகத்துடன் அங்கு வந்து சேர்ந்தாள். அவளைப் பார்த்ததும் தம்பு, "ஏன், அம்மா! என்ன கஷ்டம்?" என்று கேட்டான்.

"அவர் போயிட்டாரு!" என்றாள் தனகோட்டி.

"எவரு?"

"அவர்தான்."

"என்னத்துக்கு?"

"நான் வழியில் கட்டை வண்டியைக் கொஞ்சம் தள்ளிவிடச் சொன்னேனோ, இல்லியோ? அதுக்காக, 'அடுத்தடுத்து வந்தா, கட்டை வண்டியையும் தள்ளச் சொல்லுவே; கட்டை வெட்டிப் போடவும் சொல்லுவே!'ன்னு அவர் கோவிச்சுக்கிறாரு. நான் பதிலுக்கு ஏதோ சொன்னேன். அதுக்கு அவர் கோவிச்சிக்கிறு ஊருக்குப் போயிடறேன்னு போறாரு. நான் மட்டும் இந்தக் குழந்தையை வச்சிக்கிறு எப்படி ஒண்டியா அவரை விட்டுட்டு இருப்பேன்?" என்று சொல்லி அழ ஆரம்பித்து விட்டாள் தனகோட்டி.

"எப்போ போறாரு?" என்று சோகமே உருவாய்க் கேட்டான் தம்பு.

"இப்பத்தான், அண்ணு!" என்றாள் தனகோட்டி.

"அட தெய்வமே! எல்லாம் எனக்கு இப்படித்தானு வந்து சேரணும்? அழாதே அம்மா, அழாதே! இந்நேரம் திண்டிவனம் போயிருக்க மாட்டான். நான் ஒரே ஓட்டமாய் ஓடி, அவனே எப்படியாவது சமாதானம் பண்ணி, வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு வந்துடறேன்!" என்று சொல்லி உடனே எடுத்தான் ஓட்டம் தம்பு.

நல்ல வேளையாகக் கொஞ்ச தூரத்திலேயே தம்பு, தங்கவேலனைக் கண்டுபிடித்துவிட்டான். தங்கவேலன் உண்மையாகவே கோபித்துக் கொண்டு ஊருக்குப் போய்விட வேண்டு மென்றால், அவன் அந்நேரம் போயிருக்கலாம். அவன் கோபித்துக் கொண்டது வெறும் டம்பத்துக்காக. எப்படியும் தம்பு நம்மைத் தேடி வந்து சமாதானம் செய்வான் என்பது அவன் எதிர்பார்த்ததுதான். அதற்காகவே அவன் மெல்ல வழி நடந்து கொண்டிருந்தான்.

"நல்ல நாளும் அதுவுமா இப்படிக் கூடச் செய்யலாமா?" என்று சாவதானமாகக் கேட்டான் தம்பு.

"என்னத்தைச் செய்துட்டாங்க?" என்று விறைப்புடன் கேட்டுக் கொண்டே, இன்னும் கொஞ்சம் வேகமாகக் காலே இழுத்து வைத்தான் தங்கவேலன்.

"என்ன செய்துட்டேன்னு நான் சொல்றேன்? அங்கே அந்தப் பொண்ணு அழுவுது. குழந்தை வேறே கத்துது. என்னமோ அறியாதது, ஏதோ விளையாட்டுக்குச் சொல்லிப்புடிச்சி. அதுக்குப் புத்தி அவ்வளவுதான். தெரிஞ்சா சொல்லியிருக்குமா? நீ வா, வீட்டுக்கு. நான் அதைத் திட்டம் பண்ணி வைக்கிறேன்" என்று சொல்லி அவன் கையைப் பிடித்து இழுத்தான் தம்பு.

தங்கவேலன் இரண்டு மூன்று முறை அவன் பிடியிலிருந்து விலகிக் கொண்டான். தன்னுல் முடிந்த மட்டும் முகத்தைக் கோபமாக வைத்துக் கொண்டான். உத்தரீயத்தை எடுத்து இரண்டு மூன்று முறை உதறிப் போட்டுக் கொண்டான். "அந்தப் பொண்ணின் சகவாசமே எனக்கு இனிமேல் வேண்டாம்" என்று கடுகடுத்துச் சொன்னுன். கடைசியில், "இப்பொழுது உன் மூஞ்சியைப் பார்த்துத்தான் வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே தம்புவின் பின்னுல் வந்தான் தங்கவேலன்!

அந்த வெட்கம் கெட்டவனுக்கு, "ஆண் ஜன்மம் என்றும் அவ்வளவு உயர்ந்தது" என்று எண்ணம்!

4

மறுநாள் தீபாவளி. எல்லோரும் எண்ணெய் ஸ்நானம் செய்தார்கள்.

புது ஜவுளிகளை எடுத்து விருந்தாளிகளுக்குக் கொடுத்தான் தம்பு. தன் குழந்தைக்குப் பட்டாசுக் கட்டுகளைக் கொடுத்துக் குஷிப் படுத்தினான். அந்தக் குஷியில் குழந்தை புதுப் பாவாடையை மறந்துவிடு மென்பது அவன் எண்ணம். அந்தப் பொல்லாத குழந்தையா மறந்துவிடும்? "அப்பா! எனக்குப் பாவாடை இல்லையா?" என்று எல்லோருக்கும் எதிரில் கேட்டது அந்தக் குழந்தை.

"இப்பவே போட்டுக் கொண்டா அழுக்காக்கி விடப்போறே! அது பட்டணத்துக் குழந்தை. சாருக்கா இருக்கும். சாயங்காலம் போட்டுக் கொள்ளேன்!" என்று சாமர்த்தியமாகச் சமாதானம் செய்து பார்த்தான் தம்பு.

"ஊஹூம்" என்று கண்ணைக் கசக்க ஆரம்பித்து விட்டது குழந்தை.

"குழந்தையை ஏன் அழ விடறே? இப்பொழுதேதான் போட்டு விடேன்!" என்றான் திண்ணையில் உட்கார்ந்திருந்த தங்கவேலன்.

அதைக் கேட்டதும் தம்புவுக்கு மானம் போவது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. என்றாலும், ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "அதுக்கென்ன தெரியும்? இப்போது ஒன்றும் வேண்டாம்" என்று சொல்லி விட்டுத் தம்பு தன் குழந்தையைப் பார்த்து, "அம்மா பணியாரம் எல்லாம் பண்ணி வைக்கட்டும். நாம் தென்னந் தோப்புக்குப் போய் இளநீர் குடித்து விட்டு வரலாம், வா!" என்று சொல்லிக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வெளியே சென்றுவிட்டான்.

அவன் சென்ற சிறிது நேரத்திற்குப் பிறகு, தங்கம் புதுப் புடவை உடுத்திக் கொள்ளாமலிருப்பதைக் கவனித்த தனகோட்டி, "ஏன், அண்ணி! நீ புதுப் புடவை கட்டிக் கொள்ளவில்லையா?" என்று கேட்டான்.

தன்னால் முடிந்தமட்டும் தன் முகத்தில் மகிழ்ச்சியை வரவழைத்துக் கொண்டு, "எனக்கென்ன, இப்போ அவசரம்? மத்தியானம் கட்டிக் கொண்டால் போகிறது!" என்று சொல்லி விட்டு அடுப்பங் கரைக்குச் சென்றுவிட்டாள் தங்கம்.

சிறிது நேரத்திற்குப் பிறகு தம்பு வீடு திரும்பினான். முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டு அங்கு மிங்குமாக நடமாடிக் கொண்டிருக்கும் தங்கத்தைப் பார்த்தபோது, அவனுடைய கவலை பன்மடங்கு அதிகரித்தது. அத்துடன் அவனுடைய குழந்தை மீண்டும் புதுப் பாவாடை வேண்டுமென்று அவனைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்துவிட்டது. தம்புவுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போலிருந்தது. ஒன்றும் புரியாமல் அவன் தனக்கு எதிரே மாட்டியிருந்த கண்ணன் படத்தைப் பார்த்தான். அந்தப் படத்திலிருந்த கண்ணன் திருவுருவம் அவனைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது.

"கண்ணா! நீதான் எனக்குக் கதி!" என்று முணு முணுத்தான் தம்பு.

* * *

இந்த சமயத்தில்தான் "கதை சுபமாக முடிய வேண்டும்" என்ற கட்சிக்காரர்கள் ஆனந்தப் படக் கூடிய ஒரு அதிசய சம்பவம் நிகழ்ந்தது.

அவனுக்கு எதிரே கிருஷ்ண பரமாத்மா பிரசன்னமானார்.

"தம்பு! கவலை வேண்டாம். இதோ உனக்குப் புது வேஷ்டி!" என்று இரண்டு பட்டுப் பீதாம்பரங்களை எடுத்து அவனிடம் கொடுத்தார் கிருஷ்ண பரமாத்மா.

தம்பு பட்டற்ற மகிழ்ச்சியுடன் அவற்றைப் பெற்றுக் கண்ணில் ஒத்திக்கொண்டு கண்ணன் காலில் விழுந்தான்.

"தங்கம்! இதோ, உனக்குப் பட்டுப் புடவை!" என்று ஒரு பட்டுப் புடவையை எடுத்து அவளிடம் கொடுத்தார் கிருஷ்ண பரமாத்மா.

அவளும் தாங்கமுடியாத ஆச்சரியத்துடன் அதைப் பெற்றுக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

"குழந்தாய்! இதோ, உனக்குப் பாவாடை!" என்று ஒரு பட்டுப் பாவாடையை எடுத்துக் குழந்தையிடம் கொடுத்தார் கிருஷ்ண பரமாத்மா.

குழந்தையும் குஷியுடன் அதைப் பெற்றுக் கொண்டு கும்மாளம் கொட்டிற்று!

இந்த சமயத்தில், "நாம் தீபாவளிக்காக விற்றுவிட்ட அந்த நாலு கலம் விதை நெல்லையும் பரமாத்மாவினிடமிருந்தே வாங்கிக் கொள்வோமே" என்று எண்ணியவனாய், தம்பு பகவானை நெருங்கினான். அவனுடைய துரதிர்ஷ்டம் அதற்குள் அவர் மாயமாய் மறைந்து விட்டார்!

அடுத்த கணத்தில், வீட்டுக் கூரையைப் பொத்துக் கொண்டு பட்டாசுக் கட்டுகள் படபடவென்று விழுந்தன!

அவற்றைக் கண்ட மாத்திரத்தில், இரண்டு குழந்தைகளும் ஒன்றை யொன்று தள்ளிக் கொண்டு ஓடோடியும் சென்று அந்தப் பட்டாசுக் கட்டுகளை வாரி மடியில் வைத்துக் கொண்டன!

* * *

"இதென்ன, கடைசியில் ஒரே பேத்தலா யிருக்கிறதே!" என்கிறீர்களா? தீபாவளியும் அதுவுமாய், கதையைச் சந்தோஷமாய் முடிப்பதற்கு வேறு என்னதான் செய்கிறது?



# அச்சில் வந்தது!

ஸோமாஸ்

இருந்தால் பெரிய மனிதனாக இருக்க வேண்டும்; இல்லா விட்டால் பிராணனை விடவேண்டும், என்னும் எண்ணம் கிருபாநிதியின் மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது. பெரிய மனிதன் என்னும் உருவத்தில் அல்ல; அவனைப் பற்றி நாலு பேர் பேச வேண்டும்; அவன் பெயர் அடிக்கடி பத்திரிகையில் வெளியாக வேண்டும் — இதுதான் அவன் ஆசை, மனோரதம், பகற் கனவு எல்லாம்.

முதல் முதலில் கிருபா நிதியின் பெயர் அச்செழுத்தில் வெளியாவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது; அந்தச் சந்தர்ப்பம் நேர்ந்ததற்குக் காரணம் அவனுக்குக் கல்யாணம் நேர்ந்ததுதான். கிருபாநிதிக்கு விவாகமான பொழுது பக்கத்தில் தலையைக் குனிந்து கொண்டு அமர்ந்திருந்த மணப் பெண்ணைக்கூட அவன் கடைக்கண்ணால் பார்க்கவில்லை. விவாகத்துக்கு வந்திருந்த பந்து மித்திரர்களைஅவன் திரணமாகவே நினைத்தான். பின் எதைத் தான் கவனித்தான்?

அவன் முழு கவனமும் தன் விவாக முகூர்த்தப் பத்திரிகையைப் படிப்பதிலேயே இருந்தது. "கிருபாநிதிக்கு மீனாக்ஷியைப் பாணிக்கிரகணம் செய்து கொடுப்பதாய்..." என்று அச்சடித்திருந்ததைப் பார்த்துப் பார்த்துப் புளகாங்கித மடைந்தான். அப்பொழுது அவன் மனத்தில் "இப்படி என் பெயர் எல்லாப் பத்திரிகைகளிலும் என்றைக்கு வரப் போகிறது? அதைப் பார்த்து என்றைக்கு நான் சந்தோஷப்படப் போகிறேன்?" என்ற எண்ணமே ஓடிக் கொண்டிருந்தது.

கொஞ்ச காலத்துக்குப் பிறகு, அவன் மைத்துனனுக்குக் கல்யாணம் நிச்சயமாயிற்று. முகூர்த்தப் பத்திரிகை கிருபாநிதிக்கு வந்ததும் அவன் முகூர்த்தம் என்றைக்கு என்று கூடக் கவனிக்கவில்லை. "தங்கள் வரவை அன்புடன் எதிர்பார்க்கும்" என்னும் அம்சத்தைத் தான் அவன் கண்கள் தேடின. அந்த அம்சம் அவன் கண்ணில்பட்டதும் அந்த ஜாபிதாவில் தன் பெயர் சேர்க்கப் படவில்லை என்பது தெரிந்தது. அவ்வளவு தான்; கிருபாநிதிக்குக் கோபத்தினால் மூக்கு மாத்திரம் துடிக்கவில்லை; உதடுகளும் துடித்தன.

"சரஸா, இங்கே வா! உன் அண்ணாவின் கல்யாணப் பத்திரிகை வந்திருக்கிறது!" என்று தன் மனைவியைத் தினக்குரலில் அழைத்துக் கூறினான் கிருபாநிதி.

சரஸ்வதிக்குத் தன் கணவனின் குரலில் இருந்த தினத் தொனிக்குக் காரணம் புலனாகவில்லை. சந்தோஷப் படவேண்டிய இடத்தில் ஒரே சோகக் குரலா யிருந்தால் யாருக்குத்தான் விஷயம் புரியும்?

"என் அண்ணாவின் கல்யாணப் பத்திரிகை வந்திருக்கிறதா? போன மாசத்திலேயே இதைப் பற்றிப் பேச்சு நடந்துகொண்டிருந்தது. அது இருக்கட்டும். எதற்காக நீங்கள் முகத்தைத் தூக்கிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று சரஸா கேட்டாள்.



"ஒன்றும் இல்லை. நான் ஒருவன் இருக்கிறேன் என்பதையே உன் அண்ணா மறந்து விட்டானே என்பதை நினைக்கும் பொழுதுதான் எனக்குக்கோபம் கோபமாக வருகிறது."

"உங்களை யார் மறந்தார்கள்? உங்களை மறந்ததனால் தான் கல்யாணப் பத்திரிகையையும் அனுப்பிக் கடிதமும் எழுதி யிருக்கிறானாக்கும்! ஏன் இப்படி நீங்களாக ஏதாவது நினைத்துக் கொள்கிறீர்கள்?" என்று சரஸா கடிந்து கொண்டாள்.

உடனே கிருபாநிதிக்கு ஆத்திரம் தாங்கவில்லை. "ஆமாம். என்னை மறக்காததனால் தான் 'தங்கள் வரவை அன்புடன் எதிர்பார்க்கும்' என்னும் வரிசையில் என் பெயரையே சேர்க்கவில்லை யாக்கும்! தெரியும் எனக்கு! என் பெயரைப் போட்டு என்னைக் கௌரவிக்க வேண்டும் என்னும் எண்ணம் இருந்தால் என் பெயரை அந்த வரிசையிலே சேர்த்திருக்க மாட்டானா? யாராருடைய பெயரை யெல்லாமோ சேர்த்திருக்கிறானே! என் பெயர் தான் அவனுக்கு அதிகமாய்ப் போய்விட்டதாக்கும்" என்று கூறினதும் கிருபாநிதியினால் மேலே பேச முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது.

இந்த நிலையில் கிருபாநிதிக்கு ஒரு வேலையும் ஓடாமல் இருந்ததில் அதிசயம் ஒன்றுமில்லை. இரண்டு நாள் கழித்து ஒரு கல்யாணப் பத்திரிகை வந்தது. கிருபாநிதிக்கு அதைப் பார்த்ததும் ஒரே திகைப்பாய்ப் போய்விட்டது: திகைப்புக்குக் காரணம்:— "தங்கள் வரவை அன்புடன் எதிர்பார்க்கும்: ஜி. கிருபாநிதி, இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்ட், சைதாப் பேட்டை, சென்னை" என்று கல்யாணப் பத்திரிகையின் அடியில் அழகிய அச்செழுத்தில் காணப்பட்டதுதான்.

அந்தப் பத்திரிகை விவாகத்துக்கு முதல் நாள் தான் கிடைத்தது. முகூர்த்தப் பத்திரிகையில் தன் பெயரைப் பார்த்ததும் கிருபாநிதிக்குத் தலை கால் புரியவில்லை; சந்தோஷம் தாங்க முடியவில்லை.

சரஸா தன் தமையனுக்கு இதைப் பற்றி ரகசியமாகக் கடிதம் எழுதியது கிருபாநிதிக்கு எப்படித் தெரியும்? தன் தமையன் கல்யாணத்துக்குக் கிருபாநிதி தன்னை அழைத்துப் போக மாட்டான் என்று தெரிந்து கொண்டுதான் சரஸா சில பத்திரிகைகளில் மாத்திரமாவது கிருபாநிதியின் பெயரைச்

முடிந்ததன் மூலமாகவாவது தன் பெயர் பத்திரிகையில் வெளி வந்ததே என்கிற அபரிமிதமான மகிழ்ச்சி தான் விருபாக்ஷி சீக்கிரம் சொஸ்த மடைந்ததற்குக் காரணம்.

விருபாக்ஷி ஆஸ்பத்திரியிலிருந்து வந்த பின்பும் அவன் விளம்பர மோகம் தணிந்துவிடவில்லை. இந்த விளம்பர மோகத்தை எப்படியாவது தணித்துவிட வேண்டும் என்னும் எண்ணம் அவன் நண்பன் நடேசனுக்கு வெகு நாட்களாக உண்டு.

ஒரு நாள் நடேசன் விருபாக்ஷியினிடம் வந்து, "விருபாக்ஷி, ஒரு யோசனை! அதன்படி நடந்தாயானால், எல்லாப் பத்திரிகைகளிலும் உன் பெயர் வெளியாகும்" என்றான்.

"நீ எது சொன்னாலும் கேட்கத் தயார்!" என்றான் விருபாக்ஷி.

இரண்டு நாட்களுக்கெல்லாம் நடேசன் ஒரு தமிழ்த் தினசரியை எடுத்துக் கொண்டு விருபாக்ஷியினிடம் வந்தான். "விருபாக்ஷி, படிக்கிறேன், கேள்!" என்று கூறிப் பத்திரிகையைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான்.

"நான் மவுண்ட் ரோட்டில் சென்று கொண்டிருக்கும் பொழுது ஒரு அழகிய பெரிய மணி பர்ஸ் அகப்பட்டது. அதில் ஐந்து நூறு ரூபா நோட்டுகள் இருந்தன. அந்த மணி பர்ஸுக்கு உரியவர் தகுந்த ருசுவுடன் கீழ்க்கண்ட விலாசத்துக்குத் தெரிவித்தால் அது அவரிடம் சேர்ப்பிக்கப்படும்.

ஜி. விருபாக்ஷி,
இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டு,
சைதாப்பேட்டை, சென்னை."

"என்னடா நடேசா, ரொம்ப நன்றாயிருக்கிறதே உன் காரியம்! ஏண்டா இப்படியெல்லாம் எனக்கு ஆபத்தைக் கொண்டு வந்து வைக்கிறாய்? நான் எங்கே மணிபர்ஸைக் கண்டெடுத்தேன்? நான் இப்பொழுது என்னத்தைச் செய்யட்டும்?" என்று விருபாக்ஷி பயத்துடன் சொன்னான்.



நடேசன் சிரித்துக் கொண்டே, "என்ன, உனக்கு இவ்வளவு அதைரியம்! என்னிடம் ஒரு மணி பர்ஸ் இருக்கிறது. என் பணத்தையே உன்னிடம் கொடுத்து விட்டுப் பின்பு பெற்றுக் கொள்கிறேன். இன்னும் இரண்டு நாட்களில், காணாமற் போன என் மணி பர்ஸை எடுத்து வைத்திருந்து கொடுத்ததற்கு உனக்குப் பத்திரிகையின் மூலம் நன்றி செலுத்துவேன். மறுபடியும் பத்திரிகையில் உன் பெயர் அடிபடும்! எப்படி என் யோசனை?" என்றான்.

விருபாக்ஷியின் பயம் இப்பொழுது தெளிந்துவிட்டது. பத்திரிகையைப் படித்துப் பூரிப்படைந்தான். பல நண்பர்கள் அந்த மணி பர்ஸைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்து விட்டனர்.

அன்று மாலை போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்து விருபாக்ஷியினிடம் மணி பர்ஸ் சமாசாரத்தை விசாரித்ததும் தான் அவனுக்குத் திகில் உண்டாயிற்று.

"மிஸ்டர் விருபாக்ஷி, ரொம்ப சாமர்த்தியமாகப் பேப்பரில் விளம்பரம் செய்து விட்டீர்களே! மணி பர்ஸ் உங்களிடம் அகப்பட்டதும் உடனே நீங்கள் போலீஸில் பொருளை ஒப்புவித்திருக்க வேண்டும்!"

இதைக் கேட்டதும் விருபாக்ஷியின் முகம் குப்பென்று வியர்த்து விட்டது.

"இல்லை ...... ஸார்! என் சிநேகிதன் ............ நடேசன் ..." என்று ஏதோ பேச ஆரம்பித்தான்.

இன்ஸ்பெக்டர், "மிஸ்டர், ஏன் பயப்படுகிறீர்கள்? விஷயத்தைச் சாவதானமாகச் சொல்லும்!" என்றார்.

விருபாக்ஷி, "ஐயோ, நடேசா! அட சகவா! இதென்ன கஷ்டம்! இன்ஸ்பெக்டர் ஸார், என்னை நம்புங்கள்! என்னிடம் மணி பர்ஸ் கிடையாது. அகப்பட்டாலல்லவா அது என்னிடம் இருக்கும்? என் பெயர் பத்திரிகையில் வெளியாக வேண்டும் என்பதற்காக என் நண்பன் நடேசன் செய்த சூழ்ச்சி இது! என்னை நம்புங்கள்! பத்திரிகையில் என் பெயர் வர வேண்டும் என்னும் சபலம் வெகு நாட்களாக எனக்கு உண்டு. பெரிய மனிதர்கள் எந்த அற்பமான காரியத்தைச் செய்தாலும் அவர்கள் பெயர் பத்திரிகையில் வந்து விடுகிறது. 'திவான் பகதூர் ............ அவர்கள் கோயமுத்தூர் சென்றார். ராவ் பகதூர் ............... அவர்கள் சென்னைக்குத் திரும்பினார்' — என்றெல்லாம் பத்திரிகையில் போடுகிறார்களே! என் பெயரைப் போட்டால் என்ன? போன மாதம் என் மைத்துனன் கல்யாணத்துக்காகக் கும்பகோணம் போயிருந்தேனே! அதைப் போட்டால் என்ன கேடு! பெரிய பெரிய மனிதர்களெல்லாம் பத்திரிகையில் தங்கள் பெயர் வர வேண்டுமென்று என்னென்னவோ செய்கிறார்கள். அவர்கள் செய்வதை விட மோசமாக நான் ஒன்றும் செய்யவில்லையே!" என்று விருபாக்ஷி கதறினான்.

இன்ஸ்பெக்டர் இவைகளையெல்லாம் கேட்டதாகவே தெரியவில்லை.

"விருபாக்ஷி, அனாவசியமாக ஏன் உங்களை அலட்டிக் கொள்கிறீர்கள்? அந்த மணி பர்ஸை எடுத்துக் கொண்டு ஸ்டேஷனுக்கு வாருங்கள்! இல்லாவிட்டால் ..." என்றார் இன்ஸ்பெக்டர்.

நல்ல வேளையாக நடேசன் சமய சஞ்சீவியாக அங்கே தோன்றினான்.

"விருபாக்ஷி, ஏன் இப்படி நடுங்குகிறாய்? நான் இருக்கும் பொழுது, உனக்கென்ன பயம்? 'நானிருக்கப் பயமேன்?' என்று மகாத்மா பாபா தாதா கூறுவதாக நீ தானே சொல்லுவாய்? அந்த பாபா தாதா இப்பொழுது எங்கே போய் விட்டார்? நீ இன்ஸ்பெக்டரைக் கண்டதும் உளறி யடித்துக் கொண்டு நடுங்குவாய் என்று தெரிந்து தான் நான் ஓடோடியும் வந்தேன். இன்ஸ்பெக்டர் என்ன செய்து விடுவார் உன்னை? கொஞ்ச நாள் தான் 'லாக் அப்'பில் இருந்து விட்டால் என்ன குடி முழுகிப் போய் விடும்? சிறைக்குப் போவதனால் உன் பெயர் பத்திரிகையில் எப்படி அடிபடும் என்பதை யோசித்தாயா?" என்று நடேசன் விருபாக்ஷியைக் கடிந்தான்.

"அப்பா நடேசா, என் பெயர் பத்திரிகையில் அடி பட்டதும் போதும், நான் சந்தி சிரித்ததும் போதும். நான் அடிபடாமல் தப்பினேனே அதுவே பெரிய காரியம். தயவு செய்து இனிமேல் எனக்காக நீ ஒன்றும் செய்ய வேண்டாம். என் பெயரும் பத்திரிகையில் வெளியாக வேண்டாம்" என்றான் விருபாக்ஷி.

# மருதநாயகத்தின் மனோரதம்

"பகீரதன்"

"கிராமப் புனருத்தாரணத்திலும், நிர்மாண வேலைகளிலும் முதலில் ஈடுபடுங்கள்; நமது அடிமை நாட்டுக்குச் சுயராஜ்யம் தானே வந்துவிடும்" என்ற மகாத்மாவின் மணிவாக்கை அப்படியே பின்பற்றுகிறவர் எனக்குத் தெரிந்த வரையில் மருதநாயகம் பிள்ளைதான். தஞ்சாவூர் ஜில்லாவில் மிகப் பிரசித்தி படைத்திருக்கும் அதே மருதநாயகம் பிள்ளையைத்தான் இங்கே குறிப்பிடுகிறேன். கிராமப் புனருத்தாரணம் என்றால் அவருக்கு உயிர். அதற்காகவே அவர் தம்முடைய வாழ்நாளைக் கிராமத்தில் கழிக்க ஆரம்பித்தார். ஒளிமங்கலம் கிராமத்தில் இப்போது ஆரம்பப் பள்ளிக்கூடம், இலவச வாசகசாலை, ஆஸ்பத்திரி என்றெல்லாம் இருக்கிறதல்லவா? அதற்கெல்லாம் காரணமானவர் மருதநாயகம் பிள்ளைதான்.

அவருக்கும் மகாத்மாவுக்கும் வாழ்க்கையில் இரண்டே இரண்டு வித்தியாசங்கள்தான் இருந்தன. ஒன்று உடை, மற்றொன்று உண்ணாவிரதம். இதைத் தவிர இன்னொரு சிறிய வித்தியாசமும் இருந்தது. மகாத்மாவுக்கு வேர்க் கடலை என்றால் ரொம்பவும் பிடிக்குமல்லவா? மருதநாயகம் பிள்ளைக்குப் பச்சைக் கடலை என்றால் ரொம்பவும் பிடிக்கும். அவருக்குக் கடலையின்மீது எவ்வளவு ஆசையிருந்ததோ, அவ்வளவு ஆசை கலைகளின்மீதும் இருந்தது. விசேஷமாய் சிற்பம், சிலை என்றால் அவருக்குப் பிராணன் மாதிரி. இதன் காரணமாக அவர் பழைய கல்வெட்டுக்களில் செதுக்கப்பட்டிருக்கும் தலையெழுத்துப் போன்றவற்றைப் படித்துப் பிறர் அறிய விளக்குவதில் பெரிய நிபுணர் என்று பெயர் பெற்றிருந்தார்.

ஒரு நாள் அவர் தினசரியைப் புரட்டிக்கொண்டிருந்தபோது பின்வரும் விஷயம் அவர் கவனத்தைக் கவர்ந்தது.

### புராதனச் சிற்பங்கள்

**அலகாபாத்துக்கு அருகில் கண்டெடுக்கப்பட்டன**

**"அலகாபாத்துக்கு அருகாமையில் உள்ள ஒரு கிராமத்தில் குடி தண்ணீர் வசதிக்காகக் கிராம அதிகாரிகள் கிணறு வெட்டிக் கொண்டிருந்தபோது, சில அபூர்வ வேலைப்பாடுகள் அமைந்த புராதனச் சிற்பங்களும், மொகலாய மன்னர்கள் காலத்திய மிக முக்கியமான கல்வெட்டுக்களும் கிடைத்தன. அவற்றைப் புராதனச் சிற்ப வடிவ ஆராய்ச்சி இலாகாக்காரர்கள் டில்லிக்குக் கொண்டு போய் விட்டனர்."**

இந்தச் செய்தியைப் படித்து முடித்ததும், மருதநாயகம் பிள்ளை ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தார். இந்த சமயத்தில் அவரைப் பார்ப்பதற்காக வந்த கிராம முனிசிப் அந்தக் கோலத்தில் அவரைக் கண்டதும் ஒன்றும் புரியாமல் விழித்தார். "என்ன பிள்ளைவாள், இதென்ன கூத்து!" என்று கேட்டார்.

பிள்ளைவாள் திரும்பிப்பார்த்தார். ஆனால், பதில் ஒன்றும் பேசவில்லை. மேலும் ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தார்.

"என்ன இவ்வளவு சந்தோஷம்? ராஜாஜி பிரதம மந்திரியாக வரப்போகிறாரா?" என்றார் கிராம முனிசிப்.

"இல்லை" என்று இழுத்தார் பிள்ளைவாள்.

"என்ன இல்லை? ஹிட்லர் சரணாகதி யடைந்து விட்டாரா?"

"ஊஹூம், அதுவும் இல்லை."

"இல்லையென்றால் சர்ச்சில் இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கொடுக்கப் போகிறாரா?"

"அதெல்லாம் ஒன்று மில்லை."

"மகாத்மாவை விடுதலை செய்யப் போகிறார்களா?"

"விடுதலையுமில்லை, ஒடுதலையுமில்லை. இந்தச் செய்தியைப் படித்துப் பாரும்" என்று சொல்லி அந்தப் பத்திரிகையை அவரிடம் கொடுத்தார் மருதநாயகம் பிள்ளை.

கிராம முனிசிப் அந்தப் பத்திரிகையைப் படித்துப் பார்த்துவிட்டு, "பூ! இவ்வளவுதானா? இதற்குத் தானா இப்படித் துள்ளிக் குதித்தீர்?" என்று கேட்டார்.

"உமக்குத் தெரிந்தது அவ்வளவுதான்!" என்று சொல்லி மருதநாயகம் பத்திரிகையை வாசல் மேஜையின்மீது போட்டார். பிறகு கிராம முனிசிப்பைப் பார்த்து, "மொஹஞ்ஜடாரோ, ஹரப்பா இவைகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீரா?" என்று கேட்டார்.

"கேள்விப் பட்டிருக்கிறேன். அதைப்பற்றி நேருஜீகூட அடிக்கடி சொல்வாரே! அதைத்தானே சொல்கிறீர்?" என்றார் கிராம முனிசிப்.

"ஆமாம், ஆமாம்! அதனால் நமது நாட்டுக்கு எவ்வளவு பெருமை தெரியுமா? முன்பு இந்தியாவில் எப்படிப்பட்ட உயர்ந்த நாகரிகம் பரவி இருந்தது என்பதை உலகம் தெரிந்துகொண்டு மூக்கில் விரலை வைக்கிறதல்லவா?" என்றார் மருதநாயகம்.

"ஓஹோ! அப்படியா?" என்று வாயைப் பிளந்தார் கிராம முனிசிப்.

"அது போகட்டும். நாளைக்கு நமது பங்களா தோட்டத்தில் கிணறு வெட்டப் போகிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா? அங்கே நீங்கள் அவசியம் வந்துவிட வேண்டியது" என்றார் மருதநாயகம்.

"ஆஹா! அதற்கென்ன அப்படியே வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போனார் கிராம முனிசிப்.

மறுநாள் மருதநாயகம் பிள்ளை கிணறு வெட்டுவதற்கான ஏற்பாடுகளைப் பரபரப்பாகச் செய்ய ஆரம்பித்தார். கிராமம் முழுவதும் அலைந்து திரிந்து வலியான ஆட்களைக் கொண்டுவந்து சேர்த்தார். கிராம முனிசிபும் சரியான வேளையில் வந்து சேர்ந்தார். வேலைக்காரர்கள் கிணறு வெட்டுவதில் மும்முரமாக முனைந்தார்கள்.

ஒரு இருபது அடி ஆழங்கூட வெட்டியிருக்க மாட்டார்கள். அதற்குள் கடப்பாரையில் ஏதோ 'டண்' என்று தட்டுப்பட்டது. ஆனால் அது என்னவென்று தெரியவில்லை. 'டக் டக்' கென்ற சத்தம் மட்டும் காதைத் துளைத்தது. அதைக் கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்த கிராம முனிசிப், மருதநாயகம் பிள்ளையின் அருகில் சென்று, "என்ன, பிள்ளைவாள்! ஏதாவது புதையலாக இருக்குமோ" என்று ரகசியமாகக் கேட்டார்.

"இருந்தாலும் இருக்கும்" என்று அவரும் ரொம்ப ரகசியமாகச் சொன்னார்.

"சரி, இப்பொழுது நாம் ஒன்று செய்வோம். என்ன சொல்கிறீர்?" என்று கேட்டார் கிராம முனிசிப்.

"செய்வது இன்னதென்று முதலில் சொல்லும். அப்புறம் நான் சொல்கிறேன்" என்றார் பிள்ளைவாள்.

"செய்வது என்ன? நமக்கு நன்றாய்த் தெரிந்த ஓரிருவரைத் தவிர மற்றவர்கள் எல்லாரையும் வீட்டுக்கு அனுப்பிவிடவேண்டியது. அவர்களை வைத்துக்கொண்டு நாம் இருவரும் புதையலை எடுக்க வேண்டியது. பிறகு, அவர்களுக்குக் கொஞ்சம் கொடுத்துச் சமாதானம் செய்துவிட்டு மீதியை நாம் இருவரும் பங்கு போட்டுக் கொள்ள வேண்டியது. என்ன சொல்கிறீர்?" என்றார் கிராம முனிசிப்.

"ஓ! பேஷாக!" என்றார் மருதநாயகம் சாந்தத்துடன்.

உடனே கிராம முனிசிப் எல்லாரையும் விரட்டிவிட்டுத் தமக்குத் தெரிந்த இருவரை மட்டும் நிறுத்திக் கொண்டார். நண்பர்கள் இருவரும் ஒரு தரம் சுற்று முற்றும் பார்ப்பதும், பிறகு பள்ளத்தைப் பார்ப்பதுமாக இருந்தனர். கடைசியில் கடப்பாரைக்குத் தட்டுப்பட்ட அந்தப் பெரும் புதையலை எடுத்துப் பார்த்தார்கள். அது ஒரு மூக்குப் போன விநாயகர் விக்கிரகம் என்பது வெளியாயிற்று!

பிள்ளைவாள் கிராம முனிசிபின் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தார். அவரும் பிள்ளைவாளின் முகத்தை அனுதாபத்துடன் பார்த்தார்.

"என்ன சாமி! எல்லாரையும் போய்க் கூட்டிக்கிட்டு வரட்டுமா?" என்று அந்த வேலைக்காரர்களில் ஒருவன் கிராம முனிசிபைப் பார்த்துக் கேட்டான்.

"ஓடடா, சீக்கிரம்! கூட்டிக்கிட்டு வாடா!" என்றார் கிராம முனிசிப்.

அவன் ஓட்டம் பிடித்தான். "என்ன சாமி! கடைசியில் ஒன்றுமே இல்லிங்களே!" என்று ஏமாற்றத்துடன் சொன்னான் இன்னொரு வேலைக்காரன்.

அவன் சொன்னதைக் கேட்டதும் கிராம முனிசிபின் மனசை என்னவோ பண்ணுவது போலிருந்தது.

இந்த சமயத்தில் அந்த மூக்குப் போன விக்கிரகத்துக்கு அடியில் ஏதோ எழுதியிருப்பதைக் கண்டார் பிள்ளைவாள். "இங்கே வாரும்! ஓடிவந்து இதைப் பாரும்!" என்று ஆனந்தக் கூச்சலிட்டார் மருதநாயகம்.

"என்ன, என்ன" என்று கேட்டுக்கொண்டே கிராம முனிசிப் ஓடோடியும் வந்து அந்த விக்கிரகத்துக்கு அடியில் செதுக்கப் பட்டிருந்த வார்த்தைகளை ஆவலுடன் படிக்க முயன்றார். ஆனால் அதில் எழுதியிருப்பது ஏதாவது புரிந்தால் தானே!

பிள்ளையாருக்கு அடியில் பின்வருமாறு பட்டும் படாமல் எழுதியிருந்தது:

**"இந்தப் பிள்ளையாருக்கடியில் புதையல் ஒரு குடம் இருக்கிறது."**

"என்ன ஐயா இது? இது தமிழ் பாஷையா அல்லது மலையாளமா?" என்றார் கிராம முனிசிப்.

"எழுத்து தமிழ் எழுத்துத்தான்" என்றார் பிள்ளை.

"தமிழ் எழுத்தா, தலை எழுத்தா?" என்று கேட்டார் முனிசிப்.



"என்ன எழுதியிருக்கிறதென்று எப்படியாவது கண்டு பிடித்து விட வேண்டும்" என்றார் மருதநாயகம் பிள்ளை.

"இதெல்லாம் நம்மால் முடிகிற காரியமா, ஐயா! இருக்கவே இருக்கிறார்கள் 'ஆர்க்கலாஜிகல்' இலாக்காக்காரர்கள். விஷயம் அவர்களுக்கு எட்டினால் விழுந்தடித்துக் கொண்டு வந்துவிட மாட்டார்களா?" என்றார் கிராம முனிசிப்.

தன்னால் அதைக் கண்டு பிடிக்க முடியும் என்பதை மருதநாயகம் பிள்ளை அப்பொழுது வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. "சரி, அப்படியே செய்துவிடுங்கள்!" என்று கூறி மௌனம் சாதித்துவிட்டார்.

கிராம முனிசிபின் மூலம் செய்தி ரெவின்யூ இன்ஸ்பெக்டருக்கு எட்டிற்று. அப்புறம் அது தாசில்தார் காதில் விழுந்தது. கலெக்டர் அந்தச் செய்தியைச் சென்னை ஆர்கலாஜிகல் டிபார்ட்மென்டுக்கு அறிவித்தார்.

இனிமங்கலம் எங்கும் ஒரே அமளி. எங்கு பார்த்தாலும் அன்று அந்த விக்கிரகத்தைப் பற்றிய பேச்சுத் தான். அந்தக் கிணற்றைச் சுற்றிப் போலீஸ் காவல் வேறு போட்டு விட்டார்கள்.

அன்றையத் தினசரிகளில் எல்லாம் இனிமங்கலம் கிராமத்தில் அகப்பட்ட விக்கிரகத்தைப் பற்றிய செய்திகள் அடிபட்டன.

அந்த விக்கிரகத்தைப் பார்க்க ஊரெங்குமிருந்து ஜனங்கள் திரள் திரளாக வந்து குவிய ஆரம்பித்து விட்டனர்.

* * *

ஒரு வாரத்திற்குப் பிறகு சென்னை புராதனச் சிற்ப வடிவ இலாகாக்காரர்கள் வேண்டிய ஆட்களுடன் வந்து இனிமங்கலம் கிராமத்தை முற்றுகை விட்டனர்.

முற்றுகையிட்டு என்ன பயன்? அதற்கு அடியில் எழுதியிருப்பது அவர்களுக்குப் புரிந்தால்தானே? யார் யாரோ வந்து பார்த்தார்கள். கடைசியில் எல்லாரும் மருதநாயகம் பிள்ளையைத்தான் கேட்க வேண்டும் என்று முடிவுக்கு வந்தனர்.

இந்த முடிவை எதிர்பார்த்திருந்த மருதநாயகம் பிள்ளையும் அதை வைத்துக் கொண்டு பெரிய பெரிய புஸ்தகங்களை ஆராய்ச்சி செய்தார். கடைசியில் "இந்தப் பிள்ளையாருக்கு அடியில் ஒரு பட்டணம் இருப்பதாக எழுதியிருக்கிறது" என்று சொன்னார்.

சென்னை ஆர்க்கலாஜிகல் இலாகாக்காரர்களுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. "தென்னிந்தியாவில் ஒரு மொஹெஞ்ஜொதாரோ, ஹரப்பா கிடைக்காதா?" என்ற ஆவலில் அந்த விக்கிரகம் அகப்பட்ட இடத்திற்கு அடியில் தோண்டிப் பார்ப்பதென்ற முடிவுக்கு வந்து விட்டனர்.

மாதக் கணக்கில் ஏராளமான ஆட்கள் வேலை செய்தனர். சுமார் 5 ஏகர் விஸ்தீரணத்துக்கு வெட்டிப் பார்த்தாய் விட்டது. எனினும் விக்கிரகத்தில் எழுதியிருந்தபடி நாட்டையோ நகரத்தையோ காணோம்.

"இப்படியே வெட்டிப் பார்த்துக் கொண்டிருந்தால் அமெரிக்காவுக்கே போய்விடலாம் போலிருக்கிறதே!" என்று சொன்னார் ஒரு அதிகாரி.

"அமெரிக்காவுக்குப் போவதென்ன? அதற்குள் தண்ணீர் அதிகமாக வந்துவிட்டால் ஆனந்த உலகத்திற்கே போய்விடலாமே!" என்றார் இன்னொரு சிந்தத் தெரியாத அதிகாரி.

கடைசியில் அலுத்துப் போன அவர்கள், "எப்பொழுதோ ஏற்பட்ட வெள்ளத்தின் காரணமாக இந்த விக்கிரகம் இங்கே வந்து ஒதுங்கி இருக்கவேண்டும்" என்று முடிவுக்கு வந்து சென்னைக்குப் போய்ச் சேர்ந்தனர்.

இரண்டு நாளைக்குப் பிறகு பெய்த பெருமழை அந்த ஐந்து ஏகர் விஸ்தீரணமுள்ள நிலத்தையும் பெரிய ஏரியாக்கிச் சென்றது.

* * *

இந்தப் புயல் ஓய்ந்து அமைதி நிலவிய பிறகு, ஒரு நாள் மருதநாயகத்தின் மனைவி தனது கணவனைப் பார்த்து, "இருந்தாற் போலிருந்து ஊரையே ஒரே புரளி பண்ணிவிட்டீர்களே!" என்றாள்.

"புரளியா செய்தேன்! புண்ணியம் செய்தேன் என்று சொல்லு!" என்றார் மருதநாயகம்.

"புண்ணியமாவது, புருஷார்த்தமாவது? அப்படி என்ன செய்து விட்டீர்?" என்று கேட்டாள் அவள்.

"நம்ம ஊரில் ஆஸ்பத்திரி, பள்ளிக்கூடம், போஸ்டாபீஸ் எல்லாம் இருக்கிறது. ஆனால் ஒரு ஏரி இல்லாமல் விவசாயிகள் எவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள் தெரியுமா? நானும் 'மைனர் இரிகேஷன் டிபார்ட்மெண்டு'க்கு எத்தனையோ மனுக்கள் எழுதிப் போட்டேன். என்னதான் எழுதினாலும் ஏதாவது பலன் கிடைத்தா? ஒன்றுமில்லை. இப்பொழுது பார்! நமது ஊருக்கு முதல்தரமான ஏரி ஒன்று வெட்டியாகி விட்டது. மந்திரத்தால் மாங்காய் விழுமா என்ன? எல்லாம் உலகத்தில் தந்திரத்தால் தான் நடக்கும்" என்று சொல்லிச் சிரித்தார் மருதநாயகம்.

"இதெல்லாம் உங்களுடைய வேலைதானா? நீங்கள்தானா அந்த மூக்குப் போன விக்கிரகத்தை அந்த இடத்தில் கொண்டுபோய்ப் புதைத்து வைத்தது? என்னிடம் கூட உண்மையைச் சொல்லவில்லையே!" என்று சொல்லி வியந்தாள் மருதநாயகத்தின் மனைவி.

"உன்னிடம் சொல்வதும் ஒன்று தான்; ஊர் முழுவதும் சொல்வதும் ஒன்றுதான்!" என்றார் மருதநாயகம்.



# அம்மா

"தமிழன்"

எல்லோருந்தான் தங்கள் தாய்மாரை 'அம்மா' என்று கூப்பிடுகிறார்கள். ஆனால், அதெல்லாம் ராஜகோபாலன் தன் தாயாரை அழைப்பதற்குச் சமானம் ஆகுமா? ஒரு நாளும் ஆகாது. அவன் 'அம்மா' என்று சொல்லும்போதே மூன்று எழுத்துக் கொண்ட அந்த வார்த்தையில் மாதாபிமானம் ததும்பி நிற்கும். அவன் உள்ளத்திலிருந்து வரும் அந்த வார்த்தையைக் கேட்டு அவன் அன்னை பேருவகை அடைவாள். அவனைச் சீமந்த புத்திரனாகப் பெற்றெடுத்த தினமன்று என்ன சந்தோஷமடைந்தாளோ, அதைக் காட்டிலும் பன்மடங்கு சந்தோஷமடைந்து பூரித்துப் போவாள். 'அம்மா' என்று சரியாகக் கூப்பிடத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் ராஜகோபாலன் தன் தாயாரைக் கூப்பிடும் அழகைக் கவனிக்கவேண்டும்.

அவன் தன் தாயுடன் பேசுவதுதான் அப்படி யென்றால், அந்த அம்மணி அவனுக்குப் புத்திரபாசத்துடன் பதிலளிப்பது உள்ளக் கிளர்ச்சி யுண்டாக்குவதா யிருக்கும். 'என்னடா ராஜா!' என்று அவள் தாயன்பு கனியக் கேட்கும்போது ராஜகோபாலனுக்குத் தான் உண்மையிலேயே ஒரு குழந்தையா யிருப்பதுபோல் தோன்றும்.

ராஜகோபாலனைப் போன்ற ஒரு சற்புத்திரனைப் பெறப் பாக்கியஞ் செய்திருந்த நாகம்மாள், நீண்ட காலம் சுமங்கலியா யிருக்கக் கொடுத்து வைக்கவில்லை. அவனுக்குப் பன்னிரண்டு வயது ஆகும்போதே அவன் தந்தை வக்கீல் ராமசேஷன் காலஞ் சென்றார். நாகம்மாள் ஏற்கனவேயே பிள்ளை மீது பிராணனை வைத்திருந்தாள். இப்போது சொல்லவா வேண்டும்?

மொத்தத்தில் தாய்க்குப் பிள்ளையிடம் அதிக அன்பா, அல்லது பிள்ளையிடம் தாய்க்கு அதிக அன்பா என்று சொல்ல முடியாமலிருந்தது.

ராஜகோபாலனுக்கு வயது இருபது இருக்கும். நல்ல அழகன். திடகாத்திர சரீரம் வாய்ந்தவன். பி. ஏ. பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தான். அவன் படிப்பில் மிகவும் கெட்டிக்காரனா யிருந்ததோடு பள்ளிக்கூடப் பந்தயங்களிலும் கூடச் சிறந்து விளங்கினான்; அப்படிப் பந்தயங்களில் திறமை வாய்ந்தவனா யிருந்தும் கூட அவன் நல்ல பழக்க வழக்கங்களுள்ள பிள்ளையாகவே இருந்தான். கேவலம் ஒரு 'சிகரெட்' கூடப் பிடிக்கத் தெரியாததைக் கண்டு அவனுடைய பள்ளிக்கூட நண்பர்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

தன் பிள்ளைக்குச் சீக்கிரத்திலேயே விவாகஞ் செய்து பார்க்க வேண்டுமென்று நாகம்மாளுக்கு ஆசை. இருந்தாலும் பி. ஏ. பரீட்சை முடியட்டுமென்று இது வரை பேசாதிருந்தாள். ஆனால் ராஜகோபாலனைப் போன்ற வாலிபர்கள் பலர் கல்யாணஞ் செய்து கொள்வதைக் கண்டதும் அந்த வருஷம் அவனுக்கு எப்படியும் கல்யாணம் செய்து பார்த்துவிட வேண்டுமென்று அவளுக்கு ஆவல் உண்டாயிற்று.

ஒரு நாள் அவள் அவனிடம், "ராஜா! நீ இந்த வருஷம் கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டால் தேவலை" என்றாள்.

"நீங்கள் சொன்னால் சரிதான், அம்மா!" என்றான் ராஜகோபாலன்.

"உனக்கு எந்தப் பெண்ணாவது பிடித்திருக்கிறதா?"

"நீங்கள் கேட்பது வேடிக்கையா யிருக்கிறதே! நான் உங்களுக்குத் தெரியாமல் 'பெண், கிண்' பார்த்து வைத்திருக்கிறேனா?"

"நான் அப்படிச் சொல்லவில்லையடாப்பா. நீ நாலு இடத்துக்குப் போகிறவன். எத்தனையோ சிநேகிதர்கள் வீட்டில் பெண்களைப் பார்த்திருப்பாய். யாரை யாவது பிடித்திருக்கலாமே என்று சொன்னேன்."

"அப்படியிருந்தால் நான் உங்களிடம் சொல்லி யிருக்கமாட்டேனா, அம்மா? எனக்கு இதுவரை கல்யாண யோசனையே தோன்றியதில்லை."

"உனக்கு யாரையாவது பிடித்திருந்தால் சொல்லு, நானும் பார்க்கிறேன். பெண் எப்படி யிருக்கணும் என்கிறாய்?"

"அவள் எப்படி யிருந்தாலும் உங்களுக்குப் பிடித்திருந்தால் சரிதான். ஒரு கறுப்பு ஊமைப் பெண்ணைப் பார்த்து 'இந்தா ராஜா, இவளைக் கல்யாணம் செய்து கொள்' என்றாலும் நான் ஆட்சேபிக்கப் போவதில்லை."

"நீ ஒரு நாளும் ஆட்சேபிக்க மாட்டாயென்று தெரியும். அதனால்தான் பெண்ணை நீயே பார்த்துப் பொறுக்க வேண்டுமென்கிறேன். நீ அம்மா மனது கோணக் கூடாதென்று வாய் பேசாமல் சிரித்துக் கொண்டே எல்லாம் சரியென்று சொல்லிவிடுவாய். ஆனால், கல்யாண விஷயத்தில் அப்படி அலட்சியமாய் இருக்கக் கூடாது. நாளைக்கு வேண்டா மென்றும் மாற்றுகிற பண்டமா? நீதான் உனக்கேற்ற பெண்ணைப் பற்றிச் சொல்லணும். நீ இதெல்லாம் என் இஷ்டப்படி செய்ய விடக் கூடாது."

"அம்மா, நீங்கள் வற்புறுத்துகிறதனால் சொல்லுகிறேன். பெண் பாக்கி விஷயங்களில் எப்படியிருந்தாலுஞ் சரி, பாதகமில்லை. ஆனால் உங்களிடம் மரியாதையோடும், ஆசையோடும் நடந்துகொள்கிறவளா யிருக்க வேண்டும். நீங்கள் சொல்கிறபடி கேட்கிறவளாய் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவள் ரதியா யிருந்தாலுஞ் சரி, மகாராஜாவின் பெண்ணா யிருந்தாலுஞ் சரி, எனக்கு வேண்டியதில்லை."

"அதென்ன அப்படிச் சொல்கிறாய்? அவள் நான் சொல்கிறபடி எதற்காகக் கேட்க வேண்டும்? குழந்தைகள் நீங்கள் ஒருத்தர்மேல் ஒருத்தர் ஆசையாய்ச் சந்தோஷமா யிருக்கணும். அதுதானே எனக்கு வேண்டியதெல்லாம்?"

"அப்படி யிருந்தால் மட்டும் போதாது அம்மா. நேற்று ஒரு சிநேகிதன் ஒரு பெண்ணைப் பற்றிச் சொன்னான். அந்தப் பெண்ணுக்குத் தாலி கட்டியாய் விட்டது. மணையில் அகமுடையான் பக்கத்தில் உட்கார்ந்திருந்ததாம். அது அடிக்கடி அவன் அங்கவஸ்திரத்தைப் பிடித்து இழுத்து இழுத்துத் தலையைக் குனிந்த வண்ணம் ரகசியமாகப் பேசிற்றாம். என்ன சொல்லிற்று தெரியுமா?"

"சொல்லேன்."

"நாளைக்கே தனிக் குடித்தனம் வைக்கவேணும், தனிக் குடித்தனம் வைக்கணும்" என்று சொல்லிக் கொண்டே யிருந்ததாம்.

நாகம்மாள் சிரித்த வண்ணம், "இதெல்லாம் பழைய காலக் கதை. எந்த மாயாவியோ இட்டுக்கட்டி யிருக்கிறான். அப்படி நிஜமாகவே அந்தப் பெண் சொல்லி யிருந்தாலும் அதில் தப்பு ஒன்றுமில்லை. எப்படியாவது அவர்கள் சந்தோஷமா யிருக்க வேண்டியது தானே? ஏன், உனக்குக் கலியாணமானதும் நானே என்ன பண்ணப் போகிறேன் தெரியுமா?"

"தனிக் குடித்தனம் போகச் சொல்..."

"இல்லை, இல்லை. நான் காசியில் போய் நிம்மதியாய்க் காலம் கழிக்கலா மென்று எண்ணிக் கொண்டிருக்கிறேன்."

"நீங்கள் இத்தனை நாளாக இந்தத் தீர்மானத்தை என்னிடம் சொல்ல வில்லையே, அம்மா! நல்ல வேளை, இப்போதாவது சொன்னீர்களே! நீங்கள் கலியாணத்துக்குப் பின்னல்லவா காசிக்குப் போகப் போகிறீர்கள்? நான் அதற்கு முன்பே ஹிமயமலைப் பக்கம் போய்த் தவம் செய்கிறேன்" என்றான்.

நாகம்மாளுக்குத் தன் பிள்ளை மனம் நோகும்படி தான் கூறி விட்டதாகத் தோன்றவே "நான் பேச்சுக்கு அப்படிச் சொன்னேன், ராஜா. உன்னைப் போன்ற தங்கமான பிள்ளை இருக்கு மிடந்தான் எனக்குக் காசி, ராமேசுவரம் எல்லாம்" என்று கூறி விட்டு "நானும் பார்க்கிறேன். நீயும் உனக்குத் தெரிந்த இடங்களில் பெண்கள் இருந்தால் சொல்லு. விசாரிப்போம்" என்றாள்.

## 2

இதற்குப் பிறகு நாகம்மாள் பெண் தேடுவதில் மும்முரமாக இருந்தாள். தன் பிள்ளைக் கேற்ற பெண் இப்படி, இப்படி இருக்க வேண்டும் என்று கற்பனை செய்து பார்த்துக் கொண்டாள். அந்தக் கற்பனை உருவம் மாதிரி யாராவது பெண்கள் தென்பட்டால், உடனே "ஏன், அம்மா! உனக்குக் கலியாணம் ஆகி விட்டதோ" என்று விசாரிக்க ஆரம்பித்து விடுவாள்.

ஆனால், ராஜகோபாலனோ தன் விவாகத்தைப் பற்றித் தன்னுடைய அன்னையைப்போல் அவ்வளவு பிரமாதமாக நினைத்துக் கொண்டிருக்கவில்லை. படிக்க வேண்டியதெல்லாம் படித்து முடிந்து, நன்றாகச் சம்பாதிக்க ஆரம்பித்த பின்னர் கலியாணம் செய்து கொள்ளலாமென்று ஏற்கனவே நினைத்திருந்தான். ஆனால் அதற்காகத் தன் தாயின் இஷ்டத்துக்கு விரோதமாகப் போக விரும்பவில்லை.

பெண் 'பொறுக்கும்' விஷயத்தில் அவன் இப்படி அசிரத்தையா யிருந்த போதிலுங்கூட, விதி அவன் மூலமாகத்தான் அவனுக்கு வரன் நிச்சயமாக வேண்டுமென்று நிர்ணயித்திருந்தது.

அவன் படித்து வந்த காலேஜில் சாவித்திரி என்ற பெண்ணும் படித்து வந்தாள். ஏற்கனவே வெளியூரில் படித்துக் கொண்டிருந்த அவள் அந்த வருஷந்தான் சென்னைக்கு வந்தாள். ஏனென்றால், சர்க்கார் உத்தியோகத்தி லிருந்த அவளுடைய தகப்பனாருக்கு மாற்றலாகி விட்டது. ஸ்திரீகள் கல்லூரியில் இடமில்லாததால் அவள் ராஜகோபாலன் படித்து வந்த காலேஜில் சேரும்படி யாயிற்று.

அவள் நல்ல வசீகரமான தோற்ற முடையவள். அவளுடைய அழகான கண்கள் விஷமத்தனமாக இராமல் சாந்தமா யிருக்கும். அழகைப் போன்றே குணமும் அடக்கமாக அமைந்திருந்தது. அவள் வகுப்பு ஆரம்பிப்பதற்குச் சற்று முன்னர்தான் காலேஜ் கட்டடத்திற்குள் நுழைவாள். வகுப்பு நடக்கும் அறைக்கு வெளியே ஓரமாக நின்றுகொண்டு ஏதாவது ஒரு புத்தகத்தை வைத்துப் படித்துக் கொண்டிருப்பாள். ஆசிரியர் வந்த பிறகுதான் அவள் வகுப்பில் தனக் கென்று வாசற்படி யோரத்தில், முதன் முதலில் போடப்பட்டிருக்கும் பெஞ்சியில் போய் உட்காருவாள். பிறகு, வகுப்புகள் முடிந்து வேறிடத்துக்குப் போகும் போது எல்லோருக்கும் முன்னாலேயே எழுந்து போய் விடுவாள்.

அவள் தன் வகுப்பில் படித்து வந்த இந்த ஏழெட்டு மாத காலமாக, ராஜகோபாலன் அவளை ஆச்சர்யத்துடன் கவனித்து வந்திருக்கிறான். அவள் தன் பாடங்களில் கண்ணும், அடக்க ஒடுக்கத்துடன் கண்ணியமாக நடந்து கொண்டது அவனுக்கு அவளிடம் அபார மதிப்பை உண்டாக்கியது. அவள் யாருடனும் பேசுவதில்லை. யாராவது வலுவிலே பேச வந்தாலும் ஓரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டுப் போய்விடுவாள்.

ஒருநாள் தமிழ் வகுப்பு நடந்து கொண்டிருந்தது. தமிழ்ப் பேராசிரியர் கலித்தொகையில் ஒரு சிங்கார ரஸமான பாட்டைக் கூறி, அதற்கு வியாக்கியானஞ் செய்து கொண்டிருந்தார். வியாக்கியானம் அளவுக்கு மீறிப்போயிற்று. அதைக் கேட்டதும் பல மாணவர்களுக்குக் குஷி உண்டாயிற்று. அவர்களில் சிலர் சாவித்திரியைப் பார்த்துச் சிரிக்க ஆரம்பித்தனர். சாவித்திரி தலை குனிந்தாள். அவளுக்கு அருகில் உட்கார்ந்திருந்த ஒரு பையன் தன் கையில் வைத்துச் சுருட்டிக் கொண்டிருந்த ஒரு காகிதத்தை அவள்மீது வீசி எறிந்தான். சாவித்திரிக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவளுக்கு அப்படிச் செய்த அயோக்கியன் யாரென்று பார்க்கக் கூட இஷ்டமில்லை. அவள் கோபத்தாலும் வெட்கத்தாலும் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது வகுப்பு முடியும் சமயமாகவே படபடவென்று எழுந்திருந்து சென்றாள். இத்தனையும் உபாத்தியாயருக்குத் தெரியாது.

காகிதத்தை விட்டெறிந்த பையன், தன் நண்பர்களைப் பெருமையுடன் பார்த்துக்கொண்டு வெளியேறினான். ஒரு நண்பனைப் பார்த்து "என் வேலை எப்படி?" என்றான். மறு நிமிடம், பளீரென்று அவன் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது! "காலிப் பயலே, உன் கை வரிசை யெல்லாம் பெண்களிடம் காண்பிக்கிறாயா?" என்று கேட்டுக் கொண்டே எதிரே ராஜகோபாலன் நின்றான். ராஜகோபாலனிடம் தன் ஜம்பம் பலிக்காது என்று அடிபட்டவனுக்குத் தெரியும். தவிரவும், தான் செய்தது தவறாகையால் கன்னத்தைத் தடவிய வண்ணம் ராஜகோபாலனை முறைத்துப் பார்த்து விட்டுப் பதில் பேசாமல் போய் விட்டான்.

யாரோ கன்னத்தில் அறை பட்ட சத்தத்தைக் கேட்டதும் சற்றுத் தூரத்தில் சென்று கொண்டிருந்த சாவித்திரி தன்னை யறியாமல் திரும்பிப் பார்த்தாள். அறை பட்டவன் கன்னத்தைத் தடவிக் கொண்டிருந்ததையும் எதிரில் ராஜகோபாலன் துஷ்டனிக்கிரக

இஷ்ட பரிபாலனம் செய்ய வந்த கண்ணனைப்போல் நிற்பதையும் கண்டாள். ராஜகோபாலனை நன்றாகத் தன் அழகிய விழிகளால் அவள் கவனித்துப் பார்த்தது அதுதான் முதல் தடவை.

இந்தச் சம்பவம் நடந்ததற்கு மறுநாள் காலை ராஜகோபாலன் வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றது. அவன் யார் வந்திருக்கிறார்கள் என்று போய்ப் பார்த்தான். வண்டியிலிருந்து ஒரு பெரியவர் இறங்கினார். அவருக்குப் பின்னால் வந்தது யார்? சாவித்திரியா! ஆமாம், அவளெங்கே வந்தாள்? ராஜகோபாலனுக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. "வாருங்கள்" என்று அவர்களை வரவேற்றான்.

"நான் அப்பாவிடம் நேற்று வகுப்பில் நடந்ததைச் சொன்னேன். அவர் நேரில் தங்களைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டார்" என்று சாவித்திரி கூறியதைக் கேட்டபோது அவன் ஆனந்த சாகரத்தி லாழ்ந்தான்.

"இதென்ன பெரிய விஷயம்!" என்று கூறி அவர்களை உள்ளே அழைத்துச் சென்றான். சாவித்திரி எல்லோருக்கும் பின்னால் சென்றாள். ஆனால் ஹாலுக்குப் போனதும் "அம்மா எங்கே? உள்ளே இருக்கிறாரா!" என்று கேட்டுக்கொண்டு நேரே சமையலறைப் பக்கம் போனான்.

அவன் உள்ளே போன சமயந்தான் நாகம்மாள் பூஜை செய்து முடித்தாள். பூஜை முடிவில் தன் பிள்ளைக்கேற்ற நல்ல பெண் கிடைக்கும்படி கண் மூடிய வண்ணம் பகவானைப் பிரார்த்தித்தாள். அப்பொழுது காலடிச் சத்தம் கேட்கவே, அவள் திரும்பிப் பார்த்தாள். தன் ஆசையே உருக்கொண்டு வருவது போல் அன்ன நடை நடந்து வந்து கொண்டிருந்த சாவித்திரியைக் கண்டதும் பிரமித்துப் போய்விட்டாள். அவளுக்குத் தன் கண்களை நம்ப முடியவில்லை. தன்னைப் பிரேமையின் பயனுந்தான் இப்படிக் காண்கிறோமோ என்று எண்ணினாள். பிறகு எழுந்திருந்து சாவித்திரியைச் சந்திக்கச் சென்றாள்.

சாவித்திரி நாகம்மாளின் பக்கத்தில் வந்து புன்னகை புரிந்து நின்றாள். நாகம்மாள் அவளை "வா, அம்மா" என்று வரவேற்றாள். "அவளை நீ யார்!" என்று கேட்கவே அவளுக்குத் தோன்றவில்லை. கடவுள் தன் வேண்டுகோளுக் கிணங்கி ஒரு பெண்ணை அனுப்பியிருக்கிறார் என்ற உணர்ச்சியை அவளால் அடியோடு மறக்க முடியவில்லை. அப்பொழுது ராஜகோபாலன் "அம்மா!" என்று கூப்பிட்டுக் கொண்டே வந்தான். என் கிளாஸிலே ஒரு பெண் படிக்கிறாள் என்று சொன்னேனே, இவள்தான். இவள் அப்பாவும் வந்திருக்கிறார்" என்றான்.

இதைக் கேட்டதுந்தான் நாகம்மாளுக்கு இந்த உலகத்தி லிருக்கும் ஞாபகம் வந்தது. "ஆமாம், ஆமாம்! பள்ளிக் கூடத்தில் வந்து சேர்ந்த புதுசிலே சொன்னயே" என்று கூறிக் கொண்டே ஹால் பக்கம் வந்தாள் நாகம்மாள்.

சாவித்திரியின் தந்தை விசுவநாதம் நாகம்மாளைப் பார்த்ததும் "சாவித்திரி, அடிக்கடி உங்கள் பிள்ளையைப் பற்றிச் சொல்வாள். தினம் இரண்டு தடவையாவது அவருடைய நல்ல குணங்களைச் சொல்லிப் புகழா திருக்க மாட்டாள். எனக்கும் அவரை ரொம்ப நாளாய்ப் பார்க்க வேண்டுமென்றிருந்தது வந்தேன்" என்றார்.

தன்னைப் பற்றி அடிக்கடி சாவித்திரி தன் வீட்டில் பேசிக் கொண்டிருக்கிறாளா! அவள் தந்தை இப்படிச் சொன்னதைக் கேட்டதும் ராஜகோபாலனுக்கு வியப்பும் சந்தோஷமும் உண்டாயிற்று. அவன் தன் சுபாவத்தையும் மீறித் தன் தாய்க்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த சாவித்திரியைப் புன் முறுவலுடன் பார்த்தான்; தன் திருட்டுத்தனம், வெளியானதைக் கண்டு அவள் வெட்கித் தன்னைப் பார்த்துத் திருதிருவென்று விழிப்பதுபோல் ராஜகோபாலனுக்குத் தோன்றிற்று. அந்தக் கணத்திலேயே அவர்கள் காதலர்களாய் விட்டார்கள்.

நாகம்மாளோ சாவித்திரியைத் தன் பிள்ளைக்குக் கொடுப்பதைப் பற்றிப் பேசவே விசுவநாதம் வந்திருக்கிறார் என்று எண்ணினாள்.

"குழந்தையையும் அழைத்துக்கொண்டு வந்ததில் ரொம்ப சந்தோஷம்" என்றாள் நாகம்மாள்.

"நேற்றுக் காலேஜில் நடந்ததைப் பற்றிச் சாவித்திரி சொன்னாள். இந்தச் சந்தர்ப்பத்தை விடக் கூடாதென்றுதான் பார்த்துப் போகலாமென்று வந்தேன். எத்தனையோ கெட்டிக்காரப் பிள்ளைகளைப் பார்த்திருக்கிறேன். ஆனால் உங்கள் பிள்ளையைப் போல் எல்லோருமே யோக்கியனாயிருப்பது மிகவும் அபூர்வம்."

"நேற்று காலேஜில் என்ன நடந்தது? ஏன் ராஜா, நீ ஒன்றுமே சொல்லவில்லையே?" என்று தாயார் ஆச்சரியத்துடன் வினவினாள்.

"சொல்லும்படியாக ஒன்றும் இல்லே அம்மா" என்றான் ராஜகோபாலன்.

"ஏன் இல்லே? நேற்று ஒரு போக்கிரிப் பயல் பாடம் நடக்கும்போது —" என்று ஆரம்பித்து விசுவ



நாதம் நடந்தவற்றையெல்லாம் சொன்னார். பிறகு வீடு போவதற்குக் கிளம்பினார்.

தான் எதிர்பார்த்தபடி அவர் வரன் விஷயமாகப் பேச்சே எடுக்காமலிருந்ததில் நாகம்மாளுக்குச் சிறிது ஏமாற்றந்தான். ஆனால், அதைக் காண்பித்துக் கொள்ள வில்லை. விசுவநாதம், தாயையும் பிள்ளையையும் அடிக்கடி தங்கள் வீட்டுக்கு வந்து கொண்டிருக்கும்படி அழைத்து விட்டுப் புறப்பட்டார். சாவித்திரிக்குப் போகும் போது ராஜகோபாலனிடம் சொல்லிக் கொண்டு போக வேண்டுமென்பது. ஆனால் வண்டியி லிருந்து இறங்கிய போதிருந்த தைரியம் இப்போது போய்விட்டது. அவனைப் பார்த்து 'போய்விட்டு வருகிறேன்' என்று சொல்ல முயன்றாள். ஆனால் வார்த்தைகள் கிளம்பவில்லை. அவனைப் பார்த்துப் புன்னகை புரிந்த வண்ணம் வண்டியி லேறிக் கொண்டாள்.

* * *

அவர்க ளிருவரும் சென்றதும் நாகம்மாள் "ராஜா! நீ இந்தப் பெண் இவ்வளவு அழகா யிருப்பாள் என்று என்னிடம் சொல்லவே இல்லையே" என்றாள்.

"நான் அப்படிப் பார்த்துச் சொல்லுகிறதாயிருந்தால் எத்தனையோ பேரைப்பற்றிச் சொல்லி யிருப்பேன்."

"இல்லை. உன்னோடு படிக்கிற பெண்ணாச்சே என்று கேட்டேன்."

"அவள் யாருடனும் பேசுகிற வழக்கமில்லை. அவள் படிப்புண்டு, அவளுண்டு. முதல், முதல் இன்று தான் என்னோடு பேசினாள்" என்றான்.

"அவள் குணமும் தங்கமா யிருக்கும் போலி ருக்கு. அவள் வாசற்படியில் வந்து நின்ற போது லக்ஷ்மியே வந்து நின்னாப் போல இருந்தது. இது மாதிரிப் பெண் இருக்கிறபோது ஊர் எல்லாம் தேடி யலைகிறோமே."



......லக்ஷ்மியே வந்து நின்னாப் போல இருந்தது.

"நான் தேடவில்லை அம்மா" என்றான் ராஜகோபாலன் விஷமமாக.

"அந்தப் பெண்ணையே நிச்சயம் பண்ணி விடுகிறேன். உனக்குப் பிடித்திருக்காளோ இல்லையோ?"

ராஜகோபாலன் பதில் சொல்லவில்லை.

"உன் முகத்தைப் பார்த்தால் பிடித்திருக்கும் போலிருக்கிறது. நான் நாளையே போய் அவள் தாயாரைக் கண்டு பேசுகிறேன்" என்றாள்.

நாகம்மாள் மறுநாள் சாவித்திரி வீட்டுக்குப் போனாள். அவள் தன் பிள்ளையின் கல்யாணத்தைப் பற்றிப் பிரஸ்தாபிப்பதற்குத் தயங்கவே இல்லை. சாவித்திரியின் பெற்றோர்களும் அதற்குமேல் தயாரா யிருந்தார்கள். "எப்பொழுது முகூர்த்தம் வைத்துக் கொண்டால் சௌகரியமா யிருக்கும்?" என்று கேட்டார்களே தவிர, அவர்கள் வேறு ஒன்றுஞ் சொல்ல வில்லை.

சாவித்திரிக்குப் பரீட்சை முடிந்தபிறகு கல்யாணத்தை நடத்தி விடலாம் என்று பெரியவர்கள் நிர்மானித்தார்கள். சாவித்திரியும் ராஜகோபாலனும் ஒரே வகுப்பில் படிப்பவர்கள். அவர்களுக்குள் விவாகமாகப் போவது தெரிந்தால் மற்றப் பையன்கள் பரிகாசம் பண்ணுவார்கள்; அவர்கள் பள்ளிக்கூடத்தில் பழகுவதும் தர்ம சங்கடமாய்ப் போய்விடுமல்லவா? அதை உத்தேசித்துக் கல்யாணம் நிச்சயமான விஷயத்தை பகிரங்கப் படுத்த வேண்டாமென் றிருந்தார்கள்.

இதற்குப் பிறகு, சாவித்திரி சாதாரணமாக ராஜகோபாலன் வீட்டுக்கு வந்து போவாள். ஆனால் ராஜகோபாலனுடன் படிப்பு விஷயங்களைப் பற்றி மட்டும் ஏதாவது சிறிது பேசுவாள். கல்யாணத்தைப் பற்றியோ ஒரு வார்த்தை கூட அவள் வாயிலிருந்து வராது. ராஜகோபாலனும் அதே தோரணையிலேயே அவளுடன் பேசிப் பழகினான். அவர்கள் சுயமே தங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்டிருந்த இந்தக் கட்டுப்பாடு அவர்களுக்குள் குமுறிக் கொண்டிருந்த காதலை இன்னும் பன்மடங்கு அதிகமாக்கிற்று.

நாகம்மாளுக்குச் சாவித்திரி மீது அபாரப் பிரியம் ஏற்பட்டு விட்டது. அந்தப் பெண் தன்னுடைய அடக்க ஒடுக்கமான நடவடிக்கைகளாலும், புத்தி சாலித்தனமான மரியாதையுடன் கூடிய பேச்சாலும் தன் வருங்கால மாமியாரை இப்போதே தனக்கு அடிமையாக்கிக் கொண்டு விட்டாள். நாகம்மாளுக்குச் சந்தோஷத்தினால் பாதிப் பைத்தியம் பிடித்து விட்டதென்றே சொல்ல வேண்டும். வீட்டில் காரியம் செய்து கொண்டிருக்கும்போது, ஞாபக

மறதியாக, "சாவித்திரி!" என்று கூப்பிடுவாள். ராஜகோபாலன் அதைக் கேட்டுச் சிரிப்பான்.

"அம்மா! கடைசியிலே என்னை மறந்துவிடப் போகிறாய்" என்பான் விண்டலாக.

"போடா, போ" என்பாள் நாகம்மாள்.

நாகம்மாள் சாவித்திரியை எப்படி எப்படியெல்லாமோ வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டாள்! அவள் வீடு வந்ததும் இன்ன இன்னவிதம் நடத்து கொள்ளவேண்டுமென்று திட்டம் போட்டிருந்தாள். "இப்போது இரண்டு பேராக இருக்கிறோம். பாதகமில்லை. அவள் வந்ததும் சமையற்காரன் வைத்துவிட வேண்டியதுதான். இல்லாவிட்டால் அவள் எனக்கு ஒத்தாசை செய்ய வந்துவிடுவாள். அவளைக் கஷ்டப் படுத்தக்கூடாது. தவிர, அவளுக்குப் பேசுவதற்கும் சாவகாசம் இல்லாமற் போய்விடும்" என்று சொல்லிக் கொண்டாள். "என் மேலே குழந்தைகளுக்கு ஆசை தான். இருந்தாலும் நான் இங்கேயே இருந்துகொண்டிருக்கக்கூடாது. இரண்டு மூன்று மாதத்திற்கொரு தடவை எங்கேயாவது வெளியூர் சென்று வரவேண்டும். அவர்கள் இஷ்டம்போல் இருக்கட்டும். எந்த ஊருக்குப் போகலாம்?" என்று எண்ணிப் பார்ப்பாள்.

அவள் இப்படியெல்லாம் கற்பனை செய்துகொண்டு, தன் பிள்ளை கல்யாணத்துக்கு முகூர்த்த தினம் வைப்பதை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தாள்.

## 3

பரீட்சை வந்தது. இரண்டு மாதத்துக் கெல்லாம் பரீட்சை முடிவுகளும் வெளியாயின. ராஜகோபாலன், சாவித்திரி இருவரும் பரீட்சையில் தேறி விட்டனர். பரீட்சைக்குப் பிறகு சாவித்திரி படிப்பை நிறுத்தி விட்டாள். ராஜகோபாலன் மட்டும் சட்ட காலேஜில் சேர்ந்து படித்து வந்தான்.

அப்பொழுது ஒரு நாள் ஒரு நண்பர் அவனைத் தன் வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிட்டிருந்தார். ராஜகோபாலன் அவர் வீட்டுக்குப் போனான்.

அங்கே நடந்த ஒரு சிறு சம்பவம் அவன் மனதைப் பெரிதும் பாதிக்கப் போகிறதென்று அவன் எதிர் பார்க்கவே இல்லை. இத்தனைக்கும் அது ஆயிரக்கணக்கான குடும்பங்களில் இன்று நடக்கும் சில சாதாரண சம்பவந்தான்.

நண்பர் வீட்டுக்குள் அவன் போனபோது, அவர் இங்கு இல்லை. வாசலில் அவருடைய தாயார்மட்டும் உட்கார்ந்திருந்தாள். அந்த அம்மாள் "யாரது?" என்று விசாரித்தாள்.

"நான்தான் ராஜகோபாலன்."

"எனக்குத் தெரியவில்லையே. நீ அகிலாண்டத்தின் பிள்ளையா? உன்னை எங்கேயோ பார்த்தாற் போலிருக்கிறதே!" என்றாள். அப்பொழுது அங்கே வந்த வக்கீலின் இளம் மனைவி "அவர் மாடியிலிருக்கிறார்" என்று சொல்லவே ராஜகோபாலன் மெத்தைப் படியேறிச் சென்று கொண்டிருந்தான்.

அப்பொழுது தன் நண்பன் மனைவி பேசுவது ராஜகோபாலன் காதில் விழுந்தது. "அவர் அகிலாண்டத்தின் பிள்ளையா யிருந்தால் என்ன! மூக்காயி பிள்ளையா யிருந்தாலென்ன? வாயை அடைத்துக் கொண்டு பேசாதிருக்கக்கூடாது! வாசற்படியிலேயே அலங்காரமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறாக்கும்" என்று மாமியாரை அவள் கோபித்துக் கொண்டிருந்தாள்.

அதைக் கேட்டபோது அவன் மனம் புண்பட்டது. ஒரு வயதான பெரிய அம்மாளை, தன் கணவனுக்கே தாயாயிருப்பவளை நேற்று வந்த ஒரு பெண் மரியாதைக் குறைவாகப் பேசுவதைப் பற்றி என்ன, என்ன அவனுக்குக் கோபம், கோபமாக வந்தது.

அவனுடைய இந்தக் கோபமும் மனக்கஷ்டமும் சாதாரணமாய் எல்லோருக்கும் சுத்த பைத்தியக்காரத்தனமாய்த்தான் தோன்றும். ஆனால், தாயே தெய்வமென்று கருதி வந்த ராஜகோபாலனுக்கல்லவா தன் அன்னையின் அருமை தெரியும்!

அவன் தன் நண்பனைப் போய்ப் பார்த்தான்; விருந்து சாப்பிட்டான்; பிறகு விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பிச் சென்றான். இத்தனையும் ஓர் இயந்திரம் செய்வதுபோல் செய்தான்.

இந்தச் சம்பவத்தை நேருக்குநேர் பார்த்ததும் அவனுக்குத் தன் தாயைப்பற்றிய கவலை வந்துவிட்டது. வீட்டுக்குத் திரும்பிப் போகும்போதெல்லாம் இந்த யோசனைதான். சாவித்திரி நல்ல பெண்தான். தன் தாயிடம் அபிமானத்துடன் தானிருக்கிறாள். ஆனால் காலப் போக்கில் என்ன நடக்குமோ? தன் நண்பன் மனைவி கூட வந்த புதிதில் எவ்வளவோ, நல்லவளாய்த் தானிருந்தாள். ஆனால் இப்பொழுது, என்று எண்ணிய போது அவன் நடுங்கினான்.

அப்பொழுது அவனுக்குத் தெரிந்த குடும்பங்களில் உள்ள தாய்மார்கள் ஒவ்வொருவராக அவன் மனக்கண் முன் காட்சியளித்தார்கள். அவனுடைய அத்தான் நாணுவின் மனைவிக்கும் அவன் தாயாருக்கும் பழிச் சண்டை. அவள் தன் பெண்ணிடம் போய்க் காலத்தைக் கழித்து வருகிறாள். எதிர்த்த வீட்டு ராமானுஜத்தின் மனைவியும் அவன் மாமியாரும் ஒருவருடன் ஒருவர் பேசுவதில்லை. இப்போது அந்த வீட்டில், பிள்ளையும் மனைவியும் ஒரு பாகத்தில் குடியிருக்கிறார்கள். இன்னொரு பாகத்தில் பிள்ளையின் பெற்றோர்கள் தனிக் குடித்தனம் செய்கிறார்கள்!

இது மாதிரி எத்தனையோ சம்பவங்கள் ஞாபகத்துக்கு வந்தன. இதெல்லாம் அவனுக்குப் புதிதல்ல. இருந்தாலும் இப்பொழுது அவன் தன் தாயாரை ஒரு மாமியார் ஸ்தானத்தில் வைத்துப் பார்க்கும் போது அந்தச் சம்பவங்கள் எல்லாம் பயங்கரமாய்த் தோன்றின.

இதே சமயத்தில் அவன் நசித்த குடும்பங்கள் சம்பந்தமாகப் படித்த வழக்குகளெல்லாம் ஞாபகத்துக்கு வந்தன. பாகப் பிரிவினை முக்கால்வாசிக்குக் காரணம், நாட்டுப் பெண்கள்தான் என்பது அவனது முடிவு.

தப்பித்தவறி சாவித்திரி தன் தாயிடம் சரியாக நடந்து கொள்ளாவிட்டால் என்ன செய்வது? இதை அவனால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. தான் நியாயமாயும், கண்டிப்பாயும் நடந்துகொண்டு விட்டால் எல்லாம் சரியாய்ப் போய்விடும் என்று அவனுடைய பகுத்தறிவு சொல்லிற்று. ஆனால் அவன் மனம் அதை ஒப்புக் கொள்ளவில்லை. மனைவிக்கும் தாயாருக்கும் சச்சரவு ஏற்படும்போது சிலர் மனைவியை நாலு அடி அடித்து, தாயாரை வைது, தன் தலையிலும் போட்டுக்கொள்ளும் கண்றாவியை அவன் பார்த்திருக்கிறான். கள்ளங்கபடமற்ற தன் தாய் தன்னுடைய ஒரு சிறு தவறினாலும் மனவருத்தமடையும்படியான நிலைமை ஏற்படுவதை அவன் விரும்பவில்லை.

# ஜேர்மெக்ஸ்




படை, சொறி, கட்டி,
வெட்டு, சிரங்கு, முத
லிய சர்ம வியாதிகள்
ஜேர்மெக்ஸினால் சீக்
- கிரம் குணமாகும் -



அப்படியானால் என்ன செய்வது?

"கல்யாணஞ் செய்து கொள்ளாதே!" என்று அவனுடைய தாயபிமானம் சொல்லிற்று.

"அப்படிச் செய்வதுதான் சரி" என்று நாகம்மாளின் அருமந்த புத்திரன் ராஜா தீர்மானித்தான். ஆனால் அவன் இதைப் பற்றித் தன் தாயிடம் ஒன்றும் தெரிவிக்கவில்லை.

* * *

அவன் இப்படித் தீர்மானித்து இரண்டு மூன்று தினங்களிருக்கும். ஒரு நாள் அவன் தாயார் அவனிடம் வந்து "சாவித்திரி வீட்டிலிருந்து அவள் அப்பாவும், அம்மாவும் இன்று காலையிலே வந்திருந்தார்கள். அடுத்த மாதம் இருபதாந்தேதி ஒரு முகூர்த்தம் இருக்கிறதாம், அதில் கல்யாணம் நடத்திவிடலாமென்கிறார்கள்" என்றாள்.

ராஜகோபாலன் பதில் சொல்லவில்லை.

"என்ன யோசனை செய்கிறாய்? உனக்கு அப்பொழுது சௌகரியமாயிருக்காதோ?" என்று கேட்டாள்.

"சௌகரியக் குறைவு ஒன்றுமில்லை. ஆனால்..."

"ஆனால் என்ன?" என்றாள். தன் பிள்ளை "அதற்கென்ன? அந்தத் தேதியிலேயே நடத்தி விடுங்கள்" என்று சொல்வான் என்று எதிர்பார்த்து வந்ததற்கு மாறாக அவன் இழுத்தாற்போல் பேசியதைக் கேட்டு ஆச்சரியப்பட்டாள்.

"கல்யாணம் இப்பொழுது வேண்டாம். அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்" என்று தலையைக் கவிழ்ந்துக் கொண்டே சொன்னான் ராஜகோபாலன். தன் தாயை நேரில் பார்த்து அப்படிச் சொல்ல அவனுக்குத் தைரியமில்லை. நாகம்மாளுக்குத் தான் கேட்டது, கனவா நினைவா என்றிருந்தது. ராஜகோபாலனா இப்படிச் சொல்கிறான்? என்று அவள் சந்தேகப்பட்டாள். பிறகு சிறிது சமாளித்துக் கொண்டு "ஏன்! உனக்கும் அவளுக்கும் ஏதாவது மனஸ்தாபமா?" என்று கேட்டாள்.

"இல்லை."

"உனக்கு வேறு எந்தப் பெண்ணையாவது பிடித்திருக்கிறதா?"

"சாவித்திரியைப் பார்த்த கண்ணாலே இன்னொருத்தரைப் பார்ப்பேனா!"

"பின்னே, என்ன ஆட்சேபணை?"

"வக்கீல் பரீட்சை முடியட்டும். நானும் வக்கீல் தொழில் ஆரம்பித்துக் கொஞ்சம் சம்பாதிக்கிறேன். அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்."

"அது வரையில் அவர்கள் பொறுத்துக் கொண்டிருப்பார்களா?"

"நான் அவர்கள் பெண்ணைக் கொடுத்துத்தான் ஆகவேண்டுமென்று கட்டாயப் படுத்தவில்லையே."

"ராஜா! நீ சொல்கிறதை என்னாலே நம்ப முடியவில்லை. நீ இந்த ஒரு விஷயத்திலே நான் சொல்கிறபடி கேளு."

"அம்மா! நான் இதுவரை ஏதாவது ஒரு காரியம் நீங்கள் சொல்லித் தட்டியிருக்கிறேனா?"

"இல்லை. ஆனாலும் தான் இப்பொழுதும் கேள் என்கிறேன்."

"இந்த ஒரு விஷயத்தில் மட்டும் என் இஷ்டப்படி விட்டு விடுங்கள்" என்றான்.

நாகம்மாளுக்கு அதற்குமேல் அவனுடன் தர்க்கஞ் செய்வதில் பிரயோசனமில்லையென்று தெரியும். சிறிது நேரம் பேசாதிருந்தாள். ராஜகோபாலனுக்குத் தாம் தன் தாயை மனவருத்தத்திற் குள்ளாக்குவதைக் காண அவனால் சகிக்கவில்லை. வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டான். நாகம்மாள், தான் செய்த பாக்கியம் இவ்வளவுதானென்று நினைத்துக்கொண்டு "சரி! நான் இனிமேல் இதைப் பற்றி பேசவில்லை எழுந்திரு. சாப்பிட வா!" என்று சொல்லி எழுந்து சென்றாள்.

* * *

மறு நாள் சாவித்திரி வீட்டாருக்கு இந்த விஷயம் தெரிந்தபோது அவர்கள் பட்ட மனோவேதனைக்கு அளவில்லை. ராஜகோபாலனைப் போன்ற ஒரு பையன் இப்படிக் கல்யாணத்தை அநாவசியமாக ஒத்திப் போடுவதன் மர்மம் அவர்களுக்கு விளங்கவில்லை.

அவர்கள் கிடக்கட்டும். சாவித்திரியின் மனோநிலையைப் பற்றி என்ன சொல்ல! தன் மீது ராஜகோபாலன் அதிருப்தி கொள்ளும் முறையில் அவள் நடந்ததே இல்லையே. ஒருவேளை விவாகத்துக்கு முன்னமேயே ஓரளவு பழகிய தோஷத்தால் அவ்வளவாகப் பிடிக்கவில்லையோ என்று கூட எண்ணினாள். இதைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொள்ளாமலிருக்க அவள் மனம் இடம் கொடுக்கவில்லை. நேரே ராஜகோபாலனையே கேட்டு விடுவதென்று அவன் வீட்டுக்குப் போனாள்.

அவன் அப்பொழுது வீட்டில் தனியே இருந்தான். ஒரு நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ புஸ்தகத்தை

வைத்துப் படித்துக் கொண்டிருந்தான். சாவித்திரியைக் கண்டதும் அவன் மனம் குழப்ப மடைந்தது.

"சாவித்திரி! உட்காரு" என்று சொன்னான்.

அவள் உட்கார வில்லை. நின்று கொண்டே யிருந்தாள். அவள் கண்களில் நீர் ததும்பி யிருந்தது.

"சாவித்திரி? நீ என்மீது கோபமாக வந்திருக்கிறாய்."

"இல்லை. உங்கள் மீது என்னால் கோபித்துக் கொள்ள முடியுமா! ஒரு நாளும் முடியாது. ஏன் முகூர்த்தம் வைப்பதற்கு இப்படிச் சாக்குச் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"நான் அம்மாளை உத்தேசித்து இப்படிச் செய்ய வேண்டி யிருக்கிறது."

சாவித்திரி ஆச்சரியத்துடன் "அம்மாவா! அவர்கள் ஒருநாளும் உங்களை இப்படிச் செய்யச்சொல்லி யிருக்க மாட்டார்கள்" என்றாள்.

"அம்மாவுக்கு ஒன்றும் தெரியாது. நானாகத்தான் சொல்கிறேன். நாளைக்குக் கல்யாணமாகிறது. நீயும் வீட்டுக்கு வந்துவிடுவாய். கொஞ்சகாலம் கழித்து உனக்கும் அம்மாவுக்கும் ஏதாவது தகராறு ஏற்படுகிறதென்று வைத்துக்கொள்."

"யாருக்கும், யாருக்கும் தகராறு? இன்னொரு தரம் சொல்லுங்கள்!" என்று கோபமாகக் கேட்டாள். அந்தக் கேள்வியில் பரிகாசமும் தொனித்தது.

"சாவித்திரி! நீ, அம்மாவிடம் சரியாய் நடந்து கொள்ள மாட்டாயென்று நான் சொப்பனத்திலும் நினைக்கவில்லை. இருந்தாலும், நான் அதைப் பற்றிக் கவலை இல்லாம லிருக்க முடியாது. ஆகையால் அதற்காக அவசியமானால் பிரம்மசாரியாகவே காலம் கழிக்கத் தயார்" என்றான்.

சாவித்திரி என்ன பதில் சொல்வாள்! இன்னொரு பெண்ணாயிருந்தால் "இதென்ன ஆள், சுத்தக் கட்டுப் பெட்டியா யிருக்கிறானே! அம்மா கப்பன் போலிருக்கிறது" என்று நினைப்பாள். ஆனால் சாவித்திரி அவனுடைய தாயபிமானத்தை நன்றாக அறிந்தவள். உலகத்தில் பிள்ளைகளைப் பெற்றெடுத்த தாய்மாரின் கஷ்டங்களைப் பற்றிய கதைகளையும் அறிவாள். ஆனால் தானே நாகம்மாளைத் தன் சொந்தத் தாய்போல் பாவிக்கும்போது அவர் தம்மை ஏன் இவ்வளவு தொந்தரவு படுத்திக்கொள்ள வேண்டுமென்றுதான் அவளுக்குப் புரியவில்லை. அவள் சிறிதுநேரம் சிந்தனையி லாழ்ந்தாள். பிறகு "அம்மா என்ன சொல்கிறார்?" என்று கேட்டாள்.

"அம்மாவுக்கு நான் உண்மையான காரணத்தைச் சொல்லவில்லை. படித்த பிறகு ஆகட்டுமென்றேன்."

அடுத்த மாதம் கலியாணமாகப் போகிறது என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்த சாவித்திரி தன் மனக் கஷ்டத்தை எவ்வளவோ அடக்கிப் பார்த்தும் முடியவில்லை. அவள் அழுது விட்டாள். அதைக் காண ராஜகோபாலன் மனம் இளக ஆரம்பித்தது.

"நீங்கள் சொல்வது நிச்சயந்தானே! இன்னொரு தரம் சொல்லி விடுங்கள். நான் போய் விடுகிறேன்" என்றாள். ராஜகோபாலனுக்குத் தான் எங்கே தன்னுடைய தீர்மானத்திலிருந்து தவறிப்போய் விடுவோமோ என்ற பயம் வந்து விட்டது.

"சாவித்திரி!" என்றான்

அவள் கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தாள்.

"நீ என்னைக் காதலிப்பது உண்மைதானா!"

"அந்தக் கேள்வியை என்னையா கேட்கிறீர்கள்!" என்று ஆத்திரத்துடன் வினவினாள்.

"நீ என்னைக் காதலிப்பது உண்மையானால்...............!"

"என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுங்கள். தயாரா யிருக்கிறேன்."

"என்னைக் கல்யாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று பிடிவாதஞ் செய்யாதே" என்றான் ராஜகோபாலன்.

எதிர்பாராத இந்த நிபந்தனையைக் கேட்டதும் சாவித்திரி அப்படியே அயர்ந்து போய் விட்டாள். அவள் தலை சுற்றியது. ஆனால் அவள் ராஜகோபாலன் மேல் கொண்டிருந்த காதல் அற்ப சொற்பமானதன்று. ஒரே ஒரு நிமிஷம்தான் சிந்தனை செய்தாள். அவள் துக்கமெல்லாம் எங்கேயோ போய்விட்டது. அவள் முகத்தில் ஒரு புது விதமான திருப்தி தோன்றிற்று.

"சரி! அப்படியே செய்கிறேன்" என்றாள்.

ராஜகோபாலனுக்கு இதைக் கேட்கத் தாங்கவில்லை. கதைகளில் வரும் உத்தமப் பத்தினிப் பெண்கள் கூட இப்படிப்பட்ட நிபந்தனைக்குச் சம்மதித்ததாய் அவன் படித்ததில்லை. அவன் தன் மனம் நிலைகொள்ளாமல் தத்தளித்தான். அப்போது வெளியே போயிருந்த நாகம்மாள் வந்தாள். அவள் அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டு உள்ளே வராமல் அப்பால் போனாள்.

"அம்மா இங்கே வாருங்கள்!" என்றான்.

"சாவித்திரி! ராஜுவின் மனதை நீதான் திருப்ப வேண்டும், நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாய் விட்டது" என்றாள் நாகம்மாள்.

சாவித்திரிக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. மௌனமா யிருந்தாள்.

"அவன் ஒன்றுமே சொல்லமாட்டேன் என்கிறானே. உனக்கும் அவனுக்கும் ஏதாவது மனஸ்தாபமா?" என்று நாகம்மாள் கேட்டாள்.

"இல்லை."

"பின்னே ஏன் திடீரென்று கலியாணம் அப்புறம் ஆகட்டும் என்கிறான்?"

ராஜகோபாலன் சாவித்திரியின் முகத்தைப் பார்த்தான். அவள், தான் விவாகம் செய்து கொள்ளாததற்குக் கூறிய காரணத்தைத் தன் தாயாரிடம் தெரிவித்து விடுவாளோ என்று அவனுக்குக் கவலை. சாவித்திரி அவன் இப்படி எண்ணித் தவித்துக் கொண்டிருந்ததை ஊகித்தாள்.

"அம்மா! அவர் அப்படிச் சொல்வதற்குக் காரணம் நான்தான்" என்றாள்.

"நீயா?" என்று ஆச்சரியப்பட்டாள் நாகம்மாள். அவள் என்ன சொல்லப் போகிறாளோ என்று ராஜகோபாலன் ஆச்சரியப்பட்டான்.

"ஆமாம்! நான்தான் அவரைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லையென்று சொல்லிவிட்டேன்" என்றாள்.



# விதியும் செல்வச் சுதந்திரமும்

முயற்சியின்றி ஒரு நாளும் சுதந்திரம் கிடைக்காது. செல்வச் சுதந்திரம் வேண்டுமென்ற உங்கள் விருப்பத்தையே எடுத்துக் கொள்ளுங்கள்.

அதிருஷ்டப்படி நடக்கிறது என்று இருந்து விடுவதால், ஓய்வு வேண்டிய தள்ளாத காலத்தில், பெரும்பாலானவர்களுக்குப் போதிய வருமானம் இல்லாமல் போய் விடுகிறது. இதற்குக் காரணம், அவர்கள் திட்டம் போடத் தவறியது; அல்லது திட்டம் போட்டும் அதன்படி நடக்கத் தவறியது. திட்டமோ, முயற்சிகளோ இல்லாமல் ஒருவருக்கும் விதியின் கை எப்போதும் உதவி செய்வதில்லை.

உங்கள் செல்வச் சுதந்திரத்துக்காகத் திட்டம் வகுக்க இன்னமும் தாமதமாகி விடவில்லை. எவ்வளவு சீக்கிரத்தில் நீங்கள் அதை ஆரம்பிக்கிறீர்களோ அவ்வளவு அதிகமான பலன், பின்னால் உங்களுக்குக் கிடைக்கும்.

## யுனைடெட் இந்தியா
## லைப் அஷ்யூரென்ஸ் கம்பெனி லிமிடெட்

'யுனைடெட் இந்தியா லைப் பில்டிங்'

எஸ்பிளனேட் :: சென்னை

சிறிது நேரம் அவர்கள் இருந்த அறையில் நிசப்தம் குடிகொண்டிருந்தது.

ராஜகோபாலன் அந்தப் பெண்ணின் முன்னிலையில் தான் ஒரு சிறிய மனிதனாக உணர்ந்தான். "ஐயோ! இப்படி என்னைக் காப்பாற்ற முன் வரும், இப்படித் தன்னைத் தியாகஞ் செய்துகொள்ள முன்வரும் இந்தப் பெண் ரத்தினத்தையா கல்யாணஞ் செய்துகொள்ளத் தயங்குகிறேன்" என்று எண்ணியபோது அவனுக்கு அவள் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்று தோன்றிற்று.

ஆனால் சாவித்திரி அங்கே நிற்கவில்லை. "நான் போய் வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டாள்.

## 4

சாவித்திரி வந்து இவ்வாறு சந்தேகத்துக் கிடமில்லாமல் சொல்லிப் போன பிறகு கல்யாணப் பேச்சு அடியோடு நின்று போய்விட்டது. நாகம்மாள் தன் பிள்ளையை, ஏன் சாவித்திரி இஷ்டமில்லை என்று சொல்கிறாள், அவர்களுக்குள் என்ன சண்டை என்று விசாரித்து ராஜகோபாலனைத் தொந்தரவு செய்ய வில்லை. தன் அதிர்ஷ்டம் அவ்வளவுதான், சாவித்திரி போன்ற பெண்ணை மருமகளாகக் கொள்ளும் புண்ணியம் செய்யவில்லை யென்று எண்ணிக் கொண்டு பேசாதிருந்து விட்டாள். ராஜகோபாலனும் தன் கல்யாணத்தைப் பற்றித் தாயிடம் பிரஸ்தாபிப்பதில்லை.

இதற்குப் பிறகு இரண்டு வருஷங்கள் சென்றன. அவன் சட்டப் பரீட்சை முடிந்துவிட்டது. அப்ரெண்டிஸாக இருந்து வக்கீலாகவும் வந்துவிட்டான். யார் யாரோ அவனுக்குப் பெண் கொடுக்க முன்வந்தார்கள். விவாகம் செய்து கொள்ளாததற்கு ஒவ்வொருவருக்கும் ஏதோ காரணம் சொல்லி அனுப்பி விட்டான். ஆனால் அவன் மனதிலிருந்த வருத்தத்தை யாரால் சொல்ல முடியும்? தன் தாயார், சாவித்திரி இரண்டு பேரையும் தன்னுடைய தீர்மானத்தால் மனத் துன்பமடையச் செய்திருக்கிறோமே என்று நினைக்க நினைக்க அவனுக்கு மிகவும் கஷ்டமா யிருந்தது. ஆனால் தான் செய்வது சரிதான் என்று நம்பி யிருந்தானாதலால் சிறிது தேறுதலடைந்து கொள்வான்.

ராஜகோபாலன் வீட்டி லிருந்து புறப்பட்டுச் சென்ற சாவித்திரியோ சில தினங்கள் வரை பயித்தியம் பிடித்தவள் போலிருந்தாள். அப்புறம் தன்னுடைய வரும் கால வாழ்க்கையைப் பற்றி ஒரு தீர்மானத்துக்கு வந்தாள். அவள் வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து வைத்தியப் பரீட்சைக்குப் படிக்க விரும்பினாள். அவளுடைய பெற்றோர்களும் அவளிஷ்டப்படி விட்டு விட்டார்கள்.

அவள் வைத்தியக் கல்லூரியில் சேர்ந்தாள். வைத்திய வகுப்பு என்றும் இலேசில் இருக்கிறதா? இரண்டா, மூன்றா? ஐந்து வருஷ காலம் சிரமப்பட்டுப் படித்துத் தேறினாள். இதற்கிடையில் அவள் இரண்டு மூன்று முறை ராஜகோபாலனைச் சந்தித்திருக்கிறாள். ஆனால் சாதாரண சிநேகிதர்கள்போல் பேசி விட்டு வந்து விடுவாள். அப்பொழுதெல்லாம் அவள் மனம் என்ன பாடு படும்? அவள் வைத்தியப் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தபோது தனக்கு ராஜகோபாலன் மீதிருந்த காதலை அறவே மறக்க முயன்றாள். காதலாவது, மண்ணாங் கட்டியாவது? மனிதன் கேவலம் எண் சாண் உடம்பு படைத்தவன். அவன் தேகத்தில் எலும்புகளாலும் ரசாயன சத்துக்களாலும் ஆனவை என்றெல்லாம் தனக்குத் தானே தர்க்கஞ் செய்து கொண்டு பார்ப்பாள். இப்படிப் பார்க்கும்போது அவன் மீது தனக்குக் காதலே கிடையாது, அவன் ஒரு பிராணி, என்று எண்ணித் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்வாள். ஆனால் இதெல்லாம் சில சமயந்தான். மற்ற வேளைகளில் ராஜகோபாலன் உருவம் எப்பொழுதும் அவள் பக்கத்திலிருப்பது போல் அவளுக்குத் தோன்றும். அந்த ஓர் உணர்ச்சியே அவளை உலகத்தில் உயிருடன் வாழச் செய்திருந்தது.

சாவித்திரி வைத்தியத் தொழில் செய்யத் தொடங்கினாள். அவள் வீட்டு வாசலில் டாக்டர் சாவித்திரி பி. ஏ. எம். பி. பி. எஸ். என்ற போர்டு தொங்கிற்று.

அவள் தொழில் ஆரம்பித்து இரண்டு மூன்று மாதமிருக்கும். ஒரு நாள் அவள் ராஜகோபாலன் இருந்த தெரு வழியே வண்டியில் சென்றாள். அப்பொழுது ராஜகோபாலனின் தாயார் மேல் மாடியில் ஒரு ஜன்னல் பக்கம் உட்கார்ந்து வீதியைக் கவனித்துக் கொண்டிருந்தாள். தூய வெள்ளை உடை தரித்து வண்டியி லமர்ந்திருந்த சாவித்திரியைக் கண்டதும் அவள் தன்னை யறியாமலேயே எழுந்து நின்றாள். அவளைப் பார்த்து ரொம்ப நாளாயிற்று. ஒரு வேளை அவள் தன் வீட்டிற்குத்தான் வருகிறாளோ என்று ஓர் அற்ப ஆசை. ஆனால் வண்டி நிற்கவில்லை. அது வேகமாய்ப் போய்க் கொண்டிருந்தது. அந்தத் தெரு வரும்போதெல்லாம், அதுவும் ராஜகோபாலன் வீட்டு வாசல் வரும்போதெல்லாம் வண்டி அப்படி வேகமாகச் செல்வது வழக்கம்.

வண்டி வீட்டைத் தாண்டிச் சென்றது. சாவித்திரி, ராஜகோபாலன் வீட்டைத் திரும்பிப் பார்த்தாள். பார்த்து விட்டுக் கைக்குட்டையை எடுத்துக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

இதை யெல்லாம் மாடியி லிருந்து கவனித்துக் கொண்டிருந்த நாகம்மாளுக்குச் சகிக்க முடியவில்லை. அவள் மனம் சோர்ந்து அப்படியே கீழே விழுந்தாள்.

அப்பொழுது உள்ளே நுழைந்த ராஜகோபாலன் "என்ன, அம்மா" என்று பதறிக்கொண்டு ஓடி வந்தான். நாகம்மாள் "ஒன்றுமில்லை. தலை சுற்றிற்று. நேற்றுத் தேங்காய் எண்ணெயில் பலகாரம் செய்தது பித்தம். உடம்புக்கு ஒத்துக் கொள்ளவில்லை" என்றாள். அப்படிச் சொன்ன பிறகு அவளுக்குத் தான் பொய் சொல்ல ஆரம்பித்து விட்டோமே என்று தோன்றிற்று.

நாகம்மாள் அன்றெல்லாம் ஒன்று மில்லாம லிருந்தாள். ஆனால் மறு நாள் கடுமையான சுரம் அடிக்க ஆரம்பித்தது. 'டாக்டரை வரச் சொல்கிறேன்' என்று ராஜகோபாலன் கிளம்பினான்.

"எந்த டாக்டரை?"

"டாக்டர் ஜயராமையர்தான்."

"வேண்டாம்."

"பின்னே?"

"நம்ப சாவித்திரியை வரச் சொல்."

இதைக் கேட்டதும் ராஜகோபாலன் திடுக்கிட்டான். அவன் தன் தாயார் சாவித்திரியைக் குறிப்பிடுவாள் என்று எதிர்பார்க்கவே இல்லை. அவன் சற்றுத் தயங்கி நின்று விட்டுப் பிறகு சாவித்திரியை அழைத்து வர ஆள் அனுப்பினான்.

டாக்டர் சாவித்திரி வந்தாள். அவள் ஏதோ பழகிய ஒரு டாக்டரைப்போல் நடந்து கொண்டாள்.

தன் உள்ளத்தில் பதிந்து கிடந்த உணர்ச்சியை அவன் மிக ஜாக்கிரதையாக அடக்கி வைத்திருந்தான்.

நாகம்மாளுக்குச் சாவித்திரி தன் கையைத் தொட்டுப் பார்த்தபோதே தேக அசௌகரிய மெல்லாம் பறந்து போய்விட்டது போலிருந்தது. ஆனால், பழைய கதைகள் எல்லாம் ஞாபகம் வரவே, அவள் மறுபடியும் வியாதிக்காரியானாள். சாவித்திரி அன்று மருந்து கொடுத்து விட்டு மறு நாள் வருவதாகச் சொல்லிப் போனாள்.

ராஜகோபாலன் அவளை இதற்கு முன் பார்த்து நாலைந்து மாத மிருக்கும். அவள் முன்னை விட அதிக அழகுடன் விளங்கினாள். ஆனால் எப்பொழுதும் மந்தஹாஸம் தவழும் அவள் முகத்தில் இப்பொழுது ஒரு சோகம் கலந்த சிரிப்புக் குடி கொண்டிருந்தது. தன் மனோவிசாரத்தை மறைக்க வேண்டுமென்று கொஞ்சம் அதிகப் படியாகவே சிரித்துப் பேசலானாள். அவளைப் பக்கப் பார்க்க ராஜகோபாலனுக்குப் பயித்தியம் பிடித்துவிடும் போலிருந்தது. அவன், அவள் மறு நாள் வருவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஏனென்றால் அன்று அவளிடம் தனியாகப்பேச வேண்டுமென்று தீர்மானித்திருந்தான்.

மறு நாள் அவள் வந்து நாகம்மாளைப் பார்த்து விட்டுக் கிளம்பியபோது ராஜகோபாலனும் அவளைப் பின்தொடர்ந்து கீழே வந்தான். வாசற்பக்கம் இருந்த அறைக்கு வந்ததும் 'சாவித்திரி!' என்றான். அந்தப் பெயரை உச்சரித்தபோது அவன் மென்னியை அடைத்துக் கொண்டது.

சாவித்திரி திரும்பிப் பார்த்தாள். "ஒரு சின்ன விஷயம் சொல்லணும். அவசரமாகப் போக வேண்டிய தில்லையே" என்றான்.

சாவித்திரி பதில் சொல்லாமல் அவன் அறைக்குள் சென்றாள். அவன் ஒரு ஸோபாவில் உட்கார்ந்து கொண்டு அவளையும் உட்காரச் சொன்னான். எதிரிலிருந்த ஒரு ஸோபாவில் அவள் அமர்ந்தாள்.

"அம்மா உடம்புக்கு ஒன்றும் பயமில்லையே!" என்று முதலில் விசாரித்தான்.

"கொஞ்சம் ஹிருதய பலஹீனம். ஆனால் அதனால் ஆபத்து ஒன்றுமில்லை. மனோ வியாதியினால்தான் கஷ்டப்படுகிறார் என்று தோன்றுகிறது. வேறு ஒரு கோளாறும் இல்லை."

இருவரும் சிறிது நேரம் மௌனமாயிருந் தார்கள். பிறகு ராஜகோபாலன் "சாவித்திரி! நீ என்னை மன்னிக்க வேண்டும்" என்றான்.

"நான் எதற்காக மன்னிப்பது?"

"எதற்காகவா? நீ அன்று கடைசியில் வீட்டுக்கு வந்தபோது என் மானத்தைக் காப்பாற்றினாய். நான் அம்மாவை உத்தேசித்துக் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லையென்று சொல்லிக் கொண்டிருந்த போது அம்மா வந்து விட்டாள். அப்பொழுது நீ என்னைக் கல்யாணம் செய்துகொள்ள இஷ்டப்பட வில்லை யென்று பொய் சொல்லி நான் கல்யாணம் பண்ணிக்கொள்ளாத பொறுப்பை உன்மேல் ஏற்றுக் கொண்டாய். இப்படி எனக்காகத் தியாகஞ் செய்த உன்னைக் கண்டு அப்புறம் நான் ஒரு வார்த்தை உப சாரத்துக்குக் கூடச் சொல்லவில்லை. அது மட்டுமா! சாவித்திரி, நீ எனக்காகக் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் டாக்டர் தொழிலில் ஈடுபட்டிருக்கிறாய். சாவித்திரி நான் உனக்கேற்றவன் இல்லை......" என்று சொல்லிக்கொண்டே இருக்கும்போது "ராஜா!" என்று தாயார் கூப்பிடும் சத்தம் கேட்கவே, பேச்சை நிறுத்தி விட்டு எழுந்திருந்தான்.

அங்கே பலஹீனத்தால் தள்ளாடிக் கொண்டே வந்தது நாகம்மாள். "ஏன், அம்மா! எழுந்து வந்தீர்கள். கூப்பிட்டால் வருகிறேன்" என்றான் ராஜகோபாலன். சாவித்திரி எழுந்திருந்து போய் அவளைப் பிடித்துக் கொண்டாள். "சாவித்திரி! உன்னை இன்னொரு தரம் பார்க்கவேண்டும் போலிருந்தது. வந்தேன். எனக்கு உடம்பு சரியாய்ப் போய்விட்டதே யென்று இனிமேல் வராதிருந்து விடாதே. அடிக்கடி வந்து கொண்டிரு" என்றாள். "அவசியம் வருகிறேன், நீங்கள் போய்ப் பேசாமல் படுத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு போனாள் சாவித்திரி.

## 5

ராஜகோபாலனும் சாவித்திரியும் பேசிக் கொண் டிருந்தபோது, நாகம்மாள், மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தது சாவித்திரியைப் பார்க்கத்தான். உடல் பலஹீனத்தால் அவள் மெதுவாக நடந்து வந்தபோது ராஜகோபாலன் சாவித்திரியிடம் சொன்னதெல்லாம் அவளுக்குக் காதில் விழுந்தது. அதைக் கேட்டு அவள் ஆச்சர்யமடைந்தாள். உடனே "ஒட்டுக் கேட்பது போல் கேட்கிறோமே" என்று நினைக்கவே அவளுக்கு அவமானமாயிருந்தது. ஏனென்றால் அப்படிக் கேட்கும் பழக்கம் அவளுக்குக் கிடையாது. அதன்மேல்தான் அவள் ராஜகோபாலனை மேலே பேசாதிருக்கச் செய் வதற்காக அவனைக் கூப்பிட்டுக்கொண்டே வந்தது.

ராஜகோபாலனுக்குத் தான் பேசியது அம்மா காதில் எங்கே விழுந்திருக்குமோ என்று கொஞ்சம் சந்தேகம். ஆனால் தாயின் முகத்திலிருந்து அதைப் பற்றி அவனால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை.

அன்று சாவித்திரி வந்துவிட்டுப் போனது முதல் நாகம்மாளுக்குத் தான் எதிர்பாராமல் அறிந்த ரகசியத் தைப் பற்றிய யோசனைதான்.

"நாட்டுப் பெண் வந்தால் என்னிடம் எப்படி நடந்துகொள்வாளோ என்று அவனுக்குப் பயம். அதற் காக அவன் கல்யாணஞ் செய்துகொள்ள இஷ்டப்பட வில்லை. அவன்தான் அப்படி யென்றால், அந்தப் பெண் அதற்குமேல் இருக்கிறாள். அவனை [illegible]வதற் காகத் தனக்கு அவனைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள இஷ்ட மில்லையென்று என்னிடம் சொன்னாள். எனக் காகவா இப்படிக் கஷ்டப்படுகிறார்கள்! சுத்தப் பைத் தியங்களா யிருக்கிறதே! நாளைக்கு அவள் வரட்டும். நான் எல்லாவற்றையும் சொல்லிக் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லுகிறேன்" என்று ஒரு சமயம் நினைத் தாள்.

இன்னொரு சமயம், "ராஜாவைக் கட்டாயப்படுத் தினால் என்னிஷ்டப்படி நடந்து கொள்வான். ஆனால் அப்படியாவது நான் சந்தோஷமடைவதில் என்ன லாபம்? நானிருந்து யாருக்கு என்ன செய்யப் போகி றேன். நான் ஒருத்தி இல்லாவிட்டால் ராஜாவுக்கு என்னைப்பற்றிய கவலை இராது. அப்புறம் அவன் கல்யாணஞ் செய்துகொள்வான்" என்று எண்ணுவாள். இப்படி எண்ணி எண்ணிப் பார்த்துக் கடைசியில் தான் என்ன செய்யவேண்டுமென்பதைப்பற்றி ஒருமுடிவுக்கு வந்தாள்.

* * *

மறு நாள் வெள்ளிக்கிழமை. ஏகாதசி தினம். அன்று நாகம்மாள் உபவாசமிருந்தாள். அதற்கடுத்த

நாள் சனிக்கிழமை. இரவு நான் சாப்பிடும்போது ராஜகோபாலன் "அம்மா! நீங்கள் பலகாரம் ஒன்றும் செய்யவில்லை போலிருக்கிறதே" என்றான். "ஆமாம்! இன்று சனிக்கிழமை விரத மிருக்கிறேன்" என்று சொன்னாள். அம்மா இப்பொழுது புதிதாக விரத மிருப்பது அவனுக்கு ஆச்சரியத்தை யளித்தது. ஏனென்றால், அவள் அவ்வளவாக விரதாதிகளை அனுசரிப்பது வழக்கமில்லை. ஆனால் அதைப் பற்றி அவன் ஒன்றும் பிரமாதமாக நினைக்கவில்லை. அன்று இரவு அவன் அவசியம் விழுப்புரம் போகவேண்டி யிருந்தது. செவ்வாய்க்கிழமை திரும்பி வருவதாகச் சொல்லி விட்டுப் போய்விட்டான்.

நாகம்மாள் ஞாயிறன்று ஆதித்ய வார விரதம் இருந்தாள். மூன்று நாள் அன்ன ஆகாரமின்றி இருந்ததால் அவள் உடல் நலிந்து போயிற்று. நடக்க முடிய வில்லை. அடிக்கடி விக்கலெடுத்தது; வாந்தியும் ஆரம்பித்து விட்டது. திங்கட்கிழமையும் சோமவார விரதமென்று சொல்லிக்கொண்டு ஒன்றும் சாப்பிடவில்லை. நாழியாக, ஆகச் சோர்வு அதிகமாயிற்று. அவளால் இப்பொழுது உட்காரக் கூட முடியவில்லை. மயக்கமாகப் படுத்தாள். இதைப் பார்த்த வேலைக்காரன் பயந்து போய்ச் சாவித்திரிக்குச் சொல்லி யனுப்பினான்.

சாவித்திரி உடனே ஓடி வந்து பரீட்சித்துப் பார்த்தாள். நாடி வேகம் குறைந்திருந்தது. பிரக்ஞை இல்லை. வெறும் பலஹீனத்தைத் தவிர வேறு ஒரு வியாதியும் இருப்பதாகத் தெரியவில்லை. இன்ன வியாதி என்று நிர்ணயிக்க முடியாமல் தற்கால சாந்தியாக பலம் உண்டாகும்படி மருந்து கொடுத்தாள். ராஜகோபாலன் போயிருக்கும் விலாசத்தை விசாரித்து அவனுக்குத் தந்தி கொடுத்து விட்டு அன்று முழுதும் நாகம்மாளின் பக்கத்திலேயே இருந்தாள். அவளுடைய தாயாரும் தகப்பனாரும் கூட வந்திருந்து உதவி செய்தார்கள். நாகம்மாள் நடுவில் ஒரோரு சமயம் கண்ணை விழித்துப் பார்ப்பாள். சாவித்திரியைப் பார்த்ததும் கவலை தீர்ந்தவள்போல் மறுபடியும் கண்ணை மூடிவிடுவாள்.

அன்று மாலை ரயிலிலேயே ராஜகோபாலன் வந்து சேர்ந்தான். அவன், தன் அன்னை இருந்த நிலைமையைக் கண்டு 'ஹோ' என்று கதறிவிட்டான். ஏனென்றால், அவன் வந்தபோது அவள் நிலைமை மகா மோசமாயிருந்தது. "அம்மா!" என்று கூப்பிட்டான். அன்பு ததும்பிய, தான் தினந்தோறும் கேட்டு மகிழ்ந்த அந்தக் குரல் காதில் பட்டதும் நாகம்மாள் கண்விழித்துப் பார்த்தாள்.

ஒரு பக்கத்தில் ராஜகோபாலனும், இன்னொரு பக்கத்தில் சாவித்திரியும் நின்று கொண்டிருக்கக் கண்டபோது அவள் முகத்தில் சிறிது சந்தோஷக் களை தோன்றிற்று. "அம்மா! அம்மா! நீங்கள் இப்படி விட்டுவிட்டுப் போவதற்காகவா நாங்கள்..." என்று ஆரம்பித்தவன் மேலே சொல்ல முடியாமல் கண்ணீர் விட்டான்.

நாகம்மாள் வாயைத் திறந்து பேச முயன்றாள். முடியவில்லை. பிறகு மறுபடியும் சிரமப்பட்டுப் பேசினாள். "எனக்கு ஒரு குறைவுமில்லை ராஜா. சந்தோஷமாகப் போகிறேன். ஆனால் நீங்கள் கல்யாணம் பண்ணிக் கொண்டிருந்தால் திருப்தியா யிருந்திருக்கும்" என்று புரிந்ததும் புரியாததுமாகச் சொன்னாள். அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. இது பேசுவதே அவளுக்குக் களைப்பை யுண்டாக்கி விட்டது.

"அம்மா, நாங்கள் கல்யாணஞ் செய்து கொள்கிறோம்" என்ற வார்த்தைகள் அப்பொழுது ஏககாலத்தில் ராஜகோபாலன் வாயிலிருந்தும் சாவித்திரி வாயிலிருந்தும் கிளம்பின. அதைக் கேட்ட நாகம்மாள் முகத்தில் பரம திருப்தி தோன்றிற்று.

சாவித்திரி மறுபடியும் நாகம்மாள் தேக நிலைமையைப் பரீட்சை செய்து பார்த்தாள். பிறகு வேறு ஒரு பெரிய டாக்டரையும் தருவித்துப் பார்க்கச் சொன்னாள். அவர், உயர்ந்தால் நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குமேல் உயிர் இராதென்று சொல்லி விட்டார்.

அன்று இரவு ஒருவரும் தூங்கவில்லை. என்ன செய்வதென்று யோசனை செய்தார்கள். முடிவில், மறு நாள் புதன்கிழமை யன்று ராஜகோபாலனுக்கும், சாவித்திரிக்கும் விவாகம் செய்து விடுவதென்று நிர்மானித்தார்கள். அதற்காக முக்கியமான ஏற்பாடுகள் அவசரம் அவசரமாகச் செய்யப்பட்டன.

புதனன்று விவாகம் நடை பெற்றது. ஏதோ சில முக்கியமான நண்பர்களும், ஊரிலிருந்த ஒன்றிரண்டு பந்துக்களும் மட்டும் சாட்சிகள்போல் வந்திருந்தனர்.

நாகம்மாளைக் கல்யாணம் நடந்த இடத்துக்கு எதிரில் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்த்து வைத்திருந்தனர். சாஸ்திரோக்தமாக மாங்கல்யதாரணம் நடந்தது. மாங்கல்யதாரணத்தின்போது மட்டும் மேளக்காரர்களை வாசிக்கச் சொல்லி யிருந்தார்கள்.

அந்தச் சத்தம் கேட்டு நாகம்மாள் சற்றே கண் திறந்தாள். எதிரில் மணக்கோலத்தில் தன் ராஜாவும், சாவித்திரியும் உட்கார்ந்திருப்பது அவள் கண்ணில் பட்டது போலிருந்தது. ஒரு வேளை தான் சொப்பனம் காண்கிறோமோ என்னமோ என்று நினைத்தாள் போலிருக்கிறது. கண்ணைக் கசக்கிக் கொள்ளக் கையெடுத்தாள். முடியவில்லை. கண்ணைக் கொட்டிக் கொட்டிக் கொண்டு பார்த்தாள். அப்பொழுது சோர்ந்து கிடந்த அவள் முகத்தில் சிறிது ஒளி உண்டாயிற்று. அவள் ஆனந்த மடைந்ததற்குள்ள அறிகுறிகள் தோன்றின.

ராஜகோபாலன் உடனே சாவித்திரியைக் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு தன் தாயினிடம் ஓடினான். இரண்டு பேரும் அவளுக்கு நமஸ்காரஞ் செய்தார்கள்.

நாகம்மாள் இப்பொழுது அவர்களை நன்றாகக் கண் திறந்து பார்த்தாள். அவளுக்கு எங்கிருந்தோ பலம் வந்து விட்டது. ஒரு கையை ராஜா மீதும் ஒரு கையை சாவித்திரி மீதும் வைத்தாள். "நீங்கள் சந்தோஷமா யிருக்கவேண்டும். என் குறை தீர்ந்து விட்டது" என்றாள். அவள் இப்பொழுது சுத்தமாகப் பேசினாள்.

தம்பதிகளடைந்த சந்தோஷத்துக் களவில்லை. அவளுக்கு இனி ஆபத்து இல்லை யென்று எண்ணினார்கள். அப்பொழுது நாகம்மாள், "ராஜா! சாவித்திரியைச் சரியாகப் பார்த்துக் கொள்" என்றாள்.

மறு நிமிடம் நாகம்மாள் தலை தொங்கிப் போய் விட்டது.

"அம்மா! அம்மா!" என்று கணவனும் மனைவியும் அலறினார்கள். அந்த அலறல் தாயைத் தண்டித்த அந்த பரமாத்மன் இருதயத்தையும் இளக்கி யிருக்கும்,

• • •

யார் தெரியுமா ?


ஹைகோர்ட்டு ஜட்ஜுகள், ஐ.ஸி.எஸ். காரர்கள், டாக்டர்கள், வக்கீல்கள், வித்வான்கள், உபாத்தியாயர்கள், ஸினிமா டைரக்டர்கள், ரஸிகர்கள், ஒன்றிலும் சேராதவர்கள் இவ்வளவு பேரும் இங்கே காட்சி யளிக்கின்றனர். யாரையாவது உங்களுக்குத் தெரிகிறதா, பாருங்கள்!

பழனியில் தங்குமிடம், போஜன வசதி எங்கே ?



## ஸ்ரீ ஷண்முகாநந்த பவான்

காபி & சாப்பாடு ஹோட்டலில்

உயர்தரமான சாப்பாடு, ருசிகரமான சிற்றுண்டிகள், சுகாதாரமான அறைகள், வசதியான விசால அறைகள், ஒருங்கே அமையப்பெற்ற எங்கள் ஹோட்டலுக்கு விஜயஞ் செய்யுங்கள்.

புரொப்ரைட்டர் : K. S. ராமநாதய்யர் — ஸன்.

## “பென்சால்” கட்டி பினயில்

பென்சாலில் சக்தி வாய்ந்த கிருமி நாசினிப் பொருள்களிருப்பதால், விஷக் கிருமிகளை உடனுக்குடன் நாசஞ் செய்கிறது. ஒரு பங்கு பென்சாலுடன் 500 பங்கு தண்ணீர் கலந்து உபயோகிக்கலாம்.

சம்பத் & கோ.,
7-149, பிராட்வே, சென்னை.

•

வியாதி சம்பந்தமான விபரங்கள்
இனாமாகக் கூறப்படும்

சீக்கிரமாகவும், நிச்சயமாகவும், செலவில்லாமல் சர்வவிதமான வியாதிகளையும் சௌகரியம் செய்யப்படும். விவரங்களுக்கு நேரிலோ, தபால் மூலமாகவோ அந்தரங்கமாய்த் தெரிந்துகொள்ளலாம்.

மெடிகல் ஆபீசர்

அமெரிக்கன் ரிசர்ச் ஹோமியோ
சொஸைடி; லிமிடெட்

தபால் பெட்டி நெ. 70

7-149, பிராட்வே :: சென்னை

டெலிபோன் நெ. 2879




மைசூர்
# கிருஷ்ணானந்தா
பல்பொடியை
உபயோகியுங்கள்
பிரஷிலும் உபயோகிக்கலாம்

சகல
பல்வியாதிகளையும்
குணப்படுத்தும்

டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ்:
ஆனந்தகிருஷ்ண & கோ
13&14, பாவாஜி நகர், ராயபேட்டை, மதராஸ்.

13&14,



கடவாத்திய கேசரி!

-சாமா



தம்பித் தவசி ஒருநாள் தான் வீட்டில் இல்லா மல் போனால் குடித் தனம் இவ்வளவு அலங்கோலமாய்ப் போய் விடுமே என்று ஸ்ரீமதி மாமியார் கவலைப்படுகிறாள்.



மேற்படி மாமியாரைப் போலவே, பிரதம மந் திரி சர்ச்சிலும் "பிரிட் டன் இந்தியாவை விட்டுப் போனால், இந் தியாவின் கதி இப்படி யாகி விடும்" என்று மனப்பால் குடிக்கிறார்.





# வண்டொன்று வந்தது!

ராவ்சாகிப் எஸ். வையாபுரிப் பிள்ளை

முன்னொரு காலத்தில் சோழநாட்டில் 'நலங்கிள்ளி' என்ற பெயருள்ள சோழனொருவன் இருந்தான். இவன் சிறந்த போர் வீரனாக விளங்கினான். இவன் கையில் ஆயுதமாகத் தாங்கிய வேல் எத்தனையோ வெற்றிகளை இவனுக்குத் தந்துள்ளது. பகைவர்களுக்கு இந்த வேல் மிகவும் பீதியை உண்டு பண்ணி வந்தது. ஒரு முறை இந் நலங்கிள்ளி அயல் நாட்டுக்குச் சென்றிருந்தான். அங்கேயுள்ள ஓர் அரசிளங் கன்னி இச் சோழன் அழகையும் போர்த் திறத்தையும் பற்றிக் கேள்வியுற் றிருந்தாள். இவன் புகழுருவை மனத்திற் பூசித்து வந்தாள். இப் பெரு வீரனை நேரிற் காணுவதற்கு இப்பொழுது சௌகரியம் வாய்த்தது. கண்டதும் பெரு வியப்பும் பெருங் காதலும் இவளது மனத்தை முற்றுகை யிட்டன. நலங்கிள்ளியும் இவளைப் பார்க்க நேர்ந்து இவளது பெரு நலத்தில் மனத்தைப் பறி கொடுத்து விட்டான். சென்ற விஷயம் முடிந்ததும், நலங் கிள்ளி தன் நாட்டிற்குத் திரும்பினான். ஆனால் தான் கண்ட கன்னியை மறக்க முடியவில்லை. காதற் கனவு கண்டு கன்னியும் மெலிந்து சோர்வுற்று வருந்தினாள். தனது காதலைச் சோழ அரசனுக்குப் புலப் படுத்தி, அவன் அருள் கிடைக்குமாறு செய்வார் ஒருவரும் இல்லையே யென்று புலம்பினாள். பனிக் காலம் வந்தது. ஒரு நாள் நள்ளிரவு. வாடைக் காற்று இவளை மிகவும் துன்புறுத்தியது. காதலன் நினைவு ஆற்றுதற் கரிதா யிருந்தது. அவனது நினைவாகவே நெடுநாளிருந்து வந்தமையால், கண்ணிற் காணும் பொருளெல்லாம் அவனொடு தொடர்புடை யனவாகவே தோன்றின.

இந்நிலையிலே ஒரு வண்டு இவள் பக்கத்திலே வந்தது. அதனை நோக்கி "வண்டே, எனக்கு ஓர் உபகாரம் செய்ய மாட்டாயா? என்னை ஆட் கொள்ளப் பிறந்த எனது தலைவனது ஊருக்குச் சென்று அவன் திருச் செவியில் எனது நிலைமையைப் பற்றி மெல்லத் தெரிவித்து வரமாட்டாயா?" என்று சொன்னாள். அங்கே பறந்து கொண்டிருந்த வண்டு வேறோரிடத்துக்குச் சென்று விட்டுத் திரும்ப வந்தது. இப்படி மீளவும் வந்தது தன் காதலனது ஊருக்குச் சென்று வந்ததாகவே இந்நங்கைக்குத் தோன்றி விட்டது. மலர்களில் தாதுண்டு வந்ததனால், வண்டி னிடத்தும் ஒரு வகை வாசனை இருக்குமல்லவா? அந்த வாசனை காதலனது ஊரிலுள்ள தாமரைப்பூ முதலியவற்றின் வாசனை யென்றே கருதி விட்டாள். அவைகள் அவனது மாலைக்குரிய பூக்களென்று நினைத்ததும், அவள் உள்ளம் குளிர்ந்து விட்டது. தன் தலைவன் தனக்கு அருள்புரிந்து அனுப்பிய செய்தியையே வண்டின் ரீங்காரம் உணர்த்துவதாக எண்ணினாள். மனத் திலே கர்வங் கொண்டாள். தன்னை இதுகாறும் துன்புறுத்திக் கொண்டிருந்த வாடையை நோக்கி "உன் வலிமை என்னிடத்தில் செல்லாது: என்னைத் துன்புறுத்தக் கருதி இங்கே வருவாயானால் அந்தக் கருத்து இனி நிறைவேறாது. நீ வருவது வீண்; இங்கே வராதே" என்று சொல்லப் பாவிக்கிறாள். தலைவியின் துன்பம்மாய்ந்து பெருமிதம் தோன்றிற்று; இப் பெருமிதமே ஒரு செய்யுளாகப் பரிணமித்தது.

> நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணாட்டுத்
> தாமரையும் நீலமும் தைவந்து — யாமத்து
> வண்டொன்று வந்தது: வாரல், பனிவாடாய்!
> பண்டன்று பட்டினம் காப்பு.

[நாமம் : அச்சம். தாமரையும் நீலமும் நலங்கிள்ளியின் மாலைக்குரிய பூக்கள். 'நீனிறத் தாரவன்' (புறத். 1512) என்று பிறிதொரு செய்யுளும் கூறுகிறது. தைவந்து : தடவி; யாமம் : நடுராத்திரி; வாரல் : வாராதே; வாடாய் : வாடையே!]

பெண்மை நலத்திற்கு அணி யென்ப நாணம்! ஆதலால் இவற்றை வெளிப்படக் கூறுதல் தனது பெண்மைக்குத் தகாது என்ற உணர்ச்சி மேலிட்டது. எனவே, நலங்கிள்ளியிடம் தூதனுப்பிய செய்தி புலப்படாமல் உள்ளடக்கி விட்டாள். தனது அன்பும் தலைவனது அன்பும் கலந்து விட்டன என்னும் உணர்ச்சியைத் தாமரையிலும் நீலத்திலும் வண்டு தோய்ந்து வந்தது எனக் குறிப்பாகவும் நயமாகவும் வெளிப்படுத்தினாள்.

இப் பெண்ணரசியின் மூதாதையருள் ஒருத்தி. இவளும் தன் காதலனைப் பிரிந்து தனித்திருந்தாள்: இவளையும் வாடைக் காற்று வருத்தியது. தனிமை நீங்கித் தன் காதலனைப் பெற்றவிடத்து அவ் வாடைக் காற்று தன்னை வருத்தும் வலிமையை இழந்து முதுகிட்டோடிவிடு மென்று கருதினாள். அக் கருத்தை வெளியிடுகிறாள்:

> பனிஅடூஉ நின்ற பானாட் கங்குல்
> தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
> முனிய அலைத்தி முரணில் காலை ...
> செய்வினை முடிக்கிற் செல்வோர் வல்லின்
> ... ... ... ...
> ஒழிகவை மகிழும் வாடைநீ கெடுகே

(அகம்-125)

[அடூஉ : வருத்தி; பானாள் : பாதிராத்திரி; மதுகை : வலிமை; தூக்காய் : நினையாய்; முனிய அலைத்தி : வெறுக்கும்படி வருத்துகிறாய்; முரணில்காலை : உனக்குத்தக்க பகை

விலகாத காலத்து : செல்வினை வருப்பிற் சென்றோர் : பொருள் தேடுங்காரணமாக வேற்றுநாடு சென்ற கணவர் ; வல்லைகின் : விரைந்து வந்து சேர்ந்தான் ; ஒழிவை எய்க்கே : எம்மை அணுகாது ஒடிவிடுவாய்.]

இவள் தன் காயகன் வருமுன்பு தான் வருந்தும் எளிமையையும், வந்த பின்பு தனக்கு உளதாம் பெருமிதத்தையும் ஒளிவு மறைவின்றி நேர்படக் கூறி விட்டாள். உணர்ச்சி நயமும் மென்மையும் இதில் காணப்படவில்லை.

நலங்கிள்ளி மீது காதல் கொண்ட பெண்ணரசியின் காலத்திற்குச் சிறிது முன்பிருந்த ஓர் இளம் பெண். இவளுக்குக் கண்ணன் மீது ஆராக் காதல். காதல்-நோயால் மிகவும் வருந்தினாள். கண்ணன் நினைவாகவே இருந்தமையால், அவனைத் தனது சிந்தையிற் குடி புகுந்து வசிக்கும்படி செய்து விட்டதாக எண்ணினாள். பெருமிதங் கொண்டு தனது நிலையைப் புலப்படுத்த விரும்பினாள்.

மாணிக் குறளுரு வாய
மாயனை யென்மனத் துள்ளே
பேணிக் கொணர்ந்து புகுத
வைத்துக் கொண்டேன் பிறிதின்றி
மாணிக்கப் பண்டாரங் கண்டீர்
வலிவன் குறும்பர்க ளுள்ளீர்
பாணிக்க வேண்டா நடமின்
பண்டன்று பட்டினங் காப்பே.

(பெரியாழ்வார் V 2, 5)

[குறளுரு : வாமன வடிவம் ; மாணிக்கப் பண்டாரம் : மாயனுகிற மாணிக்கக் களஞ்சியம் ; வலி..ளுள்ளீர் : வலிமை காட்டிய சிறு பகைகளையுள்ள வர்களே ! பாணிக்க : காலந் தாழ்க்க.]

இவள் தனது காதலன் தன் மனத்துள் புகும்படி மாணிக் குறளுருக் கொண்டிருப்பதைக் குறித்தாள். எத்தனை சிற்றுருவம் உடையனு யிருந்தாலும் மனத்துள் புகுத வொண்ணுமை தெளிவாதலாலே புகும்படிக்கு ஒரு மாயனு யிருப்பதை உணர்ந்தாள். மாயன் எனினும் தன்னை அறியாமல் மறைந்து விடுவானல்லன் என்பதையும், யாவர்க்கும் கிடைத்தற்கரியதொரு மாணிக்கக் களஞ்சியம் தனக்குக் கிடைத்து விட்டது என்பதையும் கருதி இறுமாக்தாள். தன்னை அடர்த்து வந்த பகைகளை 'அகலடைவுங்கள்' என்று தனது பெருமிதந் தோன்றக் கட்டளை யிட்டாள். தன் காதலன் தெய்வ மாதலாலும் அவனை மனத்திற் கொண்ட செய்தி பொன்றே தான் கருதுதலாலும் தனது உணர்ச்சியைச் சிறிதும் நயங் குறைபடாமல் வெளியிட்டாள். கடையாக ஏதோ சொல்லுகிறேனே! அது என்ன? நலங் கிள்ளியின் காதலி கூறிய தொடர்போல் இருக்கிறதே! ஆம் அதுவேதான்.

'வாடால், பனி வாடாய்!' என்று கூறிய தலைவி நிடரென்று உளக் கிளைத்தாள். அதனுப்பியதையே சொல்லமாட்டாது உள்ளடக்கி நின்றவள் உண்மைக் காரணத்தை வாய்விட்டு எப்படிச் சொல்ல முடியும்? அவளோடு உடன்பிறந்ததாகிய நாணம் அதற்குச் சிறிதேனும் இடங் கொடுக்குமா? ஆகவே, குறிப்பாய் அக் காரணத்தைத் தெரிவிக்க விரும்பினாள். இங்ஙனம் குறிப்பா லுணர்த்துவதற்குப் புதுவதாய்த் தானே படைத்துக் கொண்டு ஒரு தொடரைத் தலைவி கையாள விரும்பவில்லை. புதிதாய்ப் படைத்ததாலும் தெளிவாய் அவை நாலன்றிப் பொருள் விளங்க மாட்டாது ; தெளிவுடைமையின் காதலின் மென்மை நயஞ் சிதைந்து விடும், உணர்ச்சியின்றிப் போகவும் கூடும். முற்காலத்தே வழங்கிய பழமொழித் தொடரொன்று அவள் நினைவிற்கு வந்தது. அப் பழமொழித் தொடரால் அக் காரணத்தை விளக்கினாள். பெரியாழ்வார் கூறிய தலைவியும் தான் கருதிய காரணத்தை, இப் பழமொழித் தொடராலேயே விளக்கினாள்.

ஒரு காலத்தில் ஒரு நகரம் பாதுகாவலின்றிப் புகுவாரெல்லாம் குறையாடித் துன்புறுத்



தும் இடமாயிருந்தது. வலிமை மிக்க ஓர் அரசன் அதில் முதலியன அமைத்துப் படையையும் நிறுத்தி, அந்நகரைப் பாதுகாவலுடையதாக்கினான். பிற்பாடு அந்நகரிலுள்ளார், அச்சம் தவிர்ந்து, 'நம் நகர் முன் போலன்று; இப்பொழுது பாதுகாவலுடையதாய் அமைந்து விட்டது' என்று உளமகிழ்ச்சியோடு கூறுதல் இயல்பு அல்லவா? அந்த மனமகிழ்ச்சியி லிருந்து எழுந்த பழமொழித் தொடர்:

பண்டன்று பட்டினங் காப்பு

பட்டினம் ஆவது நகரம்; கடற்கரையை அடுத்துள்ள நகரம் என்று பொருள் சொல்லுதலும் உண்டு. பண்டுபோல் பாதுகாவலற்ற நிலைமையுடையதன்று: (இப்பொழுது) நகரம் காவலுடைத்தாகிவிட்டது என்று பொருள். இது வெளிப்படையான பொருள். ஆனால், இங்கே குறிக்கப்படுவது வேறொன்று. முன்பு பாதுகாப்பற்ற நகரைப் போலிருந்தாள்; இப்பொழுது பாதுகாப்புள்ள நகரைப் போல்தான் ஆகி விட்டதாகக் கருதினாள்: 'முன்னே, எனது தலைவன் அருளாத காலத்து இருந்ததுபோல் அன்று எனது நிலை; இப்போது எனக்கு அவனருள் கிடைத்து விட்டது. நானும் உயிர்க் காவல் பெற்றுப் புதியதோர் ஆற்றலையும் அடைந்து விட்டேன்" என்று முத்தொள்ளாயிரச் செய்யுளில் வரும் தலைவியின் காதலி கூறுகிறாள். அதையேதான் பெரியாழ்வார் திருப்பூத்த கண்ணனின் காதலியும் தெரியப்படுத்துகிறாள். அவர்களுடைய கருத்தைக் குறிப்பாக வெளியிடுவதற்கு மேற்கூறிய பழமொழித் தொடரே ஏற்றது என்று இருவரும் அதைக் கையாளுகிறார்கள்.

முத்தொள்ளாயிரச் செய்யுளை இன்னொரு முறை படித்துப் பார்ப்போம்:

நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணாட்டுத்
தாமரையும் நீலமுங் கைபரந்து — யாமத்து
வண்டொன்று வந்தது; வாரல், பனிவாடாய்!
பண்டன்று பட்டினங் காப்பு.

இச் செய்யுளில் கூறும் தலைவியுடைய இதயதத்துவத்தின் பேரழகு நம்மை வசீகரித்து விடுகிறது.

தலைவி இறுதியிற் கூறுவதை 'பிறிது மொழிதல்' என்று அலங்கார நூலார் சொல்லுவர். அருள் பெற்றதை வெளிப்படையாகக் கூறாது மறைவாய்ப் பிறிது மொழிதலாக உணர்த்துவது பெண்பாலார்க்குரிய ஒரு தனி நயம். அவர்கள் இயல்போடு முற்றும் பொருந்துவது. அதனை இங்கே புலவர் கையாளுவது அவரது கவித்துவத்தின் பெருமையைப் புலப்படுத்துகிறது. அவர் பெண்மையில் மேம்பட்டவரது சிந்தை புலமிற் புகுந்து, அவரது மெல்லிய இயல்புகளை நன்குணர்ந்து, அவற்றை அற்புதத் திறமையோடு தலைவியின் வாய்மொழியால் வெளியிடுகிறார் என்பது புலனாகும்.

வண்டொன்று வந்தது உண்மை. மற்றவையெல்லாம் அவள் பாவனை புலமில் நிகழ்ந்த மாயத் தோற்றம். அதை உணர்த்துகிறாள். அவளுக் குண்டாகும் சோகத்திற்கு எல்லையுண்டோ?

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

மதுரை — தூத்துக்குடி — அம்பாசமுத்திரம்

எங்களுடைய விசேஷமான நூல்கள்:

| | | |
|---|---|---|
| 5,00,000 நூற்கும் கதிர்கள் | ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக் கேற்ற கோன் நூல், மில் நெசவுக் கேற்ற சீஸ் நூல், முறுக் கேற்றிய நூல் | நம்பர் 80 வரை நூல்கள் |




## நாங்கள் சப்ளை செய்வது

கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காக்கள் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள், கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள்.

எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப் போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றது. நாங்கள் நூற்பதைத் தவிர செய்வதில்லை.

ஐக்கிய மாகாண சர்க்கார் தங்கள் அறிக்கையில், இந்தியாவிலே நூற்கப்படும் நூல்களில், எங்கள் நூல்கள் மிருதுத் தன்மைக்கும், சன்னத்திற்கும், நேர்த்திக்கும் அழுத்தத்திற்கும் மிகச் சிறந்தவை யென்றும், எல்லா நெசவுத் தொழிலாளர்களும் விரும்புவதாகவும் கூறுகிறார்கள்.

**ஏ. & எப். ஹார்வி**

மானேஜர்கள்



கண்ணன் பாலா



# முழுவதும் சுத்தம்...

பல பிணிகளுக்குக் காரணமாயுள்ள அசுத்தங்களைத் தேகத்தினின்றும் அகற்றுங்கள்.

தொண்டை, குரல்வளை, சுவாஸக் குழாய், நுரையீரல் முதலிய சுவாஸக் கருவிகளில் தொத்து வியாதியாலோ அவ்விடங்களில் ஏற்படும் புண்களினாலோ கரகரப்பான இருமல் ஏற்படுகிறது.

எவ்விதமான இருமலுக்கும் 'கிளைக்கோடின் தேர்ப் வஸாகா'வைச் சாப்பிடுங்கள். அது இருமலை மூலஸ்தானத்திலேயே தாக்குகிறது. அதிலுள்ள இதமானதும், குணமளிக்கக் கூடியதுமான சரக்குகள் இருமலை அடியோடு அகற்றிச் சீக்கிரத்தில் குணப்படுத்துகிறது.

எப்பொழுதும் ஒரு பாட்டில் வீட்டில் வைத்திருங்கள்.

Alembic

**கிளைக்கோடின்**
**தெர்ப்-வஸாகா**

**இருமலை நசித்து குணப்படுத்துகின்றது**

**அலெம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் கோ., லிட்., பரோடா.**

AL-134

அலெம்பிக் டிஸ்டிரிபியூடிங் ஏஜன்ஸி (மதராஸ்)
52, அலன்சாலை ரோடு, மேலமெய்யூர், செங்கல்பட்டு.

# நவீன புரோகிதர்

எம்.என்.எம்.பாவலர்

### காட்சி 1.

### பத்திரிகாலயம்

[தினசரிப் பத்திரிகையின் ஆசிரியர், தலையங்கம் எழுதுவதற்காகத் தலையைச் சொறிந்து கொண்டிருக்கிறார். அப்பொழுது ஆபீஸ் பையன் ஒரு விசிட்டிங் கார்டைக் கொண்டு வந்து மேஜை மேல் வைக்கிறான்.]

**பையன்** :—இவர் உங்களை அவசரமாகப் பார்க்க வேண்டுமாம். ரொம்ப அவசரமாம்.

**ஆசிரியர்** (திடுக்கிட்டவராய், கையில் ஒரு தடவை எடுத்துக் கொண்டு) :—பயலே! எத்தனை தடவை சொல்லி யிருக்கிறேன்? தலையங்கம் எழுதும் சமயத்தில் கடவுளாகட்டும், கணபதியாகட்டும்......

[இந்த சமயத்தில் "நீக்காயுசாக இருங்கள்" என்று கூறிக் கொண்டே ஒருவர் உள்ளே நுழைகிறார்.]

**கணபதி சாஸ்திரியார்** :—நமஸ்காரம்! இவ்வளவு சீக்கிரம் என்னைக் கூப்பிடுவீர்கள் என்று நினைக்கவே யில்லை. பெரியவாள் போக்கே இப்படித்தான்.

**ஆசிரியர்** :—தங்களை நான் கூப்பிட வில்லையே! தாங்கள் யார்?

**புரோ** (சிரித்தபடி) :—ஆசிரியர்களுக்கு ஞாபக மறதி அதிகமென்று பெரியவாள் சொல்லி யிருக்கா! பரவாயில்லை. இதோ பாருங்கள். இந்த விசிட்டிங் கார்டை!

[ஆசிரியர் கார்டைப் படிக்கிறார்:]

உலகப் பிரசித்தி பெற்ற புரோகிதர்

மகா கனம் மகா கணபதி சாஸ்திரியார்

1001 விவாக சுப முகூர்த்தங்கள் செய்து வைத்த பெரியார்

**ஆசிரியர்** (கார்டைப் படித்த பிறகு) :—இது தங்கள் பெயர்தானே!

**புரோ** :—ஆமாம், ஏன் சந்தேகமாக இருக்கிறதா?

**ஆசி** :—இல்லை, இல்லை. தங்கள் உருவத்தைப் பார்த்தபோதே தெரிந்து கொண்டேன். உருவத்திற்கும், பெயருக்கும் பொருத்தமாயிருக்கிறது. சரி! தாங்கள் என்னிடம் என்ன வேலையாக வந்தீர்கள்? எனக்கு அதிக வேலை யிருக்கிறது. தயவு செய்து......

**புரோ** :—ஆமாம்! பாவம், ரொம்ப வேலையிருக்கும். தினசரிப் பத்திரிகை ஆசிரியர் என்றால் பெரிய தொந்தரவுதான். சொல்லப்போனால் அவர்களுக்குப் போஜனம் செய்யக்கூட ஓய்விருக்காது. பாருங்கள், சென்ற வாரம் பம்பாய்க்கு ஒரு முகூர்த்தம் செய்து வைக்கப்போயிருந்தேன். கல்யாணப்பிள்ளை ஒரு தினசரிப் பத்திரிகையின் உதவி ஆசிரியர். பாவம்! முகூர்த்த வேளை சென்ற பிறகு வந்து, மாங்கல்யத்தைப் பெண் கழுத்தில் கட்டி விட்டு மறுபடியும் ஆபீஸிற்குப் போய்விட்டார். உதவி ஆசிரியருக்கே அவ்வளவு வேலை யென்றால், பிரதம ஆசிரியருக்கு எவ்வளவு வேலையிருக்கும்?

**ஆசிரியர்** (சிறிது கோபமாக) :—வந்த காரியத்தைச் சொல்லுங்கள், ஸ்வாமி!

**புரோ** :—ஆசிரியர்களுக்குக் கோபம் வருவது வெகு சகஜம். ஏனென்றால் அவர்களின் மூளை சதா....

**ஆசிரியர்** :—அடடா! இன்றைக்கு யார் முகத்திலே விழித்தேனோ தெரியவில்லையே! புரோகிதர்வாள்! தாங்கள் வந்த காரியத்தைச் சீக்கிரம் சொல்லப் போகிறீர்களா, இல்லையா?

**புரோ** :—மறதி, ஆச்சரியம், கோபம், பயம் ஆகிய பல பாவங்களையும் தங்களிடம் ஒரு விநாடியில் கண்டு விட்டேன்! தங்கமான குணம் ......

**ஆசிரியர்** :—ஸ்வாமி! தங்களுக்கு என்ன வேணும்? சொல்லுங்கள்! இவ்வளவு நேரத்தையும் ஒரே ஒரு விநாடி என்கிறீர்களே!

[மணி அடிக்கிறார்: ஒருவரும் வரவில்லை.]

**புரோ** :—இதோ, இந்த விஷயத்தை இன்றையப் பத்திரிகையில் முன் பக்கத்தில் போட வேண்டும். மிகவும் அவசரமானது மட்டுமல்ல: அவசியமானதும் கூட. பொதுஜன நன்மைக்காகவே பத்திரிகை நடந்து வருகிறதென்பது எனக்குத் தெரியும். இந்தச் செய்தியும் பொதுஜன நன்மைக்காகவே என்பதை நான் தங்களுக்கு எடுத்துக் கூற வேண்டியதில்லை ......

**ஆசிரியர்** :—ஸ்வாமி! போட்டு விடுகிறேன். அடே, பையா!

[மணி அடிக்கிறார்.]

**புரோ** :—இதை நீங்கள் ஒரு தடவை கூட வாசித்துப் பார்க்கவில்லையே!

**ஆசிரியர்** :—நான் படிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை; செய்தி பிரசுரிக்கும் ஆசிரியரிடம் அனுப்பி வைக்கிறேன்.

**புரோ** :—அனுப்பி வைக்கிறீர்களா?

**ஆசிரியர்** :—உடனே போடவும் உத்தரவிடுகிறேன்.

**புரோ** :—இருந்தாலும் நீங்கள் ஒரு தடவை படித்துப் பார்த்தால் எனக்குத் திருப்தி ஏற்படும். ஏதாவது திருத்த வேண்டுமென்றாலும் திருத்துங்கள். ஏனெனில் எந்த விஷயத்தையும் திருத்த வேண்டியதென்பது ......

**ஆசிரியர்** :—எங்கள் தலை விதி! நீங்கள் போங்கள், ஸ்வாமி! நான் படித்து அனுப்புகிறேன். நீங்கள் போய் வாருங்கள்.

[சாஸ்திரியார் எழுந்து வெளியே போகிறார். அதே சமயத்தில் ஆசிரியர் அறைக்குள் மானேஜர் வருகிறார்]

**ஆசிரியர்** :—வெளியே மகா கணபதி புரோகிதர் இருக்கிறாரா?

**மானேஜர்** :—யாரவர்? ஒரு எட்டடி மனிதர் போனாரே? அவரா?

ஆசிரியர்:—ஆமாம், ஆமாம்! ஆறடி சுற்றளவு. அவரிடம் படாத பாடு பட்டுவிட்டேன்.

மானேஜர்:—அப்படியா? உடனே எனக்குச் சொல்லி அனுப்பி யிருக்கப்படாதா? அப்படி என்ன தொந்தரவு கொடுத்து விட்டார்?

ஆசிரியர்:—இந்தாருங்கள்! அந்த மனுஷர் கொண்டு வந்து கொடுத்த அற்புதமான செய்தியைப் படித்துப் பாருங்கள்!

[மானேஜர் வாசித்து விட்டு]

மானேஜர்:—இதை விளம்பரமாக அல்லவா போட வேணும்? சரி, இது என்னிடம் இருக்கட்டும். நான் அவரிடம் பேசிக்கொள்கிறேன்.

ஆசிரியர்:—அவர் என்னிடந்தானே வந்து பிராணனை வாங்குகிறார்?

மானேஜர்:—அவர் இங்கே வராதபடி நான் தக்க ஏற்பாடு செய்துவிட்டு வருகிறேன். அவர் தங்களிடம் இனி வரவே மாட்டார். கவலைப்படாதீர்கள்.

[மானேஜர் போகிறார்]

## காட்சி 2.

## புரோகிதர் வீடு

[பத்திரிகை ஆபீஸ் மானேஜர் கதவைத் தட்டுகிறார்]

புரோ:—யாரது? காடி பூஜையில் வெள் வந்த மாதிரி!

மா (சிரித்தபடி):—இல்லே, இல்லே...வெ பூஜையில் காடி வந்த மாதிரி என்று கூறுங்கள்.

புரோ:—ஆமாம், ஆமாம்! வெ பூஜையில் காடி புகுந்தாலென்ன? காடி பூஜையில் வெள் புகுந்தா லென்ன? இரண்டும் ஒன்றுதான். தாங்கள் யார்? ஏன் பூஜை வேளையில் வந்து தொந்தரவு செய்கிறீர்கள்?

மா:—நான்......தாங்கள் நேற்று விஜயம் செய்த பத்திரிகை ஆபீஸின் மானேஜர். தாங்கள் கொடுத்து வந்த வியாசத்தைப் பற்றிப் பேசிப் போகலாமென்று வந்தேன்.

புரோ (குழைந்தபடி):—வாருங்கள்! வாருங்கள்! அந்த விஷயத்தைப் பிரசுரம் செய்து விட்டீர்களா?



இதோ சர்க்காரின் உத்தரவு. படித்துக் கொள்ளுங்கள். நானே இந்த நேரத்திற்குப் புறப்பட வேண்டும்.

மா:—புரோகிதர்வாள்! எந்த வியாசத்தையும் நாங்கள் அவசரப் பட்டுப் பிரசுரிப்பதில்லை. மேலும் தாங்கள் கொடுத்து வந்த விஷயம் விவாதத்திற் குரியதாக இருக்கிறது.

புரோ:—விவாதத்திற் குரியதா? அப்படி யிருப்பதாக நான் நினைக்கவே யில்லே.

மா:—நீங்கள் நினைக்காம லிருக்கலாம். நாங்கள் நினைக்கிறோம். வாசகர்கள் நினைக்கலாம்.

புரோ:—விஷயம் என்னவென்று சொல்லுங்கள்.

மா:—தங்கள் வியாசத்தில் தாங்கள் இதுவரை ஆயிரத்தொரு முகூர்த்தங்கள் செய்து வைத்திருப்பதாகவும், இன்னின்னாருக்கு விவாகங்கள் செய்து வைத்திருப்பதாகவும் தேதி வாரியாகக் கூறி யிருக்கிறீர்கள். ஆனால் அவைகளில் எத்தனை பேர் சுக ஜீவியாக இருக்கிறார்கள்? எத்தனை பேர் அற்பாயுசாகப் போய்விட்டார்கள் என்பதைக் குறிப்பிடவில்லையே!

புரோ:—அதைக் கண்டு பிடிப்பது கஷ்ட மாயிற்றே! மேலும் கெட்ட விஷயங்களை வெளியிடலாமா?

மா:—தங்கள் வியாசத்தைப் பார்த்து விட்டு இப்படி ஒரு சந்தேகம் தோன்றா மல்லவா? நல்லது, கெட்டது இரண்டையும் பிரசுரிப்பதே நல்லது.

[புரோகிதர் உள்ளே சென்று ஒரு கத்தை காகிதங்களுடன் வருகிறார்.]

புரோ:—இதோ பாருங்கள்! கவர்னர்கள், மந்திரிகள்'

திவான்கள், கலெக்டர்கள், ஜட்ஜுகள் முதலிய பெரிய மனிதர்கள் எனது புரோகிதத்திற்காகக் கொடுத்த நற்சாட்சிப் பத்திரங்கள்! இன்னும் ஆறு கட்டுகள் இருக்கின்றன. கொண்டு வரட்டுமா?

**மா** (அவைகளை மேலெழுந்தவாரியாகப் பார்த்துக் கொண்டே):—வேண்டாம், வேண்டாம்! தங்களைப் போல் புரோகிதர் வேறு எவருமே இல்லை என்பது நிச்சயம். புரோகிதத்திற்காக 'சர்டிபிகேட்' வாங்குவதும், புரோகிதர் பெருமையைப் பற்றிப் பத்திரிகையில் எழுதச் சொல்வதும் நவீன முறையாகத்தானிருக்கிறது.

**புரோ:**—கால மாறுதலுக் கேற்ப காரியங்களும் நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தத் திருமணப் பத்திரிகையைப் படித்துப் பாருங்கள்.

[மானேஜர் படிக்கிறார்:]

“...... சுபானு ௵ புரட்டாசி ௴ 10௳ ஆவுடை அம்பலவாண முதலியார் மூத்த குமாரன் அருணாசல முதலியாருக்கும், திருச்செந்தூர் நெல்லைநாயகம் பிள்ளை மூன்றாவது குமாரத்தி சண்பகவல்லி அம்மாளுக்கும் திருமணம் நடைபெறும். அப்போது, உலகப் பிரசித்தி பெற்ற மகா கணபதி சாஸ்திரியாரால் புரோகிதச் சடங்குகள் நடத்தப்பெறும் ......”

**மா** (சிரித்துக்கொண்டே):—கல்யாணப் பத்திரிகையில் புரோகிதர் பெயர் போடுவது புதுமையாகத்தானிருக்கிறது.

**புரோ:**—புதுமை ஒன்றுமில்லை, ஸார்! கல்யாண வீட்டுக்காரர்களின் கடமை அது. கல்யாணப் பத்திரிகையில் சங்கீதக் கச்சேரி இன்னாரால் செய்யப்படும் என்று குறிப்பிடுகையில், கல்யாணத் தம்பதிகளின் வாழ்விற்கே அடிப்படையாக உள்ள புரோகிதரின் பெயரை ஏன் குறிப்பிடக் கூடாதென்று கேட்கிறேன். என் பெயரைக் கல்யாணப் பத்திரிகையில் குறிப்பிடா விட்டால் நான் புரோகிதத்திற்குச் செல்வதே கிடையாது.

**மா:**—உட்காருங்கள். நான் சொல்வதைக் கொஞ்சம் சாந்தமாய்க் கேளுங்கள். தாங்களோ உலகப் பிரசித்தி பெற்ற புரோகிதர். ஏராளமாக நற்சாட்சிப் பத்திரங்களும் பெற்றிருக்கிறீர்கள். கல்யாணப் பத்திரிகைகளிலும் பெயர் போடப்பட்டு வருகிறது. இருந்தாலும் நான் ஒன்று கூறுகிறேன், கவனிக்க வேண்டும். பத்திரிகையில் ஒரு மூலையில் உங்களைப் பற்றி எழுதி விடுவதால் பிரமாதமான புகழ் ஏற்பட்டு விடாது. உங்களைப் பற்றிய ஒரு வியாசம் — வாழ்க்கை வரலாறு — நற்சாட்சிப் பத்திரங்கள் — ஐம்பது வருஷப் புரோகிதம் செய்த பெருமை இவைகளை உங்கள் படத்துடன் விளம்பரமாக வெளியிடத் தீர்மானித்து விட்டேன்.

**புரோ:**—ரொம்ப சந்தோஷம். என்ன இருந்தாலும் அறிவாளிகள் போக்கே அலாதிதான்!

**மா:**—இவ்வளவு நல்ல காரியத்திற்குப் பக்கம் ஆயிரம் ரூபாய்தான் உங்களுக்காகச் 'சார்ஜ்' செய்கிறோம்.

**புரோ:**—விளம்பர சார்ஜா?

**மா:**—ஆமாம், விளம்பரந்தான். இந்தக் காலத்தில் ஒரு பக்கம் போடுவதென்றால் இலேசா?

**புரோ:**—அதற்கல்ல. ரூபாய் ஆயிரம் கை வசமில்லையே! பிறகு கொடுக்கலாமோ, இல்லையோ?

**மா:**—உண்மைதான். உங்களுக்கு பாங்கிக் கணக்கு இருப்பதால் அதற்கு ஒரு 'செக்' கொடுத்தால் போதும்.

**புரோ:**—கெட்டிக்காரர் ஐயா, நீங்கள்! அதையும் விசாரித்துக்கொண்டு வந்துவிட்டீர்கள்.

[புரோகிதர் பேரம் செய்து ரூபாய் ஐந்நூறுக்குச் 'செக்' கொடுக்க, அதை வாங்கிக் கொண்டு மானேஜர் போய் விடுகிறார்.]

## காட்சி 3

## அதே வீட்டில்

[புரோகிதரின் ஐம்பது வருட சேவையைப் பற்றிப் பத்திரிகையில் ஒரு பக்கம் விளம்பரமாக வெளியிடப்பட்ட ஒரு வாரத்திற்குப் பிறகு ஒரு கார் புரோகிதர் வீட்டு வாசலில் வந்து நிற்கிறது. அதிலிருந்து ராணுவ உத்தியோகஸ்தர் ஒருவர் இறங்குகிறார்.]

**புரோ:**—வாருங்கள், வாருங்கள். இப்படி உட்கார வேண்டும்.

**வந்தவர்** (கொச்சைத் தமிழில்):—மகா ...... கண பதி ...... புரோ ...... கிதர் நீங்கள்தானே?

**புரோ:**—ஆமாம்; என்ன விசேஷமோ?

**வந்:**—ஐம்பது வருஷமாகப் புரோகிதம் செய்து புகழ் பெற்றவர் நீங்கள்தானோ?

**பு:**—ஆமாம். எல்லாம் தங்களைப் போன்றவர்கள் அனுக்ரஹம்.

**வந்:**—தினசரிப் பத்திரிகையில் சர்டிபிகேட்டுகள் வந்திருந்ததே, தங்களைப் பற்றித்தானே!

பு (சந்தோஷமாக) :—ஆமாம்! ஆமாம்!! இன்னும் ஏராளமாக நற்சாட்சிப் பத்திரங்களிருக்கின்றன. பார்க்கிறீர்களா?

வந் :—வேண்டாம். தங்களின் புரோஹிதத் திறமையைப் பற்றி அறிந்து சர்க்கார் ரொம்பவும் சந்தோஷப் படுகிறார்கள்.

பு (ஆச்சரியத்துடன்) :—புரோஹிதத்திற்கும், சர்க்காருக்கும் சம்பந்தம் என்ன? அவர்கள் ஏன் சந்தோஷப்பட வேண்டும்? தாங்கள் யாரோ?

வந் :—நான் சர்க்கார் ராணுவ உத்தியோகஸ்தன். சர்க்காருக்குத் திறமை வாய்ந்த புரோஹிதர் ஒருவர் தேவையாயிருக்கிறது. தங்களுடைய திறமைகளைப் பத்திரிகை மூலமாய்க் கவனித்த சர்க்கார் உங்களை வேலைக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். மாதம் ரூ. 500 சம்பளம்.

பு :—சர்க்காரில் புரோஹிதம் எதற்கு? நான் அதற்கு லாயக்கல்லவே!......

வந் :—அதைத் தீர்மானிக்க வேண்டியவர்கள் தாங்கள் அல்ல. இதோ சர்க்காரின் உத்தரவு. படித்துக் கொள்ளுங்கள். நாளை இந்த நேரத்திற்குப் புறப்பட வேண்டும். நான் வருகிறேன்.

*[கார் போன பிறகு புரோஹிதர் சமையற்காரன் சம்புவைக் கூப்பிடுகிறார்]*

புரோ :—சம்பு! அடேய்! இதை வந்து படி!

*[சம்பு சர்க்கார் உத்தரவை உரக்கப் படிக்கிறான்.]*

**சர்க்கார் உத்தரவு**

தேதி......

உலகப் பிரசித்தி பெற்ற மகாகணபதி புரோகிதருக்கு.

தங்களின் மேதாவித் தனத்தையும், அனுபவத்தையும் கண்டு சர்க்கார் சந்தோஷப் பட்டுத் தங்களை உத்தியோகத்தில் நியமித்துக்கொண்டார்கள். வட ஆப்ரிக்கா, லிபியா, இத்தாலி, ஈராக்-ஈரான், சிரியா முதலிய இடங்களிலிருக்கும் இந்தியச் சிப்பாய்களுக்கும் புரோகிதம் செய்யவேண்டியது தங்கள் உத்தியோகம். சில வேளைகளில் கலியாணமும் நடக்கும். அதற்குக் கலியாணப் புரோகிதமும், மற்றப்படி யுத்த களத்தில் வீரசொர்க்க மடையும் இந்திய வீரர்களுக்கு மரணக் கிரியைகளும், கருமாதி முதலியவைகளும் செய்யவேண்டும். பட்டாள வீரர்கள் யுத்த களத்தில் இருப்பதால் வருஷாப்திகம், மஹாளய அமாவாசை முதலிய சடங்குகளையும் நடத்தி வைக்க வேண்டும். இதற்காக மாதம் ரூ. 500 சம்பளம். உடுப்பு ராணுவ உடுப்பு. சாப்பாடும் ராணுவச் சாப்பாடுதான்.

குறிப்பு :—யுத்தம் முடிகிற வரையில்தான் உத்தியோகம். நாளைக் காலை 'பதினொரு மணிக்குப் புறப்படத் தயாராக இருக்க வேண்டும். ராணுவ லாரி ஒன்று வரும் அழைத்துப் போக. இவ் வுத்தரவை மீறினால் பாதுகாப்புச் சட்டப்படி சர்க்கார் தண்டனைக் குள்ளாவீர்கள்.

இங்ஙனம்,

............

*[புரோஹிதர் நாற்காலியில் சாய்கிறார்!]*

# துரத்திய காரணம்!



# பிரபல நட்சத்திரம்

## கல்கி




### முன்னுரை

நுரையும் சுழியுமாகப் போகும் வேகவதி ஆறு 'வா வா' என்று என்னை அழைத்துக் கொண்டிருக்கிறது. நதியில் அடைக்கலம் புகுவதற்கு அமாவாசை இரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அதுவரையில் காலத்தைப் போக்கியாக வேண்டும். அதுவரை என் அறிவையும் தெளிவாக வைத்துக்கொள்ள வேண்டும். வேலையில்லாமல் சும்மா இருந்தால் மனம் அதிகமாகக் குழம்புகிறது. தூங்காமல் விழித்துக் கொண்டிருக்கும்போதே ஒரு பயங்கரமான அந்தகாரம் வந்து சூழ்கிறது. ஆகா! அமைதியான நல்ல தூக்கம் தூங்கி எத்தனை காலமாயிற்று!

ஆம், ஏதாவது வேலையில் மனதைச் செலுத்தவேண்டுமென்பதற்காகத்தான் என் கதையை எழுதத் தொடங்குகிறேன். ஒரு வருஷத்துக்கு முன்பு, நான் 'பிரபல நட்சத்திர'மாயிருந்த காலத்தில் பத்திரிகையில் என்னைப் பற்றி அடிக்கடி ஏதாவது செய்தி பிரசுரித்துக் கொண்டிருப்பார்கள். நான் எந்தத் தெருவில் எந்த வீட்டில் இருக்கிறேன், அது சொந்த வீடா, வாடகை வீடா, எத்தனை ரூபாய் வாடகை, தினம் எவ்வளவு தடவை நான் காப்பி சாப்பிடுகிறேன் என்றெல்லாம் கேள்விகளும் பதில்களும் வெளியாகிக் கொண்டிருக்கும். அதெல்லாம் அந்தக்காலம். இப்போது 'பிரபல நட்சத்திர'ப் பதவியிலிருந்து நான் விழுந்து ஒரு வருஷத்துக்கு மேலாகிவிட்டது. என் உண்மையான வாழ்க்கை வரலாற்றைப்பற்றித் தெரிந்து கொள்வதில் இப்போது யாருக்காவது சிரத்தை இருக்குமா என்பதை நான் அறியேன். இந்த எனது துயர சரித்திரத்தை, சினிமா நட்சத்திரமாக விரும்பும் எந்தக் குடும்ப ஸ்திரீகளாவது படிக்க நேர்ந்தால், அவர்களுக்கு நிச்சயமாய் இது உபயோகமாயிருக்குமென்று நம்புகிறேன். இதை எழுதி முடிக்கும் வரையில் பகவான் என்னுடைய அறிவை மட்டும் தெளிவாக வைத்திருக்கவேண்டும்.

### 1. கல்யாணம்

கதையை எங்கே, எப்படி ஆரம்பிப்பது என்றுதான் தெரியவில்லை. நான் பிறந்தது, வளர்ந்தது, இதிலெல்லாம் விசேஷம் ஒன்றும் கிடையாது. என் தகப்பனார் வக்கீல். அவருக்கு நான் ஏழாவது பெண். என் தமக்கைமார்களுக்கெல்லாம் நல்ல வரன்களைத் தேடிக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டார். அப்போதெல்லாம் அவருக்குச் சம்பாத்தியமும் அதிகமாக வந்துகொண்டிருந்தது. அப்பாவுக்குத் தள்ளாமை அதிகமாக ஆக, வருமானம் குறைந்தது. வீட்டில் தரித்திரம் தாண்டவமாடத் தொடங்கிற்று. வீட்டிலும் சரி, வெளியிலும் சரி, எல்லாரும் இந்தத் துக்கிரி பிறந்த

அதிர்ஷ்டம் என்று என்னைத் தூற்றுவார்கள். நான் அதையெல்லாம் பொருட் படுத்துவ தில்லை. "எனக்குத்தான் பெரிய அதிர்ஷ்டம் அடிக்கப்போகிறது" என்று மனதுக்குள் சொல்லிக்கொள்வேன். சில சமயம் வெளியிலும் சொல்வேன். என் தாயார் மட்டும் என் கட்சியில் இருந்து "ஆமாண்டி கண்ணே! உனக்குத்தான் அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது. உன் அக்காமார்கள் எல்லாரையும் காட்டிலும் நீதான் நல்ல இடத்தில் வாழ்க்கைப்படப் போகிறாய். உன்னால்தான் எங்கள் தரித்திரம் தீரப்போகிறது" என்று சொல்லிக் கொண்டிருப்பாள்.

பள்ளிக்கூடத்தில் நான் இரண்டாவது பாரம் வரையில் தான் படித்தேன். ஆனால் படிப்பதில் எனக்கு அந்த நாளிலேயே ஆர்வம் அதிகம். விக்கிரமாதித்யன் கதை முதற் கொண்டு பத்திரிகைகளில் அந்த வாரம் வெளியான தொடர் கதை வரையில் எல்லாவற்றையும் படித்துவிட்டேன். இதனாலெல்லாம் என்னென்னமோ பகற் கனவுகள் காண ஆரம்பித்தேன். கதைகளில் வருவதுபோல், சகல லட்சணங்களும் பொருந்திய இளங்குமாரன் எனக்காக எங்கேயோ பிறந்து வளர்ந்து கொண்டிருக்கிறான், திடீரென்று ஒருநாள் அவன் எங்கிருந்தோ வந்து என்மேல் காதல்கொண்டு சகலரும் அறிய என்னைக் கைப்பிடித்துக் கல்யாணம் செய்து கொண்டு போகப்போகிறான், நாடு நகரமெல்லாம் அதைப் பார்த்து அதிசயிக்கப் போகிறது என்று அடிக்கடி



சந்தோஷச் செய்தி!




## பிசார்

(வங்காளி)

திலீப் போஸ், மாயா பானர்ஜி, ராதா ராணி, ப்ரதீந்திரா, டாகுர், ராஜகுமாரி ஷுக்லா முதலிய நட்சத்திரங்கள் நடித்தது.

## பரயதான்

(ஹிந்தி)

பல்வந்த் ஸிங், மாயா பானர்ஜி, ராதா ராணி, ஜகதீஷ் சேதி, ராஜகுமாரி ஷுக்லா முதலிய நட்சத்திரங்கள் நடித்தது.

டைரக்டர்: நிதின் போஸ்

## இது ஒரு சுப்ரீம் வெளியீடு!

விரைவில் இந்தியா முழுதும் திரையிடப்படும்.

# அத்தையின் பணம்

"பாரதன்"

என் அத்தை அமிர்தம்மாள், என் அறையில் நுழைந்ததும் என்னை அறியாமல் எனக்கு உடல் சிலிர்த்தது. ரங்கூனிலிருந்து திரும்பி வந்த பிறகு அத்தை அமிர்தம்மாளைத் தரிசனம் செய்யும் பாக்கியம் எனக்கு இரண்டொருமுறையே கிட்டிற்று. அதுவும் வேறு பந்துக்கள் வீட்டில் தான். அத்தையைப் பற்றி நான் பராபரியாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். அத்தைக்கு வேண்டியவர்களும் வேண்டாதவர்களும் உண்டென்பதைத் தெரிந்து கொண்டேன். அதிலும் வேண்டாதவர்கள் வர்க்கம் அதிக மென்பது தென்பட்டது. இந்த வர்க்கத்தின் எண்ணிக்கைப் பலம் நாள் தோறும் பெருகி வருவதையும் அறிந்தேன்.

இதற்கு மூல காரணம் அத்தை தன் செல்வத்திலும் செல்வமாகக் கருதிய அவளது ஏக புத்திரிதான் என்பதும் பகிரங்க ரகசியமாக, விஷயமறிந்த வட்டாரங்களில் விளங்கிற்று. அத்தை தன் செல்வப் புத்திரியை மணக்கத் துணிந்தவருக்காகக் காலஞ் சென்ற தன் கணவர் சேர்த்து வைத்துப் போயிருந்த ரொக்கம் அனைத்தையும் தருவதாகச் சொல்லியும், பல பெரிய இடங்களில் வலை வீசியும், தருந்த மீன் அகப்படாத காரணம், அந்தரங்கம் அறியாத என்னைப் போன்ற வர்களுக்கு மர்மமாகவே இருந்தது.

அத்தையின் செல்வப் புதல்வியின் வாழ்க்கைத் துணையை மறுத்தவர்கள் வழக்கம் போல் கட்டிவிட்ட கதைகளுக்குக் கணக்கில்லை. அத்தையின் பெண் ரதியில்லை என்றார்கள் சில மன்மதர்கள். அமாவாசையையும் அவளையும் ஓரே மூச்சில் உச்சரித்தனர் சில கலைவாணர்கள். மற்றும் சில மாப்பிள்ளை யாகாதவர்கள், அப்பெண்மணியைக் கிளிக்கு ஒப்பிட்டார்கள், அவள் மூக்கைப் பார்த்து விட்டு. வேறு சில சூக்ஷ்ம திருஷ்டிசாலிகளோ, அவளது இரு நேத்திரங்களையும் பங்கிட்டுக் கணக்கிட்டு ஒன்றரைக்குச் சரிக்கட்டினார்கள். அத்தைக்கு மாப்பிள்ளையாக வாய்க்காத மற்றும் சிலர், அத்தையையே கண்டு மிரளுவதாகப் பாசாங்கு செய்தார்கள். அத்தையின் பெண் ரொம்பப் படித்து விட்டதாகக் கூடச் சிலர் குற்றம் சாட்டினார்கள். அவள் பாட்டிலும் அரண்டவர்கள் சிலர். அவள் மகா வாயாடி என்று பயந்தவரும் உண்டு.



இத்தனை வதந்திகளையும் நான் நேரில் ருஜுப் படுத்திக் கொள்ளவோ அறிந்து கொள்ளவோ எனக்குச் சந்தர்ப்பமும் இல்லை; அவகாசமும் இல்லை. "அத்தை மகள்" என்ற ஒரு பெண் தெய்வம் இவ்வுலகில் அவதரித்து, இத்தனை பக்த கோடிகளின் நாமாவளி தோத்திரங்களுக்குப் பாத்திரமாகி யிருக்கிறுளென்ற கதைதான் எனக்குத் தெரியும். இதற்கு மேல், நேரில் அந்தப் பிரகிருதியைத் தரிசிக்கவோ, வேறு எவ்வித சிரத்தை காட்டவோ நான் யத்தனிக்கவில்லை.

அத்தை அன்று திடும் பிரவேசமாக என் அறை மேல் தனிப்படையெடுக்கத் தொடங்கவே எனக்குத் திகில் ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை.

நானோ ஓர் ஏழை குமாஸ்தா. ஏதோ கிருஷ்ண ராமாவென்று, தனிக் காலட்சேபம் நடத்தித் திருப்தியாக ஜீவித்து வந்தேன். புயல் போல் அன்று அத்தை என் அறையில் நுழைந்ததும், இத்தனை நாள் எனக்கு நேராத ஆபத்தை நினைத்து அஞ்சினேன். தைரியத்தைக் கைவிடாமல், அசட்டுச் சிரிப்புப் படுதாவுக்குள் என் பயத்தை மறைத்துக் கொண்டு, அத்தை முன்னிலையில் அஞ்சாமல் நின்றேன்.

"என்ன அத்தை! அத்தி பூத்தாப் போல் எங்கே இப்படி?" என்ற கேள்வியையும் போட்டுவைத்தேன்.

"உன்னைத் தேடிக் கொண்டு தான் ஒரு அவசர ஜோலியாக வந்தேன் நினைத்து நினைத்துப் பார்த்தேன்! உன்னைப் போல் யோக்கியமான, கம்பகமான பையன் வேறு யார் எனக்கு அகப்படப் போகிறுன் என்றுதான் வந்தேன்" என்று அத்தை ஆரம்பித்ததும் என் சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது. தலை கிறு கிறுத்தது; உள்ளம் உதைத்துக் கொண்டது. ஹிருதயம் அடித்தது. என்ன செய்வது! வந்தது வரட்டும் என்று, மிஞ்சி யிருந்த தைரியத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு சொற்களை நெஞ்சிலிருந்து உதிர்த்தேன்.

"என்ன அத்தை! திடீரென்று, ஏழை என் மேல் உனக்கு இப்படி கடாக்ஷம் பிறக்கக் காரணம் என்னவோ?" என்று மனதில் நினைத்ததை ஓரிரண்டு வார்த்தைகளில் மழுப்பினேன்.

அத்தை கையில் ஒரு சிறிய பெட்டி இருப்பது அப்பொழுது தான் என் கண்ணுக்குப் புலப்பட்டது. அதை எடுத்து மேஜை மேல் வைத்தாள் அத்தை. சாவியை எடுத்து மெல்லத் திறந்தாள். ஆ! என்ன ஆச்சரியம்! என் கனவிலும் நான் கண்டிராத காட்சி! பச்சை நோட்டுகள் கட்டுக் கட்டாக வெளிவேவந்தன. அவற்றை அத்தை எடுத்தாள். என் கையில் பத்திரமாக வைத்தாள்.

"இதைப் பாரு! அவர் வைத்துப் போன ஆஸ்தியில் பாதி கடன் கொடுத்துப் போய் விட்டது. பாதி ரங்கூனில் ஜப்பான்காரன் வந்து கொண்டு போய்விட்டான். கொடுத்திருந்த இடம் ஒன்றிலிருந்து இந்தப் பணம் இப்போதுதான் வந்தது. இதுவாகிலும் என் குழந்தைக்கு இருக்கட்டும். எனக்கு இந்த ஊரில் நம்பிக்கையான ஒருவரையும் தெரியாது. நீ பெரிய கம்பெனியில் வேலையாக இருக்கிறாய். நீ யோக்கியமான பையன் என்று அவர் எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருப்பார். அதனால் உன்னிடமே இதைக் கொடுத்து வைத்திருந்தால், நீ பாங்கிலோ, பத்திரமான இடத்திலோ வைத்திருப்பாய். குழந்தை கல்யாணத்தின்போது திருப்பிக் கொடு போதும்" என்று அத்தை சொன்னதும் எனக்குப் பாதி உயிர் வந்தது. இந்தப் பணத்தை மட்டும் தானே என்னிடம் ஒப்புவிக்க வந்தாள் என்ற சந்தோஷம் ஒரு பக்கம்.

"ஆமாம்! இதில் எத்தனை இருக்கிறது?" என்றேன்.

"ஐயாயிரமும் சொச்சமும் இருக்கும்" என்றாள் அத்தை.

"ஐயோ அத்தை! இத்தனை ரூபாயை நான் எங்கே வைத்துக் காப்பாற்றுவேன். நான் ஏழை குமாஸ்தா..." என்று ஆரம்பிப்பதற்குள் அத்தை மறித்து, "நான் உன்னைத்தான் நம்பிக் கொடுக்க முடியும். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள். நீ பிள்ளைமாதிரி எனக்கு" என்று சொன்னதும் எனக்கே கண்ணில் தண்ணீர் வந்துவிட்டது.

"நீ என்ன செய்வாயோ தெரியாது. உனக்கு நல்ல பாங்குகளைத் தெரியும், பெரிய மனிதர்களையும் தெரிந்திருக்குமே! நம்பகமான இடத்தில் கொடுத்து வைத்துவை" என்று சொல்லி, என்னை எப்படியோ அவன் பொக்கிஷதாரராக்கி விட்டு வெளியேறி விட்டாள்.

அத்தனை பணத்தைக் கண்ட திகைப்பு ஆறுவதற்கு எனக்கு அரை மணி நேரம் பிடித்தது.

"இல்லாத இந்த வம்பு நமக்கு ஏதற்கு?" என்று எனக்கு அன்று இரவு முழுவதும் தூக்கம் வரவில்லை. பணப்பெட்டியைத் தலைமாட்டின் கீழ் வைத்துக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, தூங்காமல் அன்றிரவு காவல் காத்தேன். பொழுது விடிவதற்குள் ஒரு யோசனை தோன்றிற்று. அந்த அரைகுறைத் தூக்கத்தில், என் நண்பன் நாகசாமி என் மனக் கண்ணில் பட்டான்.

* * *

நாகசாமி என் பால்ய சிநேகிதன். பள்ளிக்கூடத்தில் "கோட்டு"ப் பரிசு அதிகம் பெற்றவன். ஸ்கூல் பைனல் பரீட்சை தவறியதும் பரீட்சைகளை இனி பகிஷ்காரம் செய்யத் தீர்மானித்து பள்ளிக்கூடத்திலிருந்து வெளியேறி வியாபாரத்துறையில் புகுந்தான். சிறிய தரகு வியாபாரத்தில் ஆரம்பித்து இப்போது "நாக் அண்டு சாமி" என்ற ஒரு பெரிய தரகாலய முதலாளியாக விளங்குகிறான். மூன்று மெத்தைக் கட்டடத்தில் காரியாலயம். நாலு ஐந்து பெரிய மோட்டார்களில் புரண்டு கொண்டிருந்தான். ஊருக்கு வெளிப்புறத்தில் ஒரு பெரிய தோட்டம், அதனிடையே பங்களா, அவற்றில், வேட்டைநாய், வேலைக்காரர்கள் முதலிய பரிவாரங்கள் பிருதுகள் சூட்டி எளிய ஜீவனம் நடத்திவந்தான்! என்னைப்போல் படித்த முட்டாளுக்கும், அவனைப்போல் படிக்காத புத்திசாலிக்கும் உள்ள வித்தியாசத்தைக்கண்டு நான் அடிக்கடி வியப்பதுண்டு.

ஆனால், இவ்வளவு செல்வத்தில் உழன்றும் அவனுக்கு என்னிடம் பழைய விசுவாசம் விடவில்லை. எந்த ஆபத்து சம்பத்துக்கும் நானும் அவனிடம் தான் போவது.

அத்தையின் ஐசுவரிய பாரம் என்னை நாகசாமியிடம் தூண்டிற்று. அந்த பாரத்தைத் தூக்கிக்கொண்டு அவன் காரியாலயத்திற்கு மறு நாள் காலையிலேயே விரைந்து சென்றேன்.

* * *

திருப்பதி மலை ஏறிச் செல்வதுபோல் மூன்று மாடிகள் ஏறி நாகசாமியின் கோட்டை வாயிலை அடைந்தேன். வழக்கம்போல் துவாரபாலகன் ஒருவன் என் முன்னேற்றத்தைத் தடை செய்து, வழி மறித்தான். என் பெயரைச் சீட்டில் எழுதிக் கொடுத்தேன். அதை உள்ளே எடுத்து சென்றான். உள்ளிருந்து ஒரு கம்பீரக் குரல், "வரச்சொல், வரச்சொல்" என்று கேட்டது. உடனே துவாரபாலகன் ஓடிவந்து கதவைத் திறந்து வெகு மரியாதையாக வழி காண்பித்தான்.

ஒரு பெரிய அறையில் ஒரு பெரிய மேஜை. நாலைந்து சிறிய மேஜைகளால் சூழப்பட்டிருந்தது. பெரிய மேஜை சிறிய மேஜை எல்லாவற்றின் மேலும் அவற்றின் பின் ஒளிந்து கொண்டிருக்கும் ஆசாமிகளைப் பாதுகாப்பதுபோல் பல காகிதக் கட்டுகளும், இடையிடையே எதிர்ப்புப் பீரங்கிகள்போல் டெலிபோன்களும் ஆரோகணம் செய்யப்பட்டிருந்தன. பெரிய மேஜையில் இந்தத் தற்காப்பு முஸ்தீபுகள் இன்னும் அதிக பலமாக இருந்தன. பெரிய மேஜைக்குப் பின்னாலிருந்து "வா அப்பா, வா வா ... ஹலோ யெஸ்—பதினாயிரம்—ஆமாம்! எழுபத்தையாயிரம் — இல்லை லக்ஷம்," என்று கேட்ட குரலிலிருந்து நாகசாமி என்று தெரிந்துகொண்டேன். மேஜையை அணுகினேன்.

"உட்காரு ... (நடுவில் டெலிபோனில்)—ஹலோ! துணி கீழே விழுந்திருக்குது" என்றதும் சுற்று முற்றும் கீழே பார்த்தேன்—என் துணி ஒன்றும் கீழே விழவில்லை. விழித்தேன்.

"உட்காரப்பா ... (நடுவில் டெலிபோனில்) ஹலோ! பஞ்சு பறக்கிறது...ரொம்ப கனமாகத்தானிருக்கிறது" என்றதும் எனக்கு ஒன்றும் புரியவில்லை. பஞ்சு பறக்கத்தான் செய்யும், காற்றில் விட்டால் ... ஆனால் அதற்காகக் கனக்கவேண்டிய அவசியமில்லையே என்று அறி





சயப் பட்டேன். அதற்குள் நாகசாமி அவசரமாக "ஊம்...சொல் அப்பா! சொல்லு! என்ன விசேஷம்...? (டெலிபோனில்) ஹலோ...இரும்பு தடால்னு விழுந்துடுத்து ... ஊம் ... சரிஞ்சாலும் ஏறும்..."என்றான்...!

பலத்த காயமோ என்னமோ? இரும்பு தடால் என்று விழுந்தால் கால் முறியாமல் இருக்குமா? யாருக்கு என்ன நேரிட்டது என்று நான் கவலைகொண்டேன். விவரம் விசாரிப்பதற்குள், நாகசாமியின் நாலா பக்கங்களிலிருந்தும், கோவில் ஆராத்தி மணிகள் போல், டெலிபோன் மணிகள் ஒலித்தன. வலது காதில் ஒரு டெலிபோன் குழாய், இடது காதில் மற்றொரு டெலிபோன் குழாயையும் ஏந்திய வண்ணமாகவும், எதிரே மேஜையின்மேல் இரண்டு டெலிபோன் குழாய்களையும் வைத்து, நாகசாமி பகவான் சில விநாடிகள் காட்சியளித்தார். ஒரு டெலிபோன் குழாய் மூலமாகக் கேவலம் இருபத்தையாயிரத்தை ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்கு மாற்றினான்; மற்றொரு குழாய் மூலமாக ஒரு 'ல'கரத்தை இந்தப் பக்கம் தள்ளினான். இடையில் மேஜைமேல் இருந்த இரண்டு டெலிபோன் குழாய்களில் வந்த புள்ளிக் கணக்குகளைக் குறித்து வைத்துக் கொண்டான். இடை இடையே என்னையும் கொஞ்சம் கவனித்தான்.

"ஊம்! சொல்லு! என்ன விசேஷம்" என்று அவன் கொஞ்சம் எனக்கு இடம் கொடுத்ததும், நான் வந்த காரியத்தைச் சொல்ல ஆரம்பிப்பேன். அதற்குள் டெலிபோன் மணி அடிக்கும். மறுபடி ஒரு ஐந்தாறு லக்ஷத்தைப் பைசல் செய்து விட்டு, சர்க்கரைக்கு வந்த சொக்கி, கொப்பரைக்கு வந்த கதி, தேங்காய் நாருக்கு வந்த மணம், இந்த மாதிரி பல அதிருக்கிய சாமான்களின் நிலவரங்களை யார் யாருக்கோ டெலிபோன் மூலம் ஒலி பரப்பினான்...பார்த்தேன். எனக்கு என்ன செய்வதென்று தெரிய வில்லை.

"சும்மா சொல்! என் தொழில் இப்படித்தானப்பா (டெலிபோனில்—) ஹலோ...ஆமாம் மின்சாரம் தூக்கலாகத்தா னிருக்கிறது......கம்பிகள் கிடைப்பதில்... பிரெஞ்சு ஆணி தலைதூக்கி யிருக்கிறது...ரப்பர் கொஞ்சம் இழுப்புத் தான்...காப்பி ரொம்ப ஸ்ட்ராங்... டீ தான் கொஞ்சம் வீக்"...(நடு நடுவே என்னிடம்)..."ஊம் நீ சும்மா சொல்லு" என்று என்னை உற்சாகப் படுத்தினான். நானும், வேறு வழியில்லை என்று, தேங்காய், கொப்பரை, துணிமணி, இரும்பு, எஃகு, மரம், மட்டை, மின்சாரம், இவைகளுக் கிடையே இடறிக் கொண்டு, 'ஸ்ட்ராங்' காப்பியாக இருந்தாலும், 'வீக்' டீயாக இருந்தாலும் இலட்சியம் செய்யாமல், சம்பாஷணையில் குதித்து நீந்திக் கரை கண்டேன். நாகசாமி லக்ஷங்களுக்கிடையே, என் அத்தையின் ஐயாயிரத்தையும் காதில் போட்டு வைத்தேன். அதை நான் காப்பாற்ற எனக்கு சக்தியில்லை என்றும், நாகசாமிதான் அந்தப் பொறுப்பை வகிக்க வேண்டும் என்றும் விண்ணப்பித்துக்கொண்டேன். ஏதாவது அவனுக்குத் தெரிந்த பாங்கில் போட்டு அரைவட்டி வந்தால்கூடப் போதும் என்றேன்.

"போ அப்பா பைத்தியக்காரா! இந்தக் காலத்தில் பாங்கில் போட்டுத் துருப்பிடிக்க வைப்பார்களா பணத்தை? பேசாமல் நல்ல பங்குகளில் போட்டால் உன் அத்தையின் அதிர்ஷ்டம்—அவள் பெண் அதிர்ஷ்டம், ஒரே மாதத்தில்—என் ஒரே மணி நேரத்தில் முதலை ஐந்து பங்கு அதிகரிக்கச் செய்யலாமே..." என்று (டெலிபோன் பின்னணி வாத்திய முழக்கத்துடன், இடை இடையே) சொன்னான். "எப்படியானாலும் சரி! உன்னிடம் ஒப்புவித்து விடுகிறேன். பிறகு உன் பாடு. பணம் பத்திரமாக இருந்தால் போதும்" என்றேன்.

"சரி......ஒன்று செய்......அக்னி திராவகத்தில் போடேன்..." என்று நாகசாமி சொன்னதும், திடுக்கிட்டு நான் "எதை, அத்தை பணத்தையா?" என்று கவலையுடன் கேட்டேன்...... "ஆமாம்! ஏன்! அதில் என்ன பயம் உனக்கு... அக்னி திராவகம் இன்று ரொம்ப பலமாக இருக்கிறது" என்றான்.

"ஐயையோ! அக்னி திராவகத்தில் போட்டால் கரியாகி விடுமே" என்றேன். "ஹ ஹா! பைத்தியக்காரா...திராவகம் என்னும் திராவகத்திலா போடச் சொன்னேன். திராவகம் உற்பத்தி செய்யும் கம்பெனிப் பங்குகள், இப்போது மார்க்கட்டில் கிடைக்கிறது. இப்போது வாங்கினால் சீக்கிரத்தில் பங்கு விலைகள் ஏறும். அக்னி திராவகம் இப்போது பொன்போல்— பங்கு விலை ஏறும்பொழுது மறுபடி விற்று விடலாம். அதில் கொள்ளை லாபம்" என்று தன் வியாபார சாஸ்திர முறையை விளக்கினான்.

"அக்னித் திராவகத்தை விட வேறு கொஞ்சம் அபாயமில்லாதது ஒன்று மில்லையா" என்றேன்.

"இருக்கிறது. இதோ நாளைக்கு 'கொட்டாங்கச்சி கார்ப்பரேஷன்' என்று புது கம்பெனி மிதக்க விடுகிறோம். அதில் போடேன்" என்றான்.

திராவகத்தில் போட்டுக் கரியாக்குவதற்கும் கொட்டாங்கச்சியுடன் மிதக்க விடுவதற்கும் வித்தியாசம் எனக்கு அதிகம் விளங்க வில்லை. ஒன்று மட்டும் சற்று விளங்க ஆரம்பித்தது. நாகசாமி டெலிபோன் மூலம் பறக்க விட்ட பஞ்சு மூட்டைகளும், மேலே தள்ளின இரும்புச் சாமான்களும், மற்றும் அவன் குறிப்பிட்ட காப்பி, டீ வகையறாக்களும், நிஜமாக அந்தந்தப் பொருள்களைக் குறிப்பிட வில்லையென்றும், அந்தப் பொருள்களில் வியாபாரம் செய்யும் கம்பெனி பங்குகள்தான் அப்படி அடிபடுகின்றன என்றும் ஒருவாறு ஊகித்துக்கொண்டேன்.

"சரி! நீ என்னவானாலும் செய்! இந்தப் பணத்தை எப்படியாவது காப்பாற்றி, மறுபடி அத்தைக்குப் பத்திரமாக ஒப்படைப்பது உன் பொறுப்பு. உனக்கு எப்படி உசி

தம் என்று தோன்றுகிறதோ, அப்படிச் செய்" என்று என் கவலையை அவன் பரந்தமேஜையின் மேல் இறக்கி விட்டு, அவனிடம் விடைபெற்றுக்கொண்டேன். அவ னும், "பயப்படாதே! கோட்டாங் கச்சியிலேயே போட்டு விடு கிறேன்" என்று வாக்களித்ததும், மன நிம்மதியுடன் வீடு திரும்பி னேன். கோட்டாங் கச்சியில் அத்தனை பணத்தையும் போட்டு வைப்பதைவிட நல்ல கெட்டி இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டி வைத்தால் சுவமாயிற்றே என்று எனக்கு ஒரு பக்கம் தோன் றிற்று. இருந்தாலும் நாகசாமி புத்திசாதுரியத்தில் என் நம்பிக்கை அன்று பதின் மடங்கு அதிகரித்து விட்டதால் அவன் சொல்வதே சரி என்று நினைத்து ஆறுதலடைந் தேன்.

சில மாதங்கள் கழிந்தன. அத் தையின் பணத்தைப்பற்றி கவலை யற்று இருந்தேன். அதைப்பற்றி மறக்கக்கூட மறந்துவிட்டேன். திடீ ரென்று ஒருநாள் அத்தை மறுபடி பிரசன்னமானாள். பெண்ணுக்கு இந்த 'ஸீஸ'னிலாவது கல்யா ணத்தை முடித்துவிடப் போவ தாகவும், ஓரிரண்டு வரன்கள் இருப்பதாகவும் சொல்லிவிட்டு, "நான் கொடுத்த அந்தப் பணத் தைத் திருப்பி வாங்கிக் கொடுக்கி றாயா அப்பா!" என்று கேட்டாள்.

"ஆகா! நாகசாமியிடம் தான் கொடுத்து வைத்திருக்கிறேன். நாக சாமி என் ஆப்த நண்பன், நம்பக மான பேர்வழி. நாளைக்கே வாங்கிக் கொடுக்கிறேன்" என்று வாக்களித் தேன்.

மறுநாள் நாகசாமியிடம் போ னேன். நாகசாமி முகத்தில் முன் பார்த்தபொழுது இருந்த அந்தப் பரபரப்பு, சுறுசுறுப்பு ஒன்றையும் காணோம். அவன் டெலிபோன்கள் கூட உயிரற்று உறங்கின. அவன் என்னுடன் நிதானமாகப் பேச ஆரம்பித்ததும், ஏதோ சங்கதி இருக் கிறது என்று ஊகித்தேன்.

அன்று அவனுக்கு விடுமுறை நாளோ என்னமோ அவன் என் னுடன் ஊர்க்கதை யெல்லாம் பேச ஆரம்பித்தான். எந்தக் கொட்ட கையில் நல்ல சினிமாப்படம் வந் திருக்கிறது, சினிமா நட்சத்திரங் களின் வருமானம், அவர்கள் இல்லற வாழ்க்கை, ஊரில் விலை வாசிகள், காப்பி ஹோட்டல்களின் தற்கால நிலை, இந்தியாவின் எதிர்கால அர சியல் திட்டம், யுத்தப்போக்கு, பெட்ரோல் கிடைக்காத அவஸ்தை அவன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக் காரர் பெண்ணின் கல்யாணம்—இத்தியாதி கடைமுதல் பேச்சில் இறங்கினான். அதில் ஆச்சரியம் என்னவென்றால், நடுவில் ஒரு டெலி போன் மணியாவது அடிக்கவுமில்லை அவனும் 'ஹலோ' போடவில்லை.

நானும் பார்த்தேன். அத்தையின் பண விவகாரத்தை எப்போது அவ னுக்கு நினைவூட்டுவது என்று சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து நின் றேன். அவன் பக்கத்து வீட்டுப் பெண் கல்யாணத்திற்கு வந்ததும், தடாலென்று குதித்தேன். சந்தர்ப் பத்தை முன் குடுமியால் பிடித்துக் கொண்டு ஆரம்பித்தேன்.

"ஆமாம்! இப்போதான் கல் யாண ஸீஸனாயிற்றே! என் அத்தை உனக்கு நினைவிருக்குமே...அவள் பெண்ணுக்குக் கூட...." என்று முடிப்பதற்குள், "எந்த அத்தை?" என்று நாகசாமி குறுக்கிட்டான்.

"உன்னிடம் பணம் கொடுத் தேனே—அந்தப் பணத்துக்குச் சொந்தக்காரி அத்தை—அவளுக்கு அந்தப் பணம் வேண்டுமாம்; பெண் கல்யாணம் நிச்சயம் செய்யப்போகி றாளாம். அதற்குத்தான் உன்னைக் கேட்கவந்தேன்" என்றேன்.

"என் ஐயா! கல்யாணமா? இந்த வயதிலா ... ஹ ... ஹ...ம்... என்ன பரிகாசம் செய்கிறாயே!" என்று இடி இடியென்று சிரிக்கத் தொடங்கினான்.

எனக்கு நெஞ்சடைத்தது. நிஜ மாகவே பண விவகாரத்தை மறந்து விட்டானா! இருந்தாலும் நினை வூட்டிப் பார்ப்போம் என்று இன் னும் தொடர்ந்தேன்.

"உனக்குப் பெண் கொடுக்க யாரும் வரவில்லை இப்போது. என் அத்தை பணம் என்று ஆயிரம் கொடுத்தேனே ... அதைக்கூட நீ ஏதோ கோட்டாங்கச்சி கார்ப்ப ரேஷனில் போட்டு ஒன்றுக்கு இரட் டிப்பாக விருத்திசெய்து தருவதாகச் சொன்னாயே...!" என்றேன்.

"ஏது! கோட்டாங்கச்சி கார்ப்ப ரேஷன் பங்குகளா? அது இப் போது ரூபாய்க்கு ஒரு அணா விதம் தானே மதிப்பு...எல்லாம் இந்த முஸோலினியால் வந்த கேடு. அந்தப்பயல் மட்டும் இப்படி காலை வாரி விடாமலிருந்திருந்தால், கோட்டாங்கச்சி ஒன்றுக்கு நாலாக

விற்கும்" என்றான். மூலோஸினிக்கும் கோட்டாங்கச்சிக்கும் இருந்த சம்பந்தம் எனக்குப் புரியவில்லை. நண்பனைக் கேட்டேன்.

"மூலோஸினி கணக்கா இன்னும் ஒரு மாதம் தாக்குப்பிடித்திருந்தால், கோட்டாங்கச்சி சும்மா பொன்னாகப் பொழிந்திருக்கும். கோட்டாங்கச்சி ஓடுகள், இத்தாலி மீது உபயோகிக்கும் ஒருவித குண்டுக்குத் தேவையாயிருந்தன. மூலோஸினி வீழ்ந்து இத்தாலியில் ஒரு பாகம் நம் கைக்கு வரவே கோட்டாங்கச்சிக் குண்டுகளின் தேவை குறைந்து விட்டது. உடனே கோட்டாங்கச்சி கார்ப்பரேஷன் பங்குகள் தடக்கென்று விழுந்துவிட்டன" என்று விஸ்தரித்தான்.

"ஐயையோ! அப்படியானால் அத்தையின் பணம் ...?" என்று பதட்டமாகக் கேட்டேன். "பங்குகள் அப்படியே இருக்கின்றன. வேண்டுமானால் வாங்கிக் கொடு. கேவலம் இந்த ரூபாயிரத்திற்கு இப்படி உயிரை விடுகிறாயே! எத்தனையோ லக்ஷங்கள் போட்டவர்கள் பேச்சுமூச்சு விடவில்லையே!" என்று சமாதானம் கூறினான்.

ஆயிரக் கணக்கில் போட்டவர்கள் பேச்சு மூச்சற்றுப்போனது எனக்கு ஆச்சரியமாகத் தோன்றவில்லை—"அந்தப் பணத்தை, பத்திரமாக இருப்பதற்காகத் தானே உன்னிடம் ஒப்படைத்தேன் — என் பணமாயிருந்தாலும் பாதகமில்லை. அத்தையா பணமாயிற்றே" என்று கலத்தில் இறங்கினேன். "வாஸ்தவம்! பணம் எங்கே போகிறது. பங்குகளாக இருக்கட்டுமே! வேண்டுமானால் பங்குப் பத்திரங்களை எடுத்துக்கொண்டுபோய்க் கொடு" என்றான். வேறு வழியின்றி ஏதோ ஸ்டாம்பு ஒட்டிய துணிக் காகிதங்களைப் பெற்றுக்கொண்டு வெளியேறினேன்.

* * *

அத்தைக்கு என்ன ஜவாப் சொல்வதென்று எனக்குத் திகில் பிடித்தது. அவள் என்னிடம் நம்பி ஒப்படைத்த பணத்தை எப்படித் திருப்பிக்கொடுப்பது? ஐந்து செல்லாக் காசுகூட என்னிடம் கிடையாதே! ஐயாயிரம் ரூபாய்க்கு எங்கு போவது? இப்படி எல்லாம் என் மனம் குமுறிக்கொண்டிருக்கையில், அத்தை பிரசன்னமானாள். முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு ஒன்றும் பேசத் தோன்றாமல் விழித்தேன்.

"என்ன ஒரு மாதிரி இருக்கிறாய்?" என்று ஆரம்பித்தாள் அத்தை.

"ஒன்றுமில்லை...உடம்பு கொஞ்சம் ஒரு மாதிரி இருக்கது..." என்றேன்.

உண்மையில் எனக்கு அல்றியில் ஜுரம்தான். அந்தப் பாழாய்ப் போன பணத்தைப் பற்றி எந்த க்ஷணம் பேச்சு எடுத்துவிடுவாளோ என்று அஞ்சினேன்.

"உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள் அப்பா" என்று புத்திமதி கூறினாள். பிறகு சற்று மௌனம்; எந்த நேரம் அந்தக் கேள்வி கேட்டுவிடப் போகிறாளோ என்று நடுங்கிக் கொண்டிருந்தேன்.

"இதோ பாரு, நீ ஒன்றும் நினைத்துக் கொள்ளாதே! நான் வந்து உன்னைக் கேட்கிறேனே என்று" — இப்படி ஆரம்பித்ததும், கொடுத்ததைக் கேட்பதற்கு இந்தக் கிழவிக்கு என்ன பிரமாத யோசனை என்று நினைத்தேன். மென்று விழுங்கிக் கொண்டு "அதனால் என்ன அத்தை! தாராளமாகக் கேள்" என்று சொல்லி விட்டேன். தாராளமாகக் கொடுத்ததுபோல். திருப்பிக் கேட்பதில் என்ன? நான் கொடுக்கப்போவதாக இருந்தால்தானே கவலை!

"நான் இப்படி வெட்கத்தை விட்டுக் கேட்கிறேனே என்று ஒன்றும் நினைக்க மாட்டாயே" என்றாள் அத்தை.

"சே! சே! இதில் வெட்கம் என்ன வந்தது. இந்தச் சுதந்திரம் கூட இல்லையா என்ன?" என்று சற்று உற்சாகமாகவே சொன்னேன். "நமக்கும் வேளை அப்படி வந்திருக்கிறது" என்றதும், அதை நான் முற்றிலும் ஆமோதித்தேன்.

"நானாக எப்படி இந்த விஷயத்தைப் பற்றி பிரஸ்தாபிப்பது என்று சங்கோசப்பட்டேன். சங்கோசப் பட்டால், காரியம் நடக்கவேண்டுமே?" என்றாள்.

"வாஸ்தவம், வாஸ்தவம்" என்று பின்பாட்டுப் பாடினேன்.

"கலியாண மாசமோ ஆகிறது, முடியப் போகிறது. சட்டுப் புட்டென்று ஏதாவது ஏற்பாடு செய்தால்தானே என் பாரம் தீரும்" என்று தன் குறையைச் சொல்லிக் கொண்டாள். "ஆமாம்! ஆமாம்! காலா காலத்தில் ஏற்பாடு செய்ய வேண்டியதுதானே" என்றேன். (என் நாடி வெகு வேகமாக அடிக்க ஆரம்பித்து விட்டது: என் நேரம் கிட்டி விட்டது!)

"உன்னைத்தான் கடைசியில் நம்பியிருக்கிறேன்" என்றதும் கடைசிக் கட்டத்தை அடைந்து விட்டதாக எண்ணினேன். என்னை நம்பித்தான் மோசம் போய் விட்டாயே என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டு மௌனம் சாதித்தேன்.

"ஏதோ உன்னிடம் ஒப்படைத்தால்தான் என் தனத்துக்கு க்ஷேமம் என்று என் மனதில் பட்டது. வேறு யாரும் எனக்கு நம்பிக்கையுமில்லை இஷ்டமுமில்லை" என்று அத்தை சொன்னதும், என் ஹிருதயத்தில் கத்தியால் குத்தினது போல் இருந்தது. என் கண்ணில் கலகல வென்று தண்ணீர் வந்தது. என்னை யறியாமல், "அத்தை! நான் நம்பிக்கைத் துரோகி—உன் மதிப்புக்குப் பாத்திரனல்ல. என்னை மன்னிப்பாயா?" என்று கெஞ்சினதும், அத்தைக்கும் அழுகை வந்து விட்டது.

"அப்பா! உன்னை என் சொந்தப் பிள்ளைபோல் நினைக்கிறேன். நீ ஒரு நாளும் எனக்குத் துரோகம் செய்ய முடியாது. என் தனத்தை நீ தான் காப்பாற்ற வேண்டும்" என்று விம்மி விம்மி அழுதாள்.

* * *

மேலும் சொல்லிக் கொண்டே போனால் அத்தையின் கண்ணீரும் என் கண்ணீரும் எவ்வளவு கலம் செலவழிந்திருக்கும் என்று அளந்து கொட்ட வேண்டிவரும். காகிதப் பஞ்ச காலத்தில் வீண் செலவு. சுருக்கமாகவே, நமது சம்பிரதாயப் படி, மங்களகரமாக முடித்து விடுகிறேன்.

என் அத்தை மகள் தனத்துக்கும் எனக்கும் திருமணம் சுருக்கமாகவும், சீக்கிரமாகவுமே நடந்தேறியது. என் நண்பன் நாகசாமி, நேரில் கலியாணத்திற்கு வர முடியாததற்கு மன்னிப்புக் கேட்டுவிட்டு, "உன் விவாகத்துக்கு என் பரிசு" என்று கவர் ஒன்று அனுப்பியிருந்தான். அதில் பதினாயிரம் ரூபாய்க்கு ஒரு செக் இருந்தது. இந்தப் பதினாயிரம் ரூபாயும், நான் எடுத்த பங்குகளில் வந்த லாபம் என்று குறிப்பிட்டிருந்தான். நானும் நாகசாமியுடன் சேர்ந்து கூட்டாளியாகத் தொழில் செய்கிறேன் என்பதைப் பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அத்தையின் தனம் அப்படி ஒன்றும் சோடை இல்லை. அவள் என்னமோ எனக்கு ரதிதான். பிறர் எது வேண்டுமானாலும் சொல்லியிருக்கட்டும். அவர்களுக்குக் கண்ணில்லை என்றுதான் சொல்வேன். இனி யாராவது ஏதாவது சொன்னால் அவர்களுக்குப் பல் இராது என்று தைரியமாக உறுதி கூறுகிறேன். அத்தையின் தனம் தான் என் வாழ்க்கையின் அதிர்ஷ்டம் என்பதைப் பகிரங்கமாக எடுத்துரைக்கிறேன்.

## வாஹினியாரின் புதிய சித்திரங்கள்!

# ஸ்வர்க்க ஸீமா

வாழ்க்கை வெள்ளத்தில் அள்ளியெடுத்த
உள்ளங் கவரும் உயரிய ஓவியம்

டைரக்டர்.. B.N. ரெட்டி

# யோகி வேமனா

போகமறியாதவன் யோகமறியான் எனும்
மூதோர் மொழியை மெய்ப்படுத்திய
புண்ணிய புருஷனின் புனித சரிதம்

டைரக்டர்.. K.V. ரெட்டி

## வாஹினியின் முதல் தமிழ் படம்!

# விப்ரநாராயணா

அணங்கிலும் அரங்கனிலும் அத்வைதத்தை
ஒருங்கே கண்ட ஆழ்வாரின் அற்புதக் கதை

டைரக்டர்.. B.N. ரெட்டி



THE VAUHINI PICTURES LTD., MADRAS :: BEZWADA :: TADPATRI.



அன்பே உருவான காந்தி மகான் ஆம்புலன்ஸ் படையில் சேர்ந்து காயம் பட்டவர்களுக்குச் சிகிச்சை செய்வார்.



இலட்சிய புருஷரான ஜவாஹர்லால்ஜி ஆகாயத்திற் பறந்து சாமர்த்தியமாகக் குண்டுப் பிரயோகங்களை விடுவார்.



ராஷ்டிரபதி மௌலானா அபுல்கலாம் ஆஸாத் யுத்த தந்திரத் திட்டமைக் காரியாலயத்தின் அதிபராக இருப்பார்.



ராஜாஜி அதிவேகமாகத் தளபதிப் பதவியை ஏற்றுப் போர்க் களத்துக்கே சென்று யுத்தத்தை நடத்தக் கூடும்.

தேசத் தலைவர்கள் 'தேசீய யுத்த முயற்சி'யை ஏற்று நடத்துவதென்றால் . . .



இரும்பு நெஞ்சம் படைத்த படேலின் கையில் இயந்
திரப் படைகளை ஒப்புவிப்பது பொருத்தமா யிருக்கும்.



பாபு ராஜேந்திர பிரசாத் தமது மெலிந்த சரீரத்துடன்
பாராசூட்டில் இறங்கி 'ஸாபோடேஜ்' வேலை நடத்தலாம்.



அடியில் வத்தி வைப்பதில் கைதேர்ந்த ஜனாப் ஜின்னா
ஸப்மரீன் கப்பல் போராட்டத்தில் ஈடுபடலாம்.



சப்மரீன்களை ஒழிப்பதற்காக ஏற்பட்ட நாசகாரிப்
படைக்கு சாவர்க்கார் தலைமை ஏற்று நடத்தலாம்.

# காணக் கூடிய காட்சிகள்தான்

-உம்மன்



டாக்டர் அம்பேத்காரின் காங்கிரஸ் எதிர்ப்புப் பீரங்கி, விமான எதிர்ப்புப் பீரங்கியாக ஏன் மாறக்கூடாது?



சப்ரூ கட்சியில்லா மகாநாட்டைக் கைவிட்டுப் புகைப் படலப் போர் முறைகளை ஆராய்வதைக் கைக்கொள்வார்.



கொரில்லாச் சண்டையில் மோகம் கொண்ட டாக்டர் மூஞ்சே ஒளிந்திருந்து அம்பு விட்டுப் பார்க்கலாம்.



ஜனாப் ஹக் தம்மைப் பலூனாக மாற்றிக்கொண்டு நகரத் தற்காப்புக்கு ஏன் உதவி செய்யக் கூடாது?

# வைர மோதிரம்

"நாடோடி"

வருஷா வருஷம், தவறாது, "தீபாவளிக்குத் தீபாவளி," புடவையும், வேஷ்டியும் அனுப்பிக் கொண்டிருந்த மாமனார் இந்த வருஷம் அனுப்பவில்லை.

இந்த வாக்கியத்தைப் படித்துவிட்டு, என் மாமனார், உடனே மாமியாரைக் கூப்பிட்டு, "அடியே, உன் மாப்பிள்ளை யோக்கியதையைப் பாரடி! இந்தத் தீபாவளிக்கு நாம் வழக்கம் போல் புடவையும், வேஷ்டியும் அனுப்பி யிருக்க, அனுப்பவே யில்லை என்று புஸ்தகத்தில் எழுதியிருக்கிறானே!" என்று ஆத்திரமாகக் கதறும் காட்சி என் மனக் கண்ணுக்குத் தோன்றுகிறது.

"நான்" என்று போட்டுக்கொண்டு எழுதுவதில் இதுதான் ஒரு பெரிய தொல்லை! கட்டுரைக்காக ஏதாவது எழுதினேனானால் தங்களைப் பற்றித்தான் எழுதியிருக்கிறேன் என்று நினைத்துக் கொண்டு உறவினர்களும் நண்பர்களும் சண்டைக்கு வந்து விடுகிறார்கள்! ["ஐயா மாமனாரே! தாங்கள் இந்த தீபாவளிக்காக அனுப்பிய புடவையும், வேஷ்டியும் வந்து சேர்ந்தன. அதற்காக மிகவும் வந்தனம். இந்தக் கட்டுரை தங்களைப் பற்றித்தான் எழுதி யிருக்கிறேன் என்று நினைத்துக் கொள்ளாதீர்கள். இதில் கண்டுள்ள எல்லா விஷயங்களும் கற்பனை. ஏன், 'நான்' கூடக் கற்பனைதான். ஆகவே ஏதோ, தங்களைப் பற்றித்தான் எழுதியுள்ளேன் என்று நினைத்துக் கோபித்துக் கொண்டு, அடுத்த வருஷம் புடவையும், வேஷ்டியும் அனுப்பாமல் இருந்து விடாதீர்கள்!]

இப்படி அவர் அனுப்பாததற்குக் காரணம், சென்ற தீபாவளியிலிருந்து அவர் என்மீது கோபம் கொண்டிருப்பதுதான். கோபத்துக்குக் காரணத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள்.

போன தீபாவளியன்று என் மாமனார் எனக்கு ஒரு வைர மோதிரம் "வாங்கிப் போட்டார்." அதாவது, தீபாவளிக்கு முந்தி ஒரு மாதம் இருக்கும், திடீரென்று ஒரு நாள் என்னைத் தேடிக் கொண்டு வந்தார்.

குசலப் பிரச்னம் ஆனதும் தம் பையில் இருந்து ஒரு நகைப் பெட்டியை எடுத்தார்! பெட்டியைத் திறந்தால் உள்ளே ஒரு வைர மோதிரம்! அந்த மோதிரம் வைக்கப் பட்டிருந்த 'ஜாஜ்வல்யமான நகைப் பெட்டி கண்ணைப் பறித்துக் கொண்டு போயிற்றென்றால், அந்த மோதிரத்தைப் பற்றி என்னத்தைச் சொல்ல? இந்தக் காலத்தில் நகைப் பெட்டியின் விலை மதிப்பைக் கொண்டு தானே நகையை மதிப்பிடுகிறார்கள்? இந்த ரீதியில், மோதிரம் (அதாவது பெட்டி உள்பட) மிகவும் விலை உயர்ந்ததாய் இருக்கவேண்டும் என்று ஊகித்தேன்.

மாமனார் மோதிரத்தையும், என்னையும் மாறி மாறிப் பார்த்தார். இதன் கருத்து என்னவென்று எனக்கு விளங்கவில்லை. "ஒன்றும் புரியவில்லையே!" என்னும் பாவனையில் முகத்தைச் சுளுக்கினேன்.

"என்ன மாப்பிள்ளை! மோதிரம் பிடித்திருக்கிறதா?"

"எனக்குப் பிடித்தால் என்ன, பிடிக்காவிட்டால் என்ன! யார் போட்டுக் கொள்ளப் போகிறார்களோ, அவர்களுக் கல்லவா பிடிக்கவேண்டும்?"

"அதே காரணத்தைக்கொண்டு தான் உங்களைக் கேட்கிறேன், பிடித்திருக்கிறதா இல்லையா என்று. மோதிரம் உங்களுக்குத்தான் மாப்பிள்ளை! தீபாவளியன்று கொடுப்பதற்காக வாங்கி வைத்திருக்கிறேன்."

"எனக்கா? ... மோதிரமா? ...... அதுவும் வைர மோதிரமா?...எதற்காக?" என்று மிகவும் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"என்ன மாப்பிள்ளை, இப்படி ஆச்சரியப்படுகிறீர்? கல்யாணத்தின் போது நான் உமக்குக் கொடுத்த வாக்குறுதி ஞாபகம் இல்லை?...மறந்து விட்டீரா, என்ன?"

"வாக்குறுதியா? தாங்கள் அளித்த வாக்குறுதியா? எது?" என்று திரும்பவும் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

ஏனெனில், "ஆயிரம் பொய் சொல்லி ஒரு தாலியைக் கட்டு" என்று ஒரு வசனம் சொல்வார்களே, அந்த வசனத்தில் என் மாமனாருக்கு மிகவும் நம்பிக்கை உண்டு. தாலியை சரசுவின் கழுத்தில் கட்டுவதற்கு. (சரசுவை என் கழுத்தில் கட்டுவதற்கு என்று சொன்னாலும் பொருந்தும். "இந்தாடியம்மா சரசு! இதைப் பார்த்துவிட்டு நீ அழ ஆரம்பித்து விடாதே! சும்மாக் கட்டுரைக் கோசரம் எழுதியிருக்கிறேன்.") அவர் ஆயிரம் பொய் அல்ல, பதினாயிரம் பொய்யே சொல்லி விட்டார். ஒரு வேளை தாலி, ஒன்றுக்குப் பத்தாகக் கெட்டியாக இருக்கட்டும் என்று தான் இப்படிச் செய்தாரோ, என்னமோ?

இப்படி அவர் சொன்ன பத்தாயிரம் பொய்களில் ஐயாயிரம் அப்பொழுது என் மனைவியாக வாய்க்க இருந்த, அதாவது இப்பொழுது என் மனைவியாக வாய்த்துள்ள, சரசுவின் ரூபலாவண்யங்கள், குண விசேஷங்கள், கல்வி, கேள்விகள் இவற்றைப் பற்றியது. மீதி ஐயாயிரம் அவர் எனக்குச் செய்யப்போகும் சீர் வரிசைகளைப் பற்றியது.

ஆனால் சரசுவின் கழுத்தில் தாலி ஏறினதும், அவர் எனக்குச் செய்த அத்தனை வாக்குறுதிகளையும் காற்றில் பறக்க விட்டுவிட்டார். நானும் கல்யாணம் என்றால் இப்படித்தான் பொய் சொல்வார்கள் போலும் என்று நினைத்து அவற்றை யெல்லாம் மறந்துவிட்டேன்.

ஆகவே என் மாமனார், இப்பொழுது, கல்யாணம் நடந்த இத்தனை வருஷங்களுக்குப் பிறகு, 'கல்யாணத்தின் போது கொடுத்த வாக்குறுதி" என்றதும் எனக்கு ஆச்சரியம் ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை.

நான் இப்படி ஆச்சரியப் பட்டது என் மாமனாருக்கு ஆச்சரியத்தை விளைவித்தது என்று பட்டது.

"என்ன மாப்பிள்ளை இப்படிக் கேட்கிறீர்? நான் கல்யாணத்தின் போது உங்களுக்கு வைர மோதிரம் போடுவதாகச் சொன்னேனே, ஞாபகம் இல்லை?" என்று கேட்டார்.

"ஹூஹூம். சொன்னேனா? ... சரி."

"அது தான் உங்களுக்காக வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். பிடித்திருக்கிறதா, பாரும்."

மோதிரத்தை எடுத்துப் பார்த்தேன். கண்ணுக்குப் பிடித்திருந்தது. மோதிர விரலில் போட்டுப் பார்த்தேன். விரலுக்கும் பிடித்திருந்தது.

மோதிரம் பிடித்திருந்தது என்றதும் மாமனார் பட்ட சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. என்னமோ, தமக்குத் தான் தம் மாமனார் வைர மோதிரம் வாங்கிப் போட்டது போல் அத்தனை சந்தோஷத்துடன் ஊர் திரும்பினார். ஆம், வைர மோதிரத்துடன் தான். வைர மோதிரத்தைப் பெற்றுக் கொள்வதற்காக, நானும், சரசுவும் அந்த தீபாவளிக்கு மாமனார் வீட்டுக்குப் போவதாக எங்களுக்குள் ஏற்பாடு.

என் மாமனார் அந்த வைர மோதிரத்தை எங்களிடம் காண்பித்தது தான் தாமதம், என் தம்பிக்கு உடனே தன் மாமனார் ஞாபகம் வந்துவிட்டது. உடனே அவன் அவருக்குச் சகஸ்ர நாம அர்ச்சனை செய்ய ஆரம்பித்து விட்டான். தனக்குத் தன் மாமனார் இம் மாதிரி வைர மோதிரம் போடாமல் தங்க மோதிரம் போட்டு ஏமாற்றி விட்டாரே என்று அவரை நொந்து கொண்டான். ஆனால் பார்க்கப் போனால், என் தம்பி, தன் மாமனார் மீது குற்றம் சாட்டுவது மிகவும் தவறு. ஏனெனில், உண்மையில் அவர் ஏமாற்றவில்லை. அவர் மிகவும் கண்டிப்புப் பேர் வழி. தங்க மோதிரம் தான் போடுவேன் என்று கண்டிப்பாகச் சொன்னார். அப்படியே தங்க மோதிரமே கண்டிப்பாகப் போட்டார். "ஆயிரம் பொய் சொல்லித் தாலியைக் கட்டவேண்டும்" என்ற விஷயம் என் மாமனாருக்குத் தெரிந்திருந்தது போல் அவருக்குத் தெரிந்திருக்கவில்லை.

வைர மோதிரத்தை எடுத்துக்கொண்டு மாமனார் ஊருக்குக் கிளம்பியதுதான் தாமதம், எப்பொழுது தீபாவளி வரப்போகிறது, எப்பொழுது நாம் அந்த வைர மோதிரத்தைக் கையில் அணியப் போகிறோம் என்று நான் நாட்களை எண்ண ஆரம்பித்து விட்டேன்!

கடைசியில் தீபாவளி வந்தது. ஆனால் வைர மோதிரம் வரவில்லை. அதாவது முதலில் காட்டிய வைர மோதிரம் வரவில்லை. அதற்குப் பதில் வேறு ஏதோ ஒரு வைர(?) மோதிரம் வந்தது.

தானம் கிடைத்த மாட்டைப் பல்லைத் திறந்து பார்க்கக்கூடாது என்று சொல்வார்கள். ஆனால் எனக்குக் கிடைத்தது மாடல்ல, மோதிர மாதலால் அதைச் சற்றுக் கண்ணை விழித்தே பார்த்தேன். மோதிரமும் என்னைப் பார்த்துப் பல்லை இளித்தது. முதலில் ஒரு நல்ல மோதிரம் காண்பித்து விட்டு, இப்பொழுது ஒரு மட்ட ரக மோதிரத்தை நம் தலையில் கட்டப் பார்க்கிறாரே என்று எனக்கு ஒரு கணம் இருந்தது. எதற்காக இப்படிச் செய்தார் என்றும் புரியவில்லை. ஒரு வேளை கல்யாணத்துக்காக அவர் சொன்ன பத்தாயிரம் பொய்களில் ஒன்று குறைந்து விட்டது என்று கணக்குப் போட்டுக் கண்டு பிடித்து, அதை ஈடு செய்யத் தீர்மானித்தாரோ, என்னவோ?



"மோதிரத்தைப் போட்டுக் கொள்ளுங்கள், மாப்பிள்ளை" என்றார் மாமனார். நானும் மோதிரத்தைப் போட்டுக் கொண்டேன். ஆனால் மோதிரத்தைப் போட்டுக் கொண்டதுதான் தாமதம், கையை இறுக மூடிக் கொண்டு விட்டேன்! "கல்யாணம் ஆச்சா?" என்று விசாரிப்பதற்காக மாமனாருடன் யார் யாரையோ போய்ப் பார்த்தேன். எல்லோரிடமும் மோதிரத்தைக் காண்பித்தேன். ஆனால் மூடின கையை மாத்திரம் திறக்கவேயில்லை.

இது விஷயம் என் கடைசி மச்சினனுக்குத் தெரிந்ததும், "அத்திம்பேர் கையில் ஏதோ ஒளித்து வைத்திருக்கிறார்" என்று வீடு முழுவதும் தகவல் பரப்பி விட்டான். என் மாமனார் வந்து பார்த்தார். நான் கையை மூடிக் கொண்டுதான் இருந்தேன். என் மாமியார் வந்து பார்த்தாள். அப்பொழுதும் நான் மூடின கையைத் திறக்கவேயில்லை. பிறகு என் மச்சினன்மார்கள் எல்லாரும் ஒவ்வொருவராக வந்து பார்த்தார்கள். சிலர் என் மூடின கையைத் திறந்து, அதில்

புத்தம் புதிய புதுமைச் சித்திரம்!
இன்றைய ரஸிகரை இன்பப்படுத்துவது

தீபாவளித் திருநாளில்

திரைக்கு வந்துவிட்டார்

# திவான் பகதூர்

டைரக்ஷன் T.R.சுந்தரம் B.A.BSC(LEEDS)

## மாடர்ன் தியேட்டர்ஸ் லிமிடெட்

மதுரை :: சேலம்

என்ன ஒளித்து வைத்திருக்கிறேன் என்று பார்த்து விடுவது என்றும் பிரயத்தனப்பட்டார்கள். ஆனால் நான் கையைத் திறக்கவே யில்லை. இதைப் பார்த்து விட்டு, என் மாமனாரும், மாமியாரும் தங்களுக்குள் குசு, குசு என்று பேசிக் கொண்டார்கள்.

"என்ன, மாப்பிள்ளை உங்களுக்கென்று ஏதோ சாமான் கொண்டு வந்து, அதைக் கையில் ஒளித்து வைத்திருக்கிறார் போலிருக்கே!" என்றாள் மாமியார்.

"ஆமாம், எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால், அது என்னவென்று தான் தெரியவில்லை" என்றார் மாமனார்.

"என்ன, அது என்ன என்று தான் மாப்பிள்ளையைக் கேளுங்களேன். ஒரு வேளை சொல்வதற்குச் சங்கோஜப் பட்டுக் கொண்டிருக்கிறாரோ, என்னமோ!"

உடனே மாமனார் என்னைத் தேடிக்கொண்டு வந்தார்.

"என்ன மாப்பிள்ளை! கையில் என்னமோ மூடி வைத்துக்கொண்டிருக்கிறீர்களே, என்ன?" என்று கேட்டார்.

"ஒன்று மில்லையே!"

"என்ன மாப்பிள்ளை, என்னைக் காதுகுத்துகிறீர்? எனக்குத் தெரியாது என்று நினைத்தீரா, என்ன? ஏதோ சாமான் எனக்கென்று கொண்டு வந்திருக்கிறீர். அதை ஒளித்து வைத்திருக்கிறீர், இல்லாவிட்டால் காலையிலிருந்து இப்படிக் கையை மூடிக் கொண்டிருப்பீரா?"

கையில் ஒன்றும் இல்லை என்று நான் என்ன சொல்லியும், மாமனார் கேட்கவில்லை. ஆகவே கடைசியில் கையைத் திறந்தே காண்பித்து விடுவது என்று தீர்மானித்துக் கையைத் திறந்தேன். பொத்தென்று மோதிரம் கீழே விழுந்தது.

"பார்த்தேனா! இத்தனை நாழி ஒன்றும் இல்லை என்று பொய் தானே சொன்னீர்? ஏது, எனக்கு நீங்கள் ஒரு மோதிரம் வாங்கிக் கொண்டு வந்திருக்காப் பலே இருக்கே! எதற்காக மாப்பிள்ளை எனக்கு மோதிரம்?" என்று சொல்லிக் கொண்டே மாமனார் அந்த மோதிரத்தைக் கையில் எடுத்துப் பார்த்தார்.

மோதிரத்தைக் கையில் எடுத்துப் பார்த்ததும், ஏமாற்றத்தால் மாமனாரின் முகம் கறுத்தது. பொத்தென்று கீழே விழுந்த அந்த மோதிரம் தாம் அன்று எனக்குப் போட்டதுதான் என்று கண்டார். மோதிரம் என் கட்டை விரலுக்கும் பெரியது என்றும், அது கீழே விழாமல் இருப்பதற்காகத் தான் நான் காலையிலிருந்து கையை அத்தனை இறுக மூடிக் கொண்டிருந்தேன் என்றும் உணர்ந்தார்.

"பரவாயில்லை மாப்பிள்ளை! மோதிரத்தைச் சின்னது பண்ணிக் கொடுக்கிறேன்" என்று மோதிரத்தை எடுத்து வைத்துக் கொண்டார்.

தீபாவளி கழிந்தது. நானும் ஊருக்குத் திரும்பினேன். ஊருக்குத் திரும்பி ஒரு மாத காலமும் ஆயிற்று. ஆனால் மோதிரம் சின்னது பண்ணி வரயில்லை.

ஆனால் என் தாயாருக்கோ பிள்ளை மொண்டியாக் கையாய் இருக்கிறானே என்று வருத்தம். அதற்காகச் சம்பந்தி அம்மாளுக்கு வரிந்து வரிந்து கடிதம் போட்டுக் கொண்டே இருந்தாள். இதற்கு என் மாமனார் எனக்குப் பதில் போட்டுக் கொண்டே இருந்தார். என் மாமனார் போட்ட கடிதங்களிலிருந்து அவர் வீட்டுத் தட்டான் தட்டார வேலையைத் தவிர பாக்கி எல்லா வேலைகளையும் ஒழுங்காகச் செய்து கொண்டு இருப்பதாகப் பட்டது.

தீபாவளி கழிந்து இரண்டு மாதம் இருக்கும். ஒரு நாள் மாமனார் என் வீட்டுக்கு வந்தார். வந்ததும், வராததுமாக, "மாப்பிள்ளை! கையை நீட்டும்" என்றார்.

"ஏன், ஏதாவது ரேகை சாஸ்திரம் கற்றுக் கொண்டு வந்திருக்கிறீரா, என்ன?" என்று கேட்டேன்.

"கையை நீட்டுமே, சொல்றேன்" என்றார். கையை நீட்டினேன். கையில் ஒரு தங்க மோதிரத்தைப் போட்டார்.

மோதிரம் யாரோ குழந்தை கைக்குச் செய்யப் பட்டது போல் இருந்தது. "என்ன, உங்கள் கடைசி பையனுக்கு மோதிரம் வாங்கிக்கொண்டு வந்திருக்காப் பலே இருக்கே?" என்று கேட்டேன்.

"உமக்குத்தான் மாப்பிள்ளை, மோதிரம்! முன்பு கொடுத்ததைச் சின்னது பண்ண முடியவில்லை. அதற்காக இதை வாங்கிக் கொண்டு வந்தேன்" என்றார்.

ஆனால் மோதிரம் என் சுண்டு விரலுக்குக் கூட நுழைய மறுக்கவே மோதிரத்தைப் பெரியது பண்ணிக் கொண்டு வருகிறேன் என்று புறப்பட்டார். ஆனால் அவர் தட்டான் விவகாரம்தான் தெரிந்தது ஆச்சே? ஆகவே இதைப் பெரியது பண்ண முடியவில்லை. அதற்குப் பதில் தங்க மோதிரம் தங்கமுலாம் மோதிரமாக மாறியது. அப்படியாவது கைக்குச் சரியாக இருந்து தொலைந்ததா? கட்டை விரலுக்கும் பெரிதாய் இருந்தது.

"பரவாயில்லை, மாப்பிள்ளை! சின்னது பண்ணிக் கொண்டு வருகிறேன்" என்று மாமனார் திரும்பவும் புறப்பட்டார்.

மோதிரம் சின்னதாகி வராது. அதற்குப் பதில் தங்கமுலாம் மோதிரம் வெள்ளி மோதிரமாக மாறும். அப்படி மாறினாலும் கைக்குச் சரியாக இருக்காது. சின்னதாக இருக்கும் என்று எனக்குத் தெரியாதா, என்ன?

"ஆமாம் வைர மோதிரம், போலி வைர மோதிரமாக மாறிற்று. போலி வைர மோதிரம் தங்க மோதிரமாக மாற்று. தங்க மோதிரம் தங்க முலாமாக மாறிற்று. இப்பொழுது தங்க முலாம் என்னவாக மாறப் போகிறது?" என்று கேட்டேன்.

ஆனால் மாமனார் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. அதற்குப்பதில் கோபித்துக்கொண்டு ஊருக்குக் கிளம்பி விட்டார் — மோதிரம் சகிதமாகத்தான்.

அந்தக் கோபத்தில் எனக்குக் கடிதம் போடுவதை நிறுத்தினார். வழக்கமாகத் தீவளிக்குத் தீவளி அனுப்பிக் கொண்டிருந்த புடவை, வேஷ்டியையும் நிறுத்தினார்.

இதனால் புடவையும், வேஷ்டியும் நஷ்டமாய் விட்டதே என்றுகூட எனக்கு வருத்தமில்லை. ஆனால் எங்கே மாமனார் ஞாபகம் மறந்து விடப் போகிறதோ என்று தான் வருத்தமாய் இருக்கிறது. ஏனெனில், முன்பு அவர் புடவையும், வேஷ்டியும் அனுப்பிக் கொண்டிருந்த காலத்தில் எனக்கு எப்பொழுதும் என் மாமனார் ஞாபகம்தான்! "வேஷ்டி வாங்கிக் கொடுத்திருக்கிறாரே, முரடக் கட்டை யாட்டம்! புடவை வாங்கிக் கொடுத்திருக்கிறாரே, மூஞ்சி யாட்டம்" என்று வருஷம் முழுவதும் அவர் பெயரையே ஸ்மரணை பண்ணிக் கொண்டிருப்பேன்.

இப்பொழுதும் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. தம் கோபத்தை மறந்து, வழக்கம்போல், அவர் புடவையும், வேஷ்டியும் அனுப்பினாரானால் நான் கட்டிக் கொள்ளத் தயார். வழக்கம் போலவே அவர் 'ஞாபகமாகவும்' இருக்கத் தயார்!

டெலிபோன் : 3851 தந்தி : "ஸிரப்"

# K. N. சாரி & கோ.,

**வர்ணம், இரும்பு சாமான் வியாபாரிகள்,**

144, நைனியப்ப நாய்க்கன் தெரு,

**பார்க் டவுன் :: மதராஸ்.**



தங்களது தேவைக்கு இன்றே எழுதவும்.

# மைசூர் பிரிமியர் மெடல் பாக்டரி

**124, தங்கசாலை வீதி, சென்னை.**



தினந்தோறும் லட்சக் கணக்கான மக்களால் உபயோகித்து வரும் பித்தளை பாத்திரங்களில் நட்சத்திரமாய் விளங்குவது "சன் பிராண்ட்" பாத்திரங்களே என்பது யாவரும் அறிந்த விஷயமே. இவை கைதேர்ந்த வேலையாட்களால் சுகாதார முறையில் தற்கால நாகரீகத்திற் கேற்றவாறு பலவித ரகங்களில் தயார் செய்யப்பட்டு வருகின்றது. இதுவரை வாங்கி உபயோகிக்காதவர்கள் இன்றே வாங்கி ஆனந்த மடையுங்கள்.

எங்கள் மற்ற ஸ்பெஷல் ரகங்கள் : வெள்ளிக்கு சமானமான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல், ஜெர்மன் ஸில்வர், செம்பு பாத்திரங்களும் விதவிதமாக விற்கப்பட்டு வருகின்றன. உங்களது தேவைக்கு இன்றே மேல் கண்ட விலாசத்திற்கு விஜயம் செய்யுங்கள்.



# THE MYSORE PREMIER METAL FACTORY

GRAM: SUNBRAND.] 124, MINT STREET :: MADRAS [PHONE: 2535

# காட்டில் தீபாவளி

☆ "ராஜி" — "சாமா" ☆

## யானைக் குட்டிகளின் மாமா

கஜபதி, கஜமுகன் என்று பெயருள்ள இரண்டு யானைக் குட்டிகள் ஒரு காட்டில் தங்கள் தகப்பனார் தாயாருடன் வசித்து வந்தன. தீபாவளி நெருங்கி விட்டது. இரண்டே நாட்கள்தான் இருந்தன. அப்பொழுது அவைகளின் தகப்பனார், "குழந்தைகளே! உங்கள் மாமா கடிதம் எழுதியிருக்கிறார், நாளைக் காலையில் இங்கு வருவதாக. பக்கத்து வயற் காட்டுக்கு ஏதோ ஆபீஸ் காரியமாக வருகிறாராம். அப்படியே இங்கு தம் சிநேகிதர்களுடன் வருவதாக எழுதியிருக்கிறார். உங்களை மிகவும் விசாரித்திருக்கிறார். வரும்பொழுது உங்களுக்கு வெடிகள், மத்தாப்புகள், புது வேஷ்டிகள் எல்லாம் வாங்கிக் கொண்டு வருவதாகவும் எழுதியிருக்கிறார். உங்களுக்கு உங்கள் மாமாவைத் தெரியாவிட்டாலும் உங்களிருவரையும் அவருக்கு நன்றாகத் தெரியும்" என்று சொல்லிற்று.

கஜபதிக்கும் கஜமுகனுக்கும் அன்று இரவு தூக்கமே பிடிக்கவில்லை. எப்பொழுது பொழுது விடியும், எப்பொழுது தங்கள் மாமாவைப் பார்க்கலாம் என்று எண்ணியபடியே இருந்தன.

மறுநாள் காலை வெகு நேரம் ஆகியும் மாமா வருவதாகக் காணோம். "தம்பி! நாம் இங்கிருப்பதைவிட இந்த சாலை வழியே போய்க் கொண்டிருந்தால் ஒருவேளை மாமாவைச் சந்திக்





கலாம்" என்றது கஜபதி. உடனே இரண்டு யானைக் குட்டிகளும் அப்பாவுக்குத் தெரியாமல் மெதுவாக மாமாவை எதிர்கொண்டு அழைக்கச் சென்றன.

**வீ**ட்டை விட்டு யானைக் குட்டிகள் வெகு தூரம் வந்து விட்டன. இரண்டுக்கும் பசிக்க ஆரம்பித்து விட்டது. அவைகளுக்கு மாமாவைப் பார்க்காமல் வீட்டுக்குத் திரும்புவதற்கும் இஷ்டமில்லை. பசிக்கு என்ன செய்வது என்று யோசனை செய்து கொண்டிருக்கும் சமயத்தில் யானைக் குட்டிகளின் கண்கள் நன்றாகப் பழுத்துத் தொங்கின வாழைக் குலையின்மீது சென்றன.

"அந்த வாழைப் பழங்களை நாம் சாப்பிட்டால் என்ன?" என்றது கஜபதி.

"ஓ! சாப்பிடலாம்" என்றது கஜமுகன்.

இரண்டு யானைக் குட்டிகளும் காண்டாமிருகத்தின் தோட்டத்தருகில் சென்றன. சாலைப் பக்கமாகவே நின்றுகொண்டு கஜபதி மெதுவாகத் தன் துதிக்கையை நீட்டி வாழைக் குலையைத் தொட்ட போது, "ஏ, கஜபதி! ஏ, கஜமுகன்!" என்று குரல் கேட்டது. கஜமுகனும் கஜபதியும் நடுங்கிப் போய்த் திரும்பிப் பார்த்தன. அப்பொழுது அவைகளுக்கு அருகில் போலீஸ் இன்ஸ்பெக்டர் யானையார் இருப்பது தெரிந்தது. போலீஸ் இன்ஸ்பெக்டரின் பக்கத்தில் இரண்டு யானைப் போலீஸ் சேவகர்கள் நின்று கொண்டிருந்தனர். போலீஸ் இன்ஸ்பெக்டர் "கஜபதி, கஜமுகன்" என்று கூப்பிட்டவுடன் அவைகளின் திருட்டுத்தனம் வெளியாகி விட்டது என்று தெரிந்து கொண்டன. போலீஸாரிடமிருந்து தப்பித்துக் கொள்ள ஓடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று தீர்மானித்து, கஜபதியும் கஜமுகனும் எடுத்தன ஓட்டம்!

ஆனால் போலீஸ் இன்ஸ்பெக்டர் யானையார் கஜபதியையும் கஜமுகனையும் விட்டுவிடுவாரா? "ஏ! 110, ஏ! 118, பயந்து ஓடும் இரண்டு யானைக் குட்டிகளையும் பிடித்துக் கொண்டு வாருங்கள்!" என்று போலீஸ் சேவகர்களுக்கு உத்தரவிட்டது.

பாவம், யானைக் குட்டிகள் இரண்டும் என்ன செய்யும்? "அப்பொழுதே நான் சொல்லவில்லையா? அந்தப் பழங்கள் வேண்டாம் என்று சொல்லியும் நீ கேட்கவில்லை" என்றது கஜமுகன். "அதைப் பற்றிப் பேசி இப்பொழுது என்ன பிரயோஜனம்? அதோ போலீஸ் சேவகர்கள் நம்மைப் பின்தொடர்ந்து வருகிறார்கள்! வா, வேகமாக ஓடி வா!" என்றது கஜபதி.

கஜபதியும் கஜமுகனும் வேர்க்க விறுவிறுக்க வேகம் வேகமாக ஓடின. போலீஸ் சேவகர்கள் யானைக் குட்டிகளைத் துரத்த ஆரம்பித்தனர். போலீஸ் சேவகர்கள் துரத்துவதும் யானைக் குட்டிகள் விழுந்தடித்துக் கொண்டு ஓடுவதும் பார்ப்பவர்களுக்கு ரொம்ப ரொம்ப வேடிக்கையாக இருந்தது.

**மா**லை ஆறு மணி இருக்கும். யானைக்குட்டிகள் காடு முழுவதும் சுற்றிச் சோர்வு அடைந்திருந்தன. போலீஸ் சேவகர்கள் தங்களைப் பின் தொடர்ந்து வருகிறார்களா என்று திரும்பிப் பார்த்தன. அப்பொழுது போலீஸ் சேவகர்கள் யானைக் குட்டிகள் போன பக்கம் தெரியாமல் வேறு பக்கம் நோக்கி ஓடிக் கொண்டிருந்தனர். அதைக் கண்ட யானைக் குட்டிகள், "அப்பாடா, பிழைத்தோம்!" என்று துதிக்கைகளினால் தங்கள் வயிற்றைத் தடவிக் கொண்டன.

அப்பொழுதுதான் யானைக் குட்டிகளுக்கு வீட்டு ஞாபகம் வந்தது. தங்கள் தகப்பனாரும் தாயாரும் தங்களைத் தேடிக்கொண்டிருப்பார்களோ என்று கவலைப்பட்டன. ஒரு வேளை மாமா வீட்டுக்கு வந்திருந்தாலும் வந்திருக்கலாம் என்று நினைத்தன. எது எப்படி இருந்தாலும் மெதுவாக வீட்டுக்குப் போய்விட வேண்டும் என்று நிச்சயித்துத் தள்ளாடிக் கொண்டே வீட்டுப் பக்கம் திரும்பின.

வீட்டுக்குச் சமீபத்தில் வந்து கொண்டிருந்த யானைக் குட்டிகளின் முகம் திடீரென்று மாறுதல் அடைந்தது. "அதோ பார்த்தாயா? அப்பாவிடம் யார் பேசிக்கொண்டிருக்கிறார் என்று பார்!" என்றது கஜபதி. "பேசிக் கொண்டிருப்பது, நாம் பார்த்தோமே போலீஸ் இன்ஸ்பெக்டர், அவர் அல்லவா?" என்றது கஜமுகன்.

அப்பொழுது "கஜபதி, கஜமுகன்! இங்கு வாருங்கள்! என்ன யோசிக்கிறீர்கள்?" என்று அப்பா கேட்கவே, இரண்டு யானைக் குட்டிகளும் நடுங்கிக்கொண்டே தகப்பனாரை நெருங்கின. உடனே தகப்பனார், "இவர் யார் தெரியுமா? இவர்தான் அனந்தக் காட்டில் போலீஸ் இன்ஸ்பெக்டராக இருக்கும் உங்கள் மாமா! உங்களைப் பார்த்துத் தெரிந்து கொண்டு உங்களைக் கூப்பிட்டால் நீங்கள் இருவரும் எங்கெல்லாமோ ஓடிப் போய்விட்டு வருகிறீர்களே!" என்று சொன்னவுடன், யானைக் குட்டிகளுக்குத் தைரியம் வந்தது. கஜமுகனும் கஜபதியும் தாங்கள் ஏமாந்ததை வெளியில் சொல்லாமல் "மாமா! மாமா!" என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் மாமாவைக் கட்டிக் கொண்டன.

"அதோ பார்த்தீர்களா?" என்று மாமா யானை ஒரு பெட்டியைச் சுட்டிக் காண்பித்தது. இரண்டு யானைக் குட்டிகளும் ஓடோடியும் சென்று பெட்டியைத் திறந்து பார்த்தன. அவைகளுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. பெட்டியில் இருந்த வஸ்துக்கள் என்னவென்று நினைக்கிறீர்கள்? சீன வெடி, ஒத்தை வெடி, இரட்டை வெடி, யானை வெடி, மத்தாப்பு, புது வஸ்திரங்கள் இவைகள்தான்! பெட்டியைச் சுற்றிச் சுற்றி யானைக் குட்டிகள் குதூகலமாய்க் குதித்துக் கொண்டு வந்தன. கஜமுகனும் கஜபதியும் இந்த வருஷத் தீபாவளியை மாமாவுடன் சேர்ந்து மிகவும் விமரிசையாகக் கொண்டாடின.



# கரடியின் தலைதீபாவளி




தன் மாமனாரிடமிருந்து தலை தீபாவளிக்கு அழைப்புக் கடிதம் வந்தவுடன் கரடிக்கு மிகவும் சந்தோஷம் உண்டாயிற்று. "உங்களை அவசியம் எதிர்பார்க்கிறேன்" என்று தன் மனைவி எழுதிய குறிப்பைப் பார்க்க அதற்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தன் மனைவிக்காக நிறைய ரிப்பன்கள், சோப்புகள், புது நிறுகப் புடைவைகள் எல்லாம் வாங்கிக் கொண்டு தன் தோழனுடன் மாமனார் வசிக்கும் காட்டிற்குப் புறப்பட்டது.

கரடியின் மனைவியும் தன் புருஷன் வருவதை முன்னிட்டு உயர்ந்த புடவைகளால் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு தன் முகத்தையும் அழகு படுத்திக் கொண்டது. தன் புருஷன் வருகிறாரா என்று வாசலில் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. மாலை ஏழு மணி இருக்கும். அப்பொழுது அதன் தோழிகள் ஓடோடியும் வந்து "அதோ வண்டியில் உன் புருஷர் வருகிறார்!" என்று சொன்னதுதான் தாமதம், பெண் கரடி வெட்கப்பட்டுக் கொண்டு ஒரே ஓட்டமாக உள்ளே ஓடிற்று.

தன் புருஷன் தன்னைப் பார்ப்பதற்குள் தன் அழகை ஒரு தரம் நிலைக் கண்ணாடியில் பார்க்க வேண்டுமென்று அதற்கு ஆசையாயிருந்தது. பெண் கரடியின் கலியாணத்தின் பொழுது அதன் தகப்பனாரும் தாயாரும் அதற்கு ஸ்திரீதனமாக ஒரு நிலைக் கண்ணாடி வைத்த மேஜையை வாங்கிக் கொடுத்திருந்தார்கள்.

விளக்கு வெளிச்சத்தில் தன் புடைவையின் பளபளப்பை ஒரு முறை பார்த்துவிட்டுச் சந்தோஷமாகக் கண்ணாடியின் அருகில் நெருங்கிற்று. நெருங்கிக் கண்ணாடியை எட்டிப் பார்த்ததுதான் தாமதம், 'ஓ!' வென்று அலறிக்கொண்டு உள்ளே ஓடிற்று. தன் முகத்தைத் துணியால் மூடிக் கொண்டு கட்டிலில் படுத்துக்கொண்டு விம்மி, விம்மி அழுதது. "ஏன் அம்மா இப்படி அழுகிறாய்? கொஞ்சம் சாவதானமாக விஷயத்தைச் சொல்லேன். ஏன் முகத்தை நாணும் இறுமையுமாகத் துணியால் மூடிக்கொண்டு அழுகிறாய்?" என்று கரடியின் தாயார் பதறிக் கேட்டது.

"என் முகத்தை எவ்வளவு அழகு பண்ணியும் என்ன பிரயோசனம்? நிலைக் கண்ணாடியில் பார்த்தேன். அவர் இங்கு வரும் பொழுதா என் முகம் இப்படிக் குரங்கு முகமாக மாறவேண்டும்?" என்று சொல்லி விம்மி விம்மி அழத் தொடங்கியது.

"இதென்ன கூத்து?" என்று தாயார்க் கரடி நிலைக்கண்ணாடி அருகில் போய் எட்டிப் பார்த்தது. பார்த்ததுதான் தாமதம், அதுவும் 'ஓ' வென்று அலறிக் கொண்டு வந்தது. "அம்மா, அம்மா! உன் முகமும் அப்படித்தா னிருக்கிறதா?" என்று பெண் கரடி கேட்டது.

"ஆமாண்டி! நான் என்ன செய்வேன்?" என்று சொல்லிக்கொண்டே தாயார்க் கரடியும் விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டது.

தன் மனைவியும் பெண்ணும் விம்மி விம்மி அழும் சத்தத்தைக் கேட்ட தகப்பனார்க் கரடி உள்ளே ஓடி வந்தது. தன் மனைவியும் பெண்ணும் முகத்தில் துணியை மூடிக்கொண்டு அழுவதைப் பார்த்துத் திடுக்கிட்டது. "என்ன சமாசாரம்? சொல்லி விட்டு அழுங்கள்! முதலில் முகத்திலுள்ள துணியை எடுங்கள்!" என்றது. தாயார்க் கரடியும், பெண் கரடியும் நடந்த சமாசாரங்களை ஒன்று விடாமல் சொல்லின.

"நீங்கள் இருவரும் ஏதோ ஏமாந்திருக்கிறீர்கள். இதோ நான் போய் அந்த நிலைக் கண்ணாடியைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு தகப்பனார் கரடி உள்ளே சென்றது. அடுத்த நிமிஷத்தில் அதுவும் துணியை முகத்தின்மேல் மூடிக் கொண்டு பெரிதாக அழுது கொண்டே வெளியே வந்தது.

தலை தீபாவளிக்காக வந்த மாப்பிள்ளைக் கரடி ஏக காலத்தில் தன் மாமனார், மாமியார், மனைவி எல்லாரும் முகத்தை மூடிக்கொண்டு அழுவதைப் பார்த்துத் திகைத்து நின்றது. "என்ன சமாசாரம் சொல்லுங்கள்!" என்று கேட்டவுடன், மாமா கரடியும் மாமியார்க் கரடியும் ஏக காலத்தில் விஷயத்தைச் சொன்னார்கள்.

"நிலைக் கண்ணாடியைப் பார்க்கவாவது, உங்கள் முகம் குரங்கு முகமாக மாறவாவது! வேடிக்கையாக இருக்கிறதே! இதோ நான் போய் அந்த நிலைக் கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துவிட்டு வரு

கிறேன்!" என்று சொல்லி மாப்பிள்ளைக் கரடி சென்றது. நிலைக் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தவுடன் மாப்பிள்ளைக் கரடிக்கும் தூக்கி வாரிப் போட்டது. ஏன் என்றால் அதன் முகமும் குரங்கின் முகம்போல் தோன்றியது. இதில் ஏதோ சூது இருக்க வேண்டு மென்று மாப்பிள்ளைக் கரடி சற்று நிதானித்தது. தன் முகம் கரடியின் முகம் மாதிரி இருக்கிறதா குரங்கின் முகம் மாதிரி இருக்கிறதா, என்று தன் முகத்தைத் தடவிக் கொடுத்துக் கொண்டது.



அப்பொழுது நிலைக்கண்ணாடியில் தெரிந்த குரங்கின் முகம் சிரித்தது. "என்ன மாப்பிள்ளை, யோசிக்கிறீர்கள்" என்று சொல்லிக் கொண்டே அவ்வளவு நேரமாய் கண்ணாடிக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்த குரங்கு கரடியின் அருகில் "தொப்" என்று குதித்தது! "அடாடா, நீ இவ்வளவு நேரம் இங்கே இருந்திருக்கிறாயா? நன்றாக இருக்கிறது! நீ இங்கு எப்படி வந்தாய்?" என்று சொல்லிக் கொண்டே அந்தக் குரங்கை அறைக்கு வெளியில் அழைத்து வந்தது மாப்பிள்ளைக் கரடி.

உடனே குரங்கு "மாப்பிள்ளை ஸார், மன்னிக்க வேண்டும். வண்டியை விட்டு இறங்கியவுடன் உங்களுக்கு முன்னால் வந்து உங்கள் மனைவியைப் பார்க்க வேண்டும் என்று ஆசை எனக்கு உண்டாயிற்று. உடனே ஓட்டின் வழியாக உள்ளே வந்தேன். அப்பொழுது இங்கு ஒருவரும் இல்லை. உங்கள் மனைவி இந்த அறையில் இருப்பாள் என்று எண்ணி மெதுவாக அறைக்குள் வந்தேன். அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்ததே தவிர, வேறு ஒருவரையும் காணோம். என் முகத்தின் அழகைப் பார்க்கலாம் என்று கண்ணாடியில் எட்டிப் பார்த்தேன். பார்த்தவுடன் எனக்கே தூக்கி வாரிப்போட்டது. என் முகம் அவ்வளவு விகாரமாக இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. உடனே கண்ணாடியின்மேல் எனக்குக் கோபம் வந்தது. இரண்டு குத்துக்கள் கண்ணாடியின்மீது விட்டேன்! கண்ணாடி பல துண்டுகளாகச் சுக்கு நூறாகக் கீழே விழுந்தது. உடனே யாராவது ஏதாவது சொல்லப் போகிறார்கள் என்று பயந்து, கண்ணாடித் துண்டுகளை யெல்லாம் பொறுக்கி ஜன்னலுக்கு வெளியே வீசி எறிந்துவிட்டேன். கண்ணாடி இருந்த இடத்தில் சட்டங்கள்தான் பாக்கி இருந்தன. அப்பொழுது அறையில் யாரோ வருவது போல் சத்தம் கேட்டது. உடனே மேஜைக்குப் பின்னால் ஒளிந்துகொண்டேன். பிறகு யார் அறையில் வந்திருக்கிறார்கள் என்று பார்ப்பதற்கு நிலைக் கண்ணாடி இருந்த இடத்திலிருந்து எட்டிப் பார்த்தேன்! நான் பார்த்ததும் உங்கள் மனைவி நிலைக் கண்ணாடியில் தன் முகத்தின் அழகைப் பார்க்க வந்ததும் ஒரே சமயமாக இருந்தபடியால் தன் முகம் குரங்கின் முகமாக மாறி விட்டது என்று எண்ணி 'ஓ'வென்று அலறிக் கொண்டு அறையை விட்டு வெளியே சென்றாள். நான் அறையிலிருந்தும் தப்பித்துக் கொள்ள இதுதான் சமயம் என்று எண்ணி வெளியே போகக் கிளம்பியபோது உங்கள் மாமனாரும் மாமியாரும் வந்து விட்டார்கள். நான் அவர்களைப் பார்ப்பதற்காக முன்போல் நிலைக் கண்ணாடி இருந்த இடத்திலிருந்து எட்டிப் பார்த்தேன். அவர்களும் தங்களது முகம் குரங்கின் முகமாக மாறிவிட்டது என்று எண்ணி அலறிக்கொண்டு ஓடினார்கள். பிறகு நீங்களும் வந்து கண்ணாடியில் எட்டிப் பார்த்தீர்கள்! நான் என்ன செய்யட்டும்?" என்றது.

இதைக் கேட்டதும், மாப்பிள்ளைக் கரடி அழுவதா சிரிப்பதா என்று தெரியாமல் திகைத்துப் போய் நின்றது.

"போதும், போதும். மாப்பிள்ளைத் தோழனாகக் குரங்கைத் தவிர வேறு ஒருவரும் உங்களுக்கு அகப்படவில்லையா? சரி, சரி! உள்ளே வாருங்கள்" என்று பெண் கரடி கூப்பிட்டதுதான் தாமதம், மாப்பிள்ளை தன் மனைவியைத் தொடர்ந்து சென்றது.

"என் முகம் என்ன அவ்வளவு கேவலமாகவா இருக்கிறது?" என்று சொல்லிக்கொண்டே கோபத்துடன் குரங்கு வாசற் பக்கம் வந்தது!

நாம் மிருகங்களிடம் அன்பா யிருக்கலாம்........ ஆனால், மிருகங்கள் நம்மிடம் அன்பா யிருக்குமா ?





# தீபாவளி வாழ்த்துக்கள்

★

## தி டெல்லி க்ளாத் & ஜெனரல் மில்ஸ் கம்பெனி லிமிடெட்., டெல்லி.

★

பணத்தின் முழுப் பொருமானத்தையும் தரும் பருத்தி ஆடைகள் **டி.ஸி.எம்.**

★

ஷர்டிங்குகள், ஸூட்டிங்குகள், புடவைகள், வேஷ்டிகள், மேஜை விரிப்புகள், நாப்கின் துண்டுகள், படுக்கை-விரிப்புகள், டவல்கள்

*மற்றும்*

பல ரகங்களில் அழகிய சோபா முதலிய தளவாடங்களுக்கு அலங்காரத் துணி வகைகள்.



# தீபாவளிப் பண்டிகை—என்றைக்குமே

தீபாவளி — பெரும் கொண்டாட்ட நாள் — தீப மகோற்சவம் பாரத நாடு பூராவுமே லக்ஷக்கணக்கான ஜனங்கள் உவந்து கொண்டாடும் பண்டிகை! இந்த சந்தோஷ அவசரத்தில் டாடா ஆயில் மில்ஸ் கம்பெனியார் தங்கள் நேயர்களுக்கு மங்கள வாழ்த்துக் கூறுவதுடன் தேச சேவையே எப்பொழுதும் கம்பெனியின் நோக்க மென்பதையும் திரும்பவும் உறுதியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள்.

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி
லிமிடெட்.



# கைலாசமய்யர் காபரா

ரா.கி.

எத்தனையோ பயந்த சுபாவமுடையவர்களை நீங்கள் பார்த்திருக்கலாம். ஆனால், கைலாசமய்யரைப் பார்க்காத வரையில், சரியான பயந்த சுபாவத்தை நீங்கள் பார்த்ததாகச் சொல்ல முடியாது. பயப்படுகிற விஷயத்தில் அவரை மிஞ்சக் கூடியவர் யாருமில்லை. ஒரு சமயம் அவர் வீட்டு வாசலில் தேசியத் தொண்டர்கள் "அச்சமில்லை அச்சமில்லை" என்று பாடிக் கொண்டு போனார்கள். அந்தப் பயங்கரமான சத்தத்தைக் கேட்டுக் கைலாசமய்யர் பயந்து கட்டிலிலிருந்து கீழே விழுந்து காலை ஒடித்துக் கொண்டார்!

மற்றொரு சமயம், அவர் தமது மேஜையில் உட்கார்ந்து எழுதப் போனவர், திடீரென்று "பாம்பு!" "பாம்பு!" என்று அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருந்தார். எல்லாரும் கம்பும் கையுமாய் ஓடி வந்து "எங்கே பாம்பு?" என்று கேட்டார்கள். "அதோ! மேஜை மேலே!" என்றார். மேஜை மேல் பாம்பைக் காணோம். அப்புறம் கிட்ட நெருங்கிப் பார்த்தபோது, மேஜை மேல் கிடந்த ஒரு துண்டுக் காகிதத்தில் "பாம்பு" என்று எழுதியிருந்தது தெரிந்தது. இந்த வேலை செய்தது யார் என்று விசாரித்ததில், கைலாசமய்யருடைய ஏழு வயதுப் பையன் மணி விஷமத்துக்காக அப்படி எழுதி வைத்திருந்தான் என்று வெளியாயிற்று. பாம்பை அடிக்க வேலைக்காரன் கொண்டு வந்த தடியைக் கைலாசமய்யர் பிடுங்கிக் கொண்டு பையனை அடிக்கப் போனார். நல்ல வேளையாக, அந்த சமயம் ஜோஹுரா பீகம் வந்து குறுக்கிட்டதால் பையன் பிழைத்தான்!

ஜோஹுரா பீகம் என்றதும், சில பேருக்குச் சுவாரஸ்யம் தட்டலாம். ஏதோ இந்தக் கதையில் நவாபுகளும், அவர்களுடைய அந்தப்புரத்து அழகிகளும் வரப் போகிறார்கள் என்று நினைக்கலாம். அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. கைலாசமய்யருக்கு வடக்கத்தி ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் அதிகப் பிரியம். "பயமில்லாமல் கேட்கக் கூடியது ஹிந்துஸ்தானி சங்கீதந்தான்" என்பார். ரேடியோவில் அவர் அடிக்கடி லக்னௌ ஜோஹுரா பீகத்தின் சங்கீதத்தைக் கேட்பதுண்டு. ஆனால், வீட்டிலே மற்றவர்களுக்கு — முக்கியமாக, அவருடைய மனைவிக்கு — ஜோஹுரா பீகமும் அவளுடைய சங்கீதமும் கொஞ்சமும் பிடிப்பதில்லை. எனவே அவர்கள் வீட்டில் வளர்ந்த ஒரு கறுப்புப் பூனைக்கு 'ஜோஹுரா பீகம்' என்று பெயரிட்டிருந்தார்கள். இந்த ஜோஹுரா பீகத்தைக் கண்டால் கைலாசமய்யருக்குக் குலை நடுக்கம்! அச்சமயம் அந்தப் பூனை வந்ததினால்தான் அவருடைய பையன் மண்டை உடையாமல் தப்பிப் பிழைத்தான்.

பட்ட காலிலேயே படும் என்பது போல், அவ்வளவு பயந்தவரான கைலாசமய்யருக்கு அந்த மகா பயங்கரமான அநுபவம் ஏற்பட்டது. ஏற்கெனவே தும்பைப்பூவைப் போல் நரைத்திருந்த அவருடைய தலைமயிர் அந்த ஒருநாள் இரவில் 'ஜாப்கோ' மசியைப் போல் கறுத்து விட்டதென்றால், அந்த அநுபவம் எவ்வளவு பயங்கரமாயிருந்திருக்குமென்று நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்!

அவருடைய தலைமயிரைச் சுட்டிக் காட்டி, "இது எப்படி நேர்ந்தது?" என்று நான் கேட்டபோது, கைலாசமய்யர் முதலில் சிறிது நேரம் தலை முதல் கால் வரையில் நடுங்கினார்; பிறகு கொஞ்ச நேரம் கால் முதல் தலை வரை நடுங்கினார்.

அவருக்கு நான் தைரியம் கூறிச் சமாதானப்படுத்தி ஒருவாறு விஷயத்தைத் தெரிந்து கொண்டேன். அந்த வரலாறுதான் இது:—

2

கைலாசமய்யருடைய மனைவி தன் தம்பியின் தலை தீபாவளிக்காகக் குடும்பத்துடன் ஊருக்குப் போக விரும்பினாள். கைலாஸமய்யர், "உன் தம்பிக்குத் தலை தீபாவளி என்றால் அவன் தலை எழுத்து; நமக்கு என்ன வந்தது?" என்று எவ்வளவோ சொல்லியும் அந்த அம்மாள் கேட்கவில்லை. இப்போதெல்லாம் சொர்க்கத்தில் இடம் கிடைத்தாலும் ரயிலில் கிடைக்காது என்பதைக் கைலாஸமய்யர் நன்கு அறிந்தவராதலால், ஐந்தாறு நாள் முன்னாலேயே டிக்கட் வாங்கி இடம் ரிஸர்வ் செய்திருந்தார். கிளம்ப வேண்டிய அன்றைக்குக் கொட்டு, கொட்டு என்று மழை கொட்டியது. கைலாசமய்யர் "இன்றைக்குப் புறப்படுவது அவ்வளவு உசிதமல்ல. ரயில் பாதைகள் எப்படி இருக்குமோ, என்னமோ! மொத்தத்தில் கொஞ்ச காலமாகவே ரயில்பாதைகளுக்கு ஏழரை நாட்டுச் சனியன் பிடித்திருக்கிறது" என்றார். அவர் மனைவியாள் அதைக் கேட்காமல், "கட்டாயம் போகத்தான் வேண்டும்" என்று பிடிவாதம் பிடித்தாள். கடைசியாகச் சாயங்காலம் அவர்கள் குழந்தை குட்டிகளுடன் காரில் ஏறிக் கொண்டு கிளம்பினார்கள். வழியில் மவுண்ட் ரோட்டில் கார் தண்ணீரில் நீந்த வேண்டியதாயிருந்தது. அப்போதெல்லாம் கைலாசமய்யர், "போனால் உயிர் தானே போகும்! அதற்குமேலே போவதற்கு ஒன்றுமில்லையே?" என்று சொல்லிக் கொண்டிருந்தார். "அழகாயிருக்கிறது அபசகுனம் மாதிரி பேசறது" என்று முணுமுணுத்துக் கொண்டேயிருந்தாள் மிஸ்ஸஸ் கைலாசமய்யர். கடைசியில் எப்படியோ உயிரோடு எழும்பூர் போய்ச் சேர்ந்தார்கள்.

எழும்பூரிலே நல்ல சந்தோஷமான சமாசாரம் தெரியவந்தது. அதாவது, பல்லாவரத்து மலை மழைக்குப் பயந்து இடம்பெயர்ந்து வந்து பல்லாவரம் ஸ்டேஷனுக்குள் தண்டவாளத்தில் உட்கார்ந்து கொண்டதென்றும், டி. டி. எஸ். முதலிய பெரிய பெரிய உத்தியோகஸ்தர்கள் எல்லாம் வந்து எவ்வளவோ பிரார்த்தனை செய்தும் அது நகரவில்லை என்றும் தெரிய வந்தது. இன்னும் சிலர், மேற்படி



தகவல் ஆதாரமற்றது என்றும், கோடம்பாக்கத்துக்கும் மாம்பலத்துக்கும் நடுவில் ஒரு ஐம்பதடி தண்டவாளத்தை மழை ஜலம் அடித்துக் கொண்டுபோய்விட்டது என்றும் சொன்னார்கள். காரணம் எதுவானாலும் ரயில்கள் எழும்பூரிலிருந்து அன்று கிளம்பாதென்று நிச்சயம் தெரிந்தது. அதோடு எல்லா ரயில்களும் தாம்பரத்திலிருந்து கிளம்புகின்றன என்றும் தெரிய வந்தது. அப்போதுதான், கைலாசமய்யரை அன்று தைரியப் பிசாசு பிடித்திருந்தது என்பது வெளியாயிற்று!

“விடு காரை தாம்பரத்துக்கு!” என்றார் கைலாசமய்யர். அவருடைய சம்சாரம், “வேண்டாமே? பேசாமல் வீட்டுக்குப் போய்ச் சேர்வோமே” என்று ஆனமட்டும் முணுமுணுத்துப் பார்த்தாள். கைலாசமய்யரிடம் ஒன்றும் பயன்படவில்லை. அவர் “உயிர்தானே போகும்? அதற்கு மேல் ஒன்றுமில்லையே?” என்றும், “அந்த ராஸ்கல் ஜப்பான்காரன் வந்து குண்டு போட மாட்டேன் என்கிறானே!” என்றும், “குண்டு விழாவிட்டால், இடி விழுந்தாலும் போதும்” என்றும், “விழுகிற இடி இந்தக் காரின் தலையில் நேரே விழ வேண்டும்; அப்போது தெரியும் தம்பி தலை தீபாவளிக்குப் போகிற இலட்சணம்!” என்றும், — இம்மாதிரி யெல்லாம் உற்சாகமாகப் பேசிக் கொண்டே போனார். குழந்தைகள் “இன்றைக்கு அப்பாவுக்கு ஆவேசம் வந்திருக்கிறது” என்று அறிந்து வாயை மூடிக் கொண்டு வந்தார்கள். மழை ஜலத்தைக் கிழித்துக் கொண்டு கார் தாம்பரத்தை நோக்கிப் போயிற்று.

தாம்பரம் ஸ்டேஷனும் வந்தது. அதிக மழையினால் மின்சாரக் கோளாறு ஏற்பட்டிருந்தபடியால், ஸ்டேஷனில் விளக்குகளே இல்லை. ஒரே கும்மிருட்டு. ஆனாலும், கைலாசமய்யர் பின்வாங்கவில்லை. அவருடைய கைநாடி மட்டும் நிமிஷத்துக்கு 350 தடவை வீதம் அடித்துக் கொண்டதே தவிர, மற்றபடி வெகு தைரியமாய்க் காரிலிருந்து இறங்கி மச்சுப்படி ஏறிப்போனார். பின்னும் மனைவி மக்கள் வருகிறார்களா, சாமான்கள் என்ன ஆகின்றன என்று கூடக் கவனிக்கவில்லை. எப்படியோ பிளாட்பாரத்தில் எல்லாரும் வந்து சேர்ந்தார்கள். ரயிலும் தயாராக நின்று கொண்டிருந்தது. இரண்டாம் வகுப்பு வண்டிகள் காலியாகத்தான் இருந்தன. ஒரு வண்டியில், கைலாசமய்யரும் அவருடைய குடும்பத்தாரும் ஏறிக் கொண்டார்கள். வண்டிக்குள் ஒரே மௌனம்; வண்டிக்கு வெளியே கும்மிருட்டு.

சற்று நேரத்துக்கெல்லாம் அவருடைய மனையாள், “இன்றைக்கு ரயிலே காலிபோலிருக்கே! கூட்டமே இல்லையே?” என்று சொல்லி மௌனத்தைக் கலைத்தாள்.

கைலாசமய்யர் உடனே “ஆமாம்; ஆமாம்; அதனாலென்ன? வண்டியிலே தனியாய்ப் போனால் கொலைகாரன் வந்துவிடப் போகிறான்! யாரையோ, எப்பவோ, ஒரு நாளைக்கு ரயிலுக்குள்ளே கொலை செய்து விட்டால், அதற்காக எப்போதும் அதே ஞாபகமா?...” என்று ‘டோஸ்’ கொடுக்க ஆரம்பித்தார்.

“போதுமே; பேசாமே இருங்களேன். குழந்தைகள் பயப்படப் போகிறது!” என்றாள் மிஸ்ஸஸ் கைலாசமய்யர்.

அப்பாவுக்குக் கோபம் என்று தெரிந்த குழந்தைகள் ரயில் ஓரமாய்ப் போய் வாயைத் திறக்காமல் உட்கார்ந்து கொண்டிருந்தன.

## 3

வண்டி நகரத் தொடங்கியது. அதே சமயத்தில் அந்தத் தடுக்க முடியாத சம்பவம் நடந்துவிட்டது. அலங்கோலமாக ஒரு மனிதர் அவர்களுடைய வண்டியருகில் வந்து “கதவைத் திறவுங்கள்! அவசரம்!” என்று கதறிக்கொண்டே ரயில் கைப்பிடியைப் பிடித்துக் கொண்டு தொங்கினார். ரயிலின் வேகமோ அதிகமாயிற்று. கைலாசமய்யருக்கு மனதில், “நல்லவேளை: ஒரு துணை கிடைத்தது!” என்ற எண்ணம் பளிச்சென்று எழுந்தது. தட்டுத் தடுமாறிக் கதவைத் திறந்தார். வந்த மனுஷர் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து உள்ளே வந்து, கைலாசமய்யருக்கு எதிர் ஆசனத்தில் தொப்பென்று விழுந்தார். அதே பெஞ்சியின் ஓரத்தில் இருந்த மிஸ்ஸஸ் கைலாசமய்யர் சற்று அவசரமாகவே எழுந்திருந்து இன்னொரு மூலையில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

ஆம்; அந்தப் புதிய மனிதரின் தோற்றம் யாரையுமே அவசரமாக எழுந்திருக்கச் செய்வதாய்த் தானிருந்தது. ரயில் அச்சமயம் மணிக்கு முப்பது மைல் வேகத்தில் போய்க் கொண்டிரா விட்டால், கைலாசமய்யர் மூட்டை முடிச்சுகள், மனைவி மக்களுடன் அந்த வண்டியிலிருந்தே கீழே குதித்திருப்பார்.

அந்த மனிதரின் கிராப்புத் தலை எண்ணெய் கண்டு ஒரு யுகம் ஆயிருக்கும்; அந்த மாதிரி ரோமங்கள் குத்திட்டு நின்றன. கண்கள் செக்கச் செவேலென்று சிவந்து திறு திறு வென்று விழித்தன. மேல் கோட்டு நனைந்திருந்தது; உள் ஷர்ட் கிழிந்திருந்தது. இரண்டிலும் பொத்தான்கள் கழன்று போயிருந்தன. மூக்குக் கண்ணாடி ஒரு காதில் மட்டும் மாட்டிக் கொண்டு தொங்கிற்று. இத்தனை அலங்கோலத்திலும் அந்த மனுஷருடைய வாய் மட்டும் வெற்றிலைப் பாக்குப் புகையிலையை விடாமல் அரைத்துக் கொண்டிருந்தது!

அந்த அவசரக்காரர் தம்முடைய நனைந்த கோட்டைக் கழற்றினார். கழற்றும்போது அதிலிருந்து சில சாமான்கள் பொல பொல வென்று விழுந்தன. அப்படி விழுந்த சாமான்களில் ஒரு பெரிய பேனாக் கத்தியும் கிடந்தது.

“அட சனியனே!” என்று அந்த மனிதர் கீழே குனிந்து அந்த சாமான்களைத் திரட்டி எடுத்தார். மணிபர்ஸ், பேனா முதலியவைகளை பெஞ்சியில் வைத்து விட்டுக் கத்தியை மட்டும் கையில் வைத்துக் கொண்டார். கைலாசமய்யரைப் பார்த்துக் கேட்டார் :—

“ஏன், ஸார்! இந்த மாதிரி சின்னப் பேனாக் கத்தியினாலேயே ஒரு மனுஷனைக் கொன்று விடலாம் என்று சொல்கிறார்களே? அது முடியுமா? உங்களுக்கு என்ன தோன்றுகிறது?” என்றார்.

கைலாசமய்யருக்கு அப்போது தாம் ஓர் ஆகாச விமானத்திலிருப்பது போலவும், அந்த விமானம்





தலை நோகக் 'கிரேட்' அதல பாதாளத்துக்குப் போய்க் கொண்டிருப்பது போலவும் தோன்றிக் கொண்டிருந்தது. நல்ல வேளையாக அவருடைய பத்தினி அந்த பிரமையைக் கலைத்தாள். "என்ன? அடுத்த ரயில்வே ஸ்டேஷன் எப்போது வரும்?" என்றாள். அதற்குக் கைலாஸமய்யர், "சற்று வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்கமாட்டாயா?" என்று வள்ளென்று விழுந்தார். பிறகு, எதிரில் உள்ள மனுஷரைப் பார்க்க இஷ்டமில்லாமல் தாம் கொண்டு வந்திருந்த தினசரிப் பத்திரிகையைப் பிரித்து முகத்துக்கு நேராக வைத்துக் கொண்டு படிக்கத் தொடங்கினார். படிப்பதற்கு முயற்சி செய்தாரே தவிர, படிக்க முடியவில்லை. பத்திரிகை இங்கிலீஷ் பத்திரிகை தான். ஆனால் அச் சமயம் அதிலிருந்த எழுத்துக்கள், கிரீக் பாஷையோ லாடின் பாஷையோ என்று தெரியாதபடி கைலாஸமய்யர் கண்ணுக்கு ஒரே குழப்பமாயிருந்தன.

ஆனால், எதிரிலிருந்த மனுஷரின் கண்கள் மட்டும் வெகு துல்லியமாயிருப்பது போல் தோன்றியது. ஏனெனில், அவர் எதிர் பெஞ்சியில் உட்கார்ந்தபடியே கைலாஸமய்யர் கையிலிருந்த பத்திரிகையின் பின்புறத்தைப் படிக்கத் தொடங்கினார். ஒரு நிமிஷத்துக்கெல்லாம் "ஹா!" என்று சொல்லி, பத்திரிகையைத் தானும் ஒரு கையால் பிடித்துக் கொண்டு படித்தார். அடுத்த நிமிஷம், "ஹா! ஹா!" என்று சொல்லி, பத்திரிகையை இலேசாகக் கைலாஸமய்யர் கையிலிருந்து எடுத்துக் கொண்டு உற்றுப் பார்த்துப் படித்தார். பிறகு, நிமிர்ந்து கைலாஸமய்யரைப் பார்த்து, "ஹா! ஹா! ஹா!" என்றார். கைலாஸமய்யரால் வாயைத் திறந்து ஒரு "ஹா!" கூடச் சொல்ல முடியவில்லை.

வந்த மனுஷர் "என்னைத் தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியாது" என்று பளிச்சென்று கைலாச மய்யர் பதில் சொன்னார்.

"தெரியாதா? தெரியாதா? என் பெயரையாவது கேள்விப்பட்டிருப்பீர்கள்" என்றார் அந்த மனிதர்.

"சத்தியமாய் இல்லை" என்று கைலாஸ மய்யர் அழுத்தமாய்க் கூறினார்.

"ரொம்ப வந்தனம்; இந்தச் செய்தியைப் பார்த்தீர்களா?" என்று வந்த மனிதர் பத்திரிகையில் ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினார்.

கைலாச மய்யர் அந்த இடத்தைப் பார்த்தார். அது, மரணச் செய்திகள் போடும் இடம். பின்வரும் செய்தி அங்கே காணப்பட்டது.

"ஒரு நிருபர் எழுதுகிறார்:— பிரசித்திபெற்ற தமிழ் எழுத்தாளரும், 'பிரகஸ்பதிக் கப்பன்' என்ற புனை பெயரால் புகழ் பெற்றவருமான ஸ்ரீ பிரணதார்த்திஹரன் இன்று காலை மரணமடைந்த செய்தியை மிகுந்த துக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். மயிலாப்பூரில் அவருடைய சொந்த ஜாகையில் திடீரென்று உயிர்போன காரணத்தினால் அவருடைய வருந்தத்தக்க மரணம் நேரிட்டது. அவருடைய அந்திய ஊர்வலத்துக்குக் கணக்கற்ற ஜனங்கள் — சுமார் ஒன்பது பேர் இருக்கலாம் — வந்து கௌரவித்ததிலிருந்து இந்த எழுத்தாளர் தமிழ் வாசகர்களின் உள்ளத்தில் எவ்வளவு மகத்தான இடத்தைப் பெற்றிருந்தார் என்பதை ஊகிக்கலாம். அவருடைய அருமையான ஆத்மா சாந்தி அடைவதாக!"

கைலாஸ மய்யருக்குப் 'பிரகஸ்பதிக் கப்பன்' என்று எங்கேயோ, எப்போதோ, கேட்டிருப்பதுபோல் ஞாபகம் வந்தது. நல்ல வேளையாகப் பேசுவதற்கு வாகாய் ஒரு விஷயம் அகப்பட்டதென்று உற்சாகமடைந்தவராய், "அடாடா! நம்ம பிரகஸ்பதிக் கப்பனா இறந்து போனார்? எனக்குத் தெரியாமல் போச்சே? தெரிந்திருந்தால் நான்கூட மழையைப் பார்க்காமல் அவருடைய ஊர்வலத்துக்குப் போயிருப்பேனே!" என்றார்.

அவசரக்காரர் இன்னும் ஒரு தடவை 'ஹாஹா'காரம் செய்துவிட்டு, மேற்படி பத்திரிகைச் செய்தியை மீண்டும் சுட்டிக் காட்டி, "இது சாதாரணச் சாவு இல்லை. ஸார்! சாதாரணச் சாவில்லை. இது கொலை!" என்றார்.

"என்ன?" என்று கைலாஸ மய்யர் கத்தியபோது, ரயிலையே தூக்கி வாரிப் போட்டது போலிருந்தது.

"ஆமாம்; நான் சொல்கிறதை நம்புங்கள். இது கொலை!"

கைலாசமய்யர் அப்போது தாம் பயப்படுவதாகக் காட்டிக் கொண்டால் காரியம் மிஞ்சிவிடும் என்பதை அறிந்திருந்தார். எனவே, தைரியத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு, "கொலையாவது, கொத்தவரங்காயாவது? உமக்கு எப்படி ஐயா தெரியும்?" என்று கேட்டார்.

"ஆகா! அப்படிக் கேளுங்கள்; கேட்டால்தானே சொல்லலாம்? இது கொலைதான், சாதாரண மரணமில்லை என்பதை நிரூபிக்கிறேன். ரொம்ப ரொம்ப ஆச்சரியமான கதை. தூங்காமல் மட்டும் கேட்க வேண்டும்" என்றார்.

அந்த சமயம் கைலாச மய்யர் குழந்தைகள் இருவரும் அவரிடம் வந்து, "கதை சொல்லுங்க, மாமா! நாங்கள் கேட்கிறோம்" என்றன. கைலாச மய்யர் கண்விழி பெயரும்படியாக அக்குழந்தைகளை உற்றுப் பார்த்தார். ஆனால், குழந்தைகள் அவரைப் பார்க்கவேயில்லை.

அவசரக்காரர், குழந்தைகளை விழித்துப் பார்த்து, "பயங்கரமான கதை; நீங்கள் பயப்படுவீர்கள். போய்ப் படுங்கள்!" என்றார்.

"நாங்கள் பயப்பட மாட்டோம், மாமா! எங்களுக்குப் பயமே இடையாது. அப்பாதான் பயப்படுவார்!" என்றான் போக்கிரி மணி.

"அடே என் கண்மணிகளா! அப்படியானால் கேளுங்கள்" என்று சொல்லிவிட்டு அந்த மனிதர் கதையை ஆரம்பித்தார்:—

"ஆயிரம், பதினாயிரம், லட்சம், மூந்நூறு லட்சம் வருஷங்களுக்கு முன்னால் போங்கள். அந்தக் காலத்தில் மனிதர்களே இல்லை. உலகமெல்லாம் காடும், மலையும், தண்ணீருமாய் இருந்தன. பெரிய பெரிய மிருகங்கள், விநோதமான மிருகங்கள் அக்காடுகளில் வசித்து இருந்தன. அந்த மிருகங்களுக்கு நீண்டவாலும் குட்டைச் சிறகுகளும் உண்டு. அவை வானிலும் பறக்கும்; சிறகுகளிலும் நடக்கும். இந்த மிருகங்களில் ஒன்றுக்கு ரொமாண்ட மல்லன் என்றும், இன்னொன்றுக்கு பிரம்மாண்ட டில்லன் என்றும்



பெயர். ஒருநாளைக்கு ரோமாண்ட மல்லன், பிரம்மாண்ட மல்லனைப் பார்த்து, 'உன் வாலைக் காட்டிலும் என் வால்தான் நீளம்' என்றது. 'இல்லை; என்வால்தான் குட்டை!' என்றது பிரம்மாண்ட மல்லன். உடனே இரண்டுக்கும் பயங்கரமான போர் மூண்டது. வாலினால் ஒன்றை யொன்று அடித்துக் கொண்டு மூந்நூறு வருஷம் அவை சண்டை போட்டன. போட்டும், ஜயம் தோல்வி ஏற்படவில்லை. அப்போது ரோமாண்ட மல்லன், 'இனிமேல் என்னால் சாப்பிடாமல் சண்டைபோட முடியாது; இதோ பிராணனை விடுகிறேன்' என்று சொல்லிவிட்டுப் பிராணனை விட்டது. பிரம்மாண்ட மல்லன் 'நானும் இதோ பிராணனை விடுகிறேன்' என்று சொல்லிவிட்டுப் பிராணனைவிடப் பார்த்தபோது, தன்னுடைய பிராணன் ஏற்கனவே போய்விட்ட தென்பதைப் பார்த்து அதிசயித்தது. தெரிந்ததா, குழந்தைகளே! அப்புறம், இரண்டு லட்சம் வருஷத்தைத் தள்ளுங்கள்!"

"தள்ளிவிட்டோம்!" என்றான் போக்கிரி மணி.

"எங்களுக்குப் பயமாகவே இல்லை!" என்றாள் ஸரோஜா.

அவசரக்காரர் மேலும் சொன்ன கதை வெகு விசித்திரமாயும் பயங்கரமாயும் இருந்தது. அந்த இரண்டு பழங் கால மிருகங்களும் வெகுகாலத்துக்குப் பிறகு ஒன்று கிஷ்கிந்தாபுரியில் வானரமாகவும் இன்னொன்று இலங்கையில் ராட்சதனாகவும் பிறந்தனவாம். இராவண சம்ஹாரம் ஆகி, சீதையை இராமன் சேர்த்துக் கொண்டு, புஷ்பக விமானத்தில் எல்லாரும் கிளம்பும் வரையில் மேற்படி வானரமும் ராட்சதனும் மட்டும் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்களாம். இதைப் பார்த்த அனுமார் இரண்டு பேரையும் பிடித்துத் தலைக்கு நாலு குட்டுக் குட்ட, வானரமும் ராட்சதனும் அவமானப்பட்டு ஓடி அனுமார் கொண்டு வந்திருந்த சஞ்சீவி மலையில் கால் தடுக்கி விழுந்து செத்துப் போனார்களாம்.

அப்புறம் பல்லாயிரம் வருஷங்களுக்குப் பிறகு அவர்கள் மீண்டும் மகா பாரத காலத்தில் பூமியிலே பிறந்தார்கள். குருக்ஷேத்திரத்தில் ஒருவன் பாண்டவர் சைன்யத்தில் இருந்தான்; இன்னொருவன் துரியோதனன் கட்சியிலும் இருந்தான். அவர்கள் அந்தப் பெரும் போரில் மாண்ட விதம் மகா விசித்திரமானது. தென்னாட்டு விருந்து மதுரைப் பாண்டியன் சாப்பாடு கொண்டு வந்து குருக்ஷேத்திர யுத்த களத்தில் இரண்டு கட்சி வீரர்களுக்கும் சோறு போட்டானல்லவா? அந்தச் சாப்பாட்டைப் போட்டி போட்டுக் கொண்டு அளவுக்கு மீறிச் சாப்பிட்டு வயிறு வெடித்து அவர்கள் இறந்து போனார்களாம்!

பிறகு அந்த மகா வீரர்கள் நானூறு வருஷத்துக்கு முன்பு வீர இரஜபுத்திர நாட்டில் பிறந்தார்களாம். பிறந்து பேசத் தெரிந்ததும் முதல் காரியமாக அவர்கள் ஒருவரை யொருவர் கொன்று விடுவதாகச் சபதம் செய்து கொண்டார்களாம்! சபதத்தை நிறைவேற்றுவதற்கு நல்ல சமயம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்குச் சீக்கிரத்திலேயே சமயம் கிடைத்தது. ஓர் இராஜ புத்திரப் பெண் அவர்கள் இரண்டு பேருக்கும் ஒரே சமயத்தில் ஒரு செய்தி சொல்லி யனுப்பினாள். தன்னை ஒரு பாதுஷா பலாத்காரமாய் அபகரித்துச் சென்று அந்தப்புரத்தில் அடைத்து வைத்திருப்பதாகவும், தன்னை விடுதலை செய்து அழைத்துப் போகவேண்டுமென்றும் தெரிவித்திருந்தாள். உடனே மேற்படி இரண்டு ராஜகுமாரர்களும் அந்த ராஜகுமாரியை யார் காப்பாற்றுவது என்று தங்களுக்குள் சண்டையிடத் தொடங்கினார்கள். அந்தச் சண்டையில் ஒருவன் தன்னுடைய தலைமுண்டாசில் கத்தி பாய்ந்ததின் பலனாக இறந்து போனான். இன்னொருவன் மேற்படி ராஜகுமாரியைப் பாதுஷாவின் அந்தப்புரத்திலிருந்து காப்பாற்றிக் கொண்டுவந்து அன்றிரவே அவள் கொடுத்த விஷத்தைக் குடித்து விட்டு இறந்து போனான்.

இன்னும், மேற்கண்ட விதமாகப் பல ஜன்மங்களில் போராடிய பிறகு அவர்கள் கடைசியாக இந்தக் காலத்தில் தமிழ் நாட்டில் அவதரித்தார்கள். இவர்கள் குழந்தைகளாயிருந்தபோதே மசியைக் கொட்டி மெழுகுவதும், பேனாவை விழுங்குவதுமாயிருந்ததைப் பார்த்தவர்கள் எல்லாம் "வருங்காலத்தில் இவர்கள் சிறந்த எழுத்தாளர் ஆகி உலகத்தையே ஒரு கலக்குக் கலக்கப் போகிறார்கள்" என்று சொல்லி விட்டுக் கண்ணீர் விடுவதுண்டு! அவர்கள் பயந்தபடியே வாஸ்தவத்தில் நடந்தது.

"பிரகஸ்பதிச் சுப்பன்" "அதிர்வெடிக் குப்பன்" என்னும் புனை பெயர்கள் தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் உலகப் பிரசித்தி அடைந்து வந்தன! இவர்கள் பத்திரிகை நடத்தாதபோது புத்தகம் எழுதுவார்கள்; புத்தகம் எழுதாதபோது பத்திரிகை நடத்துவார்கள். "பிரகஸ்பதிச் சுப்பன்" பத்திரிகை நடத்தும்போது "அதிர்வெடிக் குப்பன்" எழுதிய புத்தகங்களை யெல்லாம் எழுத் தெழுத்தாகப் பிய்த்து எறிந்து விடுவார். "அதிர்வெடிக் குப்பன்" பத்திரிகை நடத்தும் சமயத்தில் "பிரகஸ்பதிச் சுப்ப"னின் புத்தகங்களை யெல்லாம் கடித்துத் தின்று உமிழ்ந்து விடுவார். இவ்விதமாக அவர்களுடைய ஆங்காரம் முற்றிக் கொண்டே வந்தது. கடைசியாக, நேற்றைய தினம், "பிரகஸ்பதிச் சுப்ப"னுக்கு "அதிர்வெடிக் குப்ப"னிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில், "ஜாக்கிரதை! நாளைய தினம் உன்னை நான் உன்னுடைய ஆயுதத்தினாலேயே கொல்லப் போகிறேன். ஓடித் தப்பித்துக் கொள்ளப் பார்த்தாலும் விடமாட்டேன்" என்று எழுதியிருந்தது.

4

அவசரக்கார மனிதர் மேற்படி கட்டத்துக்கு வருவதற்குள், அவர் கூறிய கதையின் பயங்கர சுவாரஸ்யத்தில் மதிமயங்கிக் கைலாஸமய்யரின் குழந்தைகளும் மனைவியும் தூங்கிப் போய் விட்டார்கள். கைலாஸமய்யர் மட்டும் தூங்காமல் அடங்காத ஆவலுடனும் சொல்ல முடியாத பயத்துடனும் கதையைக் கேட்டுவந்தார்.

"அப்புறம் என்ன ஆச்சு? கடிதப்படி நடந்ததா?" என்று கேட்டார்.



"ஆமாம்; நடந்தது. கடிதத்தைப் பெற்றவர் தப்பித்து ஓடி விடலாமென்று பார்த்தார்; முடியவில்லை. கடைசியில், கடிதம் எழுதியவர் அவரைக் கொன்றே தீர்த்தார்!"

"ஐயோ! அப்படியானால்,......?" என்று கைலாசமய்யர் பத்திரிகைச் செய்தியைச் சுட்டிக் காட்டினார்.

"ஆம்; பிரகஸ்பதிச் சுப்பன் என்னும் பிரணதார்த்திஹரன் தான் கொல்லப்பட்டு இறந்தவர்."

"ஆ!" என்றார் கைலாஸமய்யர். அவருக்கு எல்லா விஷயமும் புரிந்து விட்டது. இந்த மனுஷன்தான் பிரணதார்த்திஹரனைக் கொன்று விட்டு வந்திருப்பவன். இவனுடைய அவசரத்துக்கும் படபடப்புக்கும் காரணம் அதுதான். இவனுடைய மூளை குழம்பிப்போய் ஏதேதோ பயங்கரமான கதை சொல்வதின் காரணமும் அதுதான்.

கைலாஸமய்யருக்குத் திடீரென்று ஒரு அசட்டுத் தைரியம் பிறந்தது. இந்தக் கொலைகாரனைப் பிடித்து ஏன் போலீஸாரிடம் ஒப்பு விக்கக் கூடாது?—நல்ல வேளை; செங்கல்பட்டு ஸ்டேஷன் இதோ வரப்போகிறது. வண்டி நின்றதும் போலீஸ்காரனைக் கூப்பிட வேண்டியதுதான். அதுவரையில் இவனுடன் ஏதாவது பேச்சுக் கொடுத்துக் கொண்டு வர வேண்டும்.

"இவ்வளவெல்லாம் சொல்கிறீரே? உமக்கு இதெல்லாம் எப்படித் தெரிந்தது?" என்று கைலாஸமய்யர் கேட்டார்.

"எப்படித் தெரிந்ததா? ஹா ஹா ஹா! எனக்குத் தெரியாமல் வேறு யாருக்குத் தெரியும்? நான் தானே......?"

"நீர்தானே......?"

"நான் யார் என்று இன்னுமா தெரியவில்லை?"

"தெரியாமலென்ன? பேஷாய்த் தெரியும். நீதான் அதிர்வேடிக் குப்பன். நீதான் கொலைகாரன்! உன்னை இதோ......"

அவனுடைய "ஹா ஹா ஹா" என்ற பயங்கரச் சிரிப்பில் கைலாஸமய்யரின் வார்த்தைகள் அமிழ்ந்தன.

"இல்லை, ஐயா! இல்லை. நான் கொலைகாரன் இல்லை!" என்று அவன் கூறிக்கொண்டே மேற்படி பத்திரிகைச் செய்தியைச் சுட்டிக் காட்டினான். "இதோ போட்டிருக்கிறதே, 'பிரகஸ்பதிச் சுப்பன் என்னும் பிரணதார்த்திஹரன் காலமானார்' என்று,—அந்தச் சாக்ஷாத் பிரணதார்த்திஹரன் நான்தான்!" என்றான்.

கைலாஸமய்யரைத் தூக்கிப் போட்ட போட்டில், மேலே எழும்பிய மனுஷர் கீழே வருவதற்குள்ளே, வண்டி செங்கற்பட்டு ஸ்டேஷனில் வந்து நின்றது. வண்டி நின்றதும் சிந்காததுமாய்க் கதவைத் திறந்து கொண்டு அந்த மனுஷன் பளிச் சென்று கீழே குதித்தான். அடுத்த கணத்தில் அவன் மாயமாய் மறைந்து போனான்.

கைலாஸமய்யர் படக்கென்று கதவைச் சாத்தி இறுக்கித் தாழ்ப்பாள் போட்டார். அந்தச் சத்தத்தில் அவர் மனைவியாள் விழித்தெழுந்து "என்ன? என்ன?" என்று கேட்டாள். "ஒன்றுமில்லை; பிரகஸ்பதிச் சுப்பன் என்கிற பிரணதார்த்திஹரனின் பிசாசு!" என்றார் கைலாஸமய்யர்.

## 5

மேற் கூறிய வரலாற்றை யெல்லாம் சொல்லிவிட்டுக் கைலாஸமய்யர், "ஏற்கனவே நான் பயந்த மனுஷன் என்றுதான் உமக்குத் தெரியுமே? இந்த மாதிரி ஒரு சம்பவம் நடந்த பிறகு கேட்க வேண்டுமா? அன்று முதல் எனக்கு இராத் தூக்கம் கிடையாது. கண்ணை மூடினால், ரயில் பிரயாணம் செய்வது போலும், பிசாசு வருவது போலும், கதை சொல்வது போலும் சொப்பனம். உங்களுக்கு என்ன தோன்றுகிறது?" என்று கேட்டார்.

"எதைப் பற்றி?" என்றேன்.

"பிரணதார்த்திஹரன் சாதாரண மரண மடைந்தாரா? கொலையுண்டு செத்தாரா?"

"நீர் அப்புறம் பத்திரிகை படிக்கவில்லையா, என்ன?"

"பத்திரிகையைக் கண்டாலே எனக்குப் பயமாயிருக்கிறது. தொடவே இல்லை" என்றார் கைலாஸமய்யர்.

"மறு நாள் பத்திரிகையிலேயே 'பிரணதார்த்திஹரன் மரணமடையவில்லை; ஆகையால் பிரேத ஸம்ஸ்காரமும் நடக்கவில்லை!' என்று திருத்தம் வெளியாகியிருந்ததே!"

"அப்படியா? ஓஹோ ஹோ! நானல்லவா ஏமாந்து போயிருக்



கிறேன்? — அப்படியானால் அன்று என்னைக் காபராப் படுத்திய மனுஷன் தான் யார்?"

"சாக்ஷாத் பிரணதார்த்திஹரன் தான்!"

"அடே அப்பா! ஒரே புளுகாய்ப் புளுகுகிறீரே? எழுத்தாளர் என்றாலே எல்லாரும் இப்படித் தான் புளுகுவார்களோ?"

"அவர் சொன்னதில் கொஞ்சம் நிஜமும் உண்டு. அவருடைய எதிரி அவரைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்திக் கடிதம் எழுதியது உண்மை. அதை அவன் நிறைவேற்றியும் விட்டான்!"

"நிறைவேற்றி விட்டானா? அதெப்படி, ஐயா! மூளை குழம்புகிறதே?"

"பிரணதார்த்தியின் ஆயுதத்தினாலேயே அவனைக் கொல்வதாக அவனுடைய எதிரி சொன்னானல்லவா? பிரணதார்த்தியின் ஆயுதம் என்ன? பேனா! அந்தப் பேனாவைக் கொண்டு தான் அவனைக் கொன்றான்!"

"கொன்றானா?"

"ஆமாம்; பிரணதார்த்திஹரன் காலமானதாகப் பத்திரிகைகளுக்கு எழுதிவிட்டானல்லவா? இது பேனாவினால் கொன்றது தானே?"

கைலாஸமய்யருக்கு அவரை யறியாமல் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. விழுந்து விழுந்து சிரித்தார். இடையிடையே, "அதிர்வெடிக் கம்பன் நல்ல அதிர் வெடி போட்டானய்யா!" என்று சொல்லிக் கொண்டு சிரித்தார். "அந்த பிரகஸ்பதிக்கு நன்றாய் வேண்டும்! என்னை காபராப் படுத்தினானே. இல்லையோ?" என்றும் இடையிடையே சொல்லிக் கொண்டார்.

கைலாசமய்யர் அவ்விதம் சிரித்த போது அவர் தலைக்கு மேலே ஓர் அதிசயம் நடந்து கொண்டிருந்தது.

பயங்கரப் பிரயாண இரவில் 'ஜாப்போ' மசியைப் போல் கறுத்த அவருடைய தலைமயிரானது என் கண்ணெதிரே மளமளவென்று 'ரோம வர்த்தனி' தடவிய கூந்தலைப் போல் வெளுத்து, வெள்ளை வெளேரென்று ஆகிவிட்டது!

"கைலாஸ மய்யர்வாள்! இந்த வருஷம் நடந்தது உங்கள் மைத்துனன் தலை தீபாவளி அல்ல; உங்களுடைய தலை தீபாவளி தான்!" என்றேன்.



எஸ். கோவிந்தராஜப் பிள்ளை—எஸ். தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை

"நாங்களும் திருவீழிமிழலை சகோதரர்கள்தான்" என்று போட்டி போடுகிறார்கள் இவ்விரு இளைஞர்களும். பிரசித்திபெற்ற நாதஸ்வர வித்வான்களான திருவீழிமிழலை சகோதரர்களின் மூத்தவருடைய குமாரர்கள்தான் இவர்கள்!

நாடகம்! நாடகம்!! நாடகம்!!!

## காரைக்குடி ஸ்ரீ ராமபால கான விநோத சபா

செல்வம் கொழிக்கும் செட்டிமார் நாட்டில்,
ஜெயக்கொடி நாட்டிய சீர்பெறும் நாடகம்!
சிறந்த சீன்களும், உயர்ந்த உடைகளும்,
பொலிந்து விளங்கும் புகழ்பெறும் நாடகம்!
அழகிய பாடல்கள், அற்புத வசனங்கள்,
அமைந்து ஜொலிக்கும் அரியதோர் நாடகம்!
எது? அதுதான்

# பக்த சாருகதாசர்

என்னும் புண்ணிய புராண புதிய தமிழ் நாடகம்!

காரைக்குடி, ஸ்ரீ ஷண்முக விலாஸ் தியேட்டரில்
இப்பொழுது நடைபெறுகிறது.

★

பக்தியின் பெருமையை
— ஊட்டுவது —

பகவான் கருணையைக்
— காட்டுவது —

விதியின் வலியை
— நாட்டுவது —

★



★

தினந்தோறும் இடமின்றி
திரும்புகின்றார் பலரே!

திரும்பவுமே பார்ப்பதற்கு
விரும்புகின்றார் பலரே!

வந்தவர்கள் போய்ச் சொல்லி
வருகின்றார் பலரே!

★

எமது அடுத்த நாடகம் :— எதிர்பார்த்தது (நாவல்)

தயாராக இருப்பவை:

திருமழிசை ஆழ்வார், நாகசாந்தி, குடும்ப வாழ்க்கை, வினையின் விளைவு
மோகினி லீலா, ஏகம்பவாணன், புகழேந்திப் புலவர், நந்தன்

புரொப்ரைட்டர்: வைரம் O. A. AR. அருணாசலம் செட்டியார்.

காஷ்மீர் மின்சார விசிறி




சகாயமான விலை! சுத்தமான சாமான்கள் !!

கிடைக்குமிடம்:

# தென்காசி பிள்ளை கடை

மேல ரதவிதி :: திருநெல்வேலி டவுன்.

எங்களிடம் மளிகை சாமான்கள் துப்பரவாகவும் மொத்தமாகவும் சில்லரையாகவும் சகாய விலைக்குக் கிடைக்கும்.

•

மளிகை சாமான்கள் வாங்க நம்பிக்கையான இடம்

50 வருஷங்களாகப் பிரசித்தி பெற்ற

# தென்காசி பிள்ளை கடை

தந்தி விலாசம்: "மாதா"

போன் நெ. ஹெட் ஆபீஸ் 37, பிராஞ்சு 55

•

புரோப்ரைட்டர்

## M. S. S. M. G. S. Sundaram.

ஹெட் ஆபீஸ்:—சங்கரோஜித பண்டிதர் தெரு, திருநெல்வேலி டவுன்.
பிராஞ்சுகள்:—மேல ரதவிதி, திருநெல்வேலி டவுன்.
(இந்து காலேஜ் எதிரில்) திருநெல்வேலி ஜங்ஷன்.

தந்தி விலாசம்: "சாந்தன்"—தூத்துக்குடி. & கொழும்பு.

தொழிற்சாலை:—"திருச்சி"  ஒரிஜினல்  தந்தி:—"சாந்தா" திருச்சி

# சாந்தா வைரங்கள்

மிகவும் ஜொலிப்புள்ளவை.







தோடு சைஸ் கமலம் 1-க்கு ரூ. 1

பேசரி சைஸ் கமலம் 1க்கு 0-12-0

ராயல் ஸ்டார் வைரங்கள் தோடு சைஸ் கமலம் 1-க்கு 0-14-0 பேசரி சைஸ் கமலம் 1-க்கு ரூ. 0-10-0

கல் பதித்த நகைகள் ஆர்டரின் பேரில் செய்து கொடுக்கப்படும்.
வெளியூர் ஆர்டர்களை உடனுக்குடன் கவனிக்கப்படும்.

**Prop:- V. P. நரசிம்மலு நாயுடு,**

ஷராப் வியாபாரம், பெரியகடை வீதி, திருச்சிராப்பள்ளி.

---

## கோவை பிரிமியர் ஸினிடோன் தயாரிப்பு

நீங்கள் வெகு நாட்களாக ஆவலுடன் எதிர்பார்க்கும்
திருநெல்வேலி புகழ் ஸ்ரீமதி S. S. ராஜாமணி நடிக்கும்



# மாயாவதி



—: மகத்தான தமிழ் புராணப் படம் :—

| | | |
|---|---|---|
| T. R. மகாலிங்கம் | P. ராமய்யா சாஸ்திரி | M. முத்துராமலிங்கம் |
| T. S. பாலையா | பரமசிவம் ராஜகோபாலய்யர் | N. R. சு. அய்யர் |
| T. S. துரைராஜ் | T. V. சேதுராமன் | சுப்பிரமணி முதலியோர் |

| கதை, வசனம், பாட்டு : | டைரக்ஷன் மேற்பார்வை : | சங்கீத டைரக்ஷன் : |
|---|---|---|
| G. சுந்தர பாகவதர் | P. K. ராஜா சாண்டோ | K. R. நாகராஜன் |

: பட உரிமையாளர் :

## சரஸ்வதி பிலிம்ஸ்

4/89, திருச்சி ரோட். கோயமுத்தூர்

Tel: "GUARANTEE" தந்தி : "கியாரண்டி."



P. A. R.

P. A. Raju Chettiar & Bror.,
P. M. Thammanna Chettiar,
JEWELLERS,
BIG BAZAAR, TRICHINOPOLY.



P. M. T.



# BRIGHT DIAMOND HOUSE

Regd No. 703



எங்களிடம் கியாரண்டி பவுன், கல் பதித்த நகைகள்
தோடு, தோங்கட்டான், கடுக்கன், பேசரி முதலான
வைகள் மொத்தமாகக் கிடைக்கும்.



தேவையான டிசைன் தோங்கட்டான், நெக்லேஸ் மாலைகள்
ஆர்டரின் பேரில் தயார் செய்தும் கொடுக்கப்படும்.



## ப. அ. ராஜு செட்டியார் & பிரதர்
## பெ. மு. தம்மன்ன செட்டியார்

ஜுவெல்லர்ஸ் :: திருச்சிராப்பள்ளி.

# சித்திர விளக்கம்



## வெயில் மறைக்கும் மயில்

நாயகன் வியாபார நிமித்தம் பல இடங்களுக்கும் சென்று வருகிறவன். ஒரு தடவை பாலைவனத்திலே தான் கண்ட காட்சி ஒன்றைத் தன் நாயகிக்குச் சொன்னான். அதாவது :—காலம் அருங்கோடை; சகிக்க முடியாதபடி சூரியனது வெயில் அடிக்கிறது. பேடை வருந்துவதைப் பார்த்த ஆண்மயில் அப்படியே தன் நீண்ட தோகையை விரித்து வெயிலை மறைக்கிறது!

நாயகன் இப்போது மீண்டும் தூர தேசத்துக்குப் போயிருக்கிறான். பிரிவாற்றாமையால் நாயகி ரொம்பவும் வருந்துகிறாள். பாலைவனத்து வெயிலைப்போலவே பிரிவாற்றாமை அவளைத் தகிக்கிறது.

அப்போது பாலைவனத்தில் நாயகன் கண்டதாகச் சொன்ன காட்சி அவள் நினைவுக்கு வருகிறது. "ஆஹா! அந்தப் பறவைக்குள்ள இரக்கசித்தம் கூட இல்லையே இவருக்கு? என்னை இப்படித் தீயிலே தவிக்கவிட்டிருக்கிறாரே?" என்று நினைந்து நினைந்து வருந்துகிறாள்.

பேடையை இரும்போத் துத்
தோகையால் வெயில்மறைக் கும்
காடகம் இறந்தார்க் கே
ஓடும்என் மனனே காண்!

பக்கம் 40. —தனிப் பாடல்.

## தோழியின் உய்த்துணர்வு

தினைப்புனம் காவல் செய்து கொண்டிருக்கும் தலைவியைத் தோழி பார்த்தாள். "என்ன? பறவைகளை யெல்லாம் இஷ்டப்படி கதிர்களைக் கொத்தவிட்டு, இப்படியும் ஒரு காவலா?" என்று அதிசயமடைந்தாள். மான்வேட்டை ஆடும் அந்த வீரனையும் பார்த்தாள். "நல்லது! அம்பு போடாமல் மானைத் தப்பவிட்டு, இப்படியும் ஒரு வேட்டையா?" என்று ஆச்சரியப்பட்டாள். தோழிக்கு விஷயம் விளங்கி விட்டது. அவர்களுடைய கள்ளப் பார்வைகளிலிருந்து அவர்களுடைய கள்ள உள்ளம் தெரிந்துவிட்டது!

அவர்கள் நேரடியாக ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளவுமில்லை; வெட்க மடைந்தவர்கள் போல் விலகித்தான் இருந்தார்கள். எனினும் அந்தக் கண்களின் விசித்திர சம்பாஷணை தடைப்படாமல் நடந்து கொண்டுதான் இருந்தது! எப்படி மறைக்கப் பார்த்தாலும், "மதுமறைந்து உண்டோர் மகிழ்ச்சிபோல"ப் பொங்கும் அந்த அகமகிழ்ச்சியையும், காதல் வெறியையும் மறைக்கத்தான் முடிகிறதா?

"ஆஹா! காதலின் விசித்திரமே விசித்திரம்!" என்று தனக்குள் தானே சொல்லிக்கொண்டு போகிறாள் தோழி. போகும்போதே ஒரு முறை திரும்பிப் பார்க்கிறாள். "ஏன்?" என்று சொல்லவா வேணும்!? அந்தக் கடைக் காட்சியைத்தான் சித்திரக்காரர் எப்படிப் பூர்த்தி செய்திருக்கிறார், பாருங்கள்!

ஏனல் காவல் இவளும் அல்லள்;
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்;
நரந்தம் கண்ணி இவனோடு இவளிடைக்
கரந்த உள்ளமொடு கருதியது பிறிதே:
நம்முன் நாணுனர் போன்று, நம்முன்
மது மறைந்(து) உண்டோர் மகிழ்ச்சி போல,
உள்ளத் துள்ளே மகிழ்ப;
சொல்லும் ஆடுப கண்ணி னானே!

[ஏனல் : தினைப்புனம். நரந்தம் : ஒருவகை வாசனைப் புல். கண்ணி : மாலை. கரந்த : ஒளிந்துவைத்த. பிறிது : வேறு. நாணுனர் : வெட்கம் அடைகிறவர்.]

பக்கம். 86. —சங்க காலப் பாடல்.

## புதியதோர் முறுவல்

கோதாவரியின் உற்பத்தி ஸ்தலமான பஞ்சவடியில் ஒரு காட்சி:

அன்னம் ஒன்று மெள்ள மெள்ள அசைந்து நடந்து வருகிறது. அந்த நடை அழகில் ஈடுபட்டவனாய் உட்கார்ந்திருக்கிறான் ராமன். அப்போது அந்த இடத்துக்கு நடந்து வருகிறாள் சீதையும். அன்னத்தைப் பார்த்துக்கொண்டிருந்த ராமன் அப்படியே முகத்தைத் திருப்பிச் சீதையின் நடையை உற்று நோக்குகிறான்; புன்முறுவலும் செய்கிறான்.—அன்னத்தை எண்ணியோ, அல்லது நடை அழகுக்கு அன்னத்தை உவமானமாகச் சொல்கிறார்களே, அந்தப் புலவர்களைத்தான் எண்ணியோ, சொல்ல முடியாது.

அதே சமயத்தில் சீதை என்ன செய்தாள், தெரிய வேண்டாமா?

ராமனது கம்பீரமான நடையின் அழகு சீதையின் இதயத்தில் பதிந்த விஷயம்; சதா நினைந்து அநுபவிக்கும் காரியம். அதை விட்டு விட்டு இப்போது சீதை ஆண் யானையின் (போதகத்தின்) நடையை உற்று நோக்குகிறாள் :—மனதிற்குள் இராமனுடைய நடை அழகுடன் ஒப்பிட்டுப் பார்க்கிறாள். உடனே, அவளுக்கும் சிரிப்பு வருகிறது. அந்தச் சிரிப்பின் அழகை—புதுமையை— வர்ணிக்க முடியுமா? முடியாதுதான்.

ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன் உழையளாகும்
சீதைதன் நடையைக் கண்டு
சிறியதோர் முறுவல் செய்தான்
மாதவள் தானும் ஆண்டு
வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்பநோக் கிப்
புதியதோர் முறுவல்பூத் தாள்.

[ஓதிமம் : அன்னம்; உழையள் ஆகும் : பக்கத்திலிருக்கும்; முறுவல் : இளநகை; போதகம் : ஆண் யானை.]

பக்கம் 178. கம்பர்.



வெள்ளித்திரையில் வெளிவரும் நன்னாளை எதிர்பாருங்கள்!



பி. யு. சின்னப்பா
பி. கண்ணாம்பா
எம். எஸ். சரோஜா
எம். கே. மீனலோசனி
ஆர். பாலசுப்பிரமண்யம்
டி. ஆர். பி. ராவ்

மற்றும் பலர்
நடித்தது.



ஜூபிடர் தயாரிப்பு

# மஹாமாயா

டைரக்ஷன்:- T.R. ரகுநாத் "இளங்கோவன்"

கதை, வசனம் இளங்கோவன்

பாட்டு:
சுந்தர வாத்தியார், கம்பதாசன்

பாட்டு டைரக்ஷன்:
எஸ். வி. வெங்கட்ராமன்

ஒலிப்பதிவாளர்:
மார்கஸ் பார்ட்லி

ரிகார்டிங்: டி. டி. அரசு
ஸ்டூடியோ: நியூடோன்

விநியோகிப்பவர்கள்:

சௌத் இந்தியா பிக்சர்ஸ் லிமிடெட்., காரைக்குடி.



# மங்களம்

வாழிய செந்தமிழ்! வாழ்கநற் றமிழர்!
வாழிய பாரத மணித் திருநாடு!
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க!
நன்மைவந் தெய்துக! தீதெலாம் நலிக!
அறம் வளர்ந்திடுக மறம்மடி வுறுக!
ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றும்
சீரிய முயற்சிகள் சிறந்துமிக் கோங்குக!
நந்தேயத்தினர் நாடோறும் உயர்க!
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

—பாரதியார்.

# பீடி சக்கரவர்த்தி



த. பி. சொக்கலால் ராம் சேட்



25 பீடிகள் கொண்ட சிறு கட்டில் ஒட்டியிருக்கும் வைடு லேபிள்




25 பீடிகள் கொண்ட சிறு கட்டில் ஒட்டியிருக்கும் டாப் லேபிள்



2 பீடிகளை சேர்த்து ஒட்டியிருக்கும் சில் லேபிள்



புரொப்ரைட்டர் :

T. P. S. ஸ்ரீராம் சேட்

தந்தி விலாசம் :

"லால்." வீரவநல்லூர்

த. பி. சொக்கலால் ராம் சேட் தொழிற்சாலை

பீடி, தீப்பெட்டி, பெருங்காயம் & வாசனை புகையிலை தயாரிப்பவர்கள், முக்கூடல் (திருநெல்வேலி ஜில்லா)


By JOVE, My Car has improved since I had it serviced by
THE TRICHINOPOLY AUTOMOBILES.
They have a Staff of Experts.




ரிஜிஸ்டர் நிர். 3085
TRADE MARK
பிரமா மார்க்
திருவாரூர்
புகையிலை

Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki Press."
116-119, Doctor Guruswami Mudaliar Road, Kilpauk, Madras.



கோட்டையூர்த் திருமண வைபவ
என்றென்றும் தமிழர்களது இன்
நினைவில் இருக்கும். பாரிஸ்ட
அழகப்பச் செட்டியாரின் புதல்வ
திருமதி உமையாளுக்கும் கண்டனூ
ஸ்ரீ. வயி. ராம. வைரவன் செட்டியா
குமாரர் திரு. ராமநாதனுக்கும் நடந்
அத் திருமண வைபவத்தைக் கண்டு
தமிழ்நாடே வியந்தது! கூட்டமாகு
கூட்டம்! ஒரே ஜன சமுத்திரந்தான்
பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு
பிரும்மாண்டமான போஜனம்



கல்யாணச் சீர் வகைகளும், விருந்
ர் மணமக்களுக்கு அளித்த பரிசு
ரும், கல்யாணப் பந்தலின்
ாலங்காரமும், திருமண ஊர்வல
். இன்னிசை விருந்துகளும்,
ட்டியக் கச்சேரிகளும், கதா காலட்
பங்களும் இவை யாவும் சேர்ந்து
இது என்ன கந்தர்வ பூமியா?
லோ சுவப்ன லோகமா?" என்ற
மையை உண்டு பண்ணின. இத்
ுமண விழாவின் ஞாபகார்த்தமாக
னல் அழகப்பச் செட்டியார் பற்
நன்கொடைகள் அளித்தார்;
ிடை தான தர்மங்கள் செய்தார்.



மரனைத்தும் சகன்உளம் காண, ஆட்டின்
மறியேந்து பெருங்கருணைப் புனித வள்ளல்
வானளந்த மதில்மீது கொடிகள் ஆடும்
மாநகரின் திருவாயில் வந்தபோது — ஆசிய ஜோதி

புத்தர் கருணை

"கல்கி" தீபாவளி மலர் 1948

Courtesy :— SJT. KANU DESAI




கற்றைச் சடை மதி வைத்த துறவியைக்
கை தொழுவாள் எங்கள் தாய் — பாரதியார்.

# “ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே!”



அன்பு கனிந்த பாடல் ஒன்றைக் கண்ணன் வேய்ங்குழலில் வைத்து ஆனந்தமாய் வாசிக்கிறான். அந்த இசையானது ராதையின் உள்ளத்திலுள்ளும் உடலினுள்ளுமே பிரவேசித்து அவளை ஆடச் செய்கிறது. ஆடல் என்றால் அனாயாசமாய் ஆனந்த மயமாய் மிதப்பதுதான். இந்த ஆனந்த உணர்ச்சியானது காதலியின் உடையின் சுழற்சிகளிலும் கைகளின் லாகவங்களிலும் முகத்தின் பூரண அமைதியிலும் அருமையாய் உருவெடுக்கிறது.

அருகிலுள்ள மயிலும் தோகையும் அந்த இசைச் சுழற்சியில் இழுபடுகின்றன. சுற்றிலுமுள்ள செடி கொடிகளும் கூட அந்த இன்ப கீதச் சுழலில் அகப்பட்டு ஆடுகின்றன. இதெல்லாம் எதைக் காட்டுகிறது? இறைவனது உள்ளத்தில் எழும் ஆனந்த உணர்வு அலைகளே பேரண்டம் முழுதும் வியாபித்து எல்லா உயிர்களையும் ஊடுருவி நின்று ஆட்டுவிக்கின்றன என்பதைத்தான்.

அற்புதமான விஷயத்தை, அற்புதமாய்ச் சித்திரித்திருக்கிறார் ஸ்ரீ கனு தேசாய்.

“கல்கி” தீபாவளி மலர் 1948

*Courtesy :—* SJT. KANU DESAI
Messrs. D. B. Taraporewala Sons & Co

# சந்திர நிந்தனை

●

"பெண்ணிலா ஊரில்
பிறந்தாரைப் போலவரும்
வெண்ணிலாவே! இந்த
வேகம்உனக் காகாதே!"

—நந்திக் கலம்பகம்.

தடாகக் கரையில், இந்த மகா விருட்சத்துக் கருகே இப்படிப்பட்ட வெண்ணிலவிலே எத்தனையோ தடவை காதலனைச் சந்தித்து ஆனந்த மடைந்திருக் கிறாள்! இப்போது காதலனைப் பிரிந்த நிலையில் அதே இடத்தில் ஒருவாறு ஆறுதல் பெறலாமென்று வந்தாள். ஆனால், அந்தச் சந்திரனுக்கு என்றுமில்லாத ஆத்திரம் தன் மேல் ஏன் வர வேண்டும்?

அந்த நாளில், காதலன் சந்திரனைச் சுட்டிக் காட்டி, "அழகுப் போட்டியில் உன் முகத்துக்கே வெற்றி; சந்திரனுக்குப் படுதோல்விதான்!" என்று எத்தனையோ முறை சொன்னதுண்டு. இப்போது காதலனைப் பிரிந்த நிலையில் "இதுதான் சமயம்" என்று அதற்கெல்லாம் சேர்த்துப் பழி வாங்குகிறானா சந்திரன்?

"நீ பெண்ணோடு பிறந்தவனில்லை; பெண் பிறந்த ஊரிலே பிறந்தவனுமில்லை!" என்று சந்திரனை நிந்தித்துக் கொண்டே காதலி தலை குனிந்த வண்ணமாய் அவ்விடமிருந்து திரும்பிப் போகிறாள்.

"கல்கி" தீபாவளி மலர் 1948

Courtesy :— SJT. KANU DESAI
Messrs. D. B. Taraporewala Sons & Co

# மீ ரா



"ஆடி யாடி அகம் கரைந்து இசை
பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி எங்கும்
நாடி நாடி நரசிங்கா! என்று
பாடி வாடும் இவ்வாணுதலே."

—நம்மாழ்வார்.

பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள் தங்களைப் பல விதமாய்ப் பாவனை செய்து பகவானைத் துதிப்பதுண்டு. நம்மாழ்வார் தம்மை ஒரு தாயாராக மாற்றிக்கொள்கிறார். தமக்கு ஒரு பெண்ணையும் சிருஷ்டி செய்து கொள்கிறார். அந்தப் பெண்ணைப் பார்த்து இரங்குகிறார்:—"அடாடா! இந்தப் பெண் இப்படியாகி விட்டாளே? ஓயாமல் ஆடுகிறாள்; பாடுகிறாள். இவளுடைய உள்ளம் உருகிக் கரைந்து கண் வழியாக நீராய்ப் பெருகுகிறது. இதெல்லாம் பகவானிடம் இவள் கொண்ட பிரேமையினால் அல்லவா நிகழ்கிறது? அந்த பகவான் ஏன் இந்தப் பேதைப் பெண்ணை இப்படி வாட்டுகிறார்?"

இவ்விதம் நம்மாழ்வாரின் கற்பனையில் உதித்த பெண்தான் பிற்காலத்தில் இராஜபுத்திர நாட்டில் மீராவாகப் பிறந்தாளோ என்று சொல்லும்படியிருக்கிறது ஸ்ரீ கனு தேசாயின் இந்த அற்புத சித்திரம். முகப்புப் படத்தில் கண்ணன் குழலிசை கேட்டுத் தன்னை மறந்து ஆனந்த மயமாய் ஆடியதைச் சித்திரித்தவர், இந்தப் படத்திலே, கண்ணனைப் பிரிந்த நிலையில் ஆடிப்பாடிக் கண்ணீர் விட்டுக் கதறி அழைக்கும் பக்தி வெறியைத் தத்ரூபமாய்க் காட்டியிருக்கிறார்.

"கல்கி" தீபாவளி மலர் 1948
Courtesy :— SJT. KANU DESAI

# தாள வாத்திய கோஷ்டி





குற்றாலம்
சிவவடிவேலுப் பிள்ளை

கல்பாத்தி
ராமநாதன்







ராமநாதபுரம்
ஈச்வரன்

ஆலங்குடி
ராமச்சந்திரன்



மதுரை
வேணுநாயக்கர்

விஸ்வநாதய்யர்



பச்சைக் குழந்தை யடி-கண்ணில்
பாவையடி சந்திரமதி!



கல்கி
தீபாவளி மலர்
1943

போட்டோ:
ஆர். என். நாகராஜ ராவ்



# மீரா

★ எம். எஸ். சுப்புலக்ஷ்மி
★ சித்தூர் நாகய்யா
★ செருகளத்தூர் சாமா
★ கே. சாரங்கபாணி
★ டி. எஸ். பாலையா
★ என். எஸ். கிருஷ்ணன்
★ டி. ஏ. மதுரம்
★ பேபி ராதா

முதலியோர் நடிக்கும் மகத்தான படம்

● டைரக்ஷன் :
எல்லிஸ் ஆர். டங்கன்

● ஆர்ட் டைரக்ஷன் :
கனுதேசாய்

★ சென்னை நியூடோன் ஸ்டுடியோவில் படம் தயாராகி வருகிறது.

★



## சந்திர பிரபா ஸினிடோன்

கீழ்ப்பாக்கம் :: சென்னை







6. உதயப்பூர் ஏரியில் அரச தம்பதிகள் பவனி வரும் படகைப் படத்தில் காணலாம். வெண் நிலவிலே, ராணாவும் மீராவும் இம்மாதிரி படகில் ஏறிக்கொண்டு நாள் கண்ணன் புகழைப் பாடிப் பாடி இன்புற்றார்கள்.

7. யமுனா நதியைக் கடந்து பிருந்தாவனம் செல்லும் தோணித் துறை இது. மீராபாய் அரண்மனை வாழ்க்கையைத் துறந்து மேவாரை விட்டு வெளியேறிப் பிருந்தாவனம் சென்ற போது, இவ்வழியாகப் போயிருக்கவேண்டும்.

8. மீராவின் உள்ளத்தைக் கவர்ந்த இருந்த பிருந்தாவனத்தில் ஓர் ஆசிரமம். ஒவ்வொரு நாளும் ஆசிரமத்தைச் சேர்ந்த பெண்மணிகள் பலர் கூடி மீராவின் தெய்வீக கீதங்களைப் பாடிப் பேரின்பம் அடைகிறார்கள்.

9. ஜோத்பூர் கோட்டையில் ஒரு பாகம். இம்மாதிரி பெரிய பெரிய பீரங்கிகளை அந்த காலத்திலேயே எமது நாட்டு மன்னர்கள் கோட்டைப் பாதுகாப்புக்கு உபயோகித்தார்கள்.

10. துவாரகா நாதனுடைய ஸ்ரீ ரஞ்சோர் ஸ்வாமியின் திருக்கோயில். இங்கேதான் மீரா கிரிதர கோபாலனுடன் ஐக்கியமானாள். கடலுக்கு எதிரே இக்கோயில் இன்றும் புத்தம் புதிய தோற்றம் அளிக்கிறது.

போட்டோ: எல்லிஸ் ஆர். டங்கன்














# மீரா

"பாரத நாடு பழம்பெரு நாடே பாடுவ மிஃதை யெமக்கிலை யீடே!"

என்று பாரதியார் பெருமிதத்தோடு பாடியிருக்கிறார். இந்தப் பழம்பெரு நாட்டுக்குப் பெருமை தந்தவர்களுக்குள்ளே இராஜஸ்தானத்து வீர புருஷர்களையும் தீர நாரீமணிகளையும் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். பசையற்ற பாலைவனங்களும், பசுமை காணும் பாறைகளுமே எங்கெங்கும் பரவியுள்ள இராஜபுத்ர நாட்டில், தேச பக்தியும், சுதந்திர வேட்கையும், கற்பின் திண்மையுமே சிறந்த பயிர்களாக வளர்ந்து வந்தன. "ஆவி நீப்பினும் அன்னியர்களுக்கு அடிமைப்படோம்" என்று கர்ஜித்தார்கள் இராஜபுத்திர வீரர்கள். போர்க்களத்திலே புருஷர்கள் உயிர் நீத்த செய்தி கேட்டதும், அஞ்சா நெஞ்சுடனும் மலர்ந்த முகத்துடனும் அக்கினியில் குதித்தார்கள் இராஜபுத்திர ஸ்திரீகள். இத்தகைய ஆண் சிங்கங்களினாலும் கற்பரசிகளினாலும் இராஜஸ்தானம் அடைந்த பெருமையையெல்லாம் விட, கையிலே தம்புராவுடனும் வாயிலே கண்ணன் திருநாமத்துடனும் அலைந்து திரிந்த ஒரு பெண்மணியினாலே அந்நாடு அதிக மகிமையடைந்தது. அந்த வனிதாமணி-கவிதாமணி-பக்த சிரோமணியின் பெயர்தான் மீரா பாய்.

சின்னஞ் சிறு வயதிலே கண்ணனிடம் பிரேமை கொண்டாள் மீரா. தென்னாட்டு ஆண்டாளைப்போல் மாயக் கண்ணனையே மணவாளனாக வரித்து மாலையிட்டாள். வயது வந்த பின்னர் பெரியோர்கள் கட்டளைப்படி மேவார் கும்பராணாவை மணந்தாள். எனினும், தன் மனங் கவர்ந்த மாயனை நினைந்து பாடுவதையும் ஆடுவதையும் அவளால் நிறுத்த முடியவில்லை. பரம ரஸிகனான கும்பராணா அவளுடைய பக்தியை வியந்து தானும் அதில் ஈடுபட்டதுடன், மீராவுக்காகக் கண்ணன் கோயிலும் கட்டிக்கொடுத்தான். பின்னால் அவனே தம்பியின் துர்ப்போதனையினாலும் விதிவசத்தினாலும் மதிமயங்கி அதே கோயிலை இடித்துத் தள்ளச் சொல்கிறான்!

அப்போதுதான் மீரா தான் அரண்மனையில் 'வாழப்' பிறந்தவளல்ல என்பதை உணர்ந்து தம்புரா ஒன்றே துணையாக நாட்டைவிட்டு வெளியேறுகிறாள். பாலகோபாலன் லீலைபுரிந்த பிருந்தாவன க்ஷேத்திரம் அவளை அழைக்கிறது. காடு மலைகளையும், கொடிய பாலைவனங்களையும் கால்நடையாகக் கடந்து செல்கிறாள். வெயிலில் வதங்கி, மழையில் நனைந்து, பசியால் வாடி, ஜலமின்றி உலர்ந்து, கண்ணன் திருநாமத்தில் பலத்தைக்கொண்டு பிரயாணம் செய்கிறாள். பிருந்தாவனம் சேர்ந்து, பின்னர் அங்கிருந்து கண்ணன் கட்டளைப்படி துவாரகை சென்று அங்கே துவாரகாநாதனுடன் இரண்டறக் கலந்து ஐக்கியமாகிறாள்.

கல்லும் புல்லும் கனிந்துருகக் கண்ணன் பாட்டுக்களைப் பாடிக்கொண்டு மீரா யாத்திரை செய்த காலத்தில் அவளுடைய பாதம் பட்டுப் பரிசுத்தமான இடங்கள் சிலவற்றை அடுத்த பக்கங்களில் காணலாம்.

நாம் வீட்டில் இல்லாவிட்டால் வீடு பற்றி எரிந்தால்கூடக் கவனியாமல் மனைவி அடுத்த வீட்டுக்காரியுடன் வம்பளந்து கொண்டிருப்பாள் என்று ஸ்ரீமான் கணவர் எண்ணுகிறார்.







நாம் மட்டும் ஒருநாள் ஆபீஸுக்குப் போகாவிட்டால் ஆபீஸில் இவ்வளவு அழகாகத் தான் வேலை நடக்கும் என்று மிஸ்டர் மானேஜர் கற்பனை செய்து கொள்கிறார்.
























## ஏன் பள்ளி

மோஹனம்] [சதுஸ்ர

பல்லவி

ஏன் பள்ளி கொண்டீர் ஐயா ஸ்ரீரங்கநாதரே ;

அநுபல்லவி

ஆம்பல் பூத்த சைய பருவத மடுவிலே
அவதரித்த இரண் டாற்று நடுவிலே (ஏ

சரணம்

கோசிகன் சொல் குறித்த தற்கோ—அரக்கி
குலையில் அம்பு தெரித்த தற்கோ
ஈசன் வில் முறித்த தற்கோ—பரசு
ராம னுரம் பறித்த தற்கோ
மாசிலாத மிதிலைப் பொன் னுடனே
வழி நடந்த இளைப்போ






















# கொண்டீர்?

ளாத குகன் ஓடத்திலே கங்கைத்
துறை கடந்த இளைப்போ
ராமம் சித்ர கூட சிகரக் கல்
மிசை நடந்த இளைப்போ
னிமேல் மா ரீசன் ஓடிய
கதி தொடர்ந்த இளைப்போ—ஓடிக்
ந்தோ தேவியைத் தேடி
இளைத்தோ மரங்களேழும்
ளைத்தோ கடலைக் கட்டி
வளைத்தோ லங்கையென்னும்
ல் மாநகரை இடித்த வருத்தமோ
ராவணனைக்க அடித்த வருத்தமோ? (ஏன்)

— அருணாசலக்கவி.


ரூபாயைச் சுண்டிப் போட்டுப் பார்த்து விடலாம். தலை என்றால் சினிமாவுக்கு, பூ என்றால் பீச்சுக்கு. என்ன சொல்றே?
சரி, போட்டுப் பாருங்கோ!




ரூபாயைக் காணோமே!


இன்றிரவு
சாமா

# நியூடோன் ஸ்டுடியோஸ் லிமிடெட்

## கீழ்ப்பாக்கம் :: :: மதராஸ்

தென்னிந்தியாவிலேயே ஸ்டுடியோக்களில்
முதன்மை ஸ்தானம் பெற்று விளங்குவது.

★

**இதுவரை தயார் செய்திருக்கும் சில படங்கள்:**

| | | |
|---|---|---|
| ஸ்வர்ணலதா | வந்தேமாதரம் | சத்ய பாமா |
| அதிர்ஷ்டம் | சுமங்கலி | பத்னி |
| ஞானம்பிகை | திருநீலகண்டர் | தீனபந்து |
| விஸ்வமோஹினி | சக்குபாய் | தமிழறியும் பெருமாள் |
| சீதா ஜனனம் | மள்ளிபெள்ளி | பிரஹலாதா |
| பஞ்சாமிர்தம் | சகுந்தலை | பாக்யலக்ஷ்மி |
| மாலைக்கண்ணன் - காமிக் | அசோக் - குமார் | குபேர குசேலா |
| புலிவேட்டை ,, | ரிஷ்ய சிருங்கர் | ராதா ரமணா |
| கொழுக்கட்டை ,, | தல்லி ப்ரேமா | செஞ்சு லக்ஷ்மி |
| அடங்காப்பிடாரி ,, | தேவதா | கிருஷ்ண சுதாமா |
| யமவேதனை ,, | கண்ணகி | கருட கர்வ பங்கம் |

சமீபத்தில் ஜெயபாரத் மூவிடோனையும் நாங்களே விலைக்கு வாங்கி அங்கும் அநேக முதல்தரமான படங்களைத் தயார் செய்து வருகிறோம். செட்டிங் வசதிகளும், இட வசதியும் மற்றும் படப்பிடிப்பிற்கு வேண்டிய சகல சௌகரியங்களும் கொண்ட உன்னத ஸ்டுடியோ.

இப்போது தயாராகும் படம்

# மீ ரா

எம். எஸ். சுப்புலக்ஷ்மி : சித்தூர் நாகய்யா

*மானேஜிங் டைரக்டர்:* ஆர்எம். ராமநாதன் செட்டியார்

*சவுண்ட் என்ஜினீர்:* தின்ஷா. கே. தீரானி

*கேமிராமேன்:* ஜீதன் பானர்ஜி

*ஆர்ட் டைரக்டர்:* நாகூர்



சித்தூர் நாகய்யா

—தென்னாட்டின் தலைசிறந்த நடிகர்—



லலிதா
வெங்கட்ராமன்



குமாரி
ரங்கநாயகி

## வேலையும் கூலியும்



40 ரூபாய் அலுவல்



200 ரூபாய் வேலை



500 ரூபாய் சம்பளம்



மாதம் 1000 ரூபாய்




இரண்டாயிரம் ரூபாய் உத்தியோகம்

# இண்டோ-கமர்ஷியல் பாங்க் லிமிடெட்

| ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: | சென்ட்ரல் ஆபீஸ்: |
|---|---|
| **மாயவரம்.** | **மதராஸ்.** |

●

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | .... ரூ. | 25,00,000 |
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | .... ரூ. | 21,25,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் (31-8-43 தேதியாக) | .... ரூ. | 18,74,657 |

மொத்த லேவாதேவி 2 கோடிக்கு அதிகம்

—: பிராஞ்சுகள் :—

| | | |
|---|---|---|
| ஆமதாலவலஸா | மதுரை | தஞ்சாவூர் |
| அனகப்பள்ளி | மாம்பலம் | திருநெல்வேலி |
| சிதம்பரம் | மாயவரம் | திருச்சிராப்பள்ளி |
| காஞ்சீபுரம் | மயிலாப்பூர் | வேலூர் |
| ஈரோடு | பாலக்காடு | விஜயபுரம் |
| காரைக்குடி | புதுக்கோட்டை | விருதுநகர் |
| கும்பகோணம் | சீர்காழி | விஜயநகரம் |
| மதராஸ் | தாடேப்பள்ளிக்கூடம் | |

●

**பிக்ஸட் டெபாஸிட்டுகள்** ஏற்றுக் கொள்ளப்படும். ஒரு வருஷ டெபாஸிட்டிற்கு 2¾% விதமும், இரண்டு வருஷ டெபாஸிட்டிற்கு 3% விதமும் வட்டி அளிக்கப்படும்.

**சேவிங்ஸ் பாங்கு** கணக்குகள் வைத்துக் கொள்ளப்படும். ரூ. 5000/- வரை 2½% விதம் வட்டி கொடுக்கப்படும். வாரத்திற்கு ஒரு முறை ரூ. 250/- வரை செக் மூலம் எடுத்துக் கொள்ளக்கூடிய வசதிகள் உண்டு.

**கரண்டு கணக்குகள்** வைத்துக் கொள்ளப்படும். இதற்கு ½% விதம் வட்டி அளிக்கப்படும்.

**தங்கம், வெள்ளி, சர்க்கார் புரோநோட்டுகள், அங்கீகரிக்கப்பட்ட ஷேர்கள், மூலதனங்கள், சரக்குகள் இவைகளின் மீது கடன்கள் வழங்கப்படும்.**

**சகலவிதமான பாங்க் அலுவல்களும் ஏற்றுக்கொண்டு நடத்தப்படும்**

●

: டைரக்டர்கள் :—

ஸ்ரீ T. R. வெங்கட்ராம சாஸ்திரி, C.I.E. (சேர்மன்)
ஸ்ரீ V. வெங்கட்ராம அய்யர், M.A., B.L.
ஸ்ரீ R. S. A. சங்கர அய்யர்
ஸ்ரீ R. விஸ்வநாத அய்யர், B.A., B.L.
ஸ்ரீ K. சிவசாமி அய்யர்
ஸ்ரீ S. N. N. சங்கரலிங்க அய்யர், (மானேஜிங் டைரக்டர்)



மாசில் வீணையும் மாலை மதியமும்

"கல்கி" தீபாவளி மலர் 1948

*Courtesy* :— SJT. KANU DESAI

Messrs. D. B. Taraporewala Sons & Co



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்
24-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பராமாசாரிய சுவாமிகள்

# ஏட்டிக்குப் போட்டி

நாதஸ்வர வித்வான் தம்புரா பிடில் மிருதங்கத்துடன் கச்சேரி செய்வதைப் பார்த்து விட்டு ......

சாமா

வாய்ப்பாட்டு வித்வான் கோபித்துக் கொண்டு போட்டிக்கு இவ்விதம் செய்கிறார் !

# முப்பது வருஷ வித்தியாசம்!

என்னத்துக்கு இப்படி வெட்கப்படுகிறாய்?

1913 தலை தீபாவளி

என்னத்துக்காக இப்படி வெட்கப்படறேள், இப்படி உட்காருங்களேன்.

1943 தலை தீபாவளி



ஸ்ரீமதி ஜயம்மாள்

— வீணை தனம்மாள் புதல்வி —

1943
கல்கி தீபாவளி மலர்



ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள்

# தீபாவளி வாழ்த்து




இந்த மங்கள தினத்தில் அணிந்து கொள்ளும் ஆடைகளின் அழகிற்கும் நிறத்திற்கும் காரணமாகிய நேர்த்தியான சாயத்தைக் கொடுத்து உதவுவதற்குச் சந்தர்ப்ப மளித்து மகிழ்வித்த சாயத் தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும்

●

பம்பாய்

## எக்ஸல் டிரேடிங் கார்ப்பொரேஷன்

தங்கள் அன்பார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்வதுடன் எப்பொழுதும் போல் எல்லாருடைய ஆதரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள்.

●

ஏஜெண்ட்ஸ் :

கலர் ப்ரோடக்ஸ் கம்பெனி

217, கோவிந்தப்ப நாயக்கன் தெரு

ஜி. டி., மதராஸ்.

●

BRANCHES:

MADURA & SALEM

# அவன் யோசனை!



பிறந்ததும் தாயை இழந்த லக்ஷ்மி இன்று தன் தந்தையையும் இழந்து இப் பரந்த உலகில் தனியே ஏங்கி நிற்கிறாள். தள்ளாத வயதில் புத்திர சோகத்திற்கு ஆளான அவளது பாட்டனார் லக்ஷ்மிக்கு என்ன ஆதரவு அளிக்க முடியும்? ஆனால் கங்காதரன் நல்ல முன் யோசனையுடன் தன் அருமைப் புதல்வி லக்ஷ்மியின் பேரில் ஒரு 'கலியாண என்டௌமெண்ட்' பாலிஸி எடுத்திருந்தான். அன்று அவன் யோசனையைக் கேலி செய்த லக்ஷ்மியின் பாட்டனார் இன்று அதை உள்ளூர எண்ணி யெண்ணிப் பாராட்டுகிறார். அந்த பாலிஸி தான் இப்போது லக்ஷ்மிக்கு ஆதரவு.

உங்கள் குழந்தைகளின் நன்மைக்கு நீங்கள் வழி தேடுவீர்கள். அதற்கு நாங்களும் உதவுகிறோம். விவரங்களுக்கு ஒருவரி எழுதிப் போடுங்கள்.

●

முன்னேற்றமுள்ள ஓர் உத்யோகத்தை ஏற்றுக்கொள்ள விரும்பும் செல்வாக்குள்ளவர்களிடமிருந்து ஏஜன்ஸிகளுக்கு மனுக்கள் கோரப்படுகின்றன

பிருத்வி பரிபூரண பாதுகாப்பு அளிக்கிறது

ஸ்ரீ பிருத்வி

★ இன்ஷியூரன்ஸ் கம்பெனி லிமிடெட் ★

110, அரமனைக்காரன் தெரு, ஜி.டி., சென்னை

F-A-S-P-I-41

FOR TAXIES RING UP
8334.

Prompt & Efficient Service
KARPAGAVALLI
TAXI SERVICE
LUZ CORNER :: MYLAPORE

PROP. M. D KRISHNAMURTHY.

---

SHOES
for
STYLE &
COMFORT
ALL LEATHER CRAFTS
★
**V. RATNA & Co.,**
(Y. M. C. A. Buildings)
Esplanade :: Madras

---

நளமகாராஜனை நாம் பார்த்ததில்லை!
ஆனல்
நளபாகத்தைப் பார்த்திருக்கிறோம்!
சுத்தமான சுகாதாரச் சாப்பாடு!

அதற்குத் தகுந்த இடம்
**வெங்கடா லாட்ஜ்**
(ராக்ஸிக்கு எதிரில்)
144, புரசவாக்கம் ஹைரோடு
வேப்பேரி :: சென்னை

புரொப்ரைட்டர்:
P. V. ராமகிருஷ்ண அய்யர்

---

ராஜ குரு பற்பொடி.

[illegible]

பாக்கெட் 1-க்கு அணா 2.

இதில் சேரும் மருந்துகள் :—

[illegible]

டஜன் 1-க்கு விலை 1-2-0
குரோஸ் விலை ரூ. 12-8-0
ராஜாமிருத நிலையம், பழனி.
ஏஜெண்டுகள் தேவை.

ராஜ குரு பற்பொடி
ராஜாமிர்த நிலையம், பழநி. S.I.

3-11-43 சூரசம்ஹாரம் கந்த சஷ்டி
"திருப்பழநி ஆண்டவன் திருவருள்"
வேண்டும் பக்தர்கள் நாம நக்ஷத்திர சந்தான விசேட அர்ச்சனை ஆராதனைகள் செய்து திருவருட் பிரசாத மனுப்ப ரூ. 1.
அவ்விதமே மாதக் கார்த்திகை தோறும் வருடக் கட்டளையாக செய்தனுப்ப சந்தா ரூ. 7.
விசேஷம் பஞ்சாமிர்த சந்தன விபூதி அபிஷேகம் செய்து [illegible] தபால் மூலம் பிரசாத மனுப்ப ரூ. 10.
பழநித்தல மஹத்வம் பல கலர் படங்களுடன் புக். 4 அணா.
P. நடராஜ பண்டாரம்
மலைக்கோவில் [illegible]
பழனி S. I.

# MAKING FRIGIDAIRES WORK FOR VICTORY





Yes, that's what Frigidaires are doing at the moment. In no phase of the war effort are Frigidaires more vital than in the preservation and distribution of fresh food and medicines required for fighting forces.

Frigidaires are now doing more important service to our men at Air Fields, Naval Bases, Army Camps, and Military Hospitals, fighting in their own way, for that better to-morrow.

But this better to-morrow will be ours only when we win the war. That is why for all of us the first job must be to attain VICTORY.

Until than we can relieve the shortage of frigidaires to a large extent by servicing your frigidaire at regular intervals, to make it last longer and run more efficiently and economically.

## RICHARDSON & CRUDDAS

**FIRST LINE BEACH MADRAS**



தனித்த உயிர்

"கல்கி" தீபாவளி மலர் 1948

Courtesy :— SJT. KANU DESAI

Messrs. D. B. Taraporewala Sons & Co.,



ஸ்ரீமதி எம்.எஸ்.

ஸுப்புலக்ஷ்மியின்

இன்னிசை களஞ்சியம்

# “ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்”

ரிகார்டுகள்

யார் தெரிகிறதா?

## பாகவதரும்,
## சுப்பிரமண்யமும்



சௌத் இந்தியா பிக்சர்ஸ்
உன்னத வெளியீடான
மதராஸ் யுனைடெட் ஆர்டிஸ்ட்
கார்ப்பொரேஷன் தயாரிக்கும்

# பக்த மேதா

'எப்போ வந்திடுமோ'
என்று எதிர்பார்ப்போம்



'பொதுஜன ஆவலுக்கிணங்க அவர் நடிக்கவும் இவர் டைரக்ட் செய்யவும் இசைந்தனர்.

இருவர் உடையையும் பார்த்தால் "ராஜா மார்த்தாண்ட வர்மா" சரித்திரத்தைத் திரையில் உருவாக்க முயலுவார்கள் எனவும் தோன்றுகிறது.

**பலே, எஸ். ஐ. பி!**